# THE VOWS FULFILLED

## ஆமையர் அம்மானை

*General Editors*

Dr. SHU HIKOSAKA, Dr. G. JOHN SAMUEL

*Editor*

M. MARUTHAMUTHU

*Rendering in English*

*by*

G.S. BALAKRISHNAN




Institute of Asian Studies
Chemmancherry, Chennai - 600 119
INDIA.

**THE VOWS FULFILLED**
**ஆமையர் அம்மானை**

Editorial Assistance : Dr. V. Ganesan



First Edition 1996 pp. 482
Price Rs. 450 US $ 65

Publication No. 46

Copies can be had from

Publications Division
Institute of Asian Studies
Chemmancherry
Chennai- 600 119
India.

| | | |
|---|---|---|
| Phone | Office | 4928628, 4928662 |
| | Residence | 4925085 |
| Fax | | 91-44-4928959 |

Printed by PAVAI PRINTERS Pvt. Ltd., 142, J.J.K. Road, Chennai - 600 014. Phone : 832441

# TRANSLITERATION TABLE

## Vowels

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| அ | - | a | உ | - | u | ஐ | - | ai |
| ஆ | - | ā | ஊ | - | ū | ஒ | - | o |
| இ | - | i | எ | - | e | ஓ | - | ō |
| ஈ | - | ī | ஏ | - | ē | ஔ | - | au |
| | | | ஃ | - | ḵ | | | |

## Consonants

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | - | k | த் | - | t | ல் | - | l | ஜ் | - | j |
| ங் | - | ṅ | ந் | - | n | வ் | - | v | ஷ் | - | ṣ |
| ச் | - | c | ப் | - | p | ழ் | - | ḻ | ஸ் | - | s |
| ஞ் | - | ñ | ம் | - | m | ள் | - | ḷ | ஹ் | - | h |
| ட் | - | ṭ | ய் | - | y | ற் | - | ṟ | க்ஷ் | - | kṣ |
| ண் | - | ṇ | ர் | - | r | ன் | - | ṉ | | | |

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | |
|---|---|
| ஆ.ஆ.நி. | ஆசியவியல் ஆய்வு நிறுவனம் |
| உ.த.நி. | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் |
| உ.வே.சா.நூ. | உ.வே. சாமிநாதையர் நூலகம் |
| க.தே.நூ. | கல்கத்தா தேசிய நூலகம் |
| கே.ப.கீ.சு.நூ. | கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசை சுவடி நூலகம் |
| செ.அ.கீ.சு.நூ. | சென்னை அரசினர்க் கீழ்த்திசை சுவடி நூலகம் |
| த.ச.ம.நூ. | தஞ்சை சரசுவதி மகால் நூலகம் |
| த.அ.தொ.ஆ. | தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை |
| த.ப.க. | தமிழ்ப் பல்கலைக்கழகம் |
| தி.ப.க. | திருவேங்கடவன் பல்கலைக்கழகம் |
| தொகு. | தொகுப்பாசிரியர் |
| ப. | பக்கம் |
| பக். | பக்கம் |
| பதி. | பதிப்பாசிரியர் |
| மு.ப. | முதற்பதிப்பு |
| வ.எ. | வரிசை எண். |

# CONTENTS

# பதிப்புரை

பழமை வாய்ந்த ஓலைச்சுவடிகளும் தாள்சுவடிகளும் நம்முடைய பாரம் பரியப் பொருள்கள். இத்தகைய சுவடிகளைப் பதிப்பித்து வெளியிட வேண்டு மென்பதில் சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனம் மிகுந்த அக்கறை செலுத்திப் பழந்தமிழ் நூல்களையும், ஓலைச்சுவடிகளையும் திரட்டிப் பாதுகாக்கும் பணியில் முழுமையாக ஈடுபட்டிருக்கிறது. இந்நிறுவனத்தில் இலக்கணம், இலக்கியம், சமயம், சோதிடம், தத்துவம், நாட்டுப்புறக் கதைப்பாடல்கள், மருத்துவம் போன்ற பல வகையான பலகாலத்துச் சுவடிகள் திரட்டி வைக்கப்பட்டுள்ளன. அவற்றுள் தமிழகத்தின் தென்பகுதியைச் சார்ந்த கதைப்பாடல்கள் மிகுதியானவை.

இந்நிறுவனம், இதுவரை பதிப்பில் வராத சுவடிகளைப் பதிப்பித்தும் வருகிறது. இதற்கெனச் சுவடிநூலகம் அமைக்கப்பெற்று இவ்வேடுகளுக்கெனத் தனிப் பதி வேடுகள் வைத்து ஏடுகள் மற்றும் அதை வழங்கியவர்கள் பற்றிய விவரம் முதலான வற்றை முறைப்படுத்திக் குறித்து வைத்து வருகின்றது. அவற்றுள் ஆமையர் அம்மானைச் சுவடியும் ஒன்றாகும்.

## சுவடி பற்றிய செய்திகள்

ஆமையர் அம்மானை என்னும் இச்சுவடி, நாட்டுப்புற இலக்கியத்தில் 'அம்மானை' என்னும் கதைப்பாடல் வகையினைச் சார்ந்தது. இச்சுவடி கன்னியா குமரி மாவட்டம், அகத்தீஸ்வரம் கு. ஆறுமுகப்பெருமாள் நாடாரின் குடும்பத் தாரால் 7.10.1985 அன்று இந்நிறுவனத்திற்கு வழங்கப்பட்டது. இச்சுவடியைப் பிரதி செய்தவர் அகத்தீஸ்வரம் கு. ஆறுமுகப்பெருமாள் நாடார் ஆவர். இதன் சுவடி நூலகப் பார்வை எண். 5. இச்சுவடியை அடிப்படையாகக் கொண்டு இந்நூல் பதிப்பிக்கப் பெறுகிறது. இந்தச் சுவடியின் இறுதி ஏடு எழுதப்பெறாமல் நூலின் முடிவுப்பகுதி யின்றிக் காணப்படுகிறது.

இதே சுவடி நூலகத்தில் எண். 183 இல் பாதுகாக்கப்பட்டு வரும் பூவாச நாதன் கதை என்னும் பெயரில் விளங்கும் ஆமையர் அம்மானைச் சுவடியில் இந்தப் பகுதிகள் கிடைத்தன. அவற்றைப் பயன்படுத்தி விடுபட்ட முப்பது அடிகளும் முழுமையாக்கப்பட்டுள்ளன. அதாவது 'சேர்ந்த பரகதியில் தேவர்தன் பேறு பெற்று' எனத் தொடங்கும் (அடி எண். 3716) அடிமுதல், 'எல்லோரும் வாழ்க வாழ்கவே' (அடி எண். 3745) என்னும் அடிமுடிய உள்ளவை அவ்வாறு எடுத்துச் சேர்க்கப்பட்டவையாகும். இதனால் நூல் முழுமை பெற்றதாகிறது. மேலும் பூவாசநாதன் கதை என்ற இச்சுவடியானது பாடவேறுபாடு காணவும் பயன் பெற்றது.

பாடவேறுபாட்டிற்குரிய இந்தச் சுவடியை எழுதத் தொடங்கிய நாளைக் குறிக் கும் செய்தி தொடக்க ஏட்டில் காணப்படுகிறது.

"1090ம் வருடம் மாசி மாதம் 25ந் தேதி எழுதிய பூவாசநாதன் கதை தாறா விளை மலர்சூடும் பெருமாள் நாடார் மகன் தங்கநாடார் ஏடு இது. எழுதியது தாறாவி தங்கநாடார் அறியவும்" என்னும் அந்தச் செய்தியால் இந்தச் சுவடி படியெடுக்கப்பட்டிருக்கிறது என்பது புல்னாகிறது.

ஆசிரியர் பெயர், நூல் இயற்றப்பெற்ற காலம், முதலான வரலாறுகள் நூலினுள் இடம்பெறுகின்றன.

ஆமையர் அம்மானைச் சுவடியானது சாதாரணப் பனையோலையில் எழுதப் பெற்றுள்ளது. இச்சுவடியானது 61 ஏடுகளுடன் 46.5 செ.மீ. நீளமும் 4 செ.மீ. அகலமும் உடையதாகக் காணப்படுகிறது. சுவடி நன்னிலையிலிருந்தாலும் ஒரு சில இடங்களில் மட்டும் இராமபாணப் பூச்சியினால் எழுத்துக்கள் சிதைந்து காணப்படுகின்றன.

சுவடியின் முன்னுள்ள வெற்றோலையை அடுத்து நூல் தொடங்குகிறது. சுவடியில் ஓலையின் இருபுறமும் எழுதப்பெற்றுள்ளது. ஒவ்வோர் ஓலையும் மூன்று பத்திகளாகப் பிரிக்கப்பெற்று ஒரு பத்திக்குப் பத்து வரிகள் எழுதப்பட்டுள்ளன. ஏட்டின் பக்க எண்களைத் தவிர, அடிகளின் எண்களோ அல்லது பாடல்களின் எண்களோ ஏதுமில்லை. சிலவிடங்களில் பாடல்கள் முடியுமிடத்து ஒருவிதக் குறி இடம்பெற்றுள்ளது. இதன் அடிகள் பாடல் வரையறை செய்துகொள்வதற்கு ஏற்றவாறு அமைந்துள்ளன. உட்தலைப்புகள் ஏதுமில்லை. மிகப் பிற்காலத்திய சுவடி ஆதலால் மெய்யெழுத்துக்கள் எல்லாம் புள்ளியிடப்பெற்றுத் தெளிவான முறையில் எழுதப்பெற்றுள்ளன.

## பாட்டு வகை

இந்நூலின்கண் காப்புப் பாடல்களைச் சேர்த்து 3745 பாடல் அடிகள் காணப்படுகின்றன. இதன் யாப்பு வெண்கலிப்பா நடையில் உள்ளது. எனினும் இடையிடையே விருத்தம், கலிவிருத்தம், சந்தவிருத்தம் ஆகிய யாப்புக் குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. இந்நூலினுள் 42 விருத்தங்களும் 5 கலிவிருத்தங்களும் 3 சந்த விருத்தங்களும் காணப்படுகின்றன. அது தவிர திருவாசகம் என்ற தலைப்பில் அடங்கிய 20 விருத்தங்களும் வெண்கலிப்பா யாப்பில் 44 அடிவரையறையற்ற நீண்ட பாடல்களும் (இது நடை (அ) வேறு என்று ஆசிரியரால் குறிக்கப்படுகிறது) ஆக 114 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இது தனித்தனிப் பாக்களால் அமைந்த நூல் அன்று. ஒரே தொடர்ச்சியாகக் கதையைக் கூறிச் செல்லும் போக்கினையுடையது. நூல் நெடுகிலும் பொழிப்புமோனை ஒரே சீராக அமைந்துள்ளது.

'அம்மானை' என்ற சொல், நூலின் பலவிடங்களில் வருகின்றதாயினும், ஆசிரியர் தமக்குத் தோன்றிய இடங்களில் எல்லாம் அம்மானை என்ற அச்சொல்லை யாப்பின் பொருட்டாக அமைத்திருப்பதாகத் தோன்றுகின்றதேயொழிய, உட்குறிப்பு எதுவும் இருப்பதாகத் தோன்றவில்லை.

## பதிப்புமுறை

"முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவர் பொற்புலவர்—அன்னோர்
நடையிடையத் தம்வழியே நாட்டி மொழிமாற்றல்
கடையிடையர் மாட்டுவினை காண்''

(கலித்தொகை—பதிப்புரை)

என்பதன் வழி சுவடிச்செய்யுளின் மூல வடிவத்தை விருப்பப்படி மாற்றுவதற்குப் பதிப்பாசிரியர் எந்த உரிமையும் உடையவர் அல்லர் என்பது பெறப்படும். என்றாலும் சுவடியில் படியெடுப்போரால் ஏற்பட்ட எழுத்துப்பிழைகளை நீக்க வேண்டிய கடமை பதிப்பாசிரியரைச் சார்ந்தது. ஏட்டில் உள்ளதை உள்ளவாறு பதிப்பிக்க முனைவதைவிட, தவறுகளைத் திருத்திப் பதிப்பிக்கும் போதே அப்பதிப்பு சிறப்புடையதாக அமையும். அவ்வடிப்படையில் இப்பதிப்பு மேற்கொள்ளப்பட்டுள்ளது. உதாரணமாக,

| | | |
|---|---|---|
| ஒருத்திக்கு நல்(ல) | — | 2 |
| இறை(யி)றுத்து | — | 164 |

விடுபட்ட எழுத்துக்கள் அடைப்புக்குறிக்குள் இட்டு காட்டப்பெற்றிருக்கிறது.

| | | |
|---|---|---|
| அன்னேரம் | — | 408 |
| இருவருக்கும் கெற்பமது | — | 345 |
| முன்பில் வழக்குரைத்தான் | — | 590 |
| ஆரபாரத்துடனே | — | 637 |
| தறைதனிலே | — | 681 |
| பொற்சருகை | — | 2136 |

என்னும் தொடர்களில் உள்ள எழுத்து மாற்றங்கள், எழுத்துப்பிழைகள், கொச்சைச் சொற்கள் ஆகியன முறையே அந்நேரம், கற்பமது, முன்பின், ஆரவாரத்துடனே, தரைதனிலே, பொற்சரிகை என்பனவாகத் திருத்திப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இப்படித் திருத்தம் பெற்ற சொற்கள் சுவடியில் எவ்வாறு இருநதன என்பன 'சுவடிச்சொல்' என்று குறிப்பிடப்பட்டு அடிக்குறிப்பில் ஆங்காங்கு சுட்டப்படடுள்ளன.

பதிப்பில் பாடவேறுபாடுகள் பல சுட்டப்பெற்றுள்ளன. அவை நூற் செய்யுளில் அவ்வப்பக்கத்திலேயே அடிக்குறிப்பில் இடம்பெறுகின்றன. பாடவேறுபாட்டினைக் காணும்போது சிறந்த அதாவது உண்மையான பாடத்தைப் பதிப்பித்து விட்டு, அல்லாததை அடிக்குறிப்பில் தருவது வழக்கம். அதுவே தூய பதிப்பாகக் கொள்ளப்பெறும். அம்முறையில் இந்நூல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

## பதிப்பில் மேற்கொண்டவை

1. செய்யுட்களின் அடிகளும் சீர்களும் பிரிக்கப்பெற்று உரிய வடிவில் தரப்பட்டுள்ளன.
2. அடிகளும் சீர்களும் விடுபட்ட இடங்கள் புள்ளியிட்டுக் காட்டப்பட்டுள்ளன.
3. சுவடியின்கண் விடுபட்டனவும் சிதைவுற்றனவுமாகிய எழுத்துக்களும் சொற்களும் பதிப்பாசிரியரின் உய்த்துணர்வால் மீட்டுருவாக்கம் செய்யப்பட்ட நிலையில் அவை அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளன.
4. கதையோட்டத்திற்கு ஏற்பப் படிப்பவர்கள் புரிந்துகொள்ளும் வகையில் பதிப்பில், கதைத்திருப்பங்களும் வருணனைகளும் வருமிடங்களில் இடையிடையே பதிப்பாசிரியரால் தலைப்புக்கள் தரப்பட்டுள்ளன.
5. நூலினுள் விருத்தம், நடை என்று மாறிமாறி வருவதால் பாடலின் எண்ணிக்கை அறியும் பொருட்டு முன்பாகவும், அடிகளின் வரிசை எண்கள் தெளிவின் பொருட்டு, ஐந்தைந்தாகத் தொடர்ந்து பின்பாகவும் தரப்பட்டுள்ளன.
6. ந — ன; ன — ண; ர — ற; ழ — ள — ல; முதலிய எழுத்துக்கள் தம்முள் மயங்கி வந்துள்ள இடங்கள் உரியமுறையில் திருத்தப்பெற்றுள்ளன.
7. 'த்த — ற்ற' வாகவும், 'ற்ற — த்த' வாகவும் பொருளறிந்து மாற்றப்பட்டுள்ளன.
8. எதுகை, மோனைகள் பாடலின் இடம்நோக்கி ஒருசில இடங்களில் திருத்தப் பட்டுள்ளன.

நூலின் ஆய்வுரையில் அம்மானை இலக்கியத்தின் தோற்றம், வளர்ச்சி, வகைகள் மற்றும் அவற்றின் இலக்கியப்போக்கு பற்றியும், ஆமையர் அம்மானை நூலமைப்புமுறை, கதைச்சுருக்கம், நூல் மற்றும் நூலாசிரியர் வரலாறு, நூலின் அணி நலன்கள், ஒப்புமைச்செய்திகள் ஆகியனவும் கூறப்படுகின்றன.

நூலின் இறுதியில் நூலுக்குக் குறிப்புரை எழுதவும், ஆய்வுரை எழுதவும் பயன்படுத்தப்பெற்ற அகராதிகள், நூல்கள், கட்டுரைகள் ஆகியவற்றின் முறையான பட்டியல் இடம்பெறுகிறது. தொடர்ந்து சொல்லடைவு இடம்பெறுகிறது. இதில் பாடலில் உள்ள சொற்கள் மட்டுமே இடம்பெறுகின்றன.

ஆய்வாளர்களுக்குப் பயன்படும் நோக்கில் சுவடிகளாகவும், பதிப்பு நூல்களாகவும் அறியப்பெறும் அம்மானை நூல்களின் பட்டியல் வரிசை ஒன்று, இணைப்பு ஒன்றில் கொடுக்கப்பெற்றுள்ளது. பெயரளவில் கிடைக்கும் அம்மானை நூல்களின் தொகுப்புப் பட்டியல் ஒன்று, இணைப்பு இரண்டில் தரப்பட்டுள்ளது.

இதுவரை வெளிவந்துள்ள அம்மானை ஆய்வுகள் பற்றிய பட்டியல் ஒன்று, இணைப்பு மூன்றில் இடம்பெறுகிறது. ஆமையர் அம்மானைச் சுவடியைப் (எண். 5) பிரதி செய்தவராகிய கு. ஆறுமுகப்பெருமாள் நாடார் அவர்கள் பதிப்பித்த நூல்களின் பெயர்ப் பட்டியல் வரிசை இணைப்பு நான்கில் இடம்பெறுகிறது.

## குறிப்பு

கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசை ஆய்வு நிறுவனச் சுவடி நூலகத்தில் ஆமையரம்மானைக் கதை (எண். 8423), ஆமையாசான் அம்மானை. (எண். 10397) என்ற எண்களிலும் இரு சுவடிகள் காணப்படுகின்றன[1]. இங்கு பதிப்பிற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட ஆமையர் அம்மானைச் சுவடியில் இடம் பெறுகின்ற செய்தியும், கேரளப் பல்கலைக்கழகத்தில் உள்ள இவ்விரு அம்மானைச் சுவடிகளில் இடம் பெறுகின்ற செய்தியும் ஒன்றா என்பது ஆய்விற்குரியது. ஆமையாசான் அம்மானை (எண். 10397) என்ற சுவடியானது 'ஆமையரசான அம்மானை' என்ற தலைப்பில் அமைந்து வரவேண்டும் என்பது பதிப்பாசிரியரின் கருத்து. இது ஆராய்தற்குரியது.

மொ. மருதமுத்து

---

1. தமிழ்ச்சுவடிப் பெயர்கள், (பதி.) டி. பாஸ்கரன், கீழ்த்திசை ஆய்வு நிறவனம் மற்றும் சுவடி நூலகம், கேரளப் பல்தலைக்கழகம், திருவனந்தபுரம், 1984, ப. 10.

# நன்றியுரை

ஆமையர் அம்மானை என்னும் சுவடியைப் பதிப்பிக்கும் பணியை எனக்கு நல்கிய நிறுவன இயக்குநர்கள் டாக்டர் ஜி. ஜான்சாமுவேல், டாக்டர் ஷு. ஹிகோ சகா ஆகிய அறிஞர் பெருமக்களுக்கு நன்றியுடையேன். சுவடியியல் துறையில் என்னை ஈடுபடுத்தி எனது இலக்கிய ஆய்வு வளர்ச்சிக்கு ஆசானாக விளங்குபவர் இந்நிறுவனச் சுவடியியல் துறைத்தலைவர் பேராசிரியர் முனைவர் பூ. சுப்பிர மணியம் அவர்கள். இந்நூல் செம்மையாக அமைய அவ்வப்போது தேவையான கருத்துக்கள் பலவற்றை அளித்து உற்சாகமூட்டிய அப்பேராசிரியப் பெருந்தகை அவர்களுக்கு என்றும் நன்றியுடையேன்.

சுவடியிலிருந்து நூலைப் பெயர்த்தெழுதுவதற்கும் அச்சுப்படி திருத்துவதற்கும் உடனிருந்த உதவி செய்தவர் எனது துணைவியார் திருமதி பிரேமா மருதமுத்து. நூலின் சொல்லடைவு தயாரிப்பதற்கு உதவியவர்கள் சகோதரர் எம். மாசிலா மணி, சு. வடிவேலன் ஆகியோர். அச்சுப்படி திருத்தப் பணிகளில் உதவியோர் எங்கள் சுவடித்துறையைச் சார்ந்த திருமிகு டாக்டர் கி. ஜெயக்குமார், இராதா. செயலட்சுமி, மூ. பரிமணன், கி. பன்னீர்செல்வம், ச. சுமதி ஆகியோராவர். சுவடிகளையும், நூல்களையும் பயன்படுத்திக்கொள்ள உதவிய நிறுவன நூலகக் காப்பாளர் திருமதி ச. சாந்தகுமாரி அவர்கள். தட்டச்சுப்பணியில் உழைப்பை நல்கியவர்கள் திருமதி நே. உமாராணி, திருமதி பி. ரேணுகா, செல்வி சி. உஷா, செல்வி பொ. சாந்தி ஆகியோர். அட்டைப்படத்தை உருவாக்கி நூலை அழகு படுத்தியவர் ஓவியர் திரு. அ. செ. நடராசன் அவர்கள். இந்நூலை அழகுற அச் சிட்டுத் தந்தவர்கள் பாவை அச்சகத்தினர்.

அனைத்துப்பெருமக்களுக்கும் அன்பர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறேன். பதிப்புப்பணி மேலும் செம்மையுற அன்பர்கள் தெரிவிக்கும் கருத்துரைகளை வரவேற்கிறேன்.

**மொ. மருதமுத்து**

# EDITOR'S NOTE

One of the significant areas of work of the Institute of Asian Studies is the salvaging of old palm-leaf manuscripts, their preservation and their publication with authoritative comments and notes. The manuscripts collected cover a wide range of subjects such as grammar, poetry, religion, folk-tales, ballads and medicine. The majority of the manuscripts are ballads with their locale in South India. These have been properly catalogued and documented and serve as an invaluable source of information to the students of folk-lore.

*Āmaiyar Ammāṉai*, bearing the library number 5, is a folk tale with many versions. The manuscript, which has been taken up for publication, was gifted to the Institute on 7.10.85 by the family of Mr. Ku. Āṟumukap Perumāḷ Nāṭār who hails from Akattīsvaram in Kaṉṉiyākumari district. The person credited with copying the manuscript is also Ku. Āṟumukap perumāḷ Nāṭār. The manuscript was incomplete since the last few pages were missing.

Another manuscript available in the library of the Institute of Asian Studies, bearing the library number 183, is entitled *Pūvācaṉātaṉ Katai*. This deals with the same theme as *Āmaiyar Ammāṉai* but with some variations and was useful in filling up the missing portions. To be precise, the portions borrowed are: Lines 3716 to line 3745.

*Pūvācanātaṉ Katai* offered ample scope for a comparative study with *Āmaiyar Ammāṉai*. There was much to explore from the point of view of history and linguistics.

About the authoriship of *Pūvācanātaṉ Katai*, we have the following information in the text. The nativitive of the scriber was the son of Tāṟā viḷai Cūṭum Perumāḷ Nāṭār and went by the name Taṅka Nāṭār. The date of copying is given as the 25th of the Tamil month *Māci* in the year 1090.

*Āmaiyar Ammāṉai*, written on palm-leaves, contains 61 leaves whose dimensions are 46.5 × 4 cm. Though the manuscript is in fairly good condition, portions of it have been eaten by white ants. The author of this *Ammāṉai* is Āṟumukam, son of Pūtattāṉ Perumāḷ.

The opening page of the palm-leaf manuscript is blank. The text proper begins on the second page. Both the sides of the palm-leaf have been used for transcription. Each leaf is divided into three parts and in each part, ten lines have been written. The pages have been serially numbered, but not the verses. In some places we come across a mark to indicate the end of a verse. No sub-titles have been given. As the manuscript is of recent origin, the writing is distinct and legible.

Including the invocatory verse, the work contains 3745 lines. By and large, the metre employed is *Veṇ Kalippā* though we find occasionally other metres like *Kali Viruttam* and *Caṇta Viruttam*. Under the heading *Tiruvācakam,* there is a lengthy verse. The tale proper is narrated in a straight forward manner and there is consistency in the style and the conventions employed.

A word about the term *Ammāṉai*. In this work, it figures often and is used primarily to obtain euphonic effects. Many verses end with this term. Elsewhere, in the critical analysis of the text, details about the genre *Ammāṉai* have been elaborately given. The present work, by and large, conforms to the conventions of a traditional *Ammāṉai.*

Though *Kalittokai* roundly condemns editors taking liberties with the text and altering them and underlines the need for absolute fidelity to the original, it cannot be extended *in toto* to palm-leaf manuscripts as the copyists are often careless and slipshod and commit serious mistakes. Editing of palm-leaf manuscripts, however, is not done arbitrarily. Changes in the text are made only when it is unintelligible either by the distortion of words or the omission of words. Most of the changes wrought by the present editor are verbal. They are either the correction of words misspelt or the substitution of an obscure or colloquial word by a simpler and familiar one. One or two examples will suffice: In line 637, the word *Ārapārattuṭaṉē* and in line 345 the words *Iruvarukkum keṟpamatu* have been restored to their correct form. Nowhere has the editor acted arbitrarily. The different versions obtaining have been scrutinised carefully and the most suitable one accepted. The other versions have been given under footnotes.

Editorial work has been confined to:

1) Proper demarcation of syllables to facilitate easy reading.
2) The indication of omissions by a series of dots.
3) Intuitive restoration of words that could not be deciphered and words omitted in transcription. The words substituted by the editor have been given in brackets.
4) The giving of sub-titles.
5) The numbering of verses, as prose of a kind sometimes gets interspersed with verse.
6) The restoration of illegible words.
7) The rendering in formal Tamil of verse-endings which are too colloquial to be understood.
8) The polishing of the rhyme scheme in some verses by making minor verbal changes.

In the critical introduction which follows, all the literary aspects have been covered exhaustively, including the origin and development of the *Ammāṉai* genre, its distinct features and characteristics. Besides a skelton outline of the narrative has been given along with details about the author, verbal embellishments and other literary merits. A bibliography has been appended. A list of books belonging to the *Ammāṉai* genre available either in printed form or as palm-leaf manuscripts has been included. Another appendix lists the critical books on *Ammāṉai* that have seen the light of day. Also the titles of books published by Ku. Āṟumukap Perumāḷ Nāṭār who is credited with copying *Āmaiyar Ammāṉai.*

In the Kerala University Manuscripts Library there are two palm-leaf manuscripts going by the titles *Āmai Ammāṉai Katai* (8423) and *Āmai Ācāṉ Ammāṉai* (10397). A comparative study of *Āmaiyar Ammāṉai* with these two palm-leaf manuscripts is worth while. The present editor feels that *Āmaiācāṉ Ammāṉai* is a misnomer for *Āmai Aracāna Ammāṉai*. This is also worth investigating.

**M. Maruthamuthu**

# A WORD OF THANKS

I am grateful to the Directors of the Institute of Asian Studies, Dr. G. John Samuel and Dr. Shu Hikosaka for entrusting me with the work of editing the palm-leaf Manuscript Āmaiyar Ammāṉai preserved in the Institute.

It was Dr. P. Subramaniam, Head of the Department of Manuscriptology who taught me the art of deciphering palm-leaf manuscripts and interpreting the text thereof. In editing the present book, his help and guidance were invaluable. I am thankful to him.

My wife Mrs. Prema Maruthamuthu is be thanked profusely for her help in copying the manuscript and in reading the proofs. Messrs. M. Masilamani and S. Vadivelan deserve thanks for compiling the glossary. The others who extended their help in proof reading were Dr. K. Jayakumar, Radha Jayalakshmi, Mr. M. Parimanan, Mr. K. Panneer Selvam, Miss. C. Sumathi, Mr. K. Chidambaram and Mr. S. Venkateswaran. I am grateful to them. Also to the Librarian Mrs. Santha Kumari for readily obliging me with books and Manuscripts The typing was neatly done by a team consisting of Mrs. N. Umarani, Mrs. P. Renuga, Miss. C. Usha, Miss. P. Shanthi. The credit for the beautiful cover page design goes to the well-known artist Mr. A. S. Natarajan. The printing was done at Pavai Press.

I am happy to acknowledge the help I received from a host of friends and well-wishes. I welcome advice an the improvement of this edition.

M. Maruthamuthu

# ஆய்வுரை

தமிழ் மக்களின் வாழ்க்கை இயல்புகளும் உணர்வோட்டங்களும் இலக்கியப் படிவங்களாகத் தமிழகமெங்கும் காலங்காலமாகப் படிந்து கிடக்கின்றன.. மக்களின் பண்பாட்டைப் புலப்படுத்தும் காலக்கண்ணாடிகளாக அவை விளங்குகின்றன. இலக்கியச் செல்வங்கள் பலவகையான அமைப்பில் உருவாக்கப்பெற்றுப் பல இடங்களில் சிதறிக்கிடக்கின்றன. அவற்றுள் ஒன்று அம்மானை எனும் சிற்றிலக்கியக் கதைப்பாடலாகும். அம்மானை நாட்டுப்புறப்பாடல் வகைகளுள் ஒன்றாகும்.

## நாட்டுப்புற இலக்கியம்

உலக இலக்கியங்கள் அனைத்திலும் நாட்டுப்புற இலக்கியம், செவ்விலக்கியம் என்ற இருபிரிவு உண்டு. நாட்டுப்புற இலக்கியம் என்பது எளிமை, இனிமை, இசை இவற்றுடன் கூடிய வாய்மொழிப் பாடல்களைக் குறிக்கும். செவ்விலக்கியம் என்பது இலக்கண வரையறைக்குட்பட்டது. உலகமொழிகள் எல்லாவற்றிலும் நாட்டுப்புற இலக்கியமே முதலில் தோன்றியிருக்க வேண்டும். அதன் பின்னரே செவ்விலக்கியங்கள் தோற்றம் பெற்றன. இடைக்காலத்திலும், இக்காலத்திலும் எத்தனையோ நாட்டுப்புறப் பாடல்கள் மலர்ந்துள்ளன.

## கதைப்பாடல்

கதையைப் பாடலாகக் கூறுவது அல்லது பாடலில் கதை பொதிந்து வருவது கதைப்பாடல் என்றழைக்கப்படுகிறது. இது ஒரு கதையாகவும் இருக்கலாம்; அல்லது உட்கதைகள் பலகொண்ட கூட்டுக் கதையாகவும் இருக்கலாம். இலக்கியத்தின் ஓர் உறுப்பாகிய கதைப்பாடல், கதையினைத் தழுவிய பாடல் எனப்பொருள்படும்.

இக்கதைப்பாடல்கள் எழுத்துருவம் பெறுவதற்கு முன்னர் பன்னெடுங் காலமாக மக்கள் வழக்காற்று மொழியில்தான் நிலவின. வாய்மொழிக் கதைகளும் வாய்மொழிப் பாடல்களும் இருவேறு அமைப்பாக வளர்ந்து, பின் இரண்டும் இணையும் முயற்சியாகக் கதைப்பாடல்கள் தோன்றி வளர்ந்திருக்கின்றன. பண்டைக் காலத்தில் பல பேரிலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ள தமிழ்நாட்டில், இடைக் காலத்தில் அரசுநிலை மாற்றம் காரணமாகப் பலவிதமான சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளதை இலக்கிய வரலாற்றின் வாயிலாக அறியலாம்.

கதைப்பாடல்கள் தோன்றி வளர்ந்துள்ளதை அடிப்படையாகக்கொண்டு அதன் காலத்தை வரையறுத்துக் காண முயன்றால் பதினாறாம் நூற்றாண்டிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதிவரை கதைப்பாடல்கள் தமிழ்நாட்டில் நன்கு வளர்ந்து செழித்துள்ளன என்று கூறலாம்.

பாடலில் கதைப்போக்கை அமைத்துப்பாடுதல் கதைப்பாடல் மரபாகும். இது 'கதை' என்றும் 'அம்மானை' என்றும் சுவடிகளில் குறிக்கப்பெறும். ''கதைப் பாடல் என்ற பெயர் சுவடிகளில் இல்லை. கதைப்பாடலாக அமைந்த நாட்டுப்புற

இலக்கியங்களுக்குப் பெரும்பான்மையாக அம்மானை என்ற பெயரே காணப் படுகின்றது''[1] என்னும் கருத்து நோக்கத்தக்கது.

## அம்மானை

அம்மானைப் பாடல், இலக்கிய வடிவில் அமைந்த நாட்டுப்புறக் கதைப் பாடலாகும். நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி ஆராய்ந்த திரு. உ. வே. சாமி நாதையர் ஐம்பத்திரண்டுவகை நாட்டுப்புறப் பாடல்களில் அம்மானையையும் ஒன்றாகக் குறிப்பர். இஃது எளிமையான நடையில் அமைந்து எதுகை, மோனை, சந்த நயங்களுடன் காணப்பெறும். இஃது ஒரு கதையையோ, வரலாற்றையோ மையமாக வைத்துத் தொடர்ந்து செய்யுள் வடிவில் அமைத்துப் பாடப்பெறும் கதைப்பாடலாகும். ''நாட்டுப்புறப்பாடல்களில் சிறப்பான இடத்தைப் பெறுவது அம்மானைப் பாட்டு என்னும் கதைப்பாடல். மேனாட்டில் அறிஞர் பலர் இதனைத் தெளிவாக ஆய்ந்து வரையறுத்துள்ளனர்''[2] என்பர்.

## அம்மானை — சொல்லாட்சி

சங்க இலக்கியத்தில் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு போன்றவற்றில் கழங்காடல் பற்றிய செய்தி இடம்பெற்ற போதிலும் அம்மானை என்ற சொல் வழக்கு இல்லை. சிலப்பதிகாரம் அம்மானை வரிப் பாடல்களைப் பற்றிப் பேசுகிறது. ''சிலப்பதிகாரம் அம்மானை வரிப்பாடல் களைத் தருவதுடன் இச்சொல்லின் முதல் ஆட்சியையும் அளிக்கிறது''[3] என்பர்.

## அம்மானை — சொற்பொருள்

அம்மானை என்பது அன்னை அல்லது தாய் எனப்பொருள்படும். பெண் களைப் பொதுவாக 'அம்மா' என்று அழைப்பதுபோல் அம்மானை என்றழைப்பது இலக்கிய மரபாகும். அம்மனை என்பதை அம்மன் + ஐ என்று பிரித்தால் தாயை என்ற பொருளும், அ + மனை என்று பிரித்தால் அழகிய மனையின்கண் இருந் தாடும் ஆட்டம் என்ற பொருளும் பெறப்படுகிறது. பெண்கள் தம் விளையாட்டில் அம்மனை, அம்மானாய், அம்மானார், அம்மானே முதலான சொற்களைப் பயன் படுத்திப் பாடியுள்ளதை அறியமுடிகிறது.

---

1. 'கதைப்பாடல்கள் — சில அணுகுமுறைகள்', கருத்தரங்கக் கட்டுரை. சுப்பிரமணியம், பூ., உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை. 26.2.'88.

2. தமிழில் அம்மானைப்பாடல்கள், இராசாராம், த. கேரளப்பல்கலைக்கழக வெளியீடு ப. 11

3. தமிழ் இலக்கிய வகையும் வடிவும், சுப்பிரமணியன், ச. வே., தமிழ்ப்பதிப்பகம், சென்னை. 1984. ப. 477.

அம்மானை என்ற சொல்லை ஒட்டி அம்மானைவரி, அம்மானைக்காய், அம்மானை மடக்கு, அம்மானைப்பாட்டு என்ற சொற்கள் அமைகின்றன. 'அம் மானை' மகளிர் ஆடும் ஆட்டங்களில் ஒன்று. 'அம்மானைவரி' அம்மானை ஆடும் போது பாடப்படும் பாடல், 'அம்மானைக்காய்' அம்மானை ஆடும்போது பயன் படும் காய். 'அம்மானை மடக்கு' கலித்தாழிசையால் வினாவிடையாக மகளிர் இருவர் அல்லது மூவர் இருபொருள்பட பாடும்பாட்டு. சிலப்பதிகாரம், கலம்பகங் களில் இவை இந்நிலைகளில் அமைந்துள்ளன. அம்மானைப் பாட்டு என்பது கதைப்பாடலைக் குறிக்கும்.

## அம்மானை — இலக்கணம்

அம்மானையின் இலக்கணம் பற்றித் தொல்காப்பியத்தில் எக்குறிப்பும் இல்லை. தொல்காப்பியம் கூறும் பண்ணத்தி, பிசி ஆகியவற்றுக்கான இலக்கணம் நாட்டுப் புறப் பாடல்களுக்கு உரியது என்று உரையாசிரியர்கள் கருதுகின்றனர். அம்மானைப் பாடல்கள் நாட்டுப்புறப்பாடல் வகையினில் வளர்ந்த இலக்கியமாக உள்ளதால் பண்ணத்தியை அம்மானைப் பாடல்களுக்கும் பொருத்திக் காட்ட முடிகிறது.

பாட்டியல் நூல்கள் அம்மானைக்கு இலக்கணம் கூறவில்லை. அறுவகை இலக் கணம் தந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அம்மானைக்கு இலக்கணம் தருகின்றார்.

''இரண்டு நாலைந் தெனுமடி ஈற்றில்
தன்பெயர் குலவத் தக்க அம்மானை
ஐந்தடிக் கலிப்பா போலும், அதனிடை
சொல்லலும் மறுத்தலும் விடையும் தானே
கூறினர் பற்பலர் குவலயத் திடத்தே'' (அறு. யாப்பு. 29)

''அம்மானை யீற்றின் விடைமொழி யதனுள்
இருபொருள் காட்டல் மிகையாம், முப்பொருள்
நாற்பொருள் மொழியினும் இசைவுறல் நலமே'' (அறு. யாப்பு. 30)

''கலிப்பா அரையரை யாகக் கூட்டியும்
எதுகை இன்றித் தனித்தனி சேர்த்தும்
காதை யம்மானை கழறினர் சிலரே'' (அறு. யாப்பு. 31)

''கொச்சகச் சீர்கொடு கூறுமம் மானை
இழிவினை தாகுமென் றிசைப்பது துணிவே'' (அறு. யாப்பு. 32)

என்னும் நூற்பாக்களால் அம்மானையின் இலக்கணத்தைச் சுட்டுகின்றார். பேச்சு நடை கதையமைப்பில் பயன்படுத்தப்பட்டு வரும் பாடலைக் கலிப்பாவின் வளர்ச்சி யாகும் என்கிறார்.

அம்மானை இலக்கியத்திற்குத் தெளிவாகவும் வரையறையாகவும் இலக்கணம் கண்டவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். இவர் காலத்தில் அம்மானை

இலக்கியங்கள் பேரளவிற்கு அச்சிடப்பெற்று வெளிவந்தன. அவ்வளர்ச்சியைக் கண்ட சுவாமிகள், வாய்மொழி இலக்கியமான அம்மானையைக் கற்றோர் போற்றும் இலக்கிய வகையாக ஏற்றுத் தான் பாடிய இலக்கண நூலில் அதன் இயல்பை விளக்கினார்.

## அம்மானையின் தோற்றம்

அம்மானையின் தோற்றத்தைத் தமிழிலக்கியத்தில் முதலில் சிலப்பதிகார வரிப் பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது. இதுவே இன்று கிடைத்துள்ள பழமை யான அம்மானை வரிப்பாடலாகும். தமிழில் முதலில் அம்மானைப் பாடலைப் பாடியவர் புகழேந்திப் புலவர் என்று கருதுகின்றனர். ''அம்மானைப் பாடல் களின் ஆதிகருத்தா புகழேந்திப் புலவர் ஆவர் என்று செவிவழிச் செய்தி. விநோ தரச மஞ்சரியில் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார் இந்த செவிவழிச் செய்தி யைத் தெரிவிக்கிறார்''.[4] புகழேந்திப் புலவரின் காலம் கி.பி. பதின்மூன்றாம் நூற்றாண்டாகும். இச்செவி வழிச் செய்தி எவ்வாறாயினும் அம்மானைப் பாடல் களை ஆக்கியவர் புகழைத் தாங்கியவராகிறார் என்பதில் ஐயமில்லை. நாடோடி யாக வாழ்ந்த மக்கள் வழக்கில் அமைந்த பாடல் வகையே இது என்பது தெளிவு. இது மக்கள் வாழ்வோடு இரண்டறக் கலந்து வருவது. ''கி.பி.16, 17-ஆம் நூற் றாண்டில் அம்மானைப் பாடல்கள் தோன்றின''[5] என்று அம்மானைப் பாடல் களின் தோற்றம் பற்றி அறிஞர்கள் கூறுவர்.

அம்மானை என்பது மகளிர் விளையாட்டில் தோன்றி, காலப்போக்கில் சிற்சில மாறுதல்களைப் பெற்றுப் பின்னாளில் கதைப்பாடலாக உருவெடுத் துள்ளதை இலக்கிய வரலாற்றில் நாம் அறியமுடிகின்றது. முதற்கண் அம்மானைப் பாட்டின் தோற்றத்தினைச் சற்று நோக்கிப் பின் வளர்ந்து பெருகிய அம்மானைக் கதைப் பாடலுக்கு வருவோம்.

அம்மானை என்பது அம்மனை என்பதின் விளியாகக் கொள்ளலாம். இச் சொல் ஈறுதிரிந்து 'அம்மானாய்', 'அம்மானே' எனவும் வரும். மகளிர் கையால் காய்களை வீசியெறிந்து ஆடும் விளையாட்டையும், அவ்விளையாட்டிற்குப் பயன் படுத்தியக் காய்களையும், அவ்விளையாட்டில் அவர்கள் பாடிய பாடல்களையும் குறிக்க 'அம்மானை' என்பது பயன்படுத்தப்பட்டுள்ளமையை இலக்கிய வளர்ச்சி யில் அறிய முடிகின்றது.

---

4. சிற்றிலக்கிய வகைகள், சண்முகம்பிள்ளை. மு., மணிவாசகர் பதிப்பகம், சென்னை. 1988. பக். 148-149.

5. கதைப்பாடல், அருணாசலம். மு., காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1976. பக். 53-54.

முதன்முதலாகச் சிலப்பதிகாரம் வாழ்த்துக் காதையில் 'அம்மானைவரி' என்னும் பகுதியில் மகளிர் அம்மானைக் காய்களை மேலே வீசியாடும்போது பாடும் பாடலைக் காணமுடிகிறது. 'அம்மானை வரி' எனப்படும் இந்த இசைப்பாட்டு வினாவும் விடையுமாக மூவர் இணைந்து பாடும் முறையில் ஐந்து அடிகளைக் கொண்டமைந்துள்ளது.

''வீங்குநீர் வேலி உலகாண்டு விண்ணவர்கோன்
ஓங்கரணம் காத்த உரவோன் யார்—அம்மானை
ஓங்கரணம் காத்த உரவோன் உயர்விசும்பில்
தூங்கெயில் மூன்றெறிந்த சோழன்காண்—அம்மானை
சோழன் புகார் நகரம் பாடேலோர் அம்மானை!''

(சிலப். வாழ்த்துக்காதை. 16)

எனத் தொடக்கமாக நான்கு பாடல்கள் இருபத்தொரு அடிகளைக் கொண்டு இக்காவியத்தில் காணப்படுகின்றன. இவற்றுள் முதல் மூன்றும் வினாவும் விடையுமாகச் சோழன் புகார் நகரை மூவர் கூடிப்பாடும் பாங்கில் உள்ளன. மூன்றாம் அடி அடிமடக்காக அமைந்துள்ளது. முடிவு மூன்று பாடல்களிலும் பல்லவி போலச் 'சோழன்புகார் நகரம் பாடேலோர் அம்மானை' என்றே உள்ளது. நாலாவது பாடல் ஆறு அடிகளுடன் சற்று மாறுபட்டுக் காணப்படுகிறது.

''அம்மனை தம்கையிற் கொண்டங் கணியிழையார்
தம்மனையிற் பாடும் தகையேலோர் அம்மானை
தம்மனையிற் பாடும் தகையெலாம் தார்வேந்தன்
கொம்மை வரிமுலைமேற் கூடவே அம்மானை
கொம்மை வரிமுலைமேற் கூடிற் குலவேந்தன்
அம்மென் புகார் நகரம் பாடேலோ ரம்மானை''

(சிலப். வாழ்த்துக்காதை. 19)

இப்பாடலில் விளையாட்டிற்கான 'அம்மானைக்காய்' பயின்று வந்துள்ளது. இவற்றிலும் அம்மானை என்ற விளிமூன்றுதான். ஆதலால் இதுவும் முந்திய பாடல்களை ஒத்த பாங்கினதாகும்.

சிலப்பதிகாரத்தில் காணப்படும் அம்மானை பற்றியக் குறிப்புகளுக்குப் பின்னர் அதனைத் தொடர்ந்து திருவாசகத்தில் திருவம்மானை எழுந்தது. திருவம்மானை என்ற இப்பதிகத்தில் நூற்றிருபது அடிகளில் இருபது பாடல்களில் 'அம்மானாய்' என்ற சொல்லைப் பயன்படுத்திப் பெண்கள் சிவபெருமானின் திருப்புகழ்களைத் தொகுத்துரைத்துத் துதிக்கும் முறையில் உள்ளது. இதில் உள்ள இருபது பாடல்களுள் ஒன்று தவிர, மற்ற எல்லாப் பாடல்களும் 'பாடுதுங்காண் அம்மானாய்' என்றே முடிவுறுகின்றன. பதினாறாம் பாடல் மட்டும் 'கூறுதுங்காண் அம்மானாய்' என்று உள்ளது. இந்த அம்மானைப் பகுதியில் வரிப்பாடலின் வினாவிடை முறை, மடக்கு என்னும் மூவர் அம்மானைப் பாடலமைப்பு மாறிப் பெண்கள் துதிபாடும் வகையில் பாடல்தோறும் 'அம்மானாய்' என விளிமுடிபு பெற்று

வந்தமை காரணமாக இது அம்மானைப் பாடலெனப்படுகின்றது. திருவாசகத்தின் இத்திருவம்மானைப் பாடல் இதனைத் தனி இலக்கிய வகையாக ஆக்குகின்றது.

சிலம்பு அம்மானைப் பாட்டில் அரசரைப் பாட, திருவாசகத்தின் திருவம் மானையில் இறைவனைப் பாடும் பொருள்நிலை வேறுபட்டு அமைகின்றது. அங் குள்ள கலித்தாழிசை அமைப்பு நீங்கி, இங்கு கொச்சகவடிவு பொருந்துகின்றது.

இதற்கடுத்து மூவரம்மானையிலும், கலம்பகம், உலா, பிள்ளைத்தமிழ் ஆகிய சிற்றிலக்கியங்களிலும் 'அம்மானை' உறுப்பாக இடம்பெற்று, மேலே சுட்டிய வினாவிடை என்னும் நிலைமாறிக் காணப்படுகிறது. ஒருத்தி முதலில் ஒரு கருத்தைச் சொல்ல, அக்கருத்தையே வழிமொழிந்தாற்போல அதற்கு மற்றொருத்தி விளக்கம் வினாவ, மூன்றாமவள் அவ்வினாவிற்குரிய விடையினைச் சிலேடை நயம் பொருந்தக் கூறுவதாக அமைந்துள்ளது.

''புந்திவனஞ் சூழும் பொருவில்லாப் பிள்ளையார்
தந்திமுகன் குடவயிற்றன் சப்பாணி — அம்மானை
தந்திமுகவன் குடவயிற்றன் சப்பாணி யாமாகில்,
இந்த வயிற்றுக்கு இரையெங்கே? — அம்மானை
இன்றென்றே ஈசன் இரக்கலுற்றான் அம்மானை''

என்பது மூவரம்மானையின் முதற்பாடல்.

''தேனமருஞ் சோலைத் திருவரங்கர் எப்பொருளும்
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலர்காண் — அம்மானை
ஆனவர்தாம் ஆண்பெண் அலியலரே யாமாகில்
சானகியைக் கொள்வாரோ தாரமாய் — அம்மானை
தாரமாய்க் கொண்டதுமோர் சாபத்தால் அம்மானை''

என்பது திருவரங்கக் கலம்பகத்தில் காணும் அம்மானைப் பாடல். இப்பாடல்கள் சிலப்பதிகார அம்மானை வரிப்பாடல் போன்று வினாவாகத் தொடங்கப்பட வில்லை. ஆனால், மூன்றாம் அடி மடக்காக அமைதல் காணத்தகும். இறுதியடி யில் நயம்தோன்ற விடைபகர்ந்து முடிக்கும் முறை பின்னர் எழுந்த ஒரு மாற்று வளர்ச்சி என அறியலாம்.

இவ்வாறு தனித்தனிப் பாடல்களாக அமைந்த அம்மானைப் பாடலின் வளர் நிலைதான் கதைப்பாடலாக வரும் அம்மானைப் பாடல்கள். இவற்றை ஆங்கிலத் தில் வழங்கும் 'பாலட்' (BALLAD) என்பதனோடு ஒப்பிடலாம்

16 ஆம் நூற்றாண்டில் மூவரம்மானையோடு, தனி இலக்கியமாகக் கதை கூறித் தோன்றிய அம்மானை பல நோக்கங்களைக் கொண்டு எழுந்துள்ளது. இவ்வாறு வளர்ந்து வந்த அம்மானைப் பாடல், பத்தொன்பதாம் இருபதாம் நூற் றாண்டளவில் நூலுருக்கொண்டு வளர்வதாயிற்று. கதைப்பாடலில் அமைந்த அம் மானை இக்காலத்தில் அரசியல் தலைவர்களைக் கொண்டு அரசியல் நிகழ்ச்சி களையும், சமுதாயச் சீர்கேடுகளையும் சுட்டும் நோக்கமாகக் கொண்டு வளர்ந் துள்ளது.

## வகைகள்

சிற்றிலக்கியமாகப் பரிணமித்த அம்மானையின் முதல் நோக்கம் கதை கூறுதல். இது பெரும்பாலும் எல்லா அம்மானைகளுக்கும் பொதுவானது. அம்மானை இலக்கியத்தை அவற்றின் பாடுபொருளைக் கொண்டு ஐந்து வகைகளாகப் பிரிக்கலாம்.

### 1. இதிகாசபுராண அம்மானை

இதிகாசபுராணக் கருத்தை மக்களுக்கு உரைக்கும் வகையில் பாடுவது. (உ-ம்) இராமாயண அம்மானை, மகாபாரத அம்மானை.

### 2. இலக்கிய அம்மானை

தமிழ் இலக்கியங்களிலிருந்து பாடுபொருள் கொள்ளப்பட்டன. இவை அம்மானை அமைப்பில் அமையும்போது பல்வேறு மாற்றங்களைப் பெற்றன. (உ-ம்) கோவலன் கதை அம்மானை, சீறா அம்மானை, சீவக சிந்தாமணி அம்மானை, நளச்சக்கரவர்த்தி அம்மானை.

### 3. சமய அம்மானை

இறைவன் இறைவியர் மீது பாடப்படும அம்மானைகள் அவர்களது பெருமைகளையும், கோயில்களின் சிறப்புக்களையும் சித்தரிக்கும் வகையில் சமயத்தைப் பரப்பும் ஒரே நோக்குடன் பாடப்பெற்றன. (உ-ம்) மேரிகருத்தம்மாள் அம்மானை, கித்தேரியம்மாள் அம்மானை, காமாட்சியம்மன் தவமகிமை அம்மானை, ஏகாதசி அம்மானை.

### 4. சமுதாய அம்மானை

சமூகத்தில் மறைந்து கிடக்கும் பல்வேறு சிக்கல்களான சாதிச் சண்டை, கலப்பு மணம், அரசியல் மாற்றங்களால் சமூகத்தில் ஏற்பட்ட பல்வேறு மாற்றங்கள் முதலிய பல்வேறு கருத்துக்களை மையமாகக் கொண்டு அம்மானைகள் எழுந்தன. (உ-ம்) மதுரைவீரன் அம்மானை, பொன்னர் சங்கர் அம்மானை, சேர்மன் அருணாசல சுவாமி அம்மானை.

### 5. வரலாற்று அம்மானை

வரலாறு கூறுதலே இவ்வகையின் முக்கிய நோக்கமாகும். பதினாறாம நூற்றாண்டு முதல் இந்நூற்றாண்டு வரையுள்ள வரலாற்று நிகழ்ச்சிகளை மக்களுக்கு எடுத்துரைக்கும் வண்ணம் இவ்வகை அம்மானைகள் தோன்றியுள்ளன. (உ-ம்) இராமப்பையன் அம்மானை, சிவகங்கைச சரித்திர அம்மானை, தேசிங்குராசன் அம்மானை, ஐரோப்பிய யுத்த அம்மானை.

## இலக்கியப்போக்கு

நாட்டுப்புறப்பாடலாக இருந்து இலக்கியமாக ஏற்றம் பெற்ற வகைகளுள் அம்மானை குறிப்பிடத்தக்கது. மகளிர் விளையாட்டுப் பாடலாக அமைந்த அம்மானை, சிலம்பில் தோற்றம் பெற்று, பின் மாணிக்கவாசகரின் திருவாசகத்தில்

திருவம்மானைப் பாடல்களாக வளர்ச்சியுற்று, பின்னர் கலம்பக நூல்களில் உறுப் பாக இடம்பெற்று உலா, பிள்ளைத்தமிழ் ஆகிய இலக்கிய வகைகளில் வளமான இலக்கிய வாழ்வை அடைந்தது.

பதினேழாம் நூற்றாண்டுக்குப் பின்னர் அம்மானை தனிச் செய்யுளாய் மற்றும் மகளிர் ஆடல் வகைகளில் ஒன்று என்னும் தனிநிலை மறைந்து, நெடிய கதையைக் கூறிச் செல்லும் பாடலாக உருமாறிற்று. இவ்வம்மானைப் பாடலானது உடுக்கு, வில் முதலிய இசைக்கருவிகளின் துணையோடு தனி ஒருவரோ, சிலரோ ஒரு கதையமைப்பினை இசையோடு இசைத்துச் சொல்வது என்னும் பொதுநிலையில் அமைந்து நின்றுவிட்டது. இதன் பயனாகத் தெய்வங்கள், மானிடத் தலைவர்கள், புராண நிகழ்ச்சிகள், சமயங்கள் தொடர்பான வரலாறுகள், நாட்டுப்புறக் கதை கள், அரசியல் நிகழ்ச்சிகள் முதலானவற்றைக் கருப்பொருளாகக் கொண்டு பாடும் நிலை ஏற்பட்டது எனலாம். இவற்றில் ஆங்காங்கே அம்மானை என்ற சொல் வருதல் தவிர, ஆட்டத்தின் (விளையாட்டுத்) தன்மையும் இல்லாமல் போயிற்று.

'அம்மானைப் பாட்டு என்பது கதைப்பாடலையே குறிக்கும்'[6]. தமிழகத்தில் நாயக்கர் காலத்தில் இது பெரும் வளர்ச்சி பெற்றது. இலக்கிய வரலாற்றில் தலபுராணங்களும், அம்மானைக் கதைப்பாடல்களும் சிறப்புப் பெற்ற காலம் இது. அம்மானைப் பாடல்களில் பெரும்பாலானவை பாமர மக்களின் உள்ள உணர்ச்சி களை வெளிப்படுத்தும் கருவிகளாக உருப்பெற்றன. இவை ஏட்டிலக்கியமாக அன்றி மக்களிலக்கியமாக அமைந்ததும் நினைத்தற்குரியது.

இத்தகைய அம்மானைப் பாடல்களில் ஆசிரியர்களின் பெயர்களை அறிந்து கொள்வது அரிய செயலாகும். பெரும்பாலும் அவர்களது பெயர்கள் அறிந்து கொள்ள முடியாமலேயே உள்ளன. காலம், இடம் இவற்றின் சூழ்நிலைகளுக்கேற்ப இப்பாடல்கள் வேறுபாடுகளும், வளர்ச்சியும் எய்தும் தன்மையிலிருப்பதனால் இவற்றின் மூலவடிவும், மூல ஆசிரியர் பெயரும் மறைக்கவும், மறக்கவும் பட்டிருக் கலாம். இத்தகைய நெடும்பாடல்கள் நூலுருக் கொள்ளுங்கால் சில புகழ்மிக்க புலவர்களை ஆசிரியர்களாகக் கூறும் பழக்கமும் நிலவியது.

இதுகாறும் ஆய்ந்த செய்திகளிலிருந்து ஒரு முடிவுக்கு வரமுடிகிறது. அதாவது, சிலப்பதிகாரத்தில் மொட்டுவிடத் தொடங்கிய அம்மானைப் பாடல் திருவாசகத் தில் வெடித்துப் பூவாகிப் பின்னர் கலம்பகம் மற்றும் உலா, பிள்ளைத் தமிழ் இலக்கியங்களில் காயாக உருப்பெற்று, பின்னர் கதைப்பாடலில் கனியாக வளர்ந்து செம்மையான இலக்கிய நிலையில் இன்று காணப்படுகின்றது.

6. கலைக்களஞ்சியம், தொகுதி — 2, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955.

# ஆமையர் அம்மானை நூலமைப்பு முறை

## முகவுரை

எந்த ஒரு இலக்கியப் பிரிவாக இருந்தாலும் அதற்கென ஓர் அமைப்புமுறை இருக்கும். அவ்வாறே அம்மானைக் கதைப்பாடலுக்கென்று சில அமைப்புகள் உண்டு. கதையின் தொடக்கம், முடிவு, கதை சொல்லும் உத்தி, சொல்லமைப்பு, பாவமைப்பு, நடைநயம், அணிநலம் போன்ற பல அமைப்புகள் இதில் அடங்கி யுள்ளன. இவற்றை அறிந்து கொள்வதின் மூலம் கதைப்பாடலின் உருவை (FORM) அறியலாம். அவ்வகையில் ஆமையர் அம்மானை நூலின் அமைப்பு முறையை ஆராயலாம்.

## காப்பு

எந்நூலாயினும் முதலில் காப்பு அல்லது இறைவாழ்த்துப் பாடியே நூலை எழுதத் தொடங்குவது வழக்கம். கதைப்பாடலில் கதையின் தொடக்கத்திற்கு முன் காப்புப் பாடுவர். காப்புப் பாடலானது ஒரு தெய்வத்தைக் குறிப்பட்டு வணங்கும் ஒரு பாடலாகவோ அல்லது பல தெய்வத்தைக் குறிப்பிட்டு வணங்கும் ஒரு பாட லாகவோ அமையும். பெரும்பாலும் முதல் பாடல் பிள்ளையார் வாழ்த்தாகவே இருக்கும்.

ஆமையர் அம்மானையும் இதற்கு விதிவிலக்கல்ல. காப்புப் பாடலாகிய
'தீமையை அகற்றும் வேதத் திறைமகன் காப்ப தாமே'' (அ.எ.4.)
'... ...மொழிந்திட முன்னோன் காப்பாம்' (அ.எ. 8)

எனப் பிள்ளையாரை வாழ்த்தியே அம்மானை ஆசிரியர் நூலினைத் தொடங்கு கிறார். இக்காப்புப் பாடல்கள் அறுசீர் விருத்தத்தால் ஆனவை. இக்காப்புப் பாடலி லேயே ஆசிரியர் தான் கூறப்போகும் கதைச் செபதியினைக் குறிப்பாகக் கூறி விடுகிறார். காப்புப்பாடல் விநாயகர் வணக்கமாக அமைந்தாலும் கதைத் தலை வனின் பிறப்பு மற்றும் பண்புகளை அறிமுகப்படுத்திப் படிப்போரைக் கவர்ந்து விடுகின்றார்.

பின்னர் நூல் எழுதுவதற்கு இறைவனின் அருள்வேண்டிப் பாடும் பாடல் களாக விநாயகர் துதி, முருகன் துதி, கலைமகள் துதி ஆகியவை பாடப்பெறுகின்றன.

## நுவல்பொருள்

துதிப் பாடல்களுக்கடுத்துத் தான் இந்தக் கதையைப் பாடப்போவதாக ஆசி ரியர் முன்கூட்டியே குறிப்பிடுவது நுவல்பொருள் உரைத்தலாகும். இதனை நுதலிப் புகுதல் என்று கூறுவர். காப்பிலேயே இந்தச் செய்தி கூறப்பெற்றாலும் தனித்து இது பாடலாக அமையப்பெறுகிறது.

''ஆமையார் செய்த அதிசயங்கள் ஆனதெல்லாம்
வாமையாய் நல்ல வளமாய் நெடுங்கதையாய்

சொன்னபொருள் தானுணர்ந்து சிறியேன் தொகுப்பாக
இந்நிலத்தி லம்மானை எனவேநான் இப்போது'' (43-46)

என்று இவ்வம்மானையில் நுவல்பொருள் பாடப்பெறுகின்றது.

## குருவணக்கம்

தன் ஆசானை வணங்கிப் பாடுவது குருவணக்கம் பாடுதல் எனப்பெறும். தனக்கு ஆசிரியராக இருந்தவரை நினைத்து வணங்கி நலம் உண்டாக உதவுமாறு கோருவது இந்தப் பாடலின் அமைப்பாகும். இவ்வகையில் இவ்வம்மானை ஆசிரியரும் தன் ஆசானான பொன்னம்பலநாதர் என்னும் அணஞ்சபெருமாள் புலவருக்குக் குருவணக்கம் பாடியுள்ளார்.

''வன்னக் குருவாக மந்திரம்போ தித்தவள்ளல்
பொன்னம் பலநாதர் பொற்பாதம் என்தலைமேல்'' (59, 60)

''அணஞ்சபெரு மாள்புலவர் அண்ணாவி எந்தனுக்கு
குருநாதன் தன்பாதம் கொண்டேன்நான் என்தலைமேல்'' (66, 67)

## அவையடக்கம்

கதை கூறுவோன் எளியோனாகவும், கேட்போரைச் சான்றோராகவும் கருதிய விடத்துக் கூறப்பெறுவது அவையடக்கம். பிழை நேருமிடத்துப் பொறுத்துக் கொள்ள வேண்டுவதாக இப்பகுதி அமையப்பெறும். இவ்வகையில் இவ்வம்மானைக் கதைப் பாடலிலும் விரிவாக பதினாறு அடிகளில் அவையடக்கம் கூறப்பெறுகிறது. அழகிய மயிலின் ஆட்டத்திற்கு இணையாக வான்கோழி நினைத்து ஆடுவதைப் போன்றும், கடலில் செல்லும் கப்பலுக்கு நிகராக தோணி செல்ல நினைப்பது போன்றும், பிரமனின் படைப்புத்திறனுக்கு நிகராகக் குயவன் படைக்க விரும்பும் உருவைப்போன்றும், சிறந்த தமிழ் நூல்களை இயற்றும் புலவர் பெருமக்கள் முன் இச்சிறிய கதையைத் தான் படைக்க முனைந்துள்ளேன் என்றும், பிழை நேருமிடத்துப் பொறுத்தருளும்படியும் வேண்டி அவையடக்கம் அமைகிறது.

அவையடக்கத்திற்கு அடுத்து நூல் எழுதப்பெற்ற சுபதின வரலாறும், இக் கதையை எழுதச் சொன்னோன் வரலாறும் பேசப்படுகின்றன.

## கதைத்தொடக்கம் — நாட்டுவளம்

கதையைத் தொடங்குவதில் ஒவ்வொரு புலவரும் ஒவ்வொரு முறையைக் கையாளுகிறார்கள். கதையின் தொடக்கத்தில் பொதுவாக நாட்டு வளமே கூறப் பெற்றிருப்பது காப்பியப்பாங்கு. இந்நிலையே பெரும்பாலான அம்மானைக் கதைப் பாடல்களில் காணப்பெறுகின்றது. இவ்வம்மானைக் கதைப்பாடலில் சோழநாட்டு வளம் முதலில் கூறப்பெறுகின்றது. 'வாழ்வுபெறும் சோழனுட மண்டலம் தானதிலே' என்று தொடங்கப்பெற்று, நாட்டுவளம் சிறப்பாகப் பேசப்படுகின்றது. கம்பன் கூறிய சோழநாட்டின் சிறப்பினை இது நினைவுறுத்துவது போன்று உள்ளது.

### கதைக்கூறு

நாட்டு வளத்தினை அடுத்து கதை முழுமையாகக் கூறப்பெறும். அவ்வாறே இவ்வம்மானை நூலிலும் நாட்டு வளத்திற்கு அடுத்து கதையில் இடம்பெறும் கதைத் தலைவனின் பிறப்பு, வளர்ச்சி, வீரம், திருமணம் என்று அவனது சிறப்பு இதில் புகழ்ந்துரைக்கப்படுகிறது.

### கதைமுடிவு

அம்மானைக் கதைப்பாடல்கள் பலவித நோக்கங்களைக் கொண்டு எழுதப் படுகின்றன. கதையின் நோக்கங்கள் நிறைவேறும் வகையில் முடிவுகள் அமைதல் வேண்டும். சுவையான முடிவுகளையே மக்கள் மிகுதியாக விரும்பினர். கதையின் நோக்கத்திற்கும் மக்களின் விருப்பத்திற்கும் ஏற்றவாறு கதைமுடிவுகளை ஆசிரியர்கள் அமைத்திருப்பதை அம்மானைக் கதைப்பாடல்களில் காணலாம்.

கதை மற்றும் கதைப்பாடல்கள் இருவித முடிவுகளைப் பெற்றிலங்குகின்றன. அவை: 1. இன்பமுடிவு பெற்றவை. 2. துன்பமுடிவு பெற்றவை. இவ்வம்மானை நூல் இன்ப முடிவைப் பெற்று அமைகின்றது. ஆகவே இந்நூல் இன்பியல் இலக்கியமாக அமைகிறது.

கதை முடிவிற்கு அடுத்து இறுதிப் பகுதியாக வாழ்த்துப் பகுதி அமையும். கதை கேட்போர், கதையைப் படித்தவர், கதை கூறுவோர் என அனைவரும் நலம்பெற வாழ்த்தி மங்களமாக முடிவுபெறும் நிலையில் வாழ்த்துப்பகுதி அமையும்.

இந்நிலையே இவ்வம்மானையிலும் காணப்பெறுகின்றது. இந்நூலில் இக்கதையைக் கேட்டவர், படித்தவர், எழுதினவர், ஆசிரியர், குரு, பெற்றோர், சிவன், உமையாள், நாராயணர், லெட்சுமி, சரசுவதி, வள்ளி, தெய்வானை, வடிவேலர் என அனைவரும் நலம்பெற்று வாழ வேண்டுவதாக வாழ்த்துப்பாடல் அமைகின்றது.

### முடிப்புரை:

இந்த அமைப்பு நிலைகளை நோக்க, இவை அனைத்தும் வில்லுப்பாட்டு அமைப்போடு பெரிதும் ஒத்துச் செல்வதை உணரமுடிகின்றது. கதைப்பாடலை வில்லில் பாடவும், வில்லுப்பாட்டிற்குக் கதைப்பாடல் துணைபுரியவும் இந்த முறையில் அமைக்கப் பெற்றதாகக் கருதவும் இடமுள்ளது.

## ஆமையர் அம்மானை — கதைச்சுருக்கம்

சோழநாட்டைச் சோமேசன் என்பவன் அரசாட்சி செய்து வருகின்றான். அந்நாட்டில் சம்மந்தமாநகரம் என்ற பட்டணத்தில் காராளர் என்கின்ற வேளாளர் குலத்தைச் சேர்ந்த சுந்தரமூர்த்தி, இரணசூரன் இருவரும் மைத்துனர் முறையினராக இருக்கின்றனர். இவர்கள் இருவருக்கும் அவர்தம் பெற்றோர்கள், உற்றார் உற வினர் வாழ்த்த அபிராமவல்லி, பூவாருடையாள் என்ற இரு பெண்களைத் திரு மணம் செய்விக்கின்றனர். அவர்கள் இருவரும் தத்தம் மனைவியுடன் இன்பமாக வாழ்ந்து வருகின்றனர். மைத்துனிகள் இருவரும் ஒருவருக்கொருவர் அன்புகொண்டு வாழ்ந்து வந்தார்கள். மாதவிடாய் காலத்தில் இருவரும் ஆற்றுக்குச் சென்று தலை முழுகும்போது பூவாருடையாள் அபிராமவல்லியிடம், இத்தலை முழுக்கால் நாமிரு வரும் கருத்தரித்து உனக்கு ஆண் குழந்தையும், எனக்குப் பெண் குழந்தையும் பிறந்தால் உன் மகனுக்கு என் மகளைத் திருமணம் செய்து தருகிறேன் என்று ஈசனையும் நீரையும் சாட்சிவைத்து அவ்விடத்திலேயே உறுதி அளிக்கின்றாள். பிறகு தத்தம் மனைகளுக்குச் சென்று தங்கள் கணவன்மாரிடம் தாங்கள் செய்து கொண்ட வாக்குறுதியினை உரைக்கின்றனர். அவர்களும் ‘இறைவன் சித்தம்- எப் படியோ அப்படியே ஆகும்’ என்றுரைத்துத் தங்கள் மனைவியருடன் இன்பமாக வாழ்ந்து வருகின்றனர்.

இவர்களது உண்மையினை அறியவேண்டி சிவபெருமான் அவர்கள் செய்து கொண்ட வாக்குறுதியினை மனைவி உமையாளிடம் கூறி, பின் படைக்கும் கடவு ளாகிய பிரம்மனை அழைத்து அவ்விரு பெண்களுக்கும் புத்திரபாக்கியத்தை அருளும் படி கூறுகின்றார். உடனே பிரம்மன் எந்தவகையில் அவர்களுக்குப் புத்திரபாக்கி யத்தை அருளுவது என்று வினவ, அதற்குச் சிவன் நாகமுனி மைந்தன் என்பவன் என்னை நாள்தோறும் மலர்களால் அர்ச்சனை செய்து வழிபட்டு வந்தான். அப் படிச் செய்து வருகின்ற நாளில் ஒருநாள் எனக்கு அர்ச்சனை செய்வதற்குத் தான் கொண்டுவந்த மலரின் வாசனையால் ஈர்க்கப்பெற்று அம்மலரினை முகர்ந்து விட்டான். அதனால் அவனை அபிராமவல்லி என்பவளுக்கு ஆமை உருவத்துடன் கூடிய மகனாகவும், மலரைப் பூவாருடையாள் என்பவளுக்குப் பெண்ணாகவும் கருவில் படையுமென்றும் கூறினார். அதைக்கேட்டுக் கொண்டிருந்த நாகமுனி மைந்தன் மனச்சஞ்சலமடைந்து தன்னை மன்னிக்கும்படி வேண்ட, சிவன் ஆமைப் பிறப்பின் சிறப்பினைக் கூறி அவனுக்கு வரமும் வாக்குறுதியும் அளிக்கின்றார்.

சிவனின் ஆணைப்படி அவ்விரு பெண்களுக்கும் பிரம்மன் படைத்த கரு வானது உருப்பெற்று வளர்ந்து பத்து மாதங்கள் கழித்து அபிராமவல்லி ஆமை யுருவுடைய ஆண்மகவையும், பூவாருடையாள் அழகான பெண் மகவையும் பெற் றெடுக்கின்றனர். ஆமைமகன் பிறந்ததால் அபிராமவல்லியும் அவள் கணவனும் கவலையுறுகின்றனர். பின்பு இருவரும் மனந்தேறி அன்புடன் மகனை வளர்த்து வருகின்றனர். பூவாருடையாள் தன் மகளுக்கு பூரணவல்லி எனப்பெயரிட்டுப் பாசத்துடன் வளர்த்து வருகின்றாள்.

ஆமைமகனும், பூரணவல்லியும் திருமண வயதை அடைகின்றனர். ஆகவே அபிராமவல்லி தன்னுடைய ஆமைமகனுக்குப் பெண்கேட்டுப் பூவாருடையாளிடம் செல்கின்றாள். பூவாருடையாள் தன் மகளைத் தரமறுத்து, மகளுக்கு வேறொரு மாப்பிள்ளையைத் தேடி மணம் முடிக்க ஏற்பாடு செய்கின்றாள். பூரணவல்லியின் மணச்செய்தியினை அறிந்து அபிராமவல்லி மனம் வருந்திக்கொண்டிருக்க ஆமை மகன் அன்னையின் துயரத்திற்கான காரணத்தைக் கேட்டறிந்து, அன்னையைத் தேற்றிப் பின் தன்னை மணப்பந்தலுக்குள் கொண்டுவிடும்படி வேண்ட அபிராம வல்லியும் அவ்வாறே செய்கின்றாள்.

மணம் நிகழும் இடத்திற்குச் சென்று ஆமையர், அங்கிருந்து தன் மாமன் இரணசூரனை அழைத்துக்கொண்டு அரசன் சோழேசனிடம் சென்று வழக்குரைக் கின்றான். இருவரது வழக்கினையும் கேட்ட அரசன், அவர்களிடம் சுயம்வரம் நடத்தி மணம் புரியுங்கள் என்று தீர்ப்பளிக்கின்றான். அரசனுடைய தீர்ப்பின்படி சுயம்வரத்திற்கு ஏற்பாடு செய்கிறான் இரணசூரன். பூவாருடையாளால் ஏற்பாடு செய்யப்பெற்ற மாப்பிள்ளையும், ஆமையரும் சுயம்வரத்தில் கலந்து கொள்கின் றனர்.

பூரணவல்லியின் கையில் மாலையைக் கொடுத்து சுயம்வரம் நடக்கவிருக்கும் மணமேடைக்கு அழைத்து வருகின்றனர். பூரணவல்லி தன் கையிலிருந்த மாலையை மணப்பந்தலுக்குள் சுழற்றி எறிய, அம்மாலை ஆமையர் கழுத்தில் விழுகின்றது. பின்பு ஆமையர்க்குப் பூரணவல்லியைத் திருமணம் செய்விக்கின்றனர். ஆமையர் மனைவியைத் தனது மனைக்கு அழைத்துவந்து அவளுடன் எவ்வித உறவுமின்றி இருந்து வருகின்றான். பூரணவல்லி தன் தலைவிதியை நினைத்து நொந்தவண்ணம் இருக்கிறாள்.

தன் மகன், மருமகளின் நடப்புகளை அறிந்த அபிராமவல்லி மகனைக் கடிந் துரைக்கின்றாள். ஆமையர் சினமுற்று இந்நகரை (சம்மந்தபட்டணம்) அரசாள் கின்ற மன்னனின் மகளையும் திருமணம் முடித்து உனக்கு மருமகளாய்க் கொண்டு வந்த பிறகுதான் இவளுடன் வாழ்க்கை நடத்துவேன் என்று கூறுகின்றான். இப் பேச்சு நகர்சோதனைக்கு வந்த சம்மந்தராச மன்னன் காதில் விழுகிறது. விடிந் ததும் மன்னன் ஆமையரை அழைத்துவரச் செய்து விசாரணை செய்கிறான். ஆமை யரும் மன்னனிடம் தான் மொழிந்ததை உண்மையென்று ஒப்புக்கொள்கிறான்.

பிறகு மன்னன் ஆமையரை நோக்கி, ஈனகிரி மலையில் பிணம் தின்று வாழும் பேயன், பேச்சி இவர்களின் வரலாற்றினைக் கூறி, அவர்களிடம் உள்ள இரத் தினங்களைச் சொரியும் வரிச்சாவல், சாவுசங்கிலி, பிழைசங்கிலி இம்மூன்றையும் எட்டு நாளைக்குள் வாங்கி வந்தால் என்மகள் சம்மந்தமாலையை உனக்கு மணம் முடித்துத் தருகிறேன் என்று கூறுகின்றான். ஆமையரும் அதற்கிசைந்து விடைபெற்றுக் கொண்டு பெற்றோர்களிடம் வந்து நடந்ததைக் கூறுகின்றான். பின்பு பெற்றோர் அறியாமல் புறப்பட்டுக் காட்டுக்கு வருகின்றான். வந்து சிவனைத் தியானித்து இந்திரமாஞாலம் என்ற மாயவித்தை கைவரப்பெறுகிறான். அதன் பயனாய் ஆமைக்

கூட்டைக் கழற்றி மறைத்து வைத்துவிட்டு அழகிய மனிதவுருவடைந்து மந்திர வாளுடன் ஆகாய வழியாக ஈனாப்பேயன், ஈனாப்பேச்சி வாழும் மினுமினுத்தான் பட்டணம் சென்றடைகின்றான்.

ஆமையர் அந்நகரிலுள்ள இடுகாட்டினை அடைந்து பிணம் தின்னும் பேயன், பேச்சி வரவிற்காக மறைந்திருக்கின்றான். பாம்பு தீண்டி இறந்த அப்பட்டணத்தின் அரசன் மகளான நாகமணிமாலையின் பிணத்தை அப்போது அங்குக் கொண்டு வந்து பரண் அமைத்து அதன் மேல் வைக்கின்றனர். பேயன், பேச்சியின் ஆணைக் கிணங்கி அவர்கள் மறுநாள் வந்து அடக்கஞ் செய்யலாமென்று கருதித் தங்கள் இருப்பிடம் செல்கின்றனர்.

அப்போது அங்கிருந்த ஆமையர் இதுதான் தக்க சமயம் என்றெண்ணி அப் பரணிற்குள் சென்று மறைந்து கொள்கிறான். பேயன், பேச்சி இருவரும் இடுகாட் டிற்கு வந்து பரண்மீது கிடக்கும் பிணத்தின் மீது உயிர்பிழைக்குஞ் சங்கிலியை வைத்து உயிர் எழுப்பும்போது, அங்கு மறைந்திருந்த ஆமையர் மந்திரவாளால் பேயனுடைய கையை வெட்டிவிடுகின்றான். வெட்டுண்ட பேயன் தன்னிடத்தி லுள்ள சங்கிலிகள் இரண்டையும் அங்கேயே விட்டுவிட்டு ஓடிவிடுகின்றான்.

பேயன், பேச்சி விட்டுச் சென்ற சங்கிலிகளை ஆமையர் எடுத்து, அதனைச் சோதிக்கக் கருதி இறந்து கிடப்பவளின்மீது வைக்க, அவள் உயிர்த்தெழுகின்றாள். உயிர்த்தெழுந்த அவள் ஆமையரைக் கண்டு காதலுற, ஆமையரும் மணம் செய்து கொள்வதாக வாக்களித்துப் பின் அவளுறங்கும் நேரத்தில் அவள்மீது சாவுசங்கிலியை வைக்கின்றான். அவள் முன்பிருந்த நிலையை அடைந்ததும் ஆமையர் அவளை அங்கேயே விட்டுவிட்டு மினுமினுத்தான் பட்டணம் வருகின்றான்.

மறுநாள் மினுமினுத்தான் பட்டண அரசன் தன் அமைச்சர் மற்றுமுள்ளோர் களுடன் இறந்த தன் மகளை அடக்கம் செய்ய இடுகாட்டிற்கு வருகின்றான். மகளின் வாடாத முகத்தைக் கண்டு பேயன், பேச்சியிடமிருந்து தன் மகளைக் காப் பாற்றியவர் யாரென வியப்புற்றுத் தன் மகளை உயிர்ப்பிப்பாருக்கு அவளைத் திருமணம் செய்து தருவதாகப் பட்டணம் முழுவதும் பறையறைவிக்கச் செய்கின் றான். இச்செய்தியை அறிந்த ஆமையர் பரதேசி உருவம் பூண்டு இடுகாட்டிற்கு வந்து மன்னனிடம் தான் உயிர்ப்பிப்பதாகக் கூறி, அவளை உயிர்ப்பிக்கின்றான். மன்னனும் மற்றையோரும் வியந்துரைக்கின்றனர். அரசன் உரைத்த வாக்கு மாறா மல் ஆமையர்க்கு நாகமணிமாலையைத் திருமணம் செய்வித்துப் பலவகையான சீதனப் பொருட்களைத் தருகின்றான்.

ஆமையர் மன்னனிடமும், தன் மனைவியிடமும் பேயன், பேச்சி இருவரையும் சிறைபிடித்து வருவதாகக் கூறி விடைபெற்றுக் கொண்டு அவர்கள் வாழும் ஈனகிரி மலையை அடைகின்றான். அவர்களது இருப்பிடத்திற்குச் சென்றபோது, பேயனும் பேச்சியும் காட்டிற்குப் புறப்பட்டுச் செல்ல, அவர்களது மகளான சச்சந்தமாலை (சச்சகிரிமாலை) மட்டும் தனித்து இருக்கிறாள். அங்கு வந்த ஆமையரது அழ கினைக் கண்டு அவள் காதலுறுகின்றாள். ஆமையரும் தான் மணம் செய்துகொள் வதாக உறுதியளிக்கின்றான். அச்சமயத்தில் தம் பெற்றோர்கள் திரும்பி வருவதைக்

கண்டு அவள் ஆமையரை மறைந்திருக்கச் செய்கிறாள். வீடு திரும்பிய பேயனும் பேச்சியும் தம் மகளின் முகவாட்டத்தைக் கண்டு காரணம் கேட்க, அதற்கு அவள் என்னைத் திருமணம் செய்துகொள்ள ஒருவர் இங்குவந்துள்ளார். அவருக்கு என்னை மணம் முடித்துத் தாருங்கள் என்று கூறுகின்றாள். தம்மகள் சச்சகிரி மாலையின் விருப்பப்படியே அவர்கள், ஆமையர்க்கு மணம் முடித்துச் சீதனமாக வருடம் ஒருமுறை கூவி நவரத்தினங்களைச் சொரியும் வரிச்சாவலையும், தங்க மணிப் பெட்டகத்தையும் தருகின்றனர். பின்பு அவர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டு மனைவி சச்சகிரிமாலையுடன் மினுமினுத்தான் பட்டணம் சென்றடை கின்றான்.

ஈனகிரிமலை சென்றுவந்த மருமகனை மினுமினுத்தான் பட்டண அரசன் அன்புடன் வரவேற்று, ஆமையருடன் வந்த சச்சகிரிமாலையையும், தன் மகளான நாகமணிமாலையையும் பல்லோர் அறியத் திரும்பவும் திருமணம் செய்விக்கின் றான். பின்பு மாமனாரிடம் விடைபெற்றுத் தன் மனைவியருடனும், சீதனப் பொருட்களுடனும் சம்மந்தமாநகர்க்கு வருகின்றான். வரும் வழியில் முன்பு செடிக்குள் மறைத்து விட்டுச் சென்றிருந்த ஆமைக்கூட்டை எடுத்துவைத்துத் தன் மனைவியரிடம் முன் நடப்புகளைக் கூறித் தன்னுடைய உண்மையான உருவத்தை யாரும் பார்த்ததில்லை. எனவே இதை யாருக்கும் உரைக்கக்கூடாது என்றும், தன்னை வீட்டிற்குச் சுமந்து செல்லும்படியும் கூறி ஆமைக்கூட்டினுள் புகுந்து கொள்கிறான். பின், மனைவியர் இருவரும் அவ்வாறே ஆமையரைத் தலையில் சுமந்து கொண்டு, அவன் வழிகாட்ட மனைக்கு வந்து சேருகின்றனர்.

தன் இல்லத்தினை அடைந்த ஆமையர் தன்னுடைய பெற்றோர்க்குத் தன் மனைவியர் இருவரையும் அறிமுகப்படுத்துகின்றான். பின்பு தன்னைச் சம்மந்த ராசனிடம் அழைத்துக்கொண்டு செல்லும்படிக் கூற, அபிராமவல்லி மகனைச் சுமந்து கொண்டு மன்னனிடம் செல்கின்றாள். மன்னனின் முன் தான்கொண்டு வந்த முப்பொருளையும் வைக்கின்றான். வருடம் ஒருமுறை கூவி இரத்தினங்களைச் சொரியும் சேவல் கூவியது; இரத்தினங்கள் சொரிந்தன. ஆமையரின் வீரச் செயலைப் பாராட்டி மன்னன் தன்மகள் சம்மந்தமாலையை மணமுடிக்க ஏற்பாடு செய்கின்றான். இதனை அறிந்த சம்மந்தமாலை ஆமையைத் தான் மணப்பதா என் றெண்ணி, நஞ்சு உண்டு இறக்கின்றாள். சம்மந்தராசனும் அவனது மனைவி தவமாலையும் மகளிறந்ததுகண்டு புலம்புகின்றனர். ஆமையர் மன்னன் மனத் தினைத் தேற்றி மடிந்தவளைத் தனக்குத் திருமணம் செய்து கொடுக்குமாறு வேண்ட, மன்னனும் அவ்வாறே மணம்முடித்துக் கொடுக்கின்றான். பின்பு மடிந்தவளை ஆமையர் ஆண்டவன் அருளினால் பிழைசங்கிலியை அவள் மீது வைத்து உயிர்ப் பிக்கின்றான். மன்னனும் மற்றோரும் மகிழ்கின்றனர். மன்னன், மகள் மருமக னுக்குத் தனிக்குடில் அமைத்து அதில் இருக்கச் செய்கின்றான். ஆமையர் தன்னைக் கலவாதிருக்கின்றதனை எண்ணிச் சம்மந்தமாலை துயரம் அடைகின்றாள்.

ஒருநாள் சம்மந்தராசன் பலநாட்டரசர்களையும் தன் நகர்க்கு வரவழைத்து இரவில் கூத்துநிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்கின்றான். ஆமையர் கூத்தின் இன்னிசை

யைக் கேட்டு ஆவலுற்று மனைவி சம்மந்தமாலை அறியாமல் கூட்டிலிருந்து வெளியேறி, கூட்டை மஞ்சத்தின் அடியில் மறைத்து வைத்துவிட்டு கூத்துப் பார்க்கக் களரிக்கு வருகின்றான். வந்துநின்ற இவனது வடிவழகினைக் கண்ட அனைவோரும் திகைத்து தங்கள் அருகில் அமர்ந்து கூத்துப்பார்க்கும்படி வேண்ட, ஆமையர் மிரண்டுபோய் மனைக்குச் சென்று மறைத்து வைத்திருந்த ஆமைக்கூட்டினுள் புகுந்துகொள்கிறான். இவனைத் தொடர்ந்து வந்தவர்கள் மன்னன் மகளான சம்மந்தமாலையின் கள்ளப்புருஷன் இவனென்று எண்ணி மன்னன்மகளை அவதூறாகப் பேசுகின்றனர். இச்செய்தி பட்டணம் முழுவதும் பரவுகின்றது. இதனை அறிந்த சம்மந்தமாலை மனவேதனை அடைகின்றாள்.

ஆமையர் முன்புபோலவே மறுநாளும் கூத்துப்பார்க்கச் செல்கின்றான். இவனைக் கண்டவர்கள் இன்றும் தங்கள் அருகில் வந்தமர்ந்துக் கூத்துப்பார்க்க அழைக்க, அவன் முன்னைய நாள் போலவே அந்தப்புரத்திற்குள் ஓடி கூட்டினுள் மறைந்து கொள்கின்றான். மனைவி சம்மந்தமாலையிடம் என்றும் பேசாத ஆமையர் தலை முழுக வெந்நீர் வைத்துத் தரும்படி வேண்ட, அவளும் வெந்நீர் வைத்துத் தருகின்றாள். ஆமையர் குளிக்கும்போது சுவரைத் துளைசெய்து கணவனின் உண்மையான வடிவழகினைக் கண்டு மகிழ்கிறாள். தந்தையிடம் வந்து தான் கற்புகெடவில்லை என்று கூறி அதனை நிரூபிக்கத் தந்தையைக் கூத்துப் பார்க்கச் செல்லும்படி வேண்டுகின்றாள்.

மன்னன், மகளின் சொற்படி சென்று கூத்துநிகழ்ச்சியைக் காண்கின்றான். அந்தப்புரத்தில் சம்மந்தமாலை தூங்காது உறங்குபவள் போலிருக்கிறாள். ஆமையர் கூத்தினைக் காணும் ஆவலோடு கூட்டினைக் கழற்றிவைத்துவிட்டு கூத்து நடக்கும் இடத்திற்குச் செல்கின்றான். சம்மந்தமாலை அக்கூட்டினை எடுத்து மறைத்து வைத்துவிட்டு உறங்குபவள் போலிருக்கிறாள். ஆமையர் கூத்தின் இன்னிசையில் மெய்மறந்து நிற்கின்றான். அரசனது கட்டளைக்கிணங்கி யாரும் ஆமையரை அழைக்கவில்லை. பொழுது விடிகிறநேரம்; சேவல் கூவுகிறது. இவ்வோசையைக் கேட்ட ஆமையர் நேரம் கடந்துவிட்டதே என்றெண்ணி மிரண்டு அந்தப்புரத்திற்கு ஓட, மக்கள் பலர் அவனைப் பின்தொடர்ந்து செல்கின்றனர்.

அந்தப்புரத்திற்குள் ஓடிய அவன், தான் கழற்றி வைத்திருந்த கூட்டினைத் தேடுகின்றான். கூடு காணாமையால் உறங்கிக் கொண்டிருக்கின்ற தன் மனைவியை எழுப்பிக் கேட்கின்றான். தன் கணவனில்லாமல் வேறுயாரோ ஒருவன் தன்னை எழுப்பியதைக் கண்ட சம்மந்தமாலை அவனிடத்துக் கோபமடைகிறாள். தொடர்ந்து வந்தோர், இருவரின் உரையாடல்களைக் கேட்டு மன்னனுக்குத் தெரிவிக்க, மன்னன் மகளின் இருப்பிடத்திற்கு வருகின்றான்.

வந்த மன்னனிடம் ஆமையர் தன் பூர்வ வரலாற்றினைக் கூற, மன்னன் மகிழ்ந்து பல அறிவுரைகளைக் கூறித் தன் நாட்டை மருமகனுக்குக் கொடுத்து அரசாளச் சொல்கின்றான். தன்மகள் கற்பு கெடவில்லை என்பதை மக்களிடத்து நிரூபிக்க ஆமையரை அனைவோர் முன்னிலையிலும் காட்சி தரவேண்டும் என மன்னன், தன் மகளிடத்திருந்த ஆமைக்கூட்டை வாங்கி வைக்கின்றான். ஆமையரும் சிவனைத்

தியானித்து முன்போலவே ஆமைக்கூட்டினுள் புகுந்து ஊர்ந்து பிறகு வெளிவருகின்றான். இதைக்கண்ட அவையோரும் மக்களும் ஆமையருக்குப் பூவாசநாதன் என்ற பெயரினைச் சூட்டி மகிழ்கிறார்கள். மக்கள் தங்கள் அரச மகளின்மீது கொண்டிருந்த தவறான எண்ணத்தினை நீக்குகின்றனர்.

ஆமையர் என்ற பூவாசநாதன் தன் மனைவியர் நால்வருடன் சிறப்பாக இருந்து, மக்களுக்குப் பல தானதருமங்கள் செய்து சம்மந்தமாநகரினை அரசாட்சி செய்துவருகின்றான். மக்கள் அனைவோரும் மகிழ்வுடன் வாழ்கின்றனர். பூவாசநாதனின் திறமையான செங்கோல் ஆட்சியினைக் கண்ணுற்ற சிவபெருமான் தேவர்களை அனுப்பி அவன்தன் மனைவிமார்களுடன் கயிலைமலை வருமாறு செய்து அவனுக்கு முத்திப்பேறு கொடுக்கிறார்.

## ஆமையர் அம்மானை—நூல் பெயர்பெறும் முறை

நூலுக்குப் பெயரிடும் முறையை உரைக்குமிடத்து பவணந்தியார்.

''முதனூல் கருத்தன் அளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் தன்மைமுதல் நிமித்தினும்
இடுகுறி யானும்நூற் கெய்தும் பெயரே''[7]

என இக்காரணங்களால் பெயர்பெறும் என்பர். நூலில் வரப்பெறும் தலைவன், தலைவியர் சிறப்புக் கருதியும் அவர்களின் பெயர்களால் நூல் பெயர் பெறுவதுமுண்டு. அவ்வகையில், இந்நூல் கதைத் தலைவனின் சிறப்புக்கருதி இப்பெயர் பெற்றது. மேலும் 'அம்மானை' என்ற நாட்டுப்புற இலக்கிய வகை அமைப்பில் இந்நூல் பாடப்பெற்றுள்ளது.

நாகமுனி மைந்தன் என்பவன் இறைவனது சாபத்தால் மறுபிறவியில் ஆமையராகப் பிறந்து, வளர்ந்து, பல்வேறு தீரச்செயல்களால் பெண் நால்வரை மணந்து, நாட்டிற்கரசனாகி இறுதியில் இறைவனால் முக்தி பெறுகின்றான் எனும் நிலையில் கதை முழுவதும் அவனின் சிறப்பே கூறப்பெறுவதால் 'ஆமையர் அம்மானை' என்று இந்நூல் பெயர் பெறுகிறது.

நூலின் பெயர்வைப்பு முறையைக் கொண்டே அந்த நூல் முதல் நூலா, வழி நூலா, சார்பு நூலா என்பதை ஓரளவு ஊகிக்க இயலும். குமரி மாவட்ட நாட்டுப்புற மக்களால் வாய்மொழியாகப் பண்டுதொட்டு வழங்கிவரப்பெற்ற 'ஆமைராசன் கதை'யினை ஆறுமுகம் என்பவர் அம்மானைக் கதைப்பாடல் வடிவில் எழுதியுள்ளார்.

## நூல் தோன்றக் காரணம்

நாட்டுப்புற மக்களால் பஞ்சதந்திரக் கதை, தெனாலிராமன் கதை, விக்கிரமாதித்தன் கதை, மதனகாமராசன் கதை, புராணம், இதிகாசங்களைத் தழுவிய

---

7. நன்னூல் நூற்பா. 49

கதைகள், நாட்டுப்புறக் கதைகள் போன்றன காலங்காலமாக வழங்கப்பெற்று வருவனவாகும். இவை பெரும்பாலும் மக்களின் பேச்சுமொழியில் அமைந்தவை. இவை ஒரு காலத்தில் யாரோ ஒருவரால் புனையப்பட்டு வாய்மொழியாக வழங்கி வந்த பிறகு, நாட்டுப்புறப் புலவர்களின் குறை நிறைகளோடு எழுத்து வடிவம் பெற்று வழங்கிவரலாயின. புராணங்களிலும் நாட்டுப்புறக் கதைகளிலும் பல அம்சங்கள் பொதுவானவை. ஆனால் வித்தியாசமான வகைகளில் பயன்படுத்திக் கொள்ளப் பெறுகின்றன. ஊர் மற்றும் பாத்திரப் பெயர்கள் புராணத்தில் நிறைந் திருக்கின்றன. பெரும்பாலும் போர், உலகத் தோற்றம், பல இனங்கள் கண்ட டைந்த முடிபுகள் ஆகியவற்றைப் பற்றி இக்கதைகள் அமைகின்றன. ஆனால் நாட்டுப்புறக் கதைகள் பெரும்பாலும் பெயர்களைக் கொண்டிருப்பதில்லை.

இந்திய நாகரிகக் கட்டுமானத்தில் அடங்கியிருக்கும் கலாச்சாரமானது, நாட் டுக்கு நாடு, மொழிக்கு மொழி, இனத்துக்கு இனம், காலத்துக்குக் காலம் மாறுபடு கின்றது. இம்மாறுபாட்டிற்கேற்ப அச்சமூகத்தில் அவ்வப்போது எழுந்த நாட்டுப் புறக் கதைகளும், பழங்காலத்து நம்பிக்கைகளுடன் புதிய காலத்துப் பரிமாணங் களையும் கொண்டு படைக்கப் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது.

குமரி மாவட்ட நாட்டுப்புற மக்களால் ஆமைராசன் கதை, கூந்தப்பிள்ளை கதை, சின்னான் கதை, செம்புலிங்கம் கதை, பொன்னிறத்தாள் கதை, மருத நாயகம் பிள்ளை கதை போன்ற கதைகள் இன்றும் வழங்கப்பெற்று வருகின்றன. மதனகாமராசன் கதையில் வருகின்ற 'ஆமையாயிருந்த இராசகுமாரன் தேவகன்னி யினது மகத்துவத்தால் மந்திரி குமாரத்தியை விவாகஞ்செய்த கதை' என்ற கதை யின் கருவே சிற்சில மாற்றங்களுடன் 'ஆமைராசன் கதை'யாக உருவாக்கம் பெற் றுள்ளது.

இக்கதையுடன் இந்நூலாசிரியர் மேலும் 'அபிமன்னன் சுந்தரி மாலை' என் னும் புராணக் கதைப்பாடலின் தொடக்கப் பகுதியான 'கதையின் வரலாறு' என்ற பகுதியின் கருத்தையும் இணைத்து மக்களுக்கு வாக்கின் வலிமையை உணர்த்தும் வகையிலும், இறைநம்பிக்கையை வலியுறுத்தும் வகையிலும் இவ்வம்மானைக் கதைப்பாடலை அமைத்துள்ளார். மக்களுக்கு நலலிறவைப புகட்டுவும், இறை பக்தியை ஊட்டவும் கருதிய இந்நூலாசிரியர், வாக்குத் தவறாமையையும் இறை வனே கதைத் தலைவனாகிய பூவாசநாதனை அழைத்து நட்சத்திரப் பதவியை அளிப்பதிலிருந்து அவனுடைய குணநலன்கள் வழி தெய்வபக்தியையும் மையக் கருத்தாகக் கொண்டு இந்நூலினை இயற்றியுள்ளார்.

பொதுவாக விழாக்காலங்களில் மக்களின் பொழுது போக்கிற்காகக் கதைப் பாடலை வில்லுப்பாட்டில் பாடுவர். இவ்வாறு பாடப்பெறும் கதைப்பாடலில் சமுதாயச் சீர்திருத்தக் கருத்துக்கள், பக்தி உணர்வு, நாட்டுணர்வு போன்ற கருத்துக் கள் இடம்பெற்றிருக்கும். நாட்டுப்புறங்களில் நடக்கும் உண்மைக்குப் புறம்பான நிகழ்ச்சிகள், புராண நிகழ்ச்சிகள் போன்றவற்றைக் கொண்டு கதைப்பாடல்களை வடிவமைப்பர். இந்நூலாசிரியர் இவற்றினை மனதிற்கொண்டு இறையுணர்வுக் கதையோடு கூறுமிடத்து மக்கள் அதை எளிதில் ஏற்பர் எனக் கருதி இறைப் பாத்தி

ரங்களையும் கதையூடே நடமாட விட்டுள்ளார். இப்படிக் கையாண்டுள்ள இந்த உத்தியே கதைப்போக்கிற்கு மேலும் சிறப்பூட்டுவதாக உள்ளது. எனவே, மக்கள் மனத்தில் இறைப்பற்றை உணர்த்தவும், நன்மை தீமைகளை எடுத்தியம்பவும் இவ் வம்மானை நூல் உருப்பெற்றமை புலனாகிறது.

## நூலாசிரியர் — அகச்சான்று

நூலின் பெருமை உணர நூலாசிரியர் வரலாறு இன்றியமையாததாகின்றது. நூலாசிரியர் வரலாற்றை அறிய அக, புறச் சான்றுகள் பெரிதும் துணைபுரிகின்றன.. அவ்வகையில் இந்நூலின் அகச்சான்றின் வழி இந்நூலாசிரியர் வரலாற்றை அறிய முடிகின்றது. நூலின் அவையடக்கத்தில்,

''மாதுற்ற செந்தாமரை மலர்போல் முகத்தழகன்
தாதுற்ற மால்பூதத் தான்பெருமாள் ஈன்றசெல்வன்
நாறுமலர் சூழுலகில் நற்றமிழோர் தன்னருளால்
ஆறுமுகம் நல்லதமிழ் அம்மானை கூறலுற்றேன்''

(71-74)

என்றும்,

'பொன்காத்தான் சொன்னகதைப் பொருளிதுகா ணம்மானை
அக்கதைகேட் டாறுமுகம் அம்மானை செப்புகிறேன்''

(114, 115)

என்று கூறுவதிலிருந்தும் இந்நூலாசிரியர்,. 'பூதத்தான் பெருமாள்' என்பாரின் மகன் 'ஆறுமுகம்' என அறியமுடிகின்றது.

''(ஆறுமு)க நாடார் அண்ணாவி தான்வாழி'' (3733) எனவரும் வாழ்த்துப் பாடலிலிருந்து இவர் நாடார் இனத்தைச் சார்ந்தவர் என்பதும் தெரிய வருகின்றது. இவரது ஆசானாக அகத்தீஸ்புரம், காளியம்மாள் என்பாரின் புத்திரர் பொன் னம்பலநாதர் எனும் அணஞ்சபெருமாள் புலவர்[8] என்பார் குறிப்பிடப்படு கின்றார் என்பதை,

''அன்னமிருந் திசைபாடும் அகத்தீசர் வாழ்புரத்தில்
கன்னலெனும் மொழியழகி காளியம்மாள் புத்திரரில்
வன்னக் குருவாக மந்திரம்போ தித்தவள்ளல்
பொன்னம் பலநாதர் பொற்பாதம் என்தலைமேல்'' (57-60)

---

8. இவர் 'பூலங்கொண்டாளம்மன் கதை'யைப் பாடியவர். இந்நூலை அகத்தீஸ்வரம் கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் 16.10.1977-ல் பதிப்பித்துள்ளார்.

''மணஞ்சேரும் குழலழகன் வாய்த்தபுக ழானசெல்வன்
அணஞ்சபெரு மாள்புலவர் அண்ணாவி எந்தனுக்கு
குருநாதன் தன்பாதம் கொண்டேன்நான் என்தலைமேல்'' (65-67)

என வரும் பாடலடிகளால் அறியலாம்.

இக்கதையை அம்மானையாகப் பாடுவதற்குத் தனக்குத் தொகுத்துக் கதை சொன்னவராக 'பொன்காத்தான்' என்பவரின் பெயரைச் சுட்டுகின்றார் ஆசிரியர். இரு இடங்களில் அப்பெயர் சுட்டப்பெறுகின்றது.

''விந்தைபெற அம்மானை விளம்பியேநான் கூறுதற்கு
எந்தனுக்கு இக்கதையை எழிலாகத் தான்தொகுத்து
சொன்னவன் பேரதனைச் சொல்லுகிறேன் கேளுமையா
மன்னுபுகழ்ச் சக்கரவர்த்தி மரபுதனில் வந்துதித்தோன்'' (103-106)

''சங்கரநா ராயணன்தன் தவமதனால் வந்தமைந்தன்
முன்காத்த லட்சுமியாள் முகவசியத் திற்சிறந்த
பொன்காத்தான் சொன்னகதைப் பொருளிதுகா ணம்மானை''(112-114)

என்றும்,

''முன்னே நெடுங்கதையாய் மூதறிவோர் சொற்கேட்டு
இன்னா ளிக்கதையை எழுதியம்மா னைகூற
பொன்காத்தா னிக்கதையை பொருந்தியு ரைத்தாற்போல்''

(1928-1930)

என்றும் குறிப்பிடப்பெறுகின்றது.

இவ்வாசிரியர் தென்பாண்டி நாட்டிலுள்ள குமரிமாவட்டத்தில் அகத்தீஸ்வரம் என்னும் ஊரைச் சார்ந்தவர்; சிறந்த செந்தமிழ்ப்புலமை பெற்றவர்; வில்லுப் பாட்டுக் கதை பாடுவதில் வல்லவர் என்னும் செய்திகள் தெரியவருகின்றன. பொன்னுலகர் கதை* என்னும் உலகுடையார் கதையில்,

''பார் சிறக்கும் பூதத்தான் பெருமாள ருள்பாலன்
பாவலர்கள் தன்னருளால் ஆறுமுகம் சொன்னான்''
(பொன்னுலகர்கதை. வரி எண்-99, 100)

* இக்கதைப்பாடலானது ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் சுவடிநூலகப் பார்வை எண். 4இல் சுவடி வடிவில் உள்ளது. சுவடியில் பாடல் முழுமை இன்றி காணப்படுவதால் இன்னும் பதிப் பாகவில்லை.

என்னும் அடிகள் ஆசிரியரால் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆசிரியர், தன் தகப்பனார் பெயர் பூதத்தான் பெருமான் எனக் கூறுவதிலிருந்தும், தன் ஆசிரியரின் பெயரை அணஞ்சபெருமாள் எனக் குறிப்பிடுவதிலிருந்தும் ஆமையர் அம்மானை நூலின் ஆசிரியரான ஆறுமுகமே இவர் என்பது தெற்றெனத் தெரிகின்றது. இதை உணர்த்தும் வரிகளாவன:

''பத்திரமா காளியருள் புத்திர னென்றேதான்
பாருலகில் வலங்கைஉயர் கொண்டகுலம் வந்தோன்''
(பொன்னுலகர்கதை. வரி எண்-83, 84)

''அத்தனருள் பெற்றநல்ல அணஞ்ச பெருமாளென்
அண்ணாவிதா னெந்தனக்கு நானவர்க் குச்சீஷன்
மணஞ்சேருஞ் செந்தமிழும் வில்லும் வீசுகோலும்
வாழ்வுபெற வெந்தனக்குத் தந்துபுத்தி சொன்னோன்
குணஞ்சேரும் அணஞ்ச பெருமாளென் குருநாதன்''
(பொன்னுலகர்கதை. வரி எண்-91, 95)

இவர், தன் ஆசிரியரான அணஞ்சபெருமாள் புலவரிடம் தமிழ் மட்டுமன்றி வில்லுப்பாட்டுக் கலையையும் கற்றுத் தேர்ச்சி பெற்றிருந்தார் என்று செய்தியையும் அறியமுடிகின்றது.

இவர் ஆறுமுகப் பெருமாள் எனவும் வழங்கப்பட்டிருக்கிறார். காரணம் யாதெனில், பார்வதியம்மன் காவியம்*, நீலசுவாமி கதை*, மார்க்கண்டன் தவசு* முதலான கதைப்பாடல்களை ஆறுமுகப்பெருமாள் என்பவர் பாடியிருக்கிறார். இவர் இந்நூல்களில் குருவணக்கித்தில் அணஞ்சபெருமாள் புலவரைக் குறிப்பிடுவதிலிருந்து இவர் ஆறுமுகமே என்பது புலப்படுகிறது. இவர், தன் தகப்பனார் பெயரான பூதத்தான் பெருமாள் என்பதில் பின்னுள்ள பெருமாள் என்பதைத் தன்பெயருக்குப் பின்னால் இணைத்து ஆறுமுகப்பெருமாள் எனவும் குறிக்கப்பட்டிருக்க வேண்டும்.

இதன்படி நோக்கும்போது மேற்கண்ட நான்கு நூல்களும் இந்நூலாசிரியர் பாடிய பிறநூல்கள் என்பது தெரியவருகிறது.

## காலம்

நூலின் காலத்தை முழுமையாக அறிய உதவுவது கால ஆராய்ச்சி. இது இலக்கிய வரலாற்றை முறைப்படுத்திக் காணவும், மொழி வரலாற்றாய்விற்கும் பெரிதும் துணைபுரிகின்றது. எனவே நூலின் காலத்தை அறிவது மிகவும் இன்றியமையாததாகின்றது.

---

* இக்கதைப் பாடல்களானது ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் சுவடிநூலாகப் பார்வை எண்கள். 248, 160, 19-A ஆகியவற்றில் சுவடிவடிவில் உள்ளது.

ஆமையர் அம்மானை நூலின் ஆசிரியர் அந்நூலினுள்ளேயே குறிப்பிட்டிருக்கும் பாடல் அடிகளின் வழி காலத்தை நிர்ணயிக்க முடிகின்றது.

''நீண்டபுகழ் தான்வளரும் நீணிலத்தில் இக்கதையை
ஆண்டுதொள் ளாயிரத்து ஐம்பத்தொன் றாவதுவருடம்
விருச்சிக மாதமதில் மிக்கவொன்ப தாம்தியதி
நன்றாம் சோமவாரம் நற்சோதி நாளதிலே'' (91-94)

''நீடுபுகழ் இக்கதையை நீணிலத்தோர் தான்கேட்க
ஈடான ஞானத்து இறையோன் திருவருளால்
ஏடாக இக்கதையை எழுதிவைத்தேன் அம்மானை'' (100-102)

எனவரும் இப்பாடல்கள் அகச்சான்றாக அமைந்து நூலின் காலத்தை உணர்த்துகின்றன. தொள்ளாயிரத்து ஐம்பத்தொன்றாம் வருடம் கார்த்திகை மாதம் ஒன்பதாம் நாள் திங்கட்கிழமை அன்று இக்கதை எழுதத் தொடங்கப் பெற்றுள்ளது. மேலே உள்ளது கொல்லம் ஆண்டு. கொல்லம் ஆண்டானது கி. பி. 824ல் தொடங்குகிறது. எனவே இந்நூலில் காணப்பெறும் கொல்லம் ஆண்டான 951 உடன், கொல்லம் ஆண்டின் தொடக்கமான. கி.பி. 824ஐக் கூட்டினால் கி.பி. ஆண்டான 1775 கிடைக்கும். ஆக இந்நூல் எழுந்த ஆண்டு கி.பி. 1775 என அறியலாம்.

ஆனால் பாடவேறுபாட்டினைக் கண்டறியப் பயன்படுத்திய சுவடியான 'பூவாசநாதன் கதை' என்ற பெயரில் வழங்கும் ஆமையர் அம்மானைச் சுவடியில் நூல் எழுந்தகாலம் வேறுபட்டுக் காணப்படுகின்றது.

'ஆண்டுநூ றாயிரத்தி அறுபத்தொன் றாம்வருசம்' என்று உள்ளது. இங்கு கொல்லம் ஆண்டு 1061 சுட்டப்பெறுகின்றது. இத்துடன் கொல்லம் ஆண்டின் தொடக்கமான கி.பி. 824ஐக் கூட்டினால் கி.பி. 1885 கிடைக்கிறது. இந்நூல் எழுந்த ஆண்டு கி.பி. 1885 என் அறியலாம். இது பதிப்பிற்கு எடுத்துக்கொண்ட மூலச்சுவடியில் குறிப்பிட்டுள்ள காலத்தை விட நூற்றுப்பத்து வருடம் அதிகமாக இருக்கிறது. இவ்விரண்டில் எந்த ஆண்டு சரியானது என்பது ஆய்தற்குரியதாகும்.

இந்நூலாசிரியரின் ஆசிரியரான அணஞ்சபெருமாள் புலவரின் நூலான 'பூலங்கொண்டாளம்மன் கதை'யில்,

'காளகண்டன் மைத்துனர்க்குக் கட்டுடனே தாங்கல் வைத்தும்' (65) எனும் அடி காணப்படுகின்றது. ''இங்கு காளகண்டன் மைத்துனர் என்று குறிப்பிடப் படுவது, சுவாமித்தோப்பு எனும் ஊரில் கோவில் கொண்டருளியிருக்கும் முத்துக் குட்டிசாமி என்னும் வைகுண்ட சுவாமிகளாகும்.''[9] குமரி மாவட்ட இந்து நாடார்

9. வைகுண்ட சுவாமிகள் வாழ்வும் வழிகாட்டலும், பொன்னு. இரா., கார்த்திக் வெளியீடு, புதுடெல்லி, 1983.

சமுதாய மக்கள் இவரைத் தெய்வமாக வணங்குகின்றனர். இம்மக்கள் இவரைத் திருமாலின் அவதாரம் என்று நம்புகின்றனர். இவர் கி.பி. 1809இல் பிறந்து 1851இல் இறந்தார். (பொன்னு, இரா. 38: 60). இவர் இறந்த பின்னர் இவருக் கென்று கோயில்கள் எழுப்பப்பட்டன. இக்கோயில்கள் தாங்கல் அல்லது நிழல் தாங்கல் என்னும் பெயரால் குறிக்கப்பெறுகின்றன. மேலே காணப்படுகின்ற 'தாங்கல்' எனும் நூற்சான்று வைகுண்ட சுவாமிகளின் கோவிலையே குறிப்பிடு கின்றது. எனவே அணஞ்சபெருமாள் புலவரின் காலம் கி.பி. 1851க்குப் பிற்பட்டதாகும்.

அவ்வகையில் நோக்கும்போது ஆமையர் அம்மானை நூலின் ஆசிரியர் கி.பி. 1851-க்குப் பிற்பட்டவர் என்பதை அறியமுடிகிறது. மேலும் இந்நூலா சிரியர் 'பார்வதியம்மன் காவியம்''[10] என்ற நூலில் இடம்பெறுகின்ற அதியரசன், திரைமடந்தை என்ற கதைப்பாத்திரங்களைத் தனது அம்மானை நூலில் சொன்ன சொல் தவறாமைக்குரிய கதை நிகழ்வாக இரண்டிடங்களில் எடுத்துக்காட்டுகின்றார்.

''அரிதாயு ரைத்தீரே அதியரசன் முன்னாளில்
நெறியாகத் தன்வார்த்தை நிலைதவறா தபடிக்கு
குறியா யவனும் குறித்தமொழி தப்பாமல்
பரிவாய் மகரமதைப் படுத்தபண்டா ரந்தனக்கு
திரைசேர் மடந்தையரைச் செய்துகொடுத் தானிலையோ''

(1301-1305)

''பதிவாய் மகரம் படுத்துவந்த ஆண்டியற்கு
அதியரசன் தன்மகளை அன்றுகொடுத் தானிலையோ'' (2121, 2122)

இப்பாடல்களில் வருகின்ற அதியரசன், திரைமடந்தை இரு கதைப்பாத்திரங்களும் பார்வதியம்மன் காவியத்தில் இடம்பெறுகின்றன. 'பார்வதியம்மன் காவியம்' என்ற நூலைப் பதிப்பித்த ஆறுமுகப்பெருமாள் நாடார் தெற்குத் தேரிவிளை பலவேச முத்து நடார், சுப்பிரமணியன் நாடார் என்ற இருவரது ஏட்டுப் பிரதி களை மூலநூல்களாகக் கொண்டு இக்கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார். பல வேசமுத்து நாடாரின் ஏடு கொல்லம் ஆண்டு 1063 புரட்டாசி மாதம் 22ஆம் நாள் (கி.பி. 1887) எழுதப்பட்டுள்ளது.

எனவே இவ்வம்மானை நூலாசிரியர் ஆறுமுகப பெருமாள் கி.பி. 1887-ஐ ஒட்டி வாழ்ந்திருக்க வேண்டும், எனவே பூவாசநாதன் சுவடியிலுள்ள ஆண்டே சரியானது என்று கருதலாம்.

### நூலில் காணப்பெறும் நயங்கள்

ஆமையர் அம்மானை நூலானது அம்மானைக் கதைப்பாடலின் நூலமைப்பு முறையைப் பெற்றிலங்குவதோடு மட்டுமின்றி, அணிநயம் பாநயம், சொல்நயம், பொருள் நயம் போன்ற நயங்கள் பலவற்றையும் பெற்றிலங்குகிறது.

10. இந்நூலை 'ஆறுமுகப்பெருமாள்' என்பவர் எழுதியுள்ளார். இந்நூலினை அகத்தீஸ்வரம், கு. ஆறுமுகப்பெருமாள் நாடார் 1979-ல் பதித்துள்ளார்

### அணிநயம்

இலக்கியத்திற்கு அழகு சேர்க்கும் அணிகள் பலவற்றை இவ்வம்மானைக் கதைப்பாடலில் காணமுடிகின்றது. அணிகள் சொல்லவரும் கருத்திற்கு அணி யாகத் திகழ்ந்து சொல்லப்பெறுஞ் செய்தி சிறப்படையத் துணைபுரிகின்றன.

''கருத்துக்கு நயமும் செவிக்கு இனிமையும் தந்து
செய்யுளைச் சொல்லாலும் பொருளாலும் அழகு படுத்துவது அணி''

என்று கலைக்களஞ்சியம் கூறும் கருத்து இவண் நோக்கத்தக்கது. அணிகளுள் தலைசிறந்து விளங்குவது உவமையணியாகும்.

### உவமை

மனிதனது சிந்தனை வளர்ச்சி பெறத் தொடங்கிய அன்றே உவமை தோன் றியது எனலாம். ஒத்த தன்மையுடைய இரண்டு பொருள்களைக் கண்டவுடன் இது இதனைப் போன்றுள்ளது என்று கூறும் நிலையை மனிதன் தானாகவே அடைந்து விடுகின்றான். இதன் வளர்ச்சி நிலையே உவமையாகிறது. ஒரு பொருளை விளக்க உவமைகள் நன்கு உதவுகின்றன. மக்கள் நன்கு அறிந்த பொருள்கள் உவமை யாக்கப்படுவது மிகவும் சிறப்பாக அமையும். கதைப்பாடல்களில் பாமர மக்கள் எளிதாகப் புரிந்துகொள்ளத் தக்கவாறு உவமைகள் அமைக்கப்பட்டுள்ளன. இவ் வம்மானைக் கதைப் பாடலாசிரியர் மக்கள் தம் அன்றாட வாழ்வில் காணக்கூடிய சாதாரணப் பொருள்களையே உவமையாகக் கையாளுகிறார்.

நூலின் அவையடக்கத்தில், கற்றறிந்த புலவர்கள் முன் தான் கவிபாட வருவதை,

''வன்னமயி லாடிடவே வான்கோழி தான்சரியாய்
உன்னிஇற கைவிரித்து உடனாடும் தன்மைகள்போல்
கவுத்துவமாய் பாயெடுத்த கப்பலுக்கு ஒப்பாக
சமுத்திரத்தி லோடிவரும் சம்பானும் ஒப்பாமோ'' (79-82)

என்ற உவமைகளின் மூலம் சுட்டிக்காட்டுகின்றார்.

உயிர்த்தெழுந்த தன்மகள் நாகமணிமாலையைக் கண்டு மன்னன், மக்கள் பல்லோருடன் மகிழ்ந்திருப்பதை,

''வான்றட்டில் வாறமழை மேகம் போற்றிரண்டு
தேன்றட்டில் ஈயதுவும் செருமிவ ளைந்தாற்போல்
மின்போலி டையாளை வேண்டிவந்து பார்ப்பாஙர்கள்'' (1234-1236)

என்றும்,

பிணம் தின்று வாழும் பேயன், பேச்சி இவர்களது நன் மகளான சச்சகிரி மாலையைக் கூற வரும்போது,

''மோசமில்லா தமலைக்குள் முரட்டு மரத்துடனே
வாசமுடன் சந்தனமும் மகிழ்ந்துடனே நிற்பதுபோல்'' (1489, 1490)

என்ற உவமை வழியாகவும் விளக்குகின்றார்.

ஆமையர் கூட்டிலிருந்து வெளிவந்ததை உவமிக்க வந்த இவ்வம்மானை ஆசிரியர்,

''மாகத்தி னுள்ளே மறைந்திருந்த சந்திரன்றான்
மேகத்தை நீக்கி வெளியில்வந் தவாறதுபோல்'' (3140, 3141)

என மக்களுக்குத் தெரிந்த நிகழ்ச்சிகளைக் கொண்டே உவமையை அமைத்து விடுகிறார்.

சம்மந்தராசன் இறந்த தன்மகளைக் கண்டு புலம்பும்போது ஆமையர் மன்னனைத் தேற்றிய செய்தியினைத்

'தணிப்பாக அக்கினியைத் தண்ணீர்விட் டாற்றுதல்போல்' (2340)

என்ற உவமையால் எடுத்துக்காட்டுகின்றார்.

**உருவகம்**

உவமை வேறு, உவமிக்கப்படும் பொருள் வேறு என்று தனித்தனியே வேறுபடுத்திக் கூறாது அவை இரண்டும் ஒன்றே என்னும் பொருள் தோன்றுமாறு அமைத்துக் கூறுவது உருவகம் என்பர். இதனை,

''உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்து
ஒன்றென மாட்டினஃ துருவக மாகும்''[11]

எனத் தண்டியலங்காரம் எடுத்துரைக்கிறது.

ஆமையர் அம்மானை நூலின் ஆசிரியர் தம் நூலில் உருவகத்தைக் கையாளும் முறை சிறப்பிற்குரியதாக அமைகிறது.

''மண்டுவிழி யாரே மாதளம்பூ மேனியரே
தேனே யறுசுவையே தெள்ளமுதே சீரரசே
மானே மரகதமே வஞ்சியர்க்கெல் லாமரசே
கன்ன லமுதே கனகநவ ரத்தினமே
வன்ன வரிக்குயிலே வயிரவை டூரியமே
மின்னேரி டையாரே மெலிபிறை போன்றநுதலே
வள்ளைக் குழலாரே மாமோக னக்கிளியே
கிள்ளை மொழியாரே கிஞ்சுகவா யஞ்சுகமே'' (1845-1852)

என ஆமையர் தம் மனைவியை வருணிக்கும் இவ்விடத்தில் ஆசிரியர் உருவகச் சொற்களைப் பயன்படுத்துகின்றமையைத் தெளிவாகக் காணமுடிகிறது. இவ்வரிகள் 'மாசறு பொன்னே' எனத்தொடங்கும் சிலப்பதிகார வரிகளை நினைவூட்டுகின்றன.

---

11. தண்டியலங்காரம், நூற்பா. 9.

## தன்மை நவிற்சி அணி

எந்த ஒரு பொருளையும் செய்யுளுள் அமைத்துப் பாடும்போது அப்பொருளின் தன்மையை உள்ளவாறு அழகுபட எடுத்துரைப்பது தன்மை நவிற்சி அணி எனப்படும். இவ்வம்மானை நூலுள் பலவிடங்களில், அரசு, கோட்டை, படைகள், படைப்பொருட்கள், பணியாளர், மக்கள் போன்ற பலவும் அழகுபடக் கூறப்படும் நிலை சிறப்புற அமைந்துள்ளது.

''அணியிட்டார் சேனைபடை ஆனைகுதி ரைத்திரளும்
ஒட்டகைகோ லால்வண்டி ஒருலக்ஷங் காலாளும்
பட்டையம் கேடயங்கள் பதினெட்டு ஆயுதமும்
வில்லணியும் வாளணியும் வேந்தர்பெரு மான்படையும்
வல்லணிய தாகவங்கே வாரதுரை மக்களுடன்
சாதிபதி னெட்டுவகை சலுப்பர் துலுக்கர்களும்
காதிவருந் தொட்டியரும் கன்னடியர் சிங்களரும்'' (1343-1349)

என படைவகைகள், படைப்பொருட்கள், பதினெட்டு வகையான சாதியினரை எடுத்துக் கூறும் அடிகள் தன்மை நவிற்சி அணியாக அமைகின்றன.

## அதிசய அணி

கவிஞர், உள்ளத்துள் நினைக்கும் பொருளினை அழகுபட எடுத்துரைக்கும் போது உலகவரம்பு கடவாது ஆனால் ஆன்றோர் வியக்குமாறு உரைப்பது அதிசய அணி எனப்படும். பொருளையோ, குணத்தையோ, தொழிலையோ, ஐயத்தையோ, துணிவையோ குறித்துக் கவிஞர்கள் இவ்வணியை நிகழ்த்துவர்.

இவ்வம்மானை ஆசிரியர், இவ்வணியை மிகவும் அழகுபடக் கையாளுகின்றார். மன்னன் மகளின் திருமணத்திற்காக மக்கள் நகரை அலங்காரப்படுத்துகின்றனர். பின் நால்வகைப் படையினர், மந்திரிகள், சேனைத்தலைவர்கள், மற்றுமுள்ள அனைவோரும் பல்வகை அணிவகுப்புடன் வருகின்றனர். அவ்வணிவகுப்பில் இடம்பெற்ற குடை வகைகள் கீழ்க்கண்டவாறு ஆசிரியரால் வருணிக்கப்படுகின்றன.

''முத்துக் குடையும் முறுக்குவர்ண நற்குடையும்
பத்தி பத்தியாக பவள மணிக்குடையும்
சந்திரவட் டக்குடையும் சகலாத்துப் பூக்குடையும்
இந்திரவா ளிக்குடையும் இடக்கியஞ்சே ராடிகளும்'' (1350-1353)

இவ்வறுவகைப்பட்ட குடையும் அதிசயிக்கத்தக்க குடைகளாகவே அமைந்திலங்குவதைக் காணமுடிகிறது.

## பாவமைப்பு

கதைப்பாடல்களில் ஒருசில, பாடல்கள் முழுவதும் ஒரே யாப்பிலும் ஒரு சில, பலவிதமான யாப்புகளிலும் அமைந்து காணப்படுகின்றன. இந்நூலின் யாப்பு

வெண்கலிப்பாவினால் அமைந்துள்ளது. எனினும் இடையிடையே விருத்தம், கலி விருத்தம், சந்தவிருத்தம் முதலான பாவகைகளும் இடம்பெற்றுள்ளன.

''அசையடி முன்னர் அராகம்வந் தெல்லா உறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக வொத்தாழி சைக்கலி வான்றளைதட்
டிசைதன் தாகியும் வெண்சீர் இயைந்துமின் பான்மொழியாய்
விசையறு சிந்தடி யாலிறு மாய்விடின் வெண்கலியே''[12]

என யாப்பருங்கலக்காரிகை வெண்கலிப்பாவிற்கு இலக்கணம் தருகிறது. கலித் தளை தட்டுக் கலியோசை தழுவியும், வெண்தளை தட்டு வெள்ளோசை தழுவியும் வந்து ஈற்றடி முச்சீராக அமையின் அது கலிவெண்பா எனவும், வெண்கலிப்பா எனவும் வழங்கப்படும். இங்கு 'விசையறு சிந்தடி' என்று சிறப்பித்ததனால் வேற்றுத் தளை தட்டு அருகி வரவும் பெறும்.

இவ்விலக்கணத்திற்கேற்ப ஆமையர் அம்மானை நூலானது நாற்சீரடிகள் பலவற்றாலாகிய 'நடை' என்ற அமைப்பானது வெண்கலிப்பாவினால் அமை கின்றது.

''உனக்குவொரு ஆண்மதலை உடன்பிறந்த துண்டானால்
எனக்குவொரு பெண்மத்லை ஈசன்வகுப் பாரானால்
நன்மையதாய்ச் சொல்லுகிறேன் நங்கையரே உன்னாணை
உன்மகற்கு என்மகளை உற்றமணம் செய்வேனென்று'' (241-244)

அடி நடுவே ஓசை நிறுத்தம் வருமிடங்களில் பிறதளை விரவியும் வருகின்றது.

''கன்ன லமுதே கனகநவ ரத்தினமே
வன்ன வரிக்குயிலே வயிரவை டூரியமே
பொன்னே அரும்பொருளே பூவிலத கமணமே
மின்னே ரிடையாரே மெலிபிறை போன்றநுதலே'' (1847-1850)

இந்நூலில் எழுபது இடங்களில் 'அம்மானை' என்ற சொல்லாட்சியைக் காண முடிகிறது. இச்சொல்லானது கதைத் திருப்பங்கள் ஏற்படுகிறபோது, ஆசிரியரே மொழியும் வண்ணமாக ஒரு சில இடங்களில் அமைந்துள்ளது. மேலும் கதைத் திருப்பத்திற்காக 'விருத்தம்' கையாளப்பெற்றுள்ளது.

## சொல்லமைப்பு

அம்மானைக் கதைப்பாடல்கள் மக்களிடத்து வில்லுப்பாட்டாகவும் பாடப் படுகின்ற காரணத்தினால் இலக்கியச் சொற்கள், பேச்சுமொழிச் சொற்கள் மட்டு மின்றி எந்த வட்டாரத்தில் பாடப்படுகின்றதோ, அந்த வட்டார மக்களிடையே பயின்று வருகின்ற வட்டார வழக்குச் சொற்களுடன், கொச்சை மொழிச் சொற்

12. யாப்பருங்கலக்காரிகை, நூற்பா. 40

களும் ஆங்காங்கே இடம்பெறுகின்றன. இது மட்டுமல்லாமல் மக்கள் தங்கள் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் வடமொழிச் சொற்களையும் ஆசிரியர் தயங்காமல் கூறிச் செல்கின்றார்.

அம்மானை இலக்கியம் சிற்றிலக்கியமாகக் கரதப்படுகின்ற காரணத்தினால் இலக்கிய நயம் கருதி இலக்கியச் சொற்கள் பல பாடல்களில் இடம்பெற்று இலக்கிய நயத்திற்குச் சான்றளிக்கின்றன. உதாரணமாக, இடக்கியம் (1353)—தேர்க் கொடி, கவுத்துவம் (81)—வஞ்சகம், காவணம் (213, 614)—பந்தல், குமண்டை (2086)—செருக்கால் செய்யும் செயல், சப்பிரமஞ்சம் (2521, 2552)—மேற் கட்டமைந்த சிங்காரக் கட்டில் ஆகியவற்றைக் கூறலாம். இவைபோல் பல இலக்கியச் சொற்கள் இந்நூலுள் காணப்படுகின்றன.

இந்நூலில் பேச்சுமொழிச் சொற்களாகப் பாமர மக்கள் தம் வாழ்வில் அன்றாடம் பயன்படுத்தும் சொற்களைக் காணமுடிகிறது. உதாரணமாக, ஆகக்னை (445, 1066), கஞ்சிகுடி (2201), கிட்டியிடு (152), கூத்து (2567, 2577), சஞ்சலம் (957, 2334), சவம் (2373) ஆகிய சொற்களைக் கூறலாம்.

இவ்வம்மானை நூலானது குமரி மாவட்டத்தில் தோன்றிய நூலாதலால், அவ்வட்டாரத்திற்கே உரிய சொற்கள் பலவற்றைக் கொண்டிலங்குகிறது. இடிமன் (1363, 1367), குறுணி (1082), சமுசாரம் (2667), பைய (506) ஆகிய சொற்களை உதாரணமாகக் கொள்ளலாம்.

கொச்சைமொழிச் சொற்களானவை நாட்டுப்புற மக்களிடையே அன்றாடம் வழக்கில் இருந்து வருவனவாகும். மக்கள் இலக்கியமே மாண்புடைய இலக்கியம் என அறிந்து இந்நூலாசிரியர் தம்நூலில் மக்கள் வழக்குப் பண்பாட்டுச் சொற்களையும் கையாண்டு சிறப்பிக்கின்றார். உதாரணமாக, இச்சை (660, 1012), லெச்சை (2680), சோலி (140), மோசம் (1022), ராவு (821) ஆகிய சொற்களைக் கூறலாம்.

பண்டு தொட்டே வடமொழிச் சொற்களைத் தமிழ்ச் சொற்களுடன் கலந்து மக்கள் வழக்காற்றில் பயன்படுத்தலாயினர். இந்நூலாசிரியரும் இதற்கு விதிவிலக்கல்லர். வடமொழிச் சொற்களையும் தம் நூலில் கையாண்டு நூலைச் சிறப்புடையதாக்குகின்றார். கக்கிஷம் (1098, 1219), சாஷ்டாங்கம் (3331), சூக்ஷம் (1255, 2005) தூக்ஷணம் (765, 3020), பக்ஷசி (1459), பூஷணம் (1563, 2622) போன்ற பல வடமொழிச் சொற்கள் பயின்று வந்துள்ளன.

மேலும் ஆசிரியரின் மொழிப்புலமை அவரின் புதிய சொல்லாக்கங்களிலும் மிளிர்ந்து காணப்படுகிறது. அவ்வழியில் இந்நூலாசிரியரும் தம் நூலுள் பல புதிய சொல்லாக்கங்களைத் தருகின்றார்.

ஓலை எடுத்துச் செல்பவனை ஓட்டன்' (1138, 1139) என்றும, அவ் வோலையை 'ஆளோலை' (3209), மற்றும் 'நீட்டு' (33216, 3229) என்றும் வாத்திய வகை ஒன்றை 'இடிமன்' (1363, 1367) என்றும், கை அணிகலன்

பெயர் ஒன்றை முகதாரி' (1705) மற்றும் 'மோதாரி' (1378,- 2939) என்றும், கோபச்சினத்தைக் குறிக்க 'பாமை' (434, 2829) என்றும் பல புதிய சொல் லாக்கங்களைத் தந்து நூலினைக் கற்றோர் போற்றும் இலக்கியமாகவும் ஆக்குகின்ற திறனைக் காணமுடிகிறது.

## இயற்கை இகந்த நிகழ்வுகள்

இயற்கையாக நடக்கக்கூடிய செயல்கள்ிலிருந்து மாறுபட்டு இயற்கைக்கு மாறாக, இயற்கையின் ஆற்றலைக் கடந்த நிலையில் செயல்கள் அமையுமானால் அதனை 'இயற்கை இகந்த நிகழ்வு' அதாவது 'மீவியற்கை நிகழ்ச்சி' எனக் கூறுவர். இயற்கை இகந்த நிகழ்ச்சிகளைக் கதைப்பாடல்களில் கலத்தல் அதன் இன்றியமையாக் கூறாகும்: உலக வாழ்வில் நடக்க முடியாததை இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் நடை முறைப்படுத்திக் காட்டுவது கதைப்பாடலாசிரியர்களின் வழக்கம். அவ்வகையில் இந்நூலாசிரியரும் இவ்வம்மானைக் கதைப்பாடலில் இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளைப் பலவிடங்களில் அமைத்துப் பாடியுள்ளார்.

இந்நூலில் மனிதப் பாத்திரங்களுடன் சிவன், பிரமன், உமையாள் ஆகிய இறைப் பாத்திரங்களை உலவவிட்டு பேசச் செய்திருத்தலும் (277-340), அபிராம வல்லிக்கு ஆமை உருவில் மகன் பிறத்தலும் (352), ஆமையர் உருமாற சிவன் வரம் மற்றும் மந்திரவாள் தருதலும் (890-897), ஆமையர் உருமாறி இந்திர மாஞாலம் எடுத்து வானில் பறத்தலும் (898-902), பேயன் பேச்சியிடம் உள்ள நவரத்தினங்களைச் சொரியும் சேவல், சாவு மற்றும் உயிர் பிழைக்குஞ் சங்கிலி (798, 825-833) இவையும், நாகமணிமாலை, சம்மந்தமாலை இருவரையும் உயிர்ப்பித்தலும் (1200, 1201, 2458-2462), பேயனின் வெட்டுண்ட கையை முளைக்க வைத்தலும் (1650-1652), சேவல் நவரத்தினங்களைச் சொரிதலும் (2048-2059), ஆமைக்கூட்டினை சிவன் மலர்க்கூடாக வகுத்தலும் (3528-3535). ஆமையரைத் தேவர்கள் கயிலாயத்திற்கு அழைத்துச் செல்லுதலுமாகிய (3687-3701) செயல்கள் இயற்கை இகந்த நிகழ்ச்சிகளாக அமைந்து கதையமைப்பிற்குச் சிறப்பூட்டுகின்றன.

மேற்கூறிய செயல்கள் யாவும் சாதாரண நிகழ்ச்சிகளாக இல்லாது, ஒரு இறை ஆற்றலை உள்ளடக்கியனவாக அமைகின்றன. இத்தகைய மீயாற்றலைப் பயன்படுத்தாவிட்டால் இந்தக் கதையே கிடையாது. கதையின் உயிர் மூச்சை இயற்கைக்கு அப்பாற்பட்ட செயலால் சாதித்துக்காட்ட ஆசிரியர் தயங்கவில்லை. இதுபோன்ற தன்மைகளை ஆசிரியர் கையாண்டு கதையின் ஓட்டத்தை விரைவுபடுத்தி மக்களின் மனதைக் கவர்கின்றார்.

இயற்கை மீறிய இத்தகைய நிகழ்ச்சியால் நடப்பு உண்மை கடக்கப்படுகிறது என்றாலும், இறையாற்றலின் உயர்வு மற்றும் இறைநம்பிக்கை சுட்டப்படுகிறது. இறையருள் பற்றுடன் துன்பத்தைத் தாங்கி நம்பிக்கையுடன் வாழும் வழிமுறை கள் ஆமையர் என்ற கதாபாத்திரத்தின் மூலம் காட்டப்படுகின்றன. தோன்றாத்

துணையென்று கருதக்கூடிய இறைவன் தோன்றவும் செய்வான் என்ற நம்பிக்கை மனிதனுக்கு அருஞ்செயலாற்றும் துணிவையும், உறுதியையும் ஊட்டவல்லதென உணர்த்தப்படுகிறது.

## நம்பிக்கை

நம்பிக்கை என்பது மனித மனத்துடன் தொடர்புடைய ஒன்று. மனித மனம் மக்களுக்குக் கட்டுப்படுவதைவிட இறைவன் பெயரைச் சொன்னால் எளிதில் கட்டுப்பட்டு நிற்கும். எனவே, அச்சவுணர்வைக் காரணமாக்கி அதன்மூலம் இறைவனைப் படைத்து நம்பிக்கைகளைப் பழங்காலத்தில் உருக்கொளச் செய்தனர்.

''அச்சத்தின் காரணமாக மனிதன் இயற்கையின் தோற்றத்தினையும், செயற்பாடுகளையும் தனது வாழ்வியல் நடப்புகளோடு இயைந்து நோக்கிய நிலையில் நம்பிக்கைகள் தோற்றம் கொண்டன''[13] என்பர்.

அந்நிலையில் இவ்வம்மானை நூலுள் நம்பிக்கைகளாக விதி (ஊழ்), சடங்கு முறைகளையும், மற்றும் சமுதாய வழக்கமுறைகளான சீதனம், தானம், சமயச் சிந்தனைகள் போன்றவற்றையும் காணமுடிகிறது. இவையனைத்தும் நாட்டுப்புற மக்களின் சமுதாயப் பண்பாட்டை வெளிப்படுத்தி நிற்பதோடு மட்டுமல்லாமல் நூலின் உத்திகளாகவும் அமைந்து விளங்குகின்றன.

## விதி

'விதி' என்பது மக்கள் வாழ்வில் இழையோடுகின்ற ஒரு சொல்லாகும். இந்தச் சொல்லை நடைமுறையில் பயன்படுத்துவதைக் கொண்டு குறிப்பிட்ட பொருளை உணர்த்துகிறது என்பதையறிய முடியுமே தவிர 'விதி' என்பது இதுதான் என்று கூறஇயலாது. மக்கள் தம் விருப்பத்திற்கு மாறுபட்டு நடக்குமிடத்து அதனை 'விதிப் பயன்' என்று கூறிவிடுகின்றனர். இதனைத்தான் வள்ளுவர் 'ஊழ்' என்று குறிப்பிடுகின்றார். ஊழ் நன்மை, தீமை இரண்டையும் உருவாக்கவல்லது. ஊழின் வலிமையை வள்ளுவர்,

''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்''[14]

என்கிறார்.

இலக்கியங்களுள் பெரும்பாலும் இவ்வூழ் பற்றிய செய்தி வருவது பெருவழக்காக அமைகிறது. இறைவனின் சிறப்பைக் கூறுவது அல்லது இறைவனிடத்து மதிப்

---

13. தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், காந்தி, க., உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980. ப. 103.

14. திருக்குறள், அறத்துப்பால். பா. 380.

பினை உருவாக்குவது இதற்குக் காரணமாக அமைய இடமுள்ளது. இந்நூலாசிரியர் 'விதி' எனப்பெறும் ஊழைப் பற்றி இந்நூலில் பலவிடங்களில் கையாளுகின்றார்.

ஆமை உருவான மகன் பிறந்ததை எண்ணி அபிராமவல்லி துயருறும் போது

'எல்லாம் நமக்கு இறைவன் விதியெனவே' (357)

'ஏதுவிதி யோநமக்கு இவன்பிறந்தான் என்றுசொல்லி' (390)

என்றும்; பூரணவல்லியின் திருமணச் செய்தி கேட்டு அபிராமவல்லி வருந்தும்போது,

'இச்செய்தி நாம்கேட்க ஈசன்விதி தானெனவே' (458)

என்றும், மற்றும் நூலின் பலவிடங்களில் விதியின் வலிமை பேசப்படுகின்றது. 'ஊழ்' என்ற சொல்லையும் நூலுள் பலவிடங்களில் அமைத்துப் பாடியுள்ளார்.

ஆமைமகனின் செயல்களைக் கண்டு அபிராமவல்லி வருந்தும்போது,

ஊழ்விதி யோவெனக்கு உன்னோடே மற்பிடிக்க' (689)

என்றும், மகனைச் சுமந்து மன்னனிடம் செல்லும்போது,

'உன்னைச் சுமக்கவெனக் கூழின்விதி தானெனவே' (1985)

என்று கூறும்போதும், தக்க இடத்தில் இச்சொல் ஆளப்பட்டிருப்பதை அறிய முடிகிறது.

## சடங்கு

மனித வாழ்வில் நீங்காது இடம்பெறுவது சடங்கு. மனிதன் ஒன்றின் மீது உள்ளத்தில் மட்டும் நம்பிக்கை கொண்டிராது அதனை வாழ்வின் செயல்முறைகளுடன் பின்பற்றினால் சடங்காக மாறிவிடுகிறது. சடங்கு என்பதற்குத் தமிழ்ப் பேரகராதி தரும் விளக்கம்.

''சாத்திர விதி பற்றியும், வழக்கம் பற்றியும் அனுஷ்டிக்கும் கிரியை''[15] இச்சடங்கினைத் தொல்காப்பியம் 'கரணம்' என்று குறிப்பிடுகிறது. மனிதன் பிறப்பது முதல் இறக்கும் வரையிலான எல்லாச் செயல்களுக்கும் சடங்குமுறைகள் இன்றளவும் பின்பற்றப்படுகின்றன.

பண்டைக்காலத்திலிருந்தே மக்கள் சடங்குமுறைகளைப் பின்பற்றி ஒழுகி வந்ததால் அப்பண்பாடானது அவ்வக்காலத்தில் எழுந்த இலக்கியங்களிலும் இடம் பெற்று வந்திருப்பதை அறியமுடிகிறது. அவ்வகையில் இந்நூலிலும் சடங்குமுறைகள் நீங்காது இடம்பெற்றுள்ளன.

சடங்கானது மக்களின் வாழ்க்கையில் இரண்டறக் கலந்துவிட்ட ஒரு செயலானதால் இந்நூலாசிரியர் சடங்கு பற்றிய நிகழ்ச்சியை நூலில் பலவிடங்களில் அமைத்துள்ளார்.

---

15. தமிழ்ப் பேரகராதி, ப. 1240.

ஆமையர், நாகமணிமாலை இருவரின் திருமண நிகழவைக் கூறுகிறபோது,

''குலமரபுக் குள்ளபடி குறையாம லேநடத்தி
சாத்திரத்திலுள்ள சடங்குகளெல் லாம்முடித்து'' (1398, 1399)

'சந்தோஷ மாகவவர் சடங்குகளெல் லாமுடித்து (1772)

என்றும், சடங்கு செய்யும் முறையைப் பற்றிக் கூறும்போது,

'சந்தமாய்ப் பலகைமீது தான்வைத்துச் சடங்குசெய்தார்' (2408)

பலகையின் மேல்வைத்து பலசடங்குந் தான்முடித்து' (3577)

என்றும், சமுதாயத்தில் நடக்கும் சடங்கு முறைகள் இடம்பெறுகின்றன.

சடங்கு முறைப்படி எதையும் செய்தால் எந்தச் செயலும் முழுமையாக நிறைவேறியதாகும் எனும் கருத்தை மக்களுக்கு வலியுறுத்த விரும்பியே இந்நூலாசிரியரும் தாம் எடுத்துக்கொண்ட கதைப்பாடலுக்கேற்ப வரப்பெறும் சடங்குகளைத் தவறாது குறிப்பிட்டுச் செல்வதை அறியமுடிகிறது.

## சமுதாய வழக்க முறைகள்

மக்கள் நம்பிக்கையின்பாற் செல்ல முற்பட்டதின் விளைவாகச் சீதனம், மற்றும் தானங்களான அன்னதானம், பொருள்தானம், கோதானம் ஆகியவை பெருகலாயின. இவையும் இன்னபிறவும் சமுதாய வழக்கமுறைகளாகப் பன்னெடுங்காலமாக மக்களின் வாழ்வில் இடம்பெற்று வந்திருக்கின்றன.

இந்நூலின் சமுதாய வழக்கமுறைகளாகத் தானம் செய்தல், சீதனம் கொடுத்தல், கோயில் அமைத்தல், சத்திரம் கட்டுதல், நந்தவனம் அமைத்தல், பசுக்கொடை அளித்தல், மரம் நடுதல், குளம் அமைத்தல், அந்தணர்க்கு அகரம் முடித்து வைத்தல் போன்ற செயல்களைக் காணமுடிகிறது.

தானங்களையும் தானங்களால் பெறப்படும் நன்மைகளையும் மக்களுக்கு அறிவிக்கும் பொருட்டும் தானங்களின் சிறப்பை எடுத்தியம்பும் வகையிலும் இவ்வம்மானை நூலாசிரியர் பல அடிகளைப் படைத்துள்ளார்.

''ஓதுமறை வேதியர்க்கும் உற்றதமிழ் வாணருக்கும்
தானதர்மம் செய்துபல சத்திரங்க ளும்முடித்து'' (3602, 3603)

''இரப்போர் பரப்போர்க்கும் இரந்துண்ணும் பேர்களுக்கும்
நிரப்பாக வாழ்வதற்கு நிதிகள்வெகு வாய்க்கொடுத்து'' (3609, 3610)

'ஆறுகுளமும் புரவும் அங்கங்கே தான்வகுத்து' (3613)

'கோதான மீந்து குருபூசை கள்நடத்தி' (3617)

'ஆயிரம் பார்ப்பார்க்கு அகரம் முடித்துவைத்து' (3619)

'நந்தாவனங் கள்வைத்து நல்லதடா கம்வைத்து' (3633)

எனத் தருமச் செயல்கள் நீண்ட பல அடிகளில் எடுத்துரைக்கப்படுகின்றன.

மணப்பெண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும் பலவகையான சீர்வரிசைகள் தரப் பெறும் சமுதாய வழக்கப் பண்பாட்டையும் இந்நூல் எடுத்துரைக்கிறது.

''கட்டாய் மணமுடித்து கைப்பிடியுங் கூடியபின்
பணப்பெட்டி யாயிரமும் பரிகரியுங் காலாளும்
கணக்கில் லாதபுரவும் காவேரி யுங்குளமும்
வாரமிறை பகுதி வையகத்தி லுண்டான
சேருகப்ப லுங்குடியும் சீதன மாகவார்த்து'' (1404-1408)

என அக்காலச் சீர்வரிசைகள் என்னென்ன வழங்கப்பெற்றன என்பதை அறிவ தற்கு வாய்ப்பாக இப்பகுதி அமைகிறது.

இல்லறவாழ்வின் மேன்மையையும், அவ்வாழ்வு பெண்ணின் துணையின்றிச் சிறப்புப் பெறாது என்ற கருத்தையும் மக்களுக்கு இந்நூல் அறிவுறுத்துகிறது.

ஆமையர் வனாந்தர வாழ்க்கை வாழப்போவதாகக் கூறியதைக் கேட்டு மாம னாரான சம்மந்தராச மன்னன் மருமகனுக்கு இல்லறவாழ்வின் சிறப்பினை,

'இல்லறத்தில் நல்லறந்தான் எங்குமுண்டு கண்டீரே' (3163)

'சத்தியில் லாமலீசன் தனியாயி ருப்பதுண்டோ' (3165)

''அரிச்சந்தி ரனுடனே ஆனசந் திரமதியும்
பிரியமுட னேயிருந்து பேறுபெற்றுக் கொள்ளலையோ
அசுத்தமாய் வந்தபுண்ணை அருந்ததிநாக் காலேநக்கி
வசிட்டமுனி யும்பேறு மனைவியினால் பெற்றிலையோ
பாரிலிருந் துயிங்கே பலன்பெறுவ தல்லாமல்
தாரமில்லா மலங்கே தவப்பேறு கிட்டாது'' (3172-3177)

என்ற புராண நிகழ்ச்சியையும் உதாரணம் காட்டி விளக்குகின்றான்.

### சமயச் சிந்தனைகள்

வாழ்க்கையுடன் ஒட்டியது சமயம். கட்டுப்பாடுகள், நம்பிக்கைகள் ஆகிய வற்றால் மனிதமனத்தை நெறிப்படுத்தி நல்வாழ்வு பெறச் செய்வது சமயம். இவ் வம்மானை நூலின் வழியாக ஆசிரியரின் சமயம், சைவசமயம் எனத் தெளி வாகின்றது.

இந்நூலின் ஆசிரியர் சைவசமயத்தைச் சார்ந்தவராதலால் நாட்டு வளத்தினைப் பாடும்போது மிகவும் அழகாக எடுத்துரைக்கின்றார்.

'ஏறுபுகழ் சோழேசன் ஈசர்பதம் தான்பணிந்து' (123)

'ஏத்திப் பலகாலம் ஈசுரர்க்குப் பூசைசெய்ய' (128)

'சிந்தையாய்ச் சோழன் சிவபூசை தான்நடத்தி' (130)

'பார்ப்பார்கள் ஈசனுக்கு பணிமாலை கட்டுதற்கு' (149)

'வளமாகச் சிவகதைகள் மகிழ்ந்திருந்து கேட்பாரும்' (192).

என்னும் பாடல் அடிகளிலிருந்து பெரும்பாலான மக்கள் சிவனை வணங்கி வந்தார்கள் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. சமுதாயத்தில் சைவ சமயம் ஓங்கி வளர்ந்தமையை இதன்மூலம் நாம் உணரமுடிகிறது.

இவ்வம்மானைக் கதைப்பாடலானது நாட்டுப்புற மக்களின் வாழ்க்கையை எடுத்தியம்புவதோடு அவர்களுடைய நம்பிக்கைகள், பழக்கவழக்கங்கள், சடங்குகள், சமயச் சிந்தனைகள் ஆகிய அனைத்தையும் வெளிப்படுத்துகின்றது. எனவேதான்,

> ''ஒரு நாட்டில் வழங்கிவரும் கதைப்பாட்டுக்கள் அந்த நாட்டின்
> சட்டங்களைவிட முக்கியமானவை''[16]

என்று ஆண்ட்ரூஸ் பிளெச்சர் என்ற மேனாட்டு அறிஞர் குறிப்பிடுவது கருதத்தக்கது.

## பழங்கதை, புராணக் குறிப்புக்கள்

மககளுக்கு நன்கு தெரியும் பழங்கதைகளைக் குறிப்பாகச் சுட்டிச் செல்லும் முறையை அம்மானைக் கதைப்பாடல்களின் உருவாக்கத்தில் மிகப் பரவலாகக் காணமுடிகிறது. கதைப்பாடல்கள் பெரும்பாலும் சமயவுணர்வு மிக்க காலகட்டத்தில் எழுந்துள்ளன. மக்கள் புராணக் கதைகளை விரும்பி ஏற்கும் காலமாக அது உள்ளது. கதைகளுக்கு இடையில் அவற்றைக் கேட்பதற்கு மிகவும் விரும்பினர். ஆகையால் வாய்ப்பாக அமையுமிடங்களில் பழங்கதைக் குறிப்புகளைப் பொருத்திக் கதையை ஆசிரியர் வளர்த்துள்ளனர். அவை விளக்கும் கருத்துக்கு அரணாகவும், கேட்போர் மனத்திற்கு உகந்ததாகவும் விளங்குகிறது.

ஆமையர் அம்மானைக் கதைப்பாடலாசிரியரும் பல பழங்கதைக் குறிப்புகளைத் தம்நூலில் இடம்பெறச் செய்துள்ளார். அக்குறிப்புகள் சிவன், திருமால், பிரமன் இவர்களின் திருவிளையாடல்கள் பற்றியும் மற்றும் பழங்கதை, புராணக் குறிப்புகள் பற்றியும் அமைகின்றன.

சமுதாயத்தில் மக்கள் என்றும் உண்மையைப் பேசி வாழவேண்டும். ஒருவர்க்கொருவர் உண்மையுடனும், கொடுத்த உறுதிமொழியை மீறாமலும் வாழ்தல் வேண்டும். அப்போதுதான் வாழ்வு சிறப்புற அமையுமென்ற கருத்தை இந்நூல உயிர் நாதமாக வலியுறுத்துகிறது. இதனை,

> 'மெய்சொல்ல வேணும் விதிவந்து சூழ்ந்தாலும்' (753)
>
> 'ஆர்க்குமொ ருவருக்கு ஆசைமொழி தானுரைத்து
> வாக்குமா றும்பேர்கள் வாழ்விழந்து போவாரே'' (843, 844)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

16. ஏட்டில் எழுதாக் கவிதைகள், அன்னகாமு, செ., சர்வோதயம் பிரசுராலயம், தஞ்சை, 1960. ப. 166.

சொல்வாக்குத் தவறாமைக்கு உதாரணமாக மகாபாரதத்தில் 'புரூரவன் கதை', அரிச்சந்திரன் கதை, திருவிளையாடற் புராணம் 'வலைவீசிய படல'த்திலிருந்து எழுந்த நூலான 'வலைவீசிய கதை' என்னும் பார்வதியம்மன் காவியம், மற்றுள்ள கதைகளிலிருந்தும் நிகழ்ச்சிகள் செய்திகளாக எடுத்துரைக்கப்படுகின்றன.

''பொற்கொடியா ளானதொரு பூவையரை முன்னாளில்
செக்கடி முண்டனுக்கு செய்துகொடுத் தாரிலையோ'' (771, 772)

''கோசிகர்க்கு யாகம் குறையவே பொன்கொடுத்து
ஆசிகமா யயோத்தி ஆண்டஅரிச் சந்திரனும் (845, 846)

''அரிதாயு ரைத்தீரே அதியரசன் முன்னாளில்
பரிவாய் மகரமதைப் படுத்தபண்டா ரந்தனக்கு
திரைசேர் மடந்தையரைச் செய்துகொடுத் தானிலையோ'' (1301-1305)

மற்றும், சிபிச் சக்கரவர்த்தி புறாவிற்காகத் தன் தசையை அரிந்து கொடுத்த செய்தி (173-175), குமணன் புலவர்க்குத் தலையை ஈந்த செய்தி (1306, 1307) அரிச்சந்திரன் விசுவாமித்திரற்கு நாட்டை ஈந்த செய்தி (1308, 1309, 2115, 2116) சிறுத்தொண்டர் பிள்ளைக் கறிகொடுத்த செய்தி (2117, 2118), ஐயப்பன் புலிப்பால் கொண்டுவந்த செய்தி (1687, 1693), நளாயினி கணவனைச் சுமந்து சென்ற செய்தி (1921), வசிட்டமுனி மனைவி அருந்ததியினால் புகழ் பெற்ற செய்தி (3174, 3175), ஆகிய புராணப் பழங்கதைகள் பாடல்களில் செய்தி களாகக் குறிக்கப்படுகின்றன.

இந்நூலினுள்ளே சிவபெருமானும கதைப்பாத்திரமாக இடம்பெற்று வருவ தால் அவரது திருவிளையாடல்கள் பற்றிய செய்திகள் நிரம்பவே இடம்பெற் றமைந்துள்ளன. திருமால் பற்றிய குறிப்பும் உள்ளது.

திரிபுரத்தை எரித்தது (3365), மார்க்கண்டேயனுக்காக எமனை உதைத்தது (3368), விசயனுக்குப் பாசுபதம் தந்தது (3372), அரிஅயன் அடிமுடி தேடியது (3370), பாணர்க்காக விறகு சுமந்தது (3388), பிட்டிற்காக மண் சுமந்தது (3390), வேடனெச்சிலை விரும்பிப் புசித்தது (3376), கல்லெறிந்த பக்தனுக்குக் கதி கொடுத்தது (3373), திருமால் ஆமையாய்க் கிடந்தது (320), அமுதம் கடைந்தது (319) போன்ற பல புராணச் செய்திகள் பேசப்படுகின்றன.

## கதைப்பாத்திரப் பெயர் வைப்புமுறை

இந்நூலாசிரியர் கதைப் பாத்திரங்களின் பெயர்களைக் கற்பனையாக வைத் திருந்தாலும் கதை நிகழ்ச்சியின் செயலுக்கேற்ப பொருத்தமாக அமைத்திருப்பதை யும் அறியமுடிகிறது.

இவ்வம்மானைக் கதையின் கதைத்தலைவன் ஆமை உருவில் பிறந்ததின் காரணமாக 'ஆமையர்' எனவும், முற்பிறப்பில் பூவின் (மலரின்) வாசனையை முகர்ந்ததினால் இப்பிறப்பின் முடிவில், 'பூவாச நாதன்' எனவும், பூவாருடையாள்

பூவிற்குத் தாயாக இருப்பதினால் 'பூவாருடையாள்' எனவும், பூரணவல்லி பூவாகப பிறந்ததினால் 'பூரணவல்லி' எனவும், நாகமணிமாலை நாகம் தீண்டி இறந்ததால் 'நாகமணிமாலை' எனவும், சம்மந்தராசன் சம்மந்தமாநகரின் அரசனாதலால் 'சம்மந்தராசன்' எனவும், சம்மந்தமாலை சம்மந்தராசனின் மகளாதலால் 'சம்மந்த மாலை' எனவும், சச்சகிரிமாலை ஈனகிரிமலையைச் சேர்ந்தவளாதலால் 'சச்சகிரி மாலை' எனவும் கதை நிகழ்வின் செயலுக்கேற்பக் கதைப் பாத்திரங்கள் பெயர் பெறுகின்றனர்.

## ஆய்வுச் செய்தி

இவ்வம்மானை நூலில் வரும் கதைப் பாத்திரங்களான 'ஈனாப்பேச்சி', 'ஈனாப்பேயன்' இருவரும் உயிரினம், பிணம் இவற்றைத் தின்று வாழும் கதைப் பாத்திரங்களாகக் குறிப்பிடப்படுகின்றனர்.

''என்றுமிருப் பார்கள் ஈனன்யீ னாப்பேச்சி
பேச்சியுடனே யீனாப் பேயனுமச் சீமையிலே
சேர்ச்சையுட னேபிறந்து செத்தபி ணங்கள்தனை
பிச்சிப் பிடுங்கிப் பிணங்கள் தனைப்புசித்து
அச்சித் திருபேரும் அம்மலையி லேயிருப்பார்'' (782-786)

இந்நூலில் இடம்பெறும் இந்த 'ஈனாப்பேச்சி' என்ற பெயரானது 'நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம்'[17] என்ற நூலிலும், கீழ்வருமாறு இடம்பெறுகிறது.

''ஈனாப்பேச்சி போல் எங்களை வெருட்டின
மதனியின்மீது வருத்த மொன்றில்லை'' (யாத்திரைப்படலம். 114 வது வரி)

இங்கு ஈனாப்பேச்சி என்பது 'பிசாசு' என்ற பொருளில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஈனாப்பேச்சியைப் பற்றிய கதை நாஞ்சில் நாட்டு மக்களிடையே பண்டு தொட்டு வழங்கி வந்திருக்கிறது என்பதையும், அக்கதை பற்றிய குறிப்பைப் புலவர்கள் தாம் இயற்றும் நூல்களில் பொருத்தமான இடங்களில் எடுத்தாளுகின்றார்கள் என்பதையும் இதிலிருந்து அறியமுடிகிறது.

## ஒப்பாய்வு

## ஆமைராசன் கதை—அபிமன்னன் சுந்தரிமாலை—ஆமையர் அம்மானை.

## இம்மூன்றின் ஒப்புமைச் செய்திகள்

மதனகாமராஜன் கதைக்குள் வருகின்ற ஒரு கதை ஆமைராசன் கதையாகும். இக்கதை 'ஆமையாயிருந்த இராசகுமாரன் தேவகன்னியினது மகத்துவத்தால்

17. நாஞ்சில்நாட்டு மருமக்கள் வழி மான்மியம், சி. தேசிகவிநாயகம் பிள்ளை, புதுமைப் பதிப் பகம், காரைக்குடி, 1942.

மந்திரி குமாரத்தியை விவாகஞ்செய்த கதை' என்று அதில் குறிப்பிடப்படுகிறது. இக்கதையின் கதைக் கருவும் அம்மானைக் கதையின் கதைக் கருவும் ஒன்றாகவே அமைந்துள்ளன. மேலும் அபிமன்னன் சுந்தரிமாலை என்ற கதைப்பாடலின் 'கதை வரலாறு' என்ற பகுதியின் கருத்து அம்மானைக் கதையில் இடம்பெறுவதைப் போன்றே அமைந்திருப்பதாலும் இம்மூன்று கதைகளின் ஒற்றுமை, வேற்றுமைகள் இங்கு ஆராயப்படுகிறது.

## ஆமைராசன் கதையின் கதைமாந்தர்கள்

அமராவதி நகரப்பட்டண அரசன் அமரேசன், அவன் மனைவி, மகன் ஆமை, மந்திரி, அவன் மனைவி, இவர்களின் குமாரத்திகள் மூவர், அருணன், முனிவர் கள், தேவகன்னிகள் ஆகியோர்.

## அபிமன்னன் சுந்தரிமாலையின் கதைமாந்தர்கள்

அர்ச்சுனன், அவன் மனைவி சுபத்திரை, பெருமாள், மனைவி அலர்மேலு (இலட்சுமி), அபிமன்னன், சுந்தரி மற்றும் பலர்.

## ஆமையர் அம்மானையின் கதைமாந்தர்கள்

சோழ மன்னன் சோமேசன், சுந்தரமூர்த்தி, மனைவி அபிராமவல்லி, மகன் ஆமையர், இரணசூரன், மனைவி பூவாருடையாள், மகள் பூரணவல்லி, மினுமினுத் தான் பட்டண மன்னன், மகள் நாகமணிமாலை, ஈனகிரிமலைப்பேயன், மனைவி பேச்சி, மகள் சச்சகிரிமாலை, சம்மந்தமாநகர்ப் பட்டண மன்னன் சம்மந்தராசன், மனைவி தவமாலை, மகள் சம்மந்தமாலை, பணிப்பெண் கனகவல்லி மற்றும் மந்திரிகள், பறைக்காரன், ஒட்டன் மற்றும் பலர்.

## ஒப்பீடு

ஆமைராசன் கதை உரைநடையில் அமைந்துள்ளது. அபிமன்னன் சுந்தரி மாலை, அம்மானைக் கதை இவ்விரண்டும் கதைப்பாடல் அமைப்பில் செய்யுளில் அமைந்துள்ளன. அம்மானைக் கதையில் கதைமாந்தர்களின் பெயர்கள் மற்றும் ஊர்கள் இவை விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. ஆனால் ஆமைராசன் கதையில் இச்செய்திகள் விரிவாக இடம்பெறவில்லை. இவ்விரு கதைகளிலும் பெயர்களும் ஊர்களும் கற்பனைதான் என்றாலும் அம்மானைக் கதையில் கதைமாந்தர்களின் பெயர்கள் மற்றும் ஊர்கள் விளக்கமாகக் கூறப்பெறுவதால் சிறப்புற்று அமைகிறது.

## செய்தி ஒப்பீடு

இருவர் திருமண வாக்குறுதி செய்து கொள்ளும் செய்தி மூன்று கதைகளிலும் ஒன்றாகவே கூறப்பட்டுள்ளன என்றாலும், ஆமைராசன் கதையில் அரசன அமரேசனும், அவனது மந்திரியும் வாக்குறுதி செய்து கொள்வதாகவும், மற்ற இரு கதைகளில் பெண்கள் இருவர் வாக்குறுதி செய்து கொள்வதாகவும் வருகிறது.

மதனகாமராசன் கதையில் இடம்பெறுகின்ற கிளைக் கதைகளில் ஒன்றான ஆமைராசன் கதையில்,

''ஓ மந்திரி! உனக்குமெனக்கும் புத்திரசந்தான மில்லாதிருக்கிறது; சுவாமி கிருபையினாலே நம்மிருவருக்குள் யாருக்காவது பெண்ணும் பிள்ளையும் பிறக்குமாகில், ஒருவர்க்கொருவர் சம்மந்தஞ் செய்து கொள்வோம், இக்கருத்து உமக்குச் சம்மதியா வென்றனன். மந்திரி அக்கருத்து எனக்கு சம்மதிதானென்று ஏற்பாடு செய்துகொண்டு....''

(மதனகாமராசன் கதை. ப. 147)

என ஆண்கள் இருவர் வாக்குறுதிசெய்து கொள்வதை அறியமுடிகிறது.

''சூட்சமாய் வார்த்தையொன்று சொன்னாள் சுபத்திரையும்
அண்ணனுட தேவியரை அவளை மிகவழைத்து
மதனியரே நாமிருவர் வந்தோந் தலைமுழுக
இந்தமு ழுக்குடனே ஈஸ்பரனார் தன்செயலால்
அலர்மேலு மங்கையரே ஆண்பிறந்தா லுன்வயிற்றில்
உன்மகனுக் கென்மகளை உகந்துகொ டுப்பேனான்
என்வயிற்றி லாண்பிள்ளையும் உன்வயிற்றில் பெண்பிறந்தால்
என்மகனுக் குன்மகளை ஈந்திட வேணுமென்று
இப்படிக்குச் சம்மதியோ என்றாள் சுபத்திரையும்
அப்படியே சம்மதந்தான் என்றாள் அலர்மேலும்'' (55-64)

என அபிமன்னன் சுந்தரிமாலைக் கதையில் பெண்கள் இருவர் வாக்குறுதி செய்து கொள்வதைக் காணமுடிகிறது. இதன்வழி, ஆமையர் அம்மானைக் கதைப்பாடலின் ஆசிரியரான ஆறுமுகம், அபிமன்னன் சுந்தரிமாலைக் கதைப்பாடலைத் தழுவியே பெண்கள் இருவர் வாக்குறுதி செய்து கொண்டதாக அமைத்துக் கொண்டார் என்பது பின்வரும் பாடலடிகளால் தெரியவருகிறது.

''நங்கையரும் நங்கையரும் நளினமுற்று தங்களிலே
கெங்கை தனில்நின்று கிளிமொழி பூவாருடையாள்
முந்தவொரு வார்த்தை மொழிந்தனள்கா ணம்மானை
இந்த முழுக்கால் இருபேரும் கற்பமுற்று
உனக்குவொரு ஆண்மதலை உடன்பிறந்த துண்டானால்
எனக்குவொரு பெண்மதலை ஈசன்வகுப் பாரானால்
நன்மையதாய்ச் சொல்லுகிறேன் நங்கையரே உன்னாணை
உன்மகற்கு என்மகளை உற்றமணம் செய்வேனென்று
மணம்முகித்து நான்தருவேன் வாக்கொருநாள் மாறாமல்'' (237-245)

இவ்வாறு தாங்கள் செய்துகொண்ட திருமண வாக்குறுதியினை, பின்பு இருவரும் மீறுவதாக மூன்று கதைகளிலும் வருகிறது. ஆமைராசன் கதை, அம்மானைக் கதை ஆகிய இரண்டிலும் இவ்வாக்குறுதியினையும் மீறி, வீரத்திறமை சோதிக்கப்படுகிறது. ஆமைராசன் கதையில் ஆமைராசன், பாரிஜாத மலரைக்

கொண்டு வர உதயகிரி மலைக்குச் செல்வதாகவும், அம்மானைக் கதையில் ஆமையர், பேயன் பேச்சியிடம் உள்ள சங்கிலிகள், நவரத்தினங்களைச் சொரியும் வரிச சேவல் இவற்றைக் கொண்டுவர ஈனகிரி மலைக்குச் செல்வதாகவும் கூறப்படுகிறது. அபிமன்னன் சுந்தரிமாலை கதையில் அபிமன்னன், பல போராட்டங்களுக்கிடையில் தன் தாய் சுபத்திரையின் வாக்குறுதியினை நிறைவேற்றிச் சுந்தரியை மணப்பதாக முடிகின்றது. ஆமைராசன் கதையிலும் அம்மானைக் கதையிலும் கதைத் தலைவனானவன் ஆமை உருவில் பிறந்துள்ள செய்தி ஒன்றாகவே கூறப்பட்டுள்ளது. என்றாலும் இருகதைகளிலும் பிறப்பிற்கான காரணம் வேறாகச் சுட்டப்படுகின்றது. ஆமைராசன் கதையில், இராசகுமாரன் ஒருவன் தவம் செய்து கொண்டிருந்த முனிவரின் கையில் ஆமையை வைத்ததினால், அம்முனிவர் கோபமுற்று அடுத்த பிறவியில் ஆமையாய்ப் பிறப்பாய் என்று சாபமிட்டதாகவும், அம்மானைக் கதையில் நாகமுனிமைந்தன் என்னும் சிவபக்தன், சிவனுக்கு பூசிக்கத் தன் கையில் வைத்திருந்த மலரை முகர்ந்ததினால், சிவன் கோபமுற்று ஆமையாய் பிறப்பாய் என்று சாபமிட்டதாகவும் அதனால் இப்பிறப்பில் ஆமையுருவில் பிறந்துள்ளதாகவும் கூறப்படுகிறது.

ஆமைராசன் கதையில், ஆமைராசன் பாரிஜாத மலரைக் கொண்டுவரச் சென்றபோது தேவகன்னியரைக் காதலித்து, பின் அவளது உதவியினால் மலரைக் கொண்டுவந்து மந்திரிகுமாரத்தியை மணப்பதாகப் பேசப்படுகிறது. அம்மானைக் கதையிலோ சச்சகிரிமாலையின் உதவியினால் நவரத்தினம் சொரியும் வரிச் சேவலைக கொண்டுவந்து அரசன் மகளை மணப்பதாகப் பேசப்படுகிறது. இவ்வம்மானைக் கதையில் ஆமையர் பெண் நால்வரை மணந்து வாழ்வதாகக் கூறப்படுகிறது.

ஆமைராசனுக்கு அழகிய மனிதவுரு அடையும் சக்தி அருணனால் (சூரியன்) கிடைப்பதாக ஆமைராசன் கதையிலும், ஆமையர்க்கு அழகிய மனிதவுரு அடையும் சக்தி சிவபெருமானால் கிடைப்பதாக அம்மானைக் கதையிலும் வருகின்றன. ஆமைராசன் கதையில், ஆமைராசன் பகைமன்னர்களைப் போரில் வென்று திரும்பியதும், மனைவியிடம் வெந்நீர் வைத்துத் தரும்படி வேண்ட, மறைவாகப் புறக்கடையில் வெந்நீரில் நீராடும்போது அவனின் உண்மையான உருவம் மனைவியினால் அறியப்பட்டு, பின் அனைவரும் அறிந்து மகிழ்வதாகக் கூறப்படுகிறது.

ஆனால் அம்மானைக் கதையிலோ, ஆமையர் நகரில் நடைபெறுகின்ற கலை நிகழ்ச்சியான கூத்துநிகழ்ச்சியைக் காண்பதற்கு யாவரும் அறியாமல் உருமாறி சென்று கண்டு திரும்பியதும், மனைவியிடம் வெந்நீர் வைத்துத் தரும்படி வேண்ட, மறைவாகப் புறக்கடையில் வெந்நீரில் நீராடும்போது அவனின் உண்மையான உருவம் மனைவியினால் அறியப்பட்டு, பின் அனைவரும் அறிந்து மகிழ்வதாகக் கூறப்படுகிறது.

ஆமைராசனுக்கு உதவிசெய்யும் அதிசயப்பொருள்களாக மந்திரவீணை, மந்திரத் தடி, மந்திரக் கோணிப்பை, மந்திரப்பாதக்குறடு ஆகியவை ஆமைராசன் கதையில்

சுட்டப்படுகிறது. ஆமையர்க்கு உதவி செய்யும் அதிசயப்பொருள்களாகச் சாவு சங்கிலி, பிழை சங்கிலி, மந்திரவாள், நவரத்தினம் சொரியும் சேவல் ஆகியவை அம்மானைக் கதையில் சுட்டப்படுகின்றன.

ஆமைராசன் கதை முடிவானது கதைத் தலைவன் அரசுரிமை ஏற்று நாடாள்வதோடு முடிவுறுகிறது. அம்மானைக் கதையோ கதைத் தலைவன் நாடாள்வதோடு மட்டுமல்லாமல் இவன் நல்லாட்சி செலுத்துகின்ற செய்தியைக் கேட்டு இறைவனாகிய சிவபெருமான் அவனைக் கயிலாசத்திற்கு அழைத்து மோட்சகதி அளிப்பதுடன் முடிவுபெறுகிறது. ஆக, இருகதை முடிவுகளையும் நோக்க இன்பியல் முடிவாகவே அமைகின்றன.

## தொகுப்புரை

1. மதனகாமராஜன் கதையில் அமைந்துள்ள ஆமைராசகுமாரன் கதையே, இக் கதையின் மூலமாகும்.
2. ஆமைராசன் கதையானது குமரி மாவட்ட நாட்டுப்புற மக்களிடையே இன்றும் வழங்கி வருகிற கதையாகும்.
3. அபிமன்னன் சுந்தரிமாலை என்ற கதையின் தொடக்கக் கதை வரலாறான பெண்கள் இருவரின் திருமண வாக்குறுதி நிகழ்ச்சியினைக் கருத்திற்கொண்டு சிறுமாற்றத்துடன் இந்நூலாசிரியர் நூலினைத் தொடங்கியிருப்பதை அறிய முடிகின்றது.
4. மூலககதையிலிருந்து இவ்வம்மானைக்கதை பல இடங்களில் வேறுபட்டுக் காணப்படுகிறது.
5. ஆமையர் அம்மானைக் கதையானது குமரி மாவட்ட நாடார் இன மக்களால் வழிவழியாகப் படிக்கப்பட்டு வந்த சுவடியெனத் தெரிகிறது. இச்சுவடி பிற்காலத்தில் படியெடுக்கப்பெற்ற சுவடி என்பதையும் அறிய முடிகின்றது.
6. இரு சுவடிகளின் ஒப்பீட்டு முறையினால் ஒரே மாவட்டத்திற்குள் இரண்டு வடிவங்கள் இருத்தல் அறியமுடிகிறது.
7. ஆசிரியர் வட்டாரத்தில் வழங்கிவந்த கதையை இடைச்செருகலாக்கி இறைப் பெயரின் மூலம் மக்களைத் திருத்த முனைந்துள்ளார் என்றும் தெரியவருகிறது.
8. இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகளை இவ்வம்மானைக் கதைப்பாடலில் காணமுடிகிறது.

## ஆய்வின் பயன்

1. நாட்டுப்புற இலக்கியத்தில் சுவடியைப் பதிப்பித்தலால், எந்த் அளவிற்கு அவர்களிடம் ஏட்டிலக்கியம் சென்றிருக்கிறது என்பதை அறிய முடிகிறது.
2. இந்தச் சுவடியின் வாயிலாக, நாட்டுப்புற வட்டாரத்தில் வழங்குகின்ற கதையினை அறிய முடிகிறது.

3 இச்சுவடியின் மூலம் கதையின் மாற்று வடிவங்களைப் பற்றிய செய்தி தெரிய வருகின்றது.

4. சமயத்தின் வழி நல்ல கருத்துக்களை வெளிப்படுத்தவே விழைகின்றனா என்பதும் அறிய முடிந்தது.

5. இச்சுவடியின் வழிச் சமுதாயச் செய்திகளையும் அறியமுடிகிறது.

## முடிவுரை

இந்நூல் சுவடிப் பதிப்பாக உருவாயிற்று என்றாலும், மூலம் மட்டும் பதிப்பிக்காது ஆய்வு முன்னுரையுடன் பதிப்பிக்கப்பெற்றுள்ளது, பொருள் விளக்கம், நூல் குறித்தப் பல செய்திகள் அறிதல், நூலொடு தொடர்புடைய பிற செய்திகளை அறிதல், நூலின் வழி அறியப்பெறும் சமுதாயக் கூறுகளை அறிதல் என்ற பல வகையிலும் துணைபுரிவதாக அமைகின்றது ஆய்வு முன்னுரை.

மூலத்தில் உள்ளது உள்ளவாறு பதிப்பித்தலே சிறப்பு என்பது முன்னோர் கூற்று எனினும், உள்ளது உள்ளவாறு பதிப்பித்தல் என்பது, பிழைகளுடன் கூடிய பொருள் விளங்காத நூலையே உருவாக்க வழிவகுக்கும். அந்நிலையினின்று விடுபட்டுப் பிழை உள்ளவிடத்துக் கற்போர் உளமேற்கும் வகையில் தேவையான திருத்தம் செய்து நூலின் பொருள் விளங்குமாறு இந்நூல் பதிப்பிக்கப்பெற்றுள்ளது.

# A CRITICAL STUDY

## Folk-Literature

Innumerable are the Tamil literary works, old and new, that reflect faithfully the Tamil ethos. Cast in different moulds, they largely deal with human passion and truth. Since these two are inextricably intertwined to social life, literature reflects them in terms of beauty and idealism.

Folk-literature, which is believed to have preceded main stream literature with its rigid rules and conventions, assumed many forms of which *Ammāṉai* is one. The distinguishing characteristics of folk-literature are a downright *bcn homie* and naivety and the absence of inhibitions. A passion for rendering thoughts musically is another distinct feature. Many folk-songs contain memorable lines surcharged with emotion which easily lend themselves to declamation. There are times when folk-poetry attains to dizzy heights dwarfing the attempts of the so-called elite poets revelling in new forms and techniques.

Many of the folk-songs, stories and ballads were passed on from generation to generation by word of mouth, as printing made headway only somewhere around the 16th century. In the course of transmission, they underwent modifications which are inevitable in the oral tradition. This accounts for the various readings in the texts that pose challenges to the discerning reader.

## The evolution of the *Ammāṉai* genre

*Āmaiyar Ammāṉai* is the tale of a curse and its redemption, told in verse form. The word *Ammāṉai* calls for some explanation. Dr. U. V. Cāmināta Aiyar, the doyen of Tamil scholars, describes *Ammāṉai* as one among the fifty two types of folk-songs. "Written in simple language with a besprinkling of colloquialisms, it narrates in verse a tall story drawn either from the classics or folklore." The verses or songs are set to a rhythmic pattern that has lilt and cadence. The stories chosen for *Ammāṉai* rendering are usually didactic with the good triumphing over the evil. Nemesis invariably overtakes the bad characters. Digressions and sub-plots are not uncommon. Sermons on the verities of the heart are put into the mouth of the characters. Gods, gnomes and experiences connected with unknown forces add to the poignancy.

The word *Ammāṉai* seldom figures in any of the *Caṅkam* classics like *Akanāṉūṟu, Puṟanāṉūṟu, Naṟṟiṇai, Kuṟuntokai* and Aiṅkuṟunūṟu. The *Cilappatikāram* makes a reference to *Ammāṉai Varippāṭalkaḷ*. If the word is split into a + maṉai, it cannotes the idea of a show enacted under a beautiful roof. *Ammāṉai* also means a game played exclusively by women. The songs sung, while playing the game, go by the name

## In praise of Kalaimakaḷ (The Goddess of learning)

I beseech you, Goddess Kāḷi
Positioned on the left side of Siva,
The personification of pure bliss,
Known also as Caracuvati
Seated on the lotus flower
Showering prosperity on the city,
Lovely as the roving deer,
Cast your golden glances on me
So that I shall be inspired.

## The Theme

Two women, fast friends
While bathing in a big river
Sealed a marriage alliance
The depth of which Siva wanted to probe.
In His infinite mercy
He blessed the woman who offered
A bride to the son of her friend
A buxom girl,
But gifted a repulsive tortoise
Instead of a son to her counterpart.
As willed by the red-haired Siva,
The children grew up to maturity
And lo, the woman who swore by God

சொன்னமொழி யைமாற்றித் தோகையதி லேயொருத்தி
என்னதான் வந்தாலும் என்மகளை [11]உன்மகற்கு

உற்றமணம் செய்து உடன்தருவ தில்லையென்று
[12]மற்றுமொரு மாப்பிள்ளைக்கு மணஞ்செய்வேன் என்றதுவும்
ஆமையார் செய்த அதிசயங்கள் ஆனதெல்லாம்
வாமையாய் நல்ல வளமாய் நெடுங்கதையாய்

சொன்னபொருள் [13]தானுணர்ந்து [14]சிறியேன் தொகுப்பாக
இந்நிலத்தி லம்மானை [15]எனவேநான் இப்போது
பாடுதற்கு நல்லபலன் பாக்கியங்கள் உண்டாக

## ஆசிரியர் வரலாறு

நாடுதனில் மேலான நாஞ்சிவளர் நன்னாட்டில்

[16]தன்மைச் சுசீந்திரம்வாழ் [17]தாணுமால் அயனருளால்
பொன்நாஞ்சி நாடாம் புகழான சீமையிலே
வீரமுடி சூடியிந்த மேதினியெல் லாம்விளங்க
சேரன்பெரு மாளரசு செலுத்துகின்ற தேசமதில்

மற்பயிலும் திண்புயத்தான் வலங்கைஉயர் கொண்டவள்ளல்
[18]நற்பயிலும் பிச்சைதுரை நாகமணி [19]பயின்றெடுத்த
[20]நற்குணவான் சுப்ரமண்ய நாகமணி மார்த்தாண்டன்
செப்பவெர்யி லுடன்[21]நாளும் சிறந்தோங்கி யே[22]வளரும்

அன்னமிருந் திசை[23]பாடும் அகத்தீசர் வாழ்புரத்தில்
கன்னலெனும் மொழியழகி காளியம்மாள் புத்திரரில்
வன்ன குருவாக மந்திரம்போ தித்தவள்ளல்
பொன்னம் பலநாதர் பொற்பாதம் என்தலைமேல்

---

39. தோகை — பெண். 48. நாஞ்சி — நாஞ்சில்நாடு. 49. சுசீந்திரம் — இவ்வூர் அகத்தீஸ்வரம் தாலுகாவில் உள்ளது. 49. தாணுமால் அயன் — சிவன், விஷ்ணு, பிரமன். 51. மேதினி — உலகம். 52. சேரன் பெருமாள் — இவர் கி.பி.15-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வேணாட்டை ஆண்ட அரசர்; இவர் செந்தமிழ் புலமை உடையவராய் விளங்கினார். 53. வலங்கை — தமிழ்நாட்டுச் சாதியருள் ஒரு வகையினர். 57. அகத்தீஸ்புரம் — நாஞ்சில் நாட்டில் உள்ளது. 58. கன்னல் — கரும்பு.

**பாட வேறுபாடு:** 11. யானவற்கு 12. மத்தொருவனுக்கு மாலையிடக் கூறினதும் 13. அடியேன் 14. தொகுப்பாகவேக் கேட்டு 15. யாகவே 16. தென்னாஞ் சிசிவிந்தை 17. சிவதாணுமாலருளால் 18. சொற் பயிலும் 19. ஈன்ற 20. நற்பயிலும் 21. எங்கும் 22. எல்லோரும் 23. கூவும்.

Broke her word and refused to give her girl
To the son of the other
And made bold to say that she was
Planning to find another man
For her pretty daughter to wed.
Hearing this the tortoise performed
Myriad wonders beyond belief
Which is the theme of my yarn
To be narrated in *Ammāṉai* form,
Indeed it is a privilege!

## The Author

In the best of countries called Nāñcilnāṭu
Blessed by the presiding deity of Cucīntiram, Tāṇumālayaṉ
During the reign of Cēraṉ perumāḷ,
Dwelt the generous souls Piccaiturai and Nākamaṇi
Whose offspring was Cupramaṇia Nākamaṇi Mārttāṇṭaṉ,
From whom is traced the lienage of Kāḷiyammāḷ of Akastīsvaram
(A hamlet where swans sang incessantly)
Kāḷiyammāḷ, noted for her sweet speech and demeanour,
Her son Poṉṉampalanātar, my master and mentor
To whom I offer respectful homage

தவனமில்லாமல் [1]எனக்குச் சற்குருவாய் வந்துதித்த
சிவனடியான் ஐயர்பதம் சென்னியின்மேற் கொண்டேனே
பொருளாக எழுத்தோதி புத்திவித்தை தந்தவள்ளல்
இருளனண்ணாவி [2]இவர்தான் எப்போதும் [3]என்தலைமேல்

மணஞ்சேரும் குழலழகன் வாய்த்தபுக ழானசெல்வன்
அணஞ்சபெரு மாள்புலவர் அண்ணாவி எந்தனுக்கு
குருநாதன் தன்பாதம் கொண்டேன்நான் என்தலைமேல்

உருவாகப் பெற்றதுடன் உலகிலெனை யேவளர்த்து
[4]அருள்தந்த மாதாபிதா அடியிணையை யான்மறவேன்
திருவருள்சேர் பெரியோர்கள் திருவடியும் என்தலைமேல்
மாதுற்ற செந்தாமரை மலர்போல் [5]முகத்தழகன்
தாதுற்ற மால்பூதத் தான்பெருமாள் ஈன்றசெல்வன்

நாறுமலர் சூழுலகில் நற்றமிழோர் தன்னருளால்
ஆறுமுகம் நல்லதமிழ் அம்மானை கூறுலுற்றேன்.

## அவையடக்கம்

ஆமையரின் தன்கதையை அம்புவியோர் தான்கேட்க
வாமையாக நானும் வளமாய் உரைத்ததெல்லாம்

நன்னூல் அறிந்துசொல்லும் [6]நற்புலவர் தங்கள்முன்னே
பன்னூலாய் யானும் பாடத் துணிந்ததெல்லாம்
வன்னமயி லாடிடவே வான்கோழி [7]தான்சரியாய்
உன்னிஇற கைவிரித்து உடனாடும் தன்மைகள்போல்

கவுத்துவமாய்ப் பாயெடுத்த கப்பலுக்கு [8]ஒப்பாக
சமுத்திரத்தி லோடிவரும் சம்பானும் [9]ஒப்பாமோ
வகுத்தபிர மன்படைக்கும் வாறுகண்டு மண்ணுலகில்
பகுத்தாகக் குயவனவன் படைக்கும்உரு தான்சரியோ

62. சென்னி—தலை. 72. தாது—அடிமை. 73. நாறு—மணம். 80. உன்னி—நினைத்து.
81. கவுத்துவம் — வஞ்சகம். 82. சம்பான் — தோணி. 83. வாறு—வலிமை.

பாடவேறுபாடு: 1. தெந்தன் 2. பாதம் 3. நான்மறகேன் 4. அன்னை பிதாவானவர்கள் 5. முகத்தான் 6. நல்ல தமிழோர் 7. சரியோ 8. ஒப்பாமோ 9. சரியாய்.

Also to my other preceptor Aṇanca Perumāḷ Pulavar,
Along with parents and elders.
Let me particularly recall my father Pūtattāṉ Perumāḷ
Whose visage was lovely like that of the lotus.

Loaded with the blessings of all
Permit me, humble Āṟumukam,
To render in chaste Tamil
This *Ammāṉai* type of verse.

## The Author's modesty

My attempt to tell the tale of the tortoise
To the critical world at large
Is indeed fool-hardy;
Like the pheasant trying to imitate
The majestic dance of peacock with wings spread.

Can a country boat hold its own at sea,
Against a mighty ship with sails?
Can a humble potter beat Piramaṉ
In the art of Creation?

அப்படிப்போல் இப்போது அடியேன் உரைத்தபுன்சொல்
எப்படியும் செந்தமிழோர் இக்கதையைத் தள்ளாமல்
பண்பான செந்தமிழ்நூல் பகரும்பெரி யோர்கள்முன்னே
**வம்பான[10] வார்த்தைகளை வழங்கியிங்கே வைத்தசொல்லைப்**

பிள்ளைபிழை செய்ததுண்டால் பெற்றெடுத்த [11]அன்னையப்பர்
**தள்ளார்கள் அப்படிப்போல் தமிழோர்கள் பொறுத்தருள்வீர்.**

## நூல் எழுதிய சுபதின வரலாறு

[1]நீண்டபுகழ் தான்வளரும் நீணிலத்தில் இக்கதையை
ஆண்டு[2]தொள் ளாயிரத்து [3]ஐம்பத்தொன் றாவதுவருடம்

திருச்சபை [4]போலெங்கும் திருவிளக்கு [5]நின்றெரியும்
விருச்சிக மாதமதில் மிக்கவொன்ப தாம்தியதி
நன்றாம் சோமவாரம் நற்சோதி நாளதிலே
குன்றாத அமரபக்கம் குறையாத பஞ்சமியும்

விஷ்கம்ப யோகமதும் விளங்கும்பத் திரைகரணம்
மிக்க[6]தனு லக்கினத்தில் மேதினிஎல் லாம்விளங்க
கூடும்சபை யானதிலே கொழுந்துபுக ழாய்வளர
நீடுபுகழ் இக்கதையை நீணிலத்தோர் தான்கேட்க

ஈடான ஞானத்து இறையோன் திருவருளால்
**ஏடாக இக்கதையை எழுதி வைத்தேன் அம்மானை.**

## கதை சொன்னோன் வரலாறு

விந்தைபெற [7]அம்மானை விளம்பியேநான் கூறுதற்கு
எந்தனுக்கு இக்கதையை [8]எழிலாகத் தான்தொகுத்து

**[9]சொன்னவன்தன் பேரதனைச் சொல்லுகிறேன் கேளுமையா.**
**[10]மன்னுபுகழ்ச் சக்கரவர்த்தி மரபுதனில் வந்துதித்தோன்**
தேனாரும் வல்வலங்கைத் திரிசூலி தன்னருளால்
ஏனாதி என்னும் பத்தன் ஏறும்பரி யுமுடையோன்

---

85. புன்சொல் — பழித்துரை. 88. வம்பான — தீம்பான. 94. விருச்சிகம் — கார்த்திகை. தியதி — தேதி. 95. சோமவாரம் — திங்கட்கிழமை. 96. அமரபக்கம் — தேய்பிறை. பஞ்சமி — தேய்பிறையின் 5-வது நாள் (திதி). 97. விஷ்கம்பம் — யோகம் இருபத்தேழனுள் ஒன்று. பத்திரை — கரணம் பதினொன்றனுள் சுக்கிலபட்சத்து சதுர்த்தி. கரணம் — பஞ்சாங்க உறுப்புகளில் ஒன்று. 108. ஏறு — காளை; பரி — குதிரை.

**பாடவேறுபாடு:** 10. தல்லம்மடை முகடன் சொன்ன 11. அன்னை பிதா. 1. நின்ற 2. நூறா யிரத்து 3. அறுவத்தொன்றாம் 4. யாகயெங்கும் 5. நின்றிலங்க 6. புகழ்வளர 7. இக்கதையை 8. எப்போதும் அருள் தருவாய் 9. சொல்லவந்த பேர்கள் தன்னை சொல்லக்கோர் அம்மானை 10. பன்னுபுகழ்.

May be I am presumptuous
But like tolerant parents
Putting up with the lapses of children,
I want may Tamil-reading public,
To overlook my boast and limitations.

## The Date of Composition

Thanks to the mercy of the Almighty,
I penned this *Ammāṉai*
On the ninth day, month of *Kārttikai*, Nineteen fifty one,
The fifth day of the waning moon,
Otherwise known as *Caturtti*
When the lights shone brilliantly
As in the sanctum sanctorum of the dancing Lord,
Indeed a propitious hour
To propagate a verse narrative!

## The story behind the story

Let me acknowledge the debt I owe
To the narrator of this tale
Who succintly compiled the details
And presented them with consummate skill.
Poṉkāttāṉ, the noble soul

Traced his descent to a mighty emperor
Of universal renown,
A possessor of horses and bulls
Thanks to divine grace,

நன்னிலமாம் நல்லநகர் ராமநாத புரமெனும்ஊர்
அந்நகரில் வந்துதித்தோன் அமுதகுண வாசகன்காண்.
சிங்காரமாய் வளரும் சிவன்திருநா மம்தரித்தோன்
சங்கரநா ராயணன்தன் [11]தவமதனால் வந்தமைந்தன்

முன்காத்த லட்சுமியாள் முகவசியத் திற்சிறந்த
பொன்காத்தான் சொன்னகதைப் பொருளிதுகா ணம்மானை.
அக்கதைகேட் டாறுமுகம் அம்மானை செப்புகிறேன்.

## நூற்பயன்

முக்கதையி லுள்ளதொரு முறைமைகே ளம்மானை.

நல்லுலகிலே வாழும் [12]நரர்களுட தங்கள்முன்னே
சொல்லுகிறேன் கேளுமினி தொகுப்பாக இக்கதையை
ஆமைதவம் [13]செய்தகதை அன்பாகக் கேட்டவர்கள்
பாவத்துயர் தான்நீங்கி பாக்கியம் பெற்றுவாழ்வார்.

---

பாடவேறுபாடு: 11. தவத்தினால் 12. நருளிடத்தோர் 13. பெற்றகதை.

Who dwelt at Rāmanātapuram
And was the blessed progeny of Caṅkaranārāyaṇaṉ
Who bore the Lord's name.
It was He who told the tale
Which, I, Āṟumukam, am narrating.

## The impact of the tale

I shall venture to narrate the tale
Tying all the loose ends
As a well-built one
With perfection and finish
Before the learned gentry.

Be assured
That whosoever listens to the tale of the tortoise
Doing rigorous penance
Shall be absolved of all sins great and small.

## சோழ மண்டலத்தின் பெருமை கூறுதல்

வாழ்வுபெறும் சோழனுட மண்டலம் [1]தானதிலே
தாழ்வில்லாமல்[2]வளரும் சந்ததியும் பாக்கியமும்
ஏறுபுகழ் சோழேசன் ஈசர்பதம் தான்பணிந்து
ஆறிலொரு கூறாய் அசையா மணிநிறுத்தித்

தானதர்ம [3]வேதம் தவத்தால் [4]பெரியவரை
ஞான[5]நூற் கற்றவரை நன்றாய் [6]உபசரித்து
[7]சாத்திர வேதத் [8]தவமுனிவர் வேதியரை
ஏத்திப் பலகாலம் ஈசுரர்க்குப் பூசைசெய்ய

அந்தணர்கள் வேள்விநன்றாய் ஆகமமுறை [9]செய்திடவே
சிந்தையாய்ச் [10]சோழன் சிவபூசை தான்நடத்திக்
குருபூசை குன்றாமல் [11]குலமுறைகள் தப்பாமல்
ஒருவர்கொ ருவர்பயந்து ஊழியங்கள் செய்யாமல்

கட்டுக் குலையாமல் கற்புநெறி தப்பாமல்
இட்டுண்பார் அல்லாமல் [12]ஏற்றுண்பார் [13]ஆருமில்லை
மடியிற் பொருள்போட்டு வழிநடந்து போனாலும்
கடிதாகவே [14]பொருனைகள்ளர் [15]கொள்ளை செய்வதில்லை

---

124. அசையாமணி — ஆராய்ச்சி மணி. 126. ஞானநூல் — ஞானசாத்திரம். 127. வேதியர் — அந்தணர். 129. வேள்வி — யாகம். ஆகமம் — சைவ வைணவ சாத்திரம். 132. ஊழியம் — தொண்டு. 136. கள்ளர் — திருடர்.

**பாடவேறுபாடு:** 1. தேசமதில் 2. தேவன் 3. பெற்ற 4. பெரியோரை 5. கலை பெற்றவரை 6. ஆசரித்து 7. சந்திர 8. தவ மறையோர் 9. வளர்த்து 10. அரசர் சொன்ன 11. குலமரபு 12. எடுத்துண்பார் 13. காணாது 14. போயொருவர் 15. குலை.

## The glories of the Cōḻa kingdom

In the prosperous Cōḻa country,
Where the populace enjoyed perennial bliss
The pious king offered prayers to the Gods
Upheld equity and fairplay.

Righteous to the core was he
And liberal with gifts,
Courteous to the elderly
Respectful to the scholarly,
Motivated the Brahmins steeped in lore
To perform sacrifices and rites
Himself setting an example
By worshipping devoutly Lord Siva.
He cherished old traditions
And failed not to pay obeisance to teachers.
Benevolent was his rule,
And none worked out of fear,
No trace of beggary anywhere
No highway robberies either.

எளியோர்தனை வலியோர் [16]ஈடுவலுச் [17]செய்வதில்லை
பழிபாத கங்களென்ற [18]பாவமது தானுமில்லை
நாலுபேர் தானிருக்க நடுவாகச் சந்தியிலே
சோலிசெய்யும் பொல்லாத துரோகிகளை வைப்பதில்லை

பசுவுக்கு இரைபோட்டு பந்தலிடு வார்தெருவில்
அசலிலுள்ளோர் பட்டினிகள் அல்லாது [19]ஆராய்வார்
பாட்டம்தோட் டங்கள்தமைப் பணஞ்சுமந்து தானாலும்
கூட்டிவந்து கேட்பதல்லால் கொடுமையொன்றும் செய்யார்கள்

இறுக்கும் [20]குடிகளிலே இறைசுமந்து தானாலும்
[21]மறிப்பென்று ஒருத்தர்வந்து வந்திசெய்யப் போகாது
குலங்கள் பலபேராம் குடியான பேர்களுக்கு
விலங்கு மரமெனவே வேதனைகள் [22]செய்யார்கள்

பார்ப்பார்கள் ஈசனுக்குப் பணிமாலை [23]கட்டுதற்குப்
பூப்பறிப்ப தல்லாது பொருள்பறிக்கப் போகாது
கட்டிதனைப் பயிர்க்கடித்துக் கரும்பை நடுவதல்லால்
கெட்டியே அடித்துவலுக் கிட்டியிடு வார்களில்லை

மாசியென்ற மாதமதில் மாவில்வடு [24]வல்லாது
தேசமதில் வேறுவடுச் செய்யார்கள் சீமையுள்ளோர்
ஊர்ப்புரவில் வெள்ளமது [25]உடன்மறிப்ப தல்லாமல்

140. சோலி—தொந்தரவு. 141. இரை—உணவு. 142. அசலில்—அருகாமையில். 143 பாட்டம்—குத்தகை (வரி) 146. வந்தி—பலவந்தம். 152. கிட்டியிடு—இறுக்குங் கோலை வைத்துக் கட்டுதல்.

**பாடவேறுபாடு:** 16. எவல் செய்யும் 17. பேர்களில்லை 18. பங்கமது 19. ஆதரிப்பார் 20. குடிதனிலே 21. பறிப்பென்றொருவர் 22. செய்யாமல் 23. சாத்துதற்கு 24. வே ஒழிய 25 உழவர் மறிப்ப.

The strong exploiting the weak
Was unknown in the Cōḻa country,
Venial sins of omission and commission too!
Planting treacherous men
In the midst of sincere workers
Was alien to their way of life.
Cows were provided with shelter and fodder
Anxious probing was done to prevent
Any neighbour from starving.
Cruel acts were always avoided
Against tax-paying serfs and tenants.
Never were the lowly treated with coldness
Like dumb animals or plants!
The planting of sugarcane was done in earnest,
Without any trace of force or might,
Even the dogs were not guilty of unruly acts
Except splashing and sullying the waters.

[1]வழக்கிடறாய் [2]ஒருத்தரையும் [3]மறித்திருக்கப் போகாது

[4]பாரிற் [5]புலவர்கவி பாடுவதே அல்லாது
போரிற் பொருதுபடும் புண்பாடு காணாது
பொன்னுரையும் நன்னூலின் பொருளுரையும் அல்லாது
சன்னைய[6]தாக ஒருத்தர் தவறுரைக்கப் போகாது

தேயமதில் சோழமன்னன் திசைதனிலே வாறவரை
[7]ஆயம்தா [8]என்றொருத்தர் ஆராயப் போகாது
நிறைவிளைச்சலாய் விளையும் நெற்கதிர்க் கட்டல்லாது
இறை(யி)றுத்துக் கெட்டவர்கள் இல்லையிந்தச் சீமையிலே

துள்ளுபரி ஏறுகின்ற துரைமக்கள் அல்லாமல்
கள்ளரென்று [9]பேருசொல்லிக் கழுவேறும் பேர்களில்லை
வாழையுடன் கமுகுகுலை வாங்குவதே அல்லாமல்
ஆளுகள்சேர்ந் தொருவரையும் அருங்கொலைகள் செய்யார்கள்

சேற்றுக்காற் சோழனுட தேசமது ஆனதிலே
நாற்றுமுடி தன்னுடனே [10]ராசாக்கள் பொன்முடியும்
பூமுடியும் மின்னார்கள் பூங்குழலின் முடியுடனே
கோமானின் முடியதல்லால் கொடுமுடிகள் [11]தானுமில்லை

---

158. பொருது — சண்டை. 160. சன்னை — பரிகாச வார்த்தை. 161. தேயம் — நாடு. 162. ஆயம் — வரி. 164. இறை — வரி. 167. கமுகு — பாக்குமரம். 171. மின்னார் — பெண். 172. கோமான் — அரசன்.

பாடவேறுபாடு: 1. வாய்ப் பகட்டாய் 2. ஒருவர் 3. மறித்தடிக்கப் 4. பாருலகில் 5. கல்வி தமிழ் 6. யடித்தொருவர் 7. ஆர்கான் 8. என்றவரை 9. யொருவர் .10. நல்லரசர்கள் 11. காணாது.

The poets confined themselves to their muse,
Abhorring war, violence and lampooning.
Praiseworthy indeed was the polity
Which could boast of fertile crops and plenty
Where tax collection was seldom baneful
No man ever ruined by obnoxious acts.
Horses were ridden by gentry only,
Never by highwaymen practising any nefarious trade.
* ..........................................................
..........................................................

In the next few lines, the poet is ingeniously punning on Tamil words like *Kolai* and *muṛi* The point will be lost in translation.

வலுவேடன் தனக்கொதுங்கி வந்தபுறா வுக்காக
ஒலுகாமல் தன்தசையை உடனேமிகத் தானரிந்து
வேடனவன் [12]பசியாமல் மேனியரிந் தேகொடுத்து
நாடுதனை ஆண்டுமிக நாதனருள் பேறுபெற்று
அப்படியே சோழனவன் அரசாளும் சீமையிலே

## நாட்டியல்பு கூறுதல்

கற்புடைய சோழனுட கருத்ததனா லேஉலகில்
[13]வையமது தான்செழிக்க வளர்பயிரும் தான்செழிக்கப்
பொய்யாமல் மாரியது பொழித்தோங்கி யேதினமும்
தேனாறு பொங்கிச் செழித்து [14]மிகவோடும்
மானார்கள் நதியாடி வாடையது தானணிவார்
கன்னல் வளர்ந்தோங்கும் கதலியது குலைசரியும்
வன்னமரச் சோலையிலே மாவில்நின்று குயில்கூவும்
ஆவினங்கள் பால்தூவி அடையாகத் தான்திரளும்
காவுவனம் [15]ஆனதிலே கனிகளது பழுத்துதிரும்
மாடப்புறா தான்பாடும் மந்தியினம் கூத்தாடும்
பேடையன்னம் [16]உலாவிவரும் [17]பிணைமான்கள் துள்ளிவிழும்
தனங்கோடி தேடியங்குத் [18]தயவாகக் கொடி[19]நாட்டி
[20]மனங்கோடா [21]தேகூடி வளமாக வாழ்ந்திருப்பார்
களமானதில் உழவர் கன்னல்முத்து சேர்ப்பாரும்

---

179. வையம் — உலகம். 180. மாரி — மழை. 182. மானார் — பெண்ணார். வாடை — வாசனை 183. கன்னல் — கரும்பு. கதலி — வாழை. 184. மா — மாமரம். 185. ஆவினம் — பசுவினம். 187. மந்தி — குரங்கு. 188. பேடையன்னம் — பெண் அன்னம். பிணை — பெண்மான். 191. களம் — நெற்களம்.

**பாடவேறுபாடு:** 12. சடையாமல் 13. வையகம் 14. வழிந்தோடும் 15. தோறும் 16. நடக்கும் 17. புள்ளினங்கள் 18. தனுவாக 19. கட்டி 20. மனுக்கோடி 21. பேர்கள்.

In the country of the Cōḻas
Immortalised by the benign act
Of the king parting with his flesh
To appease the hunger of a hunter
And thereby saving the dear life of a dove....

## Life in the Cōḻa land

This hallowed piece of earth
Where the Cōḻas ruled,
Was holy like Tiruccentūr
With its presiding deity Murukaṉ,
Where the rain never failed to pour
Thrice every month
Giving a boost to prosperity.
The timely rain,
A tribute to the virtuous life led
Made the crops fertile
And added to the general welfare.
The women verily wore
The divine ambience of the riverbed.
Sugarcane crops touched the skies
And plantains yielded well,
The cuckoo in all pleasantry
Cooed from the mango tree.
Cows gave abundant milk
And ripe fruits fell in torrents.
The pigeon sang and monkeys danced
The swans swam with gay abandon
While the deer gambolled with great cheer.
The farmer and the collector of pearls,

[1]வளமாகச் சிவகதைகள் [2]மகிழ்ந்திருந்து கேட்பாரும்
அருள்தங்கும் மாசோழன் [3]அழகான [4]சீமையிலே
திருச்செந்தூர் வடிவேலர் திருப்பதிபோ லேவிளங்கும்
மாதமொன்றில் மும்மாரி மறவாமல் தான்பொழிந்து
போதமுடனே வாழ்வு பொலிந்தோங்கித் தானிருந்தார்

சோழவள நாட்டியல்பு சொல்லமுடி யாதுவையா.

## சம்மந்தப் பட்டணத்தில் காராளர் இருவர் திருமணம்

வாழும்மணி சோழமன்னன் மகுடமுடி தான்சூடி
மெய்ப்புடைய [5]ஈசனருள் மெய்ஓங்க உலகுதனில்
அப்படியே சோழனவன் [6]அரசாளும் [7]தேசமதிலே

உம்மந்திரச் சோழன் உடனாளும் [8]தேசமதில்
[9]சம்மந்த [10]மாநகரம் தானுமொரு பட்டணத்தில்
மடந்தைஇரு பேரான மங்கையர்கள் [11]ஏதுவினால்
நடந்ததொரு புதுமையொன்று நாட்டாரே [12]கேட்டிடுங்கோ.

சங்கையுட னந்த சம்மந்த மாநகரில்
கங்கைகுல வங்கிசத்தில் கருத்தாகவே உதித்தோன்
தாராள மாகவந்த சம்மந்த [13]பட்டணத்தில்
[14]காராள ரானதொரு கரையாளர் தானிருபேர்

---

198. மகுடமுடி—மணிமுடி. 203. மடந்தை—பெண். ஏது—முன் காரணம் விளங்கப் பெறாத தொன்றைப் பின் காரணத்தால் முடிவு செய்வதாகிய உத்தி. 205. சங்கை—வழக்கம். 206. கங்கை குலம்—வேளாளர் குலம். வங்கிசம்—வமிசம். 208. காராளர்— பூவைசியர்; சூத்திரர். கரையாளர்—மறவர் இடையர்களின் பட்டப்பெயர்.

**பாடவேறுபாடு:** 1. வளமையாய் 2. வளைந்திருந்து 3. நன்னகரில் 4. உள்ளவர்கள் 5. சோழன் 6. அரசாண்டு 7. இருக்கையிலே 8. சீமையிலே 9. தன்மந்த 10. மானபுரம் 11. தன்னாலே. 12. கேளும் 13. மாநகரில் 14. காராளமா யவர்கள் தானிருக்கும் நாளையிலே.

The devout lost in myths of Siva
Lived with joy and contentment,
The glories of Cōḻa country
Are too myriad to be catalogued.

### The marriage of two *Karaiyāḷars*

When the crowned, head, the Cōḻa king
Held sway with Almighty's blessings,
In the town called Cammantamānakaram
Something strange and novel happened
Which I want the gentry to know.
In the *Kaṅkai* tribe was born
Two Men belonging to the *Karaiyāḷar* clan.

சுந்தர மூர்த்தியென்ற [15]தூயகரை யாளனுக்கு
மந்தரம்சேர் பூங்குழலாள் மாதுஅபி ராமிதன்னை
வாச முடன்அந்த வங்கிசத்தில் உள்ளவர்கள்
பேசிப் பரியமிட்டு பெருத்த முகூர்த்தமிட்டு
காவணங்க ளிட்டுக்கதலிக் குலைநிறுத்தி
பூமணக்கும் மாலைகளும் பொற்சரிகை யும்தூக்கு
மாலையது தான்சூட்டி மணமான தும்முடித்து
வேலையது கொட்டி வெகுகோடா கவளைந்து

மேலோகம் ஆனதிலே மேனகைக்கு ஒப்பாகப்
பூலோகம் மெய்க்கவந்த [16]பூவாருடை [17]யாளவளை
வாரணம்போ லொத்தநல்ல மன்னன்ரண சூரனுக்குக்
காரணமாய் நல்ல கலியாணம் தான்முடித்து

மன்னவர்கள் தங்களிலே மைத்துனனும் மைத்துனனும்
நன்னயம்சேர் மின்னார்கள் நங்கையரும் [18]நங்கையரும்
மாலையிட்ட [19]தங்களுட [20]மணவாளர் [21]கூடிநின்று
கோலமிட்ட மின்னார்கள் கொலுவாகத் தானிருந்தார்.

---

210. மந்தரம் — சுவர்க்கம். 212. பரியம் — மணப்பரிசம். 213. காவணம் — பந்தல். கதலி — வாழை. 214. தூக்கு — தொங்கற் பொருள். 219. வாரணம் — யானை.

பாடவேறுபாடு: 15. துய்ய 16. பூவுடையாள் 17. தந்தனையும் 18. மங்கையரும் 19. மன்னவரும் 20. மாதரிரு 21. பேரும்.

To one of them called Cuntaramūrtti
The elders of the community
Chose a bride called Apirāmi,
Indeed in beauty a celestial,
Fixed the auspicious wedding date,
Ran through other formalities
Like money and property,
Erected an impressive shamiana,
With ornamental plantain trees,
Garlands galore, silk
And other paraphernalia;
While the other young man Iraṇacūraṉ
Obtained as bride Pūvāruṭaiyāḷ
Good-looking like nymph Mēṉakai.
Both the bridegrooms and the brides
Soon sealed an intimacy
That looked deep and abiding.

## அபிராமி—பூவாருடையாள் கருவுற்ற வரலாறு

பேருழவர் தானாகப் பெருவாழ்வு பாக்கியமும்
சீருழவர் செல்வம் செலுத்துகின்ற நாளையிலே
ஒருத்திக்கு ஒருத்தியுடன் [1]உண்மையுடன் தோழமையாய்
[2]கருத்தாய் உறவாடிக் கையைவிட்டு நீங்காமல்

இருக்கும்நாள் தன்னில் ஒருநாள் இருபேரும்
மருக்கும் குழல்மடவார் மாதவிடா யானார்கள்
[3]பேதகமில் [4]லாமலிவர் பிரமவிதி தன்படியே
சூதகமாய் முழுகித் தோயமதில் நீராடி

வேதா விதித்த [5]விதியதினா லேஇவர்கள்
கோதாவரி யாற்றில் கொஞ்சும் கிளிமொழியார்
பங்கெனவே யாற்றில் பண்பாகத் தானிறங்கி
முங்கிமுங்கி எழுந்து முழுகிமறு மாற்றுடுத்து

நங்கையரும் நங்கையரும் நளினமுற்றுத் தங்களிலே
கெங்கைதனில் நின்று கிளிமொழி [6]பூவாருடையாள்
முந்தவொரு வார்த்தை மொழிந்தனள்கா ணம்மானை.
இந்த முழுக்கால் இருபேரும் கற்பமுற்று

225. பேருழவர் — பெரும்உழவர். 230. மாதவிடாய் — மகளிர் மாதப்பூப்பு. 231. பேதகம் — மனவேறுபாடு. 232. சூதகம் — மாதவிடாய் விலக்கம். தோயம் — நீர்; கடல். 233. வேதா — கடவுள். 237. நளினம் — பரிகாசம். 240. கெற்பம் — கரு.

**சுவடிச்சொல்:** 240. கெற்பமுற்று.

**பாடவேறுபாடு:** 1. பிரியா 2. கருதி 3. பேதகமாய் 4 அவர்கள் 5. விதி பொருட்டினா 6. தான்ஒருத்தி.

## Apirāmi and Pūvāruṭaiyāḷ Conceive

When the farmers were at the height of prosperity
And living comfortably well,
The two wedded women who had struck in intimacy
That was deep and sincere
Were taking a ceremonial bath
After their monthly menstrual period
In the waters of the Holy Kōtāvari,
They dipped themselves off and on
Changed clothes and stood in the water
When all on a sudden Pūvāruṭaiyāḷ
Broke the stillness and spoke:
If only we conceive after this bath.......

## நங்கையர் ஆற்றுக் குளியலும் வாக்குறுதியும்

உனக்குவொரு ஆண்மதலை உடன்பிறந்த துண்டானால்
எனக்குவொரு பெண்மதலை ஈசன்வகுப் பாரானால்
நன்மையதாய்ச் சொல்லுகிறேன் நங்கையரே உன்னாணை
உன்மகற்கு என்மகளை உற்றமணம் செய்வேனென்று

மணம்முகித்து நான்தருவேன் வாக்கொருநாள் மாறாமல்
பணம்பொருளும் [7]இலையெனிலும் பாலகர்க்கு நான்தருவேன்
ஏதுகுறை யானாலும் ஈசுரனார் தம்மாணை
[8]மாதரசே [9]இனிநானும் வாக்கொருநாள் தான்மாறேன்

குங்குமஞ்சேர் [10]குழலழகி கோதையர்பூ வாருடையாள்
மங்கை அபிராமியர்க்கு வலக்கையை மிகக்கொடுத்து
இருபேரும் கெங்கைதொட்டு ஈசுரர்மேல் ஆணையிட்டுத்
தெரிவையர்கள் சத்தியமும் செய்தனர்காண் அம்மானை.

சத்தியமும் செய்தவர்கள் சம்பந்தமும் தான்கூறி
[11]மத்தியமாக அவர்கள் வாவிதனை விட்டேகி
வந்தார் [12]அவரவர்கள் மனைதனிலே அம்மானை.

## நங்கையர்கள் தம் சத்தியத்தைத் தத்தம் நாயகர்க்கு உரைத்தல்

சந்தோச மாயவர்கள் சலிப்பில்லா தேஇருந்து

அன்னம் கறிசோறு அடைக்காயும் வெள்ளிலையும்
மின்னார் இருபேரும் வேண்டியதெல் லாம்புசித்துக்

---

241. மதலை — குழந்தை. 251. கெங்கை — நீர். 252. தெரிவையர் — பெண். 253. சம்பந்தம் — விவாகத்தால் ஏற்படும் உறவு. 254. வாவி — நீர்நிலை. 257. அடைக்காய் — பாக்கு. வெள்ளிலை — வெற்றிலை.

சுவடிச்சொல்: 253. சம்மந்தமும்.

பாடவேறுபாடு: 7. இல்லா விடினும் 8. மாறேன்நான் 9. என்றுரைத்த 10. பூங்குழளார் 11. வித்தாரமாய் 12. தங்கள்.

## The ceremonial bath and the pledge

And you beget a bonny boy
While I, a charming girl
Thanks to God's infinite mercy,
Look friend, I shall offer my daughter
In marriage to your son
Irrespective of your wealth and holdings.
This is a solemn vow
Which I shall never break.
She then extended her hand
The promise being sealed with
God and water as witnesses.
After pledging the marital alliance
The women returned to respective homes.

## Disclosing the pledge to their husbands

Both the women were extremely jubilant,
Ate choice food and mutton,
Chewed betel and areca nuts

கோலமிட்ட மின்னார் குணமாகத் [1]தானிருந்து
மாலையிட்ட தங்கள்தங்கள் மணவாளர் தம்முடனே

மாற்றுப் பகிர்ந்ததுவும் மாதவிடா யானதுவும்
[2]ஏற்றகோ தாவரியில் இருபேரும் தங்களிலே
சத்தியங்கள் செய்ததுவும் சம்பந்தம் கூறினதும்
புத்தியுடன் தங்கள்தங்கள் புருடன்மார் தம்முடனே

நதியாடப் [3]போனபின்பு நடந்தபுது மைஎல்லாம்
பதியில் அரசனுக்குப் [4]பாங்குடனே தானுரைத்தார்.

## உரைத்தமொழி கேட்டுக் கணவன்மார் கூறியது

உரைத்த மொழிகளெல்லாம் உற்ற[5]மன் னவர்கேட்டு
சிரித்துமனம் மகிழ்ந்து சிவன்செயலென் றேஅவர்கள்

[6]எம்மான் திருவருளால் இயலுமே அல்லாது
நம்மாலே ஆவதுண்டோ நாயகமே என்றுரைத்து

எப்படியோ தான்பிரமன் எழுதினவா றானதெல்லாம்
அப்படியா கிலுமது ஆகுமென்றார் அம்மானை.

நற்புடைய மங்கையரும் நல்லபுகழ் தேவியரும்
செப்பியவர் தங்களிலே செய்தியெல்லாம் தானுரைத்து
உம்மந்தி ரமாக உற்பனமென் றேஅவர்கள்
சம்மந்த மாநகரில் தானிருந்தார் அம்மானை.

## ஈசன் பிரமனை அழைத்துக் கூறுதல்

விருத்தம்

4. இருந்தப்போ தவர்க ளுண்மை ஈஸ்வரன் அறிய வென்ன
திருந்திய உமையா ளோடு செய்திகள் பலதும் [7]செப்பிப்
பொருந்திய பிரமன் தன்னைப் புராந்தகன் வருத்தி நன்றாய்
வருந்திய மாதர் கட்கு [8]மகவையும் படையு மென்றார்.

---

275. உற்பனம் — நிமித்தம், காரியம். 279. புராந்தகன் — சிவன் 280. மகவு — குழந்தை

பாடவேறுபாடு :

1. இருபேரும் 2. எதிர்த்தங்கே 3. போன இடத்தில் 4. பாகுபெறவே 5. மணவாளர் 6. ஈசன் 7. பேசி 8. மதலைகள்.

And at the opportune moment
Disclosed to their devoted husbands,
The ceremonial bath after pollution
And the pledge they took in the Kōtāvari river,
About a mutual marriage alliance
Along with the details thereof.

### The reaction of the husbands

After listening to the words of their wives,
The husbands expressed joy and elation,
Attributed all happenings to the will of God
Nothing being in the hands of men.
Afterall, it was Piramaṉ, the creator

Who drew the fate of each man
And determined the course of events.
Resigning themselves to destiny's ways
The virtuous women passed their days
With peace and contentment at Cammantamāṉakar.

### Siva's order to Piramaṉ

4. Siva disclosed to Umai, has spouse
The pledge taken by the two women,
To put it to test
Ordered the creator Piramaṉ
To forthwith bless the women
With suitable progeny.

## பிரமனின் வினாவும் ஈசனார் மறுமொழியும்

நடை

5. [9]மாதர் இருவருக்கும் மகாதேவர் சொற்படியே
**ஏதுவகை யால்மகவை இவர்க்குப்படைப் போமென்றார்.**
நான்முகனே கேளுமினி நான்சொல்லும் வார்த்தை[10]யொன்று
மாமோக மாகவொரு மைந்தனார் முன்னாளில்

நாக முனிவனவன் நமக்கு[1]அர்ச்ச னைகள்செய்ய
வாகாய் மலரெடுத்து வைத்தான் நமக்காக
ஏத்தி நமஸ்கரித்து இறைஞ்சி [2]எமைப்பணிந்து
சாத்திக் [3]கழித்துநன்றாய் [4]தான்முகர்ந்து [5]கொள்ளுமுன்னே

பூமலரின் வாசம் பொறுத்திருக்க [6]மாட்டாமல்
[7]மாமோக மாகஅந்த மைந்தன் முகர்ந்துகொண்டான்
நான்முகர்ந்து தான்கழித்து நன்றாய்க் கொடுக்குமுன்னே
தான்முகர்ந்து எந்தனுக்குச் [8]சாத்த [9]நினைத்தவனை

அபிராம வல்லியர்க்கு ஆமையுரு வாம்மகவாய்
[10]புவியா ருடையாட்கு பூமலரைப் பெண்[11]ணாக்க
இப்படியே பிள்ளை இவர்களிரு பேர்களுக்கும்
**அப்படியே கருவில் அயனே படையுமென்றார்.**

---

281. மகாதேவர் — சிவன். 283. நான்முகன் — பிரமன். 285. அர்ச்சனை — கடவுள் நாமங்கூறி மலர் முதலியன இடுகை; பூசை. 287. இறைஞ்சி — வணங்கி; வீழ்ந்து. 296. அயன் — பிரமன்.

பாடவேறுபாடு: 9. ஆதிபிரமன் அடிபணிந்து ஈசுபரரை 10. தன்னை 1. சினேகங்கள் 2. நம்மையே பணிந்து 3. கழிக்கு முன்னே 4. தன்னுடைய 5. புத்திரனும் 6. கூடாமல் 7. மோகமாய் புத்திர னும் முகந்துமண முண்டுகொண்டு 8. சாத்திக் 9. கழித்தவனை 10. பூவாருடையாட்கு 11. வடிவாய்.

## Piramaṉ's doubt and the Lord's reply

5. On hearing the Great Lord's command,
Piramaṉ beseeched Him
To enlighten on the nature of the progeny
That the women should beget,
Where upon Siva exclaimed:
Look, a young man called Nākamuṉivaṉ
Collected flowers for my worship,
Lit the lamp, prostrasted with humility
But ere offering the flowers to me
Impatiently felt its fragrance
And was guilty of lapse.
Let him take birth as a tortoise son
To Apirāmavalli
And let the smelt flower be born as a girl
To Pūvāruṭaiyāḷ!
Go and fill their wombs
As suggested by Me.

## ஈசனார் ஆணையும் நாகமுனி புதல்வன் சஞ்சலமும்

கருவில் அமையுமென்று கடவுளர் சொன்னதற்பின்
அருகில்நின்ற புத்திரனும் அயர்ந்துமனம் தட்டழிந்து
நாகமுனி வன்புதல்வன் [12]நாதன் திருத்தாளில்
[13]பாகமதாய்ச் [14]சென்றறிந்து பாதத்தைப் பூண்டுகொண்டு

[15]குழறி மனம்பதறி கூறுவான் ஓர்வார்த்தை
களிறை உரித்தவனே கங்காளா கண்ணமுதே
ஏறாத வன்பிழைநான் [16]ஏழைசெய்தே னானாலும்
வேறே ஒருசடத்தில் மேவஅருள் செய்யாமல்

பொல்லாத ஆமை புழுக்கூடு தானதிலே
நல்லம்தா என்னைப் படைப்பதெந்தன் நாயகமே
உன்பாதம் [17]போற்றி உகந்திருந்த [18]எந்தனைநீர்
வம்பாமைக் கூட்டில் வகுத்தாற் சடைவெனவே

## ஆமைப் பிறப்பின் சிறப்பைக்கூறி ஈசன், நாகமுனி புதல்வனை ஆற்றுப்படுத்துதல்

சொன்ன மொழிகேட்டுச் சொற்பரனார் தாமுரைப்பார்
முன்னேநீ நன்மலரில் முகர்ந்த பிழை[19]யதனால்
படைக்கிறோ மென்று பதறாதே பாலகனே
அடக்கமாய்ச் சொல்லும் [20]அவதானம் நீகேளு

வண்டுருவாய் எந்தனுட [21]மைந்தன்வடி வேலனையும்
[22]பண்டுசடை யானதுக்குள் பார்வதிவைத் தாளதனால்
[23]வரும்புாற் கடல்தனுள் மகரமாய் [24]நிற்கவைத்துத்

302. களிறை உரித்தவன் — யானையைக் கிழித்தவன்; சிவன். 304. சடம் — உடல். 308. சடை — அடைப்பு. 309. சொற்பரன் — சிவன். 312. அவதானம் — மேன்மையான செயல். 314. சடை — அட ர்ந்த கூந்தல். 315. மகரம் — மீன்.

**பாடவேறுபாடு:** 12. நயினார் 13. பாதமதில் 14. சேர்ந்து 15. குன்றி 16. என்னசெய்தே 17. மோட்சமென்று 18. இத்தனைாள் 19. செய்ததினால் 20. அவதாரத்தை 21. வாய்த்த 22. அன்று சடைக்குள் அமைத்தலைமோ ஈஸ்வரியாள் 23. வனப்பாய் 24. நின்றவனை

## The agitation of Nākamuṉi maintaṉ

When Nākamuṉi Maintaṉ knew
That he was to be born as a tortoise
He was smitten with pain and misery,
Rushed to prostrate at the feet of the Lord
And beg mercy of Him.
'My Lord, credited with the tearing of an elephant,
Protector, dear one,
I am no doubt guilty of a lapse,
But why make me take birth
As a repulsive tortoise?
Is it fair or proper
To push a devout one like me
Into the limbo of a tortoise shell?

## The merits of the tortoise as enumerated by Siva

On hearing his plea, Lord Siva said
'Grieve not for becoming a tortoise
For the sin of smelling my flower,
Did I not in the past curse my son Vēlaṉ
To become beetle and hide him in the locks of Pārvati?
Even Pārvati also suffered punishment
And was confined to the milky ocean as a fish.

திரும்ப வருத்திளந்தன் [1]சீர்பாதம் சேர்க்கலையோ

ஆமைக்கூ டென்றுசொல்லி அழிபறைந்தாய் என்னோடே
வாமையாய் [2]உந்தனுக்கு மந்திரமாய்ச் சொல்லுகிறேன்
ஆகுபெறு தேவர் அமுதம் [3]கடையுகையில்
தாகுதிரு மாலாமை தானாய்க் [4]கிடக்கலையோ

கெங்கைதனி லாமைதனைக் கீசகனென் பாருலகோர்
[5]அங்கக் கடலில் அனந்தல் செய்த [6]கேசவனும்
[7]நாமுகந்து வாமுகின்ற நல்லகயி லாசமதைத்
[8]தாமுகந்து [9]பாரம் தரிக்கலையோ ஆமையதாய்

இந்தப்பி றவிபிறந்து இத்துயரை நீஅறுத்தால்
சிந்தையுடன் [10]நம்முடைய [11]சீர்பாதம் சேர்ப்போமென்றார்.

## நாகமுனி புதல்வன் சஞ்சலம் நீங்குதல்

[12]நேசமுடன் ஈசன் நிகழ்த்தும்மொழி தான்கேட்டு
தேசிகனார் சொன்ன திருவாக்கு தட்டாமல்

ஓமென்று பாலகனும் உள்ளம் மிகமகிழ்ந்து
ஆமென்று பாலகனும் அதற்கிசைந்தான் அம்மானை.

## நாகமுனி புதல்வனுக்கு ஈசனின் வரமும் வாக்குறுதியும்

பொன்னான நாக முனிவனுட புத்திரனைத்
தன்னை யறியச் [13]சனிப்பிக்க வேணுமென்று

நாடுதனிற் பட்டியென்ற நல்லமந்திரி [14]யவனும்
கூடுவிட்டுப் பாய்ந்துமறு கூட்டில்விளை யாடுதற்கு
இலங்கு பிரகாசம் இந்திரமா ஞாலமதுவும்
[15]துலங்குபெல மானதுவும் [16]தூயவடி வும்கொடுத்துக்
கொடுத்துச் சிவனாரும் கூறுவார் வார்த்தையொன்று
மடித்துச் சடையாதே வடிவேலன் [17]தன்னாணை
இந்தப் பிறவித்துயர் இத்தனையும் தானறுத்து
[18]எந்தவிதத் [19]தாலுமுனை ஈடேற்றம் செய்வேனென்றார்.

---

317. அழி — கேடு. 321. கீசகன் — விராட சேனாதிபதியாய் வீமனாற் கொல்லப்பட்ட ஒரு கொடிய தூர்த்தன். 322. அனந்தல் — தூக்கம். 332. சனிப்பிக்க — பிறப்பிக்க. 335. இலங்கு — ஞாயிறு. 335. இந்திரமாஞாலம் — மாயவித்தை.

பாடவேறுபாடு : 1. திருப்பாதம் 2. உனக்கு 3. கடைவதற்கு 4. கிடந்திலையோ 5. அங்கே 6. தேசமதில் 7. நானு கந்து 8. தானுகந்து 9. பாதந் 10. எந்தன் 11. திருப்பாதம் 12. நாதனார் இந்தவரம் நன்றாய் உரைத்தபின்பு 13. தரிப்பாக்க 14. தானும் 15. வலுவும் 16. மாய 17. தம்மானை 18. எந்தனிடத் 19. திலுன்னை

Were they not redeemed and allowed to merge in me?
When the Gods churned to ocean for nectar
Did not Tirumāl play the humble role of a tortoise?
Besides, the tortoise is not a despicable thing,
In the waters of the river it is called Kīcaka,
Suggesting unlimited valour and power,
Even Lord Kēcava who slumberes in the ocean
Once assumed the form of a tortoise and held Mount Kailās,
If only you don't grudge being a tortoise
The day is not far off when you shall be redeemed
And become one with Me.

### Nākamuṉi Maintaṉ is free from misery

When Nākamuṉi Maintaṉ heard the consoling words,
He felt a sense of relief,
Happily he agreed to bow to fate
And adhere cheerfully to the advice of Siva.

### The boon and promise of Siva to Nākamuṉi Maintaṉ

Siva ventured to elaborate
The implications of Nākamuṉi Maintaiṉ's birth
As a tortoise.
To reassure him, He endowed him with
Occult powers including
Passage from one body to another,
In which art, Paṭṭi, the minister of king Vikramātitya
Was an acknowledged expert.
He was also gifted with a body pure.
Then spake the Lord:
Do not feel grieved or upset,
I swear in the name of Vaṭivēlaṉ
That I shall soon redeem you.

## ஈசன் அருளால் மங்கையர் பாலகரைப் பெற்றெடுத்தல்

சொன்னார் பிரமனுடன் [1]சொல்லும்மொழி யைக்கேட்டு
அந்நாட் பிரமன் அபிராம வல்லியர்க்கு
ஆவலுடன் ஆமையதாய் ஆண்மதலை தான்வகுத்து
பூவா ருடையாட்குப் பூமலரைப் பெண்ணாக்கி
[2]இருவருக்கும் கற்பமது ஈசன் திருவருளால்
உருவாகவே [3]இவர்க்கு உதித்துவ ளர்ந்தகற்பம்
கொஞ்சும் கிளிமொழியார் கோதை இருவருக்கும்
அஞ்சினோ டஞ்சுதிங்கள் ஆனதுவே அம்மானை.
பத்தும் திகைந்தவர்கள் பாலகனைப் பெற்றெடுத்து
[4]கொத்திலங்கு மின்னார் குரவையிட்ட ரம்மானை.

## ஆமைமகன் வரவும் பெற்றோர் சலிப்பும்

[5]புவியா ருடையாட்கு பொன்னெனவோர் பெண்ணதுதான்
அபிராம வல்லியர்க்கு [6]ஆமைமகன் [7]வந்ததுவும்
சேரும் புவியிலுள்ளோர் செய்தியதைக் [8]கேட்டவர்கள்
ஆரும் பலபேர் அதிசயமீ தென்றுசொல்லி
காசினியோ ரெல்லாம் கலியுகமா கப்பார்க்க
[9]வாசமுடன் பெற்றெடுத்த [10]மாதாபிதா [11]தான்சலிக்க
எல்லாம் நமக்கு இறைவன் [12]விதியெனவே
பொல்லாத பிள்ளையென்றால் [13]போடுவதோ [14]நாமுமினி
என்று[15]சொல்லி ஆமையரை இவர்களுமோ தான்வளர்த்தார்.

## பூவாருடையாள் தன்மகளை வளர்க்கும் மாண்பு

[16]மன்றினில் பூவாருடையாள் மகளையுமோ தான்வளர்த்தாள்
[17]பாயமுடன் பாலூட்டி பரிமணத்தூஎல் நீராட்டி
மாயவுரு ஆமையரும் வளர்ந்துவரும் நாளையிலே
கன்னிபூ வாருடையாள் கருத்தாய்ஈன் றமகட்கு
[18]பன்னி ரண்டான பருவ வயசுதனில்

---

350. குரவை — மகிழ்ச்சி. 360. மன்றினில் — வீட்டினில். 361. பாயம் — விருப்பம்.

கொச்சைச்சொல்: 345. கெற்பமது. 346. கெற்பம்.

பாடவேறுபாடு: 1. சொன்ன 2. இருபேர்க்கும் 3. கெற்ப்ம் ஓங்கி வளர்ந்ததுவே 4. குந்திலங்கும் 5. பூவாருடையாள் 6. ஆண்மதலை 7. ஈன்றதுவும் 8. தான்கேட்டு 9. தாயுடனே 10. தகப்பன் மனது 11. சடைந்து 12. சுருள் எனவே 13. போடுவரோ 14. தாய் தகப்பர் 15. சடைத்து 16. மன்று 17. பாசமுடன் 18. பன்னிரண்டு நல்வயது பருவந் தனிலே.

### The birth of the infants due to divine mercy

As suggested by Lord Siva
Piramaṉ took steps to bless
A 'tortoise', son to Apirāmavalli;
And a daughter to Pūvāruṭaiyāḷ,
The smelt flower in human form.

The blessings soon took shape
And the sweet-tongued women conceived
Giving birth to two children
At the end of the tenth month.

### The disgust of the parents at the birth of a tortoise

Pūvāruṭaiyāḷ giving birth to a girl,
And Apirāmavalli to a tortoise
Made the common people wonder — struck
Who interpreted the birth of a tortoise
As an unnatural phenomenon of *Kaliyuka.*
The parents too felt sad and disgusted
But resigned themselves to fate
And brought up the tortoise boy
With great tenderness,
Without shunning him.

### How Pūvāruṭaiyāḷ brought up her daughter with great care

Pūvāruṭaiyāḷ brought up the girl
With unusual care and attention
Fed her with choice milk
Almost doting on her,
Bathed her in perfumed water
And when she attained the age of twelve

புகழாகவே மகிழ்ந்து [1]பூவாரு டையாளும்
மகளை அலங்கரித்து வர்னப்பணி தான்பூட்டிப்
[2]பட்டிடையில் தானுடுத்திப் [3]பலஆப் ரணமிட்டுக்
[4]கட்டான [5]பாடகமும் கால்ப்பணிக ளுமணிந்து

இந்துநுதல் மின்னாட்கு இருவிழிக்கும் மையெழுதி
[6]கொந்துசெறி குழலாட்குக் கோலம்பல செய்தவரும்
வையகத்தில் இல்லாத வடிவுபிர காசமதாய்த்
தையல்நல் லாளி[7] ரதி [8]தான்தோற்கும் [9]வண்ணமதாய்

வாமையாய்ப் பெண்ணும் வளர்ந்துவரும் நாளையிலே

## ஆமைமகனும் அன்னையின் பாசமும்

ஆமையார் தன்னை அபிராம வல்லியவள்
கட்டி யெடுத்துக் [10]கனமடிமேல் வைத்தாலும்
வட்டத் திருகையைப் போல்வளைய வளையவருவான்

புழக்கடைகள் தோறும் [11]புறத்தலைவா யில்தோறும்
அழுக்கடையும் குப்பை அடுப்பின் கரைதோறும்
திரிவான் தெருவில் திசையறியாப் பேர்களைப்போல்
[12]பரிவாய் மனைதனிலே [13]பரிந்தொருநா ளு [14]தரியான்

[15]வாசம் [16]புகழுடைய மங்கைஅபி ராமியவள்
ஆசையுடன் தானெடுத்து அன்புமொழி [17]கேட்டாலும்
பேய்போல் விழிப்பான் புறக்கடையைப் பார்த்திடுவான்
வாய்திறந்து பேசான், மதியறியாப் பேர்களைப்போல்

வல்லாமை ஈசரந்நாள் வரமிவர்க்கு ஈந்ததினால்
எல்லாம் இவனறிவான் எமசூட்சம் தான்முதலாய்
அறிந்தும்அறி யாதவன்போல் ஆந்தையைப் போல்முழிப்பான்
[18]செறிந்துலகில் உள்ளவர்கள் செய்தி[19]யிவன் வாறறியார்

சீத நறுங்குழலாள் செல்விஅபி ராமவல்லி
ஏதுவிதி யோநமக்கு இவன்பிறந்[20]தான் என்றுசொல்லி

---

368. பாடகம் — மகளிர் காலணி. 369. இந்துநுதல் — பிறைநெற்றி. 370. கொந்து — கொத்து. 377. புழக்கடை — வீட்டின் பின்வாயிற்புறம். 383. புறக்கடை — வீட்டின் பின்புறம். 384. மதி — அறிவு.

பாடவேறுபாடு: 1. பூவையர் பூவாருடையாள் 2. பட்டாடை 3. பணி 4. கட்டுவம் 5. பீலிதண்டை 6. சாந்துசவ் வாதுகளும் சந்தனமும் தான்அணிந்து 7. தெய்வரம்பை 8. தனக்கொப்ப 9. தாக வென்ன 10. கருத் தாய் 11. புழக்கடை 12. பதிவாய் 13. பதித்தொருநாளும் 14. இருக்கான் 15. வரத்தால் 16. புகழ் பெரிய 17. சொன்னாலும் 18. சேர்ந்துலகில் 19. வரலாறறியார் 20. அன்றுமுதல்

Dressed her in silk
Made her wear myriad jewels,
Soaked her body in sandal and myrrh
Applied collyrium to the eyes
And made her appear so bright and spruce
That she was a challenge to Rati
The mythical beauty.
The illusory tortoise boy
Also registered equal growth.

### The Mother's love for her tortoise son

Even when mother Apirāmi
Kept him affectionately on her lap,
The restless tortoise released itself
And tossed about restlessly like a wheel.
He wandered about in the backyard of the house
Or sought refuge on the dirty fringes
Of country ovens.
Sauntering about aimlessly in unclean places,
He obstinately refused to remain stay-put in the house.
All the tender words of Apirāmi
Fell flat on the tortoise son.

His only reaction was a stupid stare
Like that of a mindless ghost or gnome.
Though he had fore knowledge of his future,
And knew even his life span
Since Siva had briefed him,
He always drew a blank
Like an unimaginative owl.
Apirāmavalli who was perplexed at his birth
Resigned herself to her cruel fate,

தாகமுடன் [1]ஈன்றெடுத்த தையல்அபி ராமவல்லி
[2]ஆகங் குளிர்ந்தாமை அவனைமுத்த மிட்டாலும்

குப்பைக்குழி தோறுமவன் கோழிகிண்டி மேய்வதுபோல்
பப்புச் செடியும் பலவிடமும் தான்திரிவான்
பாலதனைக் கொடுத்தால் பதமாய்ப் புசிக்கறியான்
சீலைதனைக் கொடுத்தால் திரிபோல் கிழித்தெறிவான்

அப்படியே ஆமை அவன்வளரும் நாளையிலே

## சுந்தரமூர்த்தி நங்கையர் செய்துகொண்ட வாக்குறுதியை நினைவு கூறுதல்

கற்புடைய மாது[3]மின்னாள் [4]கலங்கிஅபி ராமவல்லி
ஏதுபோ லாச்சுஇது இறையோன் [5]விதித்ததென்ன
மாது [6]மனந்தளர்ந்து மகனாலே சஞ்சலித்து

தானும்மண வாளனுமாய் தானிருக்கும் [7]வேளையிலே
மானனையாள் தன்னுடனே மன்னவனும் சொல்லலுற்றான்.
அன்னமே நம்முடைய ஆமைமக னார்தனக்கு
முன்னமே [8]நீங்கள் மொழிந்த[9]சொல் மாறாமல்

பெண்நமக்குத் தாரதுவும் பேசும்மொழி மாறுவதும்
[10]நன்னயமாய் உன்னுடைய நங்கையிடம் கேளுவென்றார்.

## அபிராமவல்லி தன் தோழியிடம் பெண்கேட்டுச் செல்லுதல்

மன்னன்மொழி கேட்டதற்பின் மங்கையபி ராமவல்லி
அந்நேரம் சென்றாளே ஆமையர்க்குப் பெண்[11]கேட்டு

---

398. மின்னாள் — பெண். 400. மாது — பெண்.

சுவடிச்சொல்: 395. பாலுதனைக் 408. அன்னேரம்.

பாடவேறுபாடு: 1. பெற்றெடுத்த 2. ஆவியெடுத் தாமையரை அன்பாக முத்தமிட்டு 3. நல்லாள் 4. கருத்தில் 5. தனைத்தொழுது 6. மனங்கலங்கி 7. நாளையிலே 8. உங்களிலே 9. மொழி 10. அண்ணருட தேவிவசம் ஆனமொழி கேளுமென்றார் 11. கேட்க.

Showered on him all the motherly love at her command,
Kissed him passionately,
But there was no response from her tortoise son.
He never gave up loafing about
Like chicks in search of prey
And wallowed about in junk-filled pits of decay.
He did not relish good milk
Nor had he any love for clothes,
For he always tore them to pieces
With great indifference.
Thus grew the tortoise boy,
The darling son of Apirāmavalli.

## Cuntaramūrtti's reminder of the pledge

Apirāmavalli, the chaste woman
Was confused and crest-fallen
At the unfortunate birth
Of a freak offspring.
When husband and wife were alone
Cuntaramūrtti reminded his darling spouse
Of the pledge regarding the marriage alliance
And wanted her to sound
Her friend and confidant about it.

## Apirāmavalli seeking a marriage alliance

On hearing her husband's words,
Apirāmavalli went seeking a marriage alliance
For her tortoise son.

வந்தவளும் பூவா ருடையாள் மனைதனிலே
சிந்தையுடன் சென்று சிறப்பாக வே[12]இருந்தாள்
[13]பொருந்தும்அபி ராமவல்லி [14]தன்னைப்பூ வாருடையாள்
வருந்தி மனமகிழ்ந்து [15]வாவென்று [16]சொல்லாமல்

குறியான மாதுநல்லாள் கோதைபூ வாருடையாள்
அறியாத பேர்களைப்போல் அப்பால் இருந்துகொண்டாள்
இருந்த பொழுதிலந்த ஏந்திழை யாளைநோக்கி
திருந்துஅபி ராமவல்லி செப்புவாள் வார்த்தையொன்று

நன்றுநன்று நம்முடைய நங்கையரே இப்போது
ஒன்றுங்குறை யில்லைநமை உபசரித் ததுபோதும்
நங்கையரே முன்னாளில் நம்முடனே உண்மையுடன்
கெங்கைதனில் நின்றுசொன்ன கீர்த்தியுள்ள வார்த்தை[17]தனை

[18]ஆறுதனைத் [19]தரித்தசிவன் ஆணையது தப்பாமல்
வீறுதலாய் உந்தனுட மிக்கமக ளார்தனைத்தான்
எந்தன்மக னார்தனக்கு [20]இசையமணம் செய்வதற்கு
வந்தேன்நான் உன்னிடத்தில் [21]மைத்துனியே என்றுரைத்தாள்.

415. ஏந்திழையாள் — பெண்.

பாடவேறுபாடு: 12. இருக்க 13. திருந்தும் 14. சேயிழை 15. வாருமென்று 16. கேளாமல் 17. எல்லாம் 18. அக்கறுகு 19. தாள்தரித்தா 20. வத்த 21. மச்சினியே.

Instead of a warm and rousing welcome
At the hands of Pūvāruṭaiyāḷ,
She found her cold and indifferent.
Still Apirāmavalli composed herself
And spoke on intimate terms
Not making any fuss about hospitality.
She reminded her friend
Of the promise taken in the waters of the river,
In the name of Almighty Siva
And then told her that her visit
Was for seeking her daughter's hand
For her darling offspring.

## பெண்கேட்ட அபிராமவல்லிக்குப் பூவாருடையாள் பதில்

உரைத்தமொழி கேட்டவளும் உடனே எழுந்திருந்து
வரைத்தடத்தில் வாழுகின்ற வரிவேங்கை போற்சீறி
சீறி எழுந்தவளும் தீப்போல விழிசிவந்து
மீறியவள் வண்டுறுக்கி வெடுவெடெனப் பற்கடித்து

என்னசொல்லப் போறேனிவள் எங்கிருந்து இங்குவந்தாள்
சன்னைமொழி சொன்னால் தரங்கெடுத்து விட்டிடுவேன்
நாத்தினள் [1]உனக்காரு நங்கையுனக் காருபெண்ணே
ஆற்றிலே சொன்னதெல்லாம் ஆற்றோடே போச்சுதடி

ஆமைக்குப் பெண்டிருந்து ஆமைதனைப் பெற்றவளே
[2]பாமைகரை யேற்றாதே பழகைநகர் நீலியென
பெண்தருவேன் என்றவுரை பேருலகில் உள்ளவர்கள்
கண்டதுண்டோ கேட்டதுண்டோ கைக்குள்ளொரு சாட்சியுண்டோ

உன்தெருவில் நானும் ஒருநாளும் வாறதில்லை
என்தெருவில் வாராதே இல்லையடி பெண்ணுனக்கு
எல்லாந்தான் போய்பேய் இலுப்பையிலே ஏறுகைபோல்
வல்லாமைக் [3]காரியிவள் வழக்கிடவோ இங்குவந்தாள்

[4]முன்னை [5]இருந்த முறைமைதனை விட்டுவிடு
சன்னைபறை யாதேயடி தாறதில்லை பெண்ணுனக்கு
[6]நளிஇனிமே லும்பேசி நாத்திநங்கை என்றுசொல்லி
[7]வளவு மனைதனிலே வந்தாயே ஆமாகில்

426. வரைத்தடம் — தாழ்வரை. 428. வண்டுறுக்கி — உதட்டை மடக்கிக்கடித்தல். 430. சன்னை மொழி — பரிகாச வார்த்தை. 431. பழகைநகர் நீலி — பழையனூர் நீலி. 439. இலுப்பை — இலுப்பை மரம். 442. சன்னை — குறிப்பு; பரிகாச வார்த்தை. 444. வளவு — வீட்டுப்புறம்.

பாடவேறுபாடு: 1. எனக்கொரு 2. பகைக்கு 3. பேசி 4. முன்னமே 5. நாமனருந்த 6. நலமாய் 7. வாழும்.

## The reply of Pūvāruṭaiyāḷ

When she heard the words of Apirāmavalli,
Pūvāruṭaiyāḷ flew into a paroxysm of rage,
Sprang verily like the leopard of the valley
Her eyes turned blood red,
Gnashed her teeth in anger
And said that the pledge taken in the river
Had washed away.
'Look, don't claim
Any kinship or relationship with me
Like obnoxious Nīli of Paḻaiyaṉūr,
You who bore in your womb
An infernal tortoise.
Can you cite any witness to our vow
Or advance convincing proof?
Did anybody see us taking a pledge?
Pray, avoid coming to my street,
I too shall not visit your place.
If at all there was any intimacy
Forget about it, bury it deep.
I am telling you quite unambiguously
That my daughter will not wed your son.
Again if you come on this count

அல்லாரும் காணவுன்னை ஆக்கினைகள் [1] பண்ணிடுவேன்
பொல்லாத பெண்ணேநான் பெண்தருவதில் லைஎன்றாள்.

## அபிராமவல்லி நடந்தவற்றைத் தன் கணவனிடம் கூறுதல்

என்றமொழி தான்கேட்டு ஏங்கிஅபி ராமவல்லி
நன்றுநன்று [2]நந்தமக்கு [3]நாதனருள் [4]ஈதெனவே

மடந்தையரும் தன்மனையில் வந்துமண வாளனுடன்
நடந்த புதுமை எல்லாம் நன்றாகத் தானுரைத்து

## பூவாருடையாள் தன் மகளுக்குத் தக்க வரன் கொணர்தல்

இருக்குமந்த நாளையிலே ஏந்திழையாள் பெற்றெடுத்த
[5]மருப்பூவின் [6]குழலாளை மறுமாப்பிள் ளைதனக்கு

[7]கெட்டப் [8]பரியமிட்டு [9]கிளர்முகூர்த் தமுமிட்டு
கொட்டுங் குரவையுமாய் குக்குளித்தங் கெல்லோரும்
ஏப்புழைபோ லொத்த இடையாளைக் [10]கொள்வதற்கு
மாப்பிள்ளையைக் கொண்டுவந்து வைத்தார்கள் பந்தலிலே.

## திருமணச் செய்தி கேட்டு அபிராமவல்லி வருந்துதல்

அச்செய்தி தான்கேட்டு அயர்ந்துஅபி ராமவல்லி
இச்செய்தி நாம்கேட்க [11]ஈசன்விதி [12]தானெனவே
நாமல்லோ இந்தமணம் [13]நன்றாகக் காணுதற்கு
[14]ஆவல் பெருக்குடனே அகமகிழ்ந்து தானிருந்தோம்

மகனார்க்கு இந்த [15]மணமான [16]தைமுடித்து
[17]பகுமானம் பாராமல் பாவிநான் ஆகிவிட்டேன்
[18]என்று மனம்சலித்து ஏந்திழையும் தான்மருண்டு
சஞ்சலித்து மெத்த சடைத்திருந்தாள் [19]தாயாரும்.

---

445. ஆக்கினை — தண்டனை. 454. குரவை — மகிழ்ச்சி. 455. ஏப்புழை — அம்பு எய்ய அமைக்கப் பட்டிருக்கும் மதிலின் துவாரம்; மெல்லிய. 464. சடைத்திரு — சோர்ந்திரு.

பாடவேறுபாடு: 1. செய்துவைப்பேன் 2. என்தலையில் 3. நாதன் 4. எழுதியதோ 5. மாதளம்பூ 6. நிறத்தாளை 7. கேட்டுப் 8. பரிசமிட்டு 9. கலத்து 10. செய்வதற்கு 11. இறையோன் 12. விதித்ததென்ன 13. நன்மையுடன் 14. ஆவலாய் நாமிருந்தோம் ஆசையுடனிப்போது 15. மணம்முடித்துப் 16. பாராமல் 17. இவனாளே வந்து மணமிப்போ செய்கிறானே 18. கஞ்சமுகம் வாடியந்த காரிகையா எப்போது 19. அம்மானை

There shall be no limit to my wrath
And severe punishment will overtake you

### Apirāmavalli reporting to her husband

On hearing her friend's words,
Apirāmavalli found consolation in the thought
That it was all an act of destiny.
On reaching her residence
She reported to her husband
The bizarre events of the day.

### Pūvāruṭaiyāḷ chooses a groom for her daughter

In the days that succeeded
Pūvāruṭaiyāḷ chose for her daughter
Fair and tender like pomegranate flower
With an elegant slender waist
Another accomplished groom,
Settled terms like money and property
In the traditional way
Fixed an auspicious day
Brought him to the ceremonial shamiana
A prelude to holy wedlock.

### How the tidings upset Apirāmi

The news of the marriage
Verily upset Apirāmi
Who again blamed malicious fate
For the unfortunate happenings.
'How I longed to see this marriage
Take place with my son as groom'
Gasped she and styled hereself a sinner,
Great gloom and sorrow enveloping her.

## ஆமையர் தன் தாயை ஆற்றுப்படுத்துதல்

அழுத வகைகளெல்லாம் ஆமையுரு வானவனும்
பழுதறவே முன்நடந்த பண்பான [1]செய்தியொடு
நடந்த வளமையெல்லாம் நன்றாகத் தான்கேட்டு
[2]மடந்தையரைத் தேற்றி மலையாதே என்றுரைத்து

[3]மாமியார் எந்தனுக்கு வார்த்தைசொல்லித் தானிருந்தால்
சாமிமேல் ஆணையிட்டு சத்தியங்கள் செய்தவளை
முன்னே [4]எனக்கு மொழிந்திங் [5]திருந்தபெண்ணை
இந்நேரம் வந்தொருவன் இயலுமோ மாலையிட

இறையோன் திருவருளால் என்னுடைய மாதாவே
முறைமாமன் தன்மகளை முடித்தெனக்குத் தாராமல்
மற்றொருவன் [6]பந்தலுக்குள் மாலையிட [7]வந்ததுவும்
[8]சிற்றுருப்போல் நானும் திறங்கெட் டிருப்பதுவும்

சந்தமுடன் பெண்ணைமணம் தான்முடிப்பேன் என்றுசொல்லி
பந்தலுக்குள் [9]வந்தொரு பயல்திறமும் என்திறமும்
அறியலாந் [10]தாயே அரைநாழி கைதனிலே
கிருபையுட னென்செய்தி கேட்டிருங்கோ வென்றுசொல்லி

நாதாவின் றன்னருளால் நாகமுனி [11]தன்புதல்வன்
[12]மாதாவை [13]நோக்கியொரு [14]வார்த்தைசொல்வா [15]னம்மானை.

## ஆமையரும் அன்னையரும் உரையாடல்

சிந்தையுட னோர்[16] வசனஞ் செப்பக்கேள் மாதாவே
[17]அந்தமணப் பந்தலுக்குள் அவதான மாகவென்னை

---

467. வளமை — செய்தி. 477. சந்தம் — சுகம்; மகிழ்வு. 484. அவதானம் — சாதுரியம்; நிதானம்.

பாடவேறுபாடு: 1. செய்தியெல்லாம் 2. பணிந்து தாயாருடைய பாதந்தனைத் தொழுது 3. ஆமை யார் அந்த அபிராமிக் கேதுசொல்வார் 4. நமக்கவர்கள் 5. துண்டாகில் 6. வீந்து 7. வாறானோ 8. சிற்று ரூபமாக 9. வந்தயந்த 10. தாயாரே 11. மைந்தனவன் 12. தாயாரை 13. நோக்கியவன் 14. சாற்று வான் 15. ஓர்வார்த்தை 16. வார்த்தை 17. அந்தமணிப்.

## The Tortoise son consoling his mother

When the tortoise came to know
Of the unexpected turn of events,
He hastened to console his mother
With words of hope and cheer.
'If it is true that the woman took a pledge
In the name of the Almighty
How can another marry
The girl fixed for me?
How dare he enter the bridal shamiana
With a garland in his hand?
Does he think I am puny and weak?
You can see our relative strength
When we meet face to face
And I succeed in solemnizing the marriage
With the girl earmarked for me.'

## The dialogue between mother and son

'Look dear mother,
You carry me to the shamiana

கட்டிச்சுருட் டியுந்தன் கையதனா லேயெடுத்து
[1]வட்டமணிப் பந்தலுக்குள் [2]வைத்துவிட்டு வாருமென்றான்.
அந்த மொழிகேட்டு அபிராம வல்லியவள்
சிந்தை மகிழ்ந்து சிரித்துக் [3]களிகூர்ந்து

பாவிமக னேநீ பந்தலுக்குள் போயிருந்தால்
ஆமையென்று வுன்னை [4]யடியாரோ வென்றுரைத்தாள்
மண்ணுல [5]கிலிங்கே [6]மனுவாக [7]வுள்ளவரில்
என்னை யடிப்பதற்கு இங்கொருவர் [8]காணாது

ஆமையார் [9]சொல்ல அதிசயமாய்த் தான்கேட்டு

## ஆமையர் கூற்றுப்படி மணப்பந்தலுக்குக் கொண்டு விடுதல்

தாமையாய் நல்ல தையலபி ராமவல்லி
இட்டமுட னென்றலையி னெழுத்தின் படியெனவே
கட்டிச் சுருட்டியவள் கையதனா லேயெடுத்து

[10]ஏழை மகனேநமக் [11]கிறைவன் விதியெனவே
பேழை போலே [12]ஏந்திப் பெற்றெடுத்த தாயாரும்
கண்டவர்க ளெல்லோரும் கைதட்டித் தான்சிரிக்க
கொண்டுவந்து வைத்தாளே கோலமணிப் பந்தலுக்குள்

## அவையோர் ஆமையரைக் கண்டு அதிசயித்தல்

பந்தலுக்குள் நின்றவர்கள் பார்ப்பார் கலியுகமாய்
கொந்துகொந்தாய் வந்துநின்று கூடி யவரவரே
இந்தக் கலியுகம்நா மெங்குகண்டோ மென்பாரும்
வந்து வளைந்தவர்கள் மாயமிது வென்பாரும்

488. களி — மகிழ்ச்சி. 498. பேழை — பெட்டி; கூடை.

பாடவேறுபாடு: 1. வட்டமணப் 2. வைத்துநீ 3. நகைபுரிந்து 4. அடிப்பாரே 5. கிலுள்ள 6. மனுதார் 7. உள்ளவர்கள் 8. இல்லைஎன்றார் 9. சொல்லை 10. என்மகனே 11. இறையோன் 12. எடுத்துப்.

Verily like a bundle'
When the son uttered these words
The mother couldn't help laughing in jest,
'Imp of a boy, won't they beat you
Calling you a despicable creature?'
'Know mother, that none in the world
Can hurt me or harm me.'
The son's brave words
Made the mother wonder — struck.

### The tortoise carried to the shamiana

The mother Apirāmavalli
Of pious and noble disposition,
Verily bundled up her tortoise — son
And carried him to the Shamiana
Surrendering herself fully to fate
And the will of God.
When she set the tortoise on the floor
Laughter of derision echoed from every nook.

### The Guests surprised at the sight of a tortoise

The guests in the shamiana
Attributed the presence of a tortoise
To the vagaries of *Kaliyuka*.
Among those who crowded round the tortoise
A few described it as phenomenon strange and eerie
While others let out cries of fear and panic.

## ஆமையர் அரசன் முன்பு வழக்காட அழைத்தல்

ஐயையோ வென்றுசொல்லி [1]அனைவருமே நிற்கையிலே
பைய [2]நகண்டவனும் பந்தலுக்குள் [3]ளிட்டிருந்த
வன்னப் பலகையின்மேல் வந்திருந்தங் [4]கேதுரைப்பான்
முன்னே யெனக்கு மொழிந்த[5]பெண்ணைச் [6]செய்யவந்தேன்

முறைமைப் படிக்கே கந்தன் முறைமாம னார்மகளைச்
சிறை[7]பிடிக்க வந்த[8]கள்வன் சீயென்றால் [9]தான்போவான்
[10]வாயுரமாய் நீங்கள் வலுவாக வேவளைந்து
ஆயிரம்பேர் வந்தாலும் ஆமையதற் [11]கஞ்சேன்காண்

அம்மானா [12]ரிங்கே யடைத்துக்கொண் டேயிருந்தால்
சும்மா வறிவாரோ [13]சூழுலகி லுள்ளவர்கள்
வந்துபல பேருமிந்த வையகத் தோருமறிய
பந்தலுக்குள் வந்து பகிர்ந்துமொழி [14]பேசாமல்

பேய்போல நீர்விழித்தால் பெண்ணைவிடேன் கண்டீரே
வாய்திறந்து நாமும் வழக்கான தை[15]யுரைக்க
அம்புவியை யாளும் அரசன றிவதற்குச்
செம்பியர்கோன் முன்பில் திருவாணை வாருமென்றான்.

## ஆமையர் கூற்றுப்படி இரணசூரன் அரசனைக் காணவருதல்

அந்தமொழி கூறியந்த ஆமையார் முன்னடக்க
எந்தன் விதியெனவே இரணசூர னானவனுமே
போகத் தொடங்கியிரு பேரும்புறம் போகையிலே
வாருடனே யங்கே வளைந்திருக்கும் பேர்களெல்லாம்

506 பைய — மெல்ல. 513. அம்மான் — தாய்மாமன். 519. அம்புவி — அழகிய உலகம். 520. திருவாணை — அரசாணை; அரசன் மேல் ஆணையிடுதல்

பாடவேறுபாடு: 1. அனைபேரும் 2. நடந்தவனும் 3. போட்டிருந்த 4. கேதுசொல்வான் 5. மொழி 6. தப்பாமல் 7. எடுக்க 8. கள்ளன் 9. போய்விடுவான் 10. வாயுதமாய் 11. கஞ்சுவேனோ 12. அங்கே 13. பூவுலகில் 14. சொல்லாமல் 15. உரைத்து.

## The call of the tortoise to place to dispute before the King

Moving inside the shamiana at slow pace
The tortoise — son settled himself on a wooden seat,
'Look, I have come to claim the girl
Who was promised to me in days of yore.
Even if a thousand strong surround me,
I shall not in the least get unnerved.
If my uncle, who is here, remains mute,
How can the world know the truth?
Even if uncle holds his tongue and stares like gnome
I shall not give up my claim for the girl.
Come, let us seek the presence of the king,
The so-called ruler of the Universe
And present our case in all solemnity.

## Iraṇacūraṉ seeking the King's presence

So saying the tortoise walked ahead
Followed by uncle Iraṇacūraṉ cursing his lot.
All the people assembled there

சேரத்திரண் டிவர்கள் செப்புவார் [1]வார்த்தைகளை
ஆரென்றா லாவதென்ன ஆசார மேபெரிது
உச்சித மாயிவர்க ளுண்மைசொல்லிக் கொண்டதெல்லாம்
முற்செய்தி நாமுமிந்த முன்னடைப்பைக் கேட்டதில்லை

ஒருவரா லிந்தவழக் [2]கொழியாது [3]யிங்குகண்டீர்
இருவருமாய்ச் சென்றங் கியல்சோழன் முன்பதிலே
போறவரை நாமும் புரிசாரஞ் செய்யரிது
வேறொரு வராலும் வில(க்)கினால் [4]நில்லாது

வம்பிலே நீங்கள் வழிதாய மாடாமல்
செம்பியர் [5]கோன்முன்பில் சென்றுகரை யேறுமென்றார்.
அந்தமொழி தன்னை யனைபேருஞ் செப்பியபின்
விந்தை பயிலுகின்ற வேந்தன் [6]சோழே சன்முன்பில்

மாமன் மருமகனும் மற்றுமுண் டானபேரும்
சீமானாக யிருக்கும் செம்பியர்கோன் முன்பில்வந்தார்.

## அரசன் வந்தவர்தம் குறைகேட்டல்

வந்தரசன் றன்னை வணங்கியிரு பேர்களுந்தான்
எந்தன் பிரானே [7]யென்றேத்தி [8]யடிதொழுதார்

பணிந்து தொழுதவர்கள் பாரரசனை நோக்கி
[9]அணிந்தங் கிருபேரும் [10]அறிவித்த [11]வேளையிலே
சேதியுட னிருக்கும் செம்பியர்கோ னப்போது
ஏதுபிள் ளாயுங்களிடை[12]யூற்றைச் சொல்லுமென்றார்.

526. ஆசாரம்—சாஸ்திர முறைப்படி ஒழுகை. 527. உச்சிதம்—மேன்மை. 531. புரிசாரம்—விண்ணப்பம்; வருந்தி வேண்டல். 533. மாடாமல்—அகப்படாமல். 534. கோன்—அரசன்; சோழன். 544. இடையூற்று—விக்கினம்; விசனம்.

பாடவேறுபாடு: 1. வார்த்தைதன்னை 2. ஒதுங்காது 3. இங்ஙெனவே 4. சொல்லாது 5. சோழன் 6. திரு 7. சங்கடத்தை 8. தீருமென்றான் 9. துணிந்தங் 10. துயரமதைத் 11. தானுரைத்தார் 12. இடைகூறு.

Began in earnest to voice their views.
'When all is said' observed they
'Character and morality should reign supreme.
Since we are ignorant of the antecedents of the dispute,
It is better we keep aloof
And leave the decision
To Cōḻēcaṉ, our resourceful king.'
Thus the uncle and the nephew
Accompanied by other men
Sought forthwith, an interview with the King.

## The King listens to the Complaint

When the two paid obeisance to the King
And addressed him as their refuge,
He ordered them to spell out
The nature of their sorrow.

## இரணசூரன் தன் வழக்குரைத்தல்

அந்தமொழி கேட்டு அவர்க ளிருபேரில்
முந்த ரணசூரன் முன்வழக்கைத் தானுரைத்தான்
மாத்துக் களைந்ததுவும் மாதவிடா யானதுவும்
ஆற்றில் முழுகி அகமகிழ்ந்து தங்களிலே

ஒருத்திக் கொருத்தி உறுதியுடன் [1]தங்களிலே
கருதி யுறவாடிக் கனபிரிய மாய்மகிழ்ந்து
என்மனைவி யாரிவனை யீன்றெடுத்த தாயோடே
[2]நன்னயமாய்ச் சொன்னாள் நலமா பொருவார்த்தை

[3]உனக்குவொரு வாண்மதலை [4]யுற்பவித்த [5]தானாக்கால்
எனக்குவொரு பெண்மதலை [6]யீசன்வகுப் [7]பாரானால்
நங்கையரே வுன்னாணை நாதன் [8]றிருவாணை
கெங்கையின் மேலாணை யிட்டுக்கிரு பையுடனேதான்

எந்தவகை யாகிலும்நா னீன்றெடுத்த [9]பெண்மகளை
உந்தன் மகனுக்கு மணம்செய்வே னு[10]றுதியுடன்
[11]என்றுதான் முன்னா ளிருபேருந் தங்களிலே
நன்றாகச் சொன்னமொழி நானறிந்த காரியந்தான்

[12]தாமுமொன்று சொன்னமொழி [13]தப்பாம லேநடத்த
ஆமைக்குப் பெண்ணுலகி லார்தான் கொடுப்பார்கள்

## ஆமையர் தன் வழக்குரைத்தல்

என்றமொ ழிகேட்டிருந் தவர்க ளெல்லோரும்
[14]நன்றுநன்று ஆமையுந்தன் நல்வழக்கைச் சொல்லுமென்றார்

அம்மானுட வழக்கும் அடியேனுட வழக்கும்
இம்மாத்தி ரந்தா னிவர்வழக்கு மென்வழக்கும்
கள்ள வழக்காகக் கபடுரைத்தா ரில்லையவர்
உள்ள வழக்கெல்லா மொழியாம லேயுரைத்தார்.

547. மாதவிடாய் — மகளிர் மாதப்பூப்பு. 553. உற்பவி — பிறப்பித்தல். 556. கெங்கை — நீர்.
567. கபடு — வஞ்சகம். 568. ஒழியாமல் — மறைக்காமல்.

பாடவேறுபாடு: 1. முந்நாளில் 2. நல்மணமாய்ச் 3. தனக்குமொரு 4. சந்ததியைப் 5. பெற்றெடுத்தால் 6. ஈன் றெடுத்தேன் 7. யாமாகில் 8. தன்னாணை 9. என்மகளை 10. என்று 11. என்று சொல்லி 12. தாகமாய்ச் 13. தவறாமலே 14. நன்றுபிள்ளாய்.

## Iraṇacūraṉ presents the case

On hearing the King's words,
Iraṇacūraṉ hastened to present the case.
He recounted the ceremonial bath of the two women
After the days of pollution
And the pledge that they took
To have a marriage alliance.
The pact was sealed
In the name of the Almighty
And the sacred waters of the river.
'Indeed it is a fact
That my wife and the mother of the plaintiff
Entered into such a pact,
But alas, who can keep the promise,
Who will offer a bride to a tortoise?'

## The point of view of the tortoise

Those who listened to the uncle's version
Wanted the tortoise to have its say.
The tortoise concurred with what the man had said
And maintained that there was no attempt
To distort facts or falsify truth.

## வழக்கைக் கேட்டு அவையோர் கூற்று

என்றமொழி கேட்டி ருந்தவர்க[1] ளிற்சிலபேர்
[2]நன்றாக வேகூடி [3]நடுவரு[4]ரைபகர்ந்தார்
ஓமென்று வார்த்தைவெகு வுண்மைசொன்னோ ரானாலும்
ஆமைக்குப் பெண்ணுலகி லார்கொடுப்பா ரென்பாரும்

ஏலவே சொன்னமொழி யிப்போது தப்பாமல்
மாலையிட் டாற்பெண்ணதுவும் வாழாதென் பார்சிலபேர்
ஆனாலும் பெண்ணதுவும் ஆமைக்கென் பார்சிலபேர்
[5]தானாகத் தன்வழக்கைத் தான்கெடுத்தா னென்பாரும்

கல்விழுந்து தானால் கையதனா லேயெடுப்பார்
சொல்விழுந்து தானாக்கால் [6]தூக்கியெடுப் [7]பாருமுண்டோ
வம்பாலே நாம்கூடி மாலையிடச் சொன்னாலும்
பெண்பாவம் வந்து பிழைசூழு மென்பாரும்

பெண்ணுக்கு நல்ல [8]பிரியமணஞ் [9]சூடுவது
இண்ணுவந்த மாப்பிள்ளைக்கோ யிவன்[10]றனக்கோ வென்பாரும்
எண்ணமுட னாமை யிவனையுந்தள் ளொண்ணாது
மண்ணுகந்த சோழன் வழக்கேதோ வென்பாரும்

573. ஏலவே — முன்னமே.

பாடவேறுபாடு: 1. எல்லோரும் 2. நன்றெனவே 3. நலமாய்ச் 4. சிலபேர்கள் 5. தன்னாலே 6. திரும்ப 7. எடுக்க லாமோ 8. பெருமைமணஞ் 9. சூட்டுதற்கு 10. ஆமையார்.

## The reaction of the Assemblage

Some of the spectators
Who were witnesses to the scene
Gathered in solemn conclave
And began passing judgment
Each according to his whim or fancy.
It is true that there was a pact
But is it possible to honour it
For, who will offer a girl to a tortoise?
Even if such a marriage materialises,
Eternal woe shall be the lot of the bride.
There were some who defended the pact
And spoke in favour of the tortoise.
Philosophic comments were also not wanting,
If one inadvertently drops a stone
One can stoop and pick it up.
But this is not true of words or promises.
If we force this marriage to materialise
We will be guilty of sinning against womanhood.
An honest doubt lingered in the minds of some
As to who should wed the girl
The tortoise or the new suitor.

[1]வாழுல கிலுள்ளவர்கள் வளைந்து [2]செருமிநின்று
ஆளுக்கொரு வார்த்தை அவரவர்கள் தான்பேச

## வழக்கைக் கேட்டு மன்னவன் தீர்ப்பு

அம்மான்சொல் லுண்மையென்று ஆமையுமெய் கொண்டதனால்
எம்மான ருளா லிவர்வழக்கைத் தான்கேட்டு

செம்பியச் சோழேசன் றிருவாக்கங் கேதுரைப்பான்
[3]முன்பின் வழக்குரைத்தான். மோசமொன்றில் லாமலவன்
பழுதில்லா மலுரைத்த பாக்கியவான் றன்மகளை
[4]வழுவில்லா தாமையற்கு மாலை[5]யிடு நீயெனவே

சொல்லவும்போ காதிவர்கள் [6]சூழும்விதி எங்களையோ
அல்லவென்றே யாமைஅவ னையுந்தள் ளொண்ணாது
சோழவள நாட்டிலொரு சொல்மாறப் போகாது
ஏழையதாக யிவர்க ளீசுவரனார் தன்மேலே

ஆணையிட்ட வார்த்தை அசைக்கவுமோ [7]கூடாது
நாணயமா யுங்களுக்கு நான்நடுவாய்ச் சொல்லுகிறேன்
இண்ணுவந்த மாப்பிள்ளையு மிவனாமை யார்தனையும்
[8]பண்ணுமணப் பந்தலுக்குள் பாரிலுள்ளோர் [9]தான்காண

இருபேரையு மிருத்தி எல்லோருங் காணுதற்கு
அரிவைய வள்கையதனி லழகுமா லைகொடுத்து
மாதுநல்லாள் தானெறியும் மாலைவிழும் [10]பேர்தனக்கு
[11]சேதமில் லாமல்மணஞ் செய்துகொடு மென்றுரைத்தார்.

---

585. செருமி — நெருங்கி. 587. அம்மான் — மாமன். 588. எம்மான் — எமது தெய்வம். வழக்கு — நியாயம் பேசுதல. 591. பழுது — பொய். 592. வழுவு — தவறு; குற்றம். 594. ஒண்ணாது — ஒவ்வாது. 602. அரிவை — பெண். 604. சேதம் — அழிவு; இடையூறு.

**சுவடிச்சொல்:** 590. முன்பில்.

**பாடவேறுபாடு:** 1. வாணுல 2. நிற்கையிலே 3. முன்பின் 4. மாயமுள்ள 5. மணஞ்செய் 6. சூழ்வினைகள் 7. போகாது 8. பொன்னுமணிப் 9. கண்காண 10. பேர்களுக்கு 11. மாறாமல்.

So spoke loosely and differently
The folk belonging to the work-a-day world.

## The King's Judgment

Since the plaintiff, the tortoise
Had emphatically stated
That the uncle had spoken the truth
And nothing but absolute truth,
Cōḻecaṉ, the King pronounced judgment
In the name of Almighty God.
There should be no going back on promises
In the Cōḻa country.
A pledge taken in the name of God
Has to be honoured to the very letter.
To overcome the embarrassing situation
Created by destiny.
Let the bridegroom of today
Along with the tortoise
Be brought to public view
And seated in the decorated shamiana.
Let a beautiful garland be given to the girl
To be thrown around,
Marry off the girl to the lucky person
Whose neck receives the garland.

## அவையோர் மணப்பந்தலுக்குள் வருதல்

**விருத்தம்**

6. செம்பிய னுரைத்த வார்த்தை சிறப்புடன் கேட்டெல் லோரும்
[1]வம்பல்ல அரசன் சொன்ன வழக்கிது நடுவா மென்ன
அம்புவி யாளு கின்ற அரசனைத் தொழுதெல் லோரும்
சம்புவி னருளா லாமை தன்க்குச் [2]செய்மணத் [3]துள்வந்தார்

## பூரணவல்லி சுயம்வர அரங்கு வருதல்

**நடை**

7. வந்து [4]மணப் பந்தலுக்குள் [5]வாகுபெற [6]எல்லோரும்
கொந்துலவு [7]மின்னார்கள் குவிந்திருக்கும் வேளையிலே
அன்னேரந் தன்னில் அரிவையர்கள் தான்கூடி
மின்னேரிடை மடவாள் மெலிபிறை போல்நுதலாள்

பூவுடையா ளீன்ற புரிகுழலைக் கூட்டிவந்து
காவணத்துக் குள்ளேயந்த கன்னியரைத் தானிறுத்தி
வையகத்தோர் காணவொரு மாலையவள் கைகொடுத்து
துய்யமணப் பந்தலுக்குள் சுற்றி யெறியுமென்றார்.

## பூரணவல்லியின் மாலை ஆமையரைத் தேர்வு செய்தல்

வாரணம்போற் பெற்றெடுத்த மாதாபி தா[8]கொடுக்க
பூரண வல்லியந்தப் பூமாலை யைவாங்கி
முக்கால் சுழற்றி முதலோன றனை[9]வணங்கி
எக்கால [10]முந்தான் எனக்குடைய வன்கழுத்தில்

[11]மாலயனே எந்தனுட மாலைவிழ வென்றெறிந்தாள்
[12]சாலவே [13]பெண்ணமுதந் தானெறிந்த மாலையது
வாமையுள்ள மாப்பிள்ளையும் மற்றுமுள்ள பேரிருக்க
ஆமையார் தன்கழுத்தி லன்பாய் விழுந்ததுவே.

---

605. செம்பியன் — சோழமன்னன். 608. சம்பு — சிவன். 609. வாகு — அழகு; ஒழுங்கு. 610. மின்னார் — பெண். 612. மடவாள் — பெண். 614. காவணம் — பந்தல். 617. வாரணம் — சங்கு; யானை. 619. முதலோன் — கடவுள்; சிவன். 620. மாலயன் — திருமால், பிரமன். 622. சாலவே — மிகவே.

பாடவேறுபாடு: 1. வம்பில்லா 2. செயம் 3. என்றாரே 4. சனங்கள் 5. மகிழ்ந்து 6. இருந்தனரே 7. மன்னன் 8. கையில் எடுத்து 9. தொழுது 10. மாலை 11. சாலயமாய் 12. பெண்ணவளுந்.

## The arrival of the spectators at the shamiana

6. Listening to the Sage words of the king
Who pronounced verdict in a jiffy
The men assembled paid obeisance to him
And felt that the mercy of Lord Siva
May help the tortoise to triumph.

## Pūraṇavalli enters the *Cuyamvara* Hall

7. All then came to the decorated shamiana
Where women had gathered in large numbers,
Some of them led the bride Pūraṇavalli
The daughter of Pūvāruṭaiyāḷ
With forehead like the waning moon
Gave her a garland sweet,
While all eyes watched
And asked her to whirl and throw it.

## The Tortoise gets chosen

The parents of Pūraṇavalli
Proud of their daughter, pure as conch
Gave her a garland
Which she whirled in the air
After offering a prayer
And seeking the aid of Tirumāl
To obtain for her
The right man with whom
She is destined to live for ever.
The garland fell round the tortoise
Though the bridegroom and others were also present.

## அவையோர் வியப்பும் விமர்சனமும்

மாலைவிழுந் ததற்பின் வந்திருந்த திற்சிலபேர்
கோல மழிந்த[1] நல்ல கூத்தைப்பா ரென்பாரும்
தேசத்தோ ரிங்குவந்து சீவகனைப் போலிருக்க
மாயத்தைப் பாராமை மாலையிட்டா னென்பாரும்

ஆமையல்ல வேயிவனும் ஆண்மையுள்ளா னென்பாரும்
தாமும்முன் னாளசொன்ன சபதம் பலித்துதென்பார்
குறுங்கழுத்தை நீட்டியிது கூட்டுக்குள் ளே[2]கிடக்கும்
வெறுங்கழுத்தில் மாலை விழுந்ததே யென்பாரும்

வந்திருந்த மாப்பிள்ளைக்கு மாலைமணஞ் சூட்டாமல்
அந்தமிலா தாமைக்குப்பெண் அகப்பட்ட தென்பாரும்
அப்படி யேசொல்வா ரதிலே சிலபேர்கள்
மெய்ப்பு[3]ரைக்க [4]வேண்டாம் விதிகார னென்பாரும்

ஆள்ப்பெருப்ப மாகவெகு ஆரவா ரத்துடனே
மாப்பிளை தன்னோடே முன்வந்திருந்த பேர்களெல்லாம்
வேகித்தெ ழுந்துசில வீணர்கையிற் கம்பெடுத்து
ஆகமுறு மாமைதனை யடிப்போமோ வென்பாரும்

பாதகர் பெண்ணைப் பறிப்போமோ வென்பாரும்
போதமுள்ள பேர்களது புத்தியல்ல வென்பாரும்
வாயில் கருவாடு வாட்டவந்த பேர்களுக்கு
தீயில்லை யென்றால் திரும்புவதே யல்லாமல்

---

634. அந்தம் — அழகு. 637. ஆரவாரம் — பேரொலி; கொண்டாட்டம். 639. வேகித்தெழுந்து — கோபித்தெழுந்து. 642. போதம் — அறிவு. 643. கருவாடு — காய்ந்த மீன்.

சுவடிச் சொல்: 637. ஆரபாரத்

பாடவேறுபாடு: 1. திந்த 2. இருக்கும் 3. பறையாதே 4. உங்கள்.

## The reaction of the assemblage

After the garland fell round the tortoise's neck
Some felt that festivity had turned into chaos,
Others pointed to the irony of a tortoise winning
When meritorious men like Cīvakaṉ were present.
A few paid tribute to the manliness of the tortoise
While others were happy that the pledge had been kept.
'What a pity, the garland fell round the neck of a creature
Which may anytime withdraw itself into its shell.
Instead of the chosen bridegroom
Alas, a dumb animal has won the prize.
There were some simple souls
Who blamed destiny for the happenings.

The bridegroom's men were roused to fury
Some contemplating assault with a stick;
While a few even suggested wresting the bride.
Some questioned the sobriety of the decision
Others preferring to quit the place.
'When we have come to cook fish
And are denied fire

குட்டி விஷம் [1]நடத்திக் கோள்விளைக்கும் [2]முன்நாமள்
பொட்டுக் குலையுமுன்னே போவோ[3]மெனப் போனார்
முன்வந்த மாப்பிளையும் மூடாவுக் காரிகளும்
சம்மந்த மாறியவர் தான்கடந்து [4]போனார்கள்.

## ஆமையர் பூரணவல்லியை மணம் முடித்தல்

[5]ஆமையா ரான அறிவுடைய மன்னனுக்கு
மாமன் மகள்தன்னை மணம்முடித்தா ரம்மானை.

## பூரணவல்லி புக்ககம் வருதல்

விருத்தம்

8. ஆமை யார்[6]மணம் [7]முடித்து அவனியி லுள்ளோர் மெய்க்க
தாமை யாய்மேள தாளஞ் சதுரங்கச் சேனை யோடே
[8]தீமை யொன்றில் லாவண்ணஞ் சிவனுட [9]வருளா [10]லந்த
பூவை யைக்கூட் டிக்[11]கொண்டு [12]புகழ்ந்துதன் மனையுள் வந்தான்.

## ஆமையர் புதுமனையாளைப் புறக்கணித்தல்

நடை

9. வந்து புகழாமை மணம்முடித்த பெண்ணுடனே
[13]சென்று [14]மகிழ்ந்து சிறந்துவிளை யாடாமல்
முன்னே யொருபூவை முகர்ந்த பிழைய[15]தனால்
மன்னுமு லகில்வந்து மாய்கிறோ மென்று[16]சொல்லி
தன்னை யறியப்பிறந்த தன்னறிவி னாலேயவன்
இன்னமிந்த பெண்பூவுக் கிச்சைகொள்ளொண் ணாதெனவே
வாமையுள்ள யீசரிவன் வாய்மையறி வோமெனவே
ஆமை[17]யருந் தன்னுடைய ஆண்மை செலுத்தாமல்

---

645. குட்டிவிஷம் — சிறுகேடு. கோள் — தீமை; இடையூறு. 646. பொட்டுக்குலையும் — மதிப்பிழத்தல். 647. மூடா — மிக்க அறிவீனம். 648. சம்மந்தம் — சம்பந்தம். 651. அவனி — பூமி. 654. பூவை — பெண். 660. இச்சை — ஆசை; விருப்பம்.

**கவடிச்சொல்;** 648. சம்மந்த 651. முகித்து 655. முகித்த 664. காற்கவே.

**பாடவேறுபாடு:** 1. பண்ணி 2. எல்லோரும் 3. என்பாரும் 4. போனதற்பின் 5. நாகமுனி புதல்வன் நல்லாமையார்தனக்கு 6. மணமுஞ் 7. செய்து 8. தின்மை 9. அருளி 10. னாலே 11. வந்து 12. புகுந்தவன் 13. சேர்ந்து 14. மருவி 15. செய்ந்தனால் 16. எண்ணி 17. உருவல்லாமல்.

What use is there in tarrying and lingering?
Before more mischief is let loose
And we suffer total humiliation,
It would be prudent to depart'
Opined the worldly-wise.
And so the bridegroom led the receding party
Followed by kinsmen near and dear.

## The tortoise weds Pūraṇavalli

So goes the tale
The wise man in the form of a tortoise
Was happily married to Pūraṇavalli.

## Pūraṇavalli goes to her husband's house

8. To the surprise of everyone
The tortoise married Pūraṇavalli
And to the accompaniment of music
Returned to his house,
Followed by the four units of the army.

## The indifference of the tortoise to his wife

9. Instead of enjoying himself
With his newly acquired wife
The tortoise shunned the bridal bed
And roamed about restlessly in the stree
Wallowing in dirt and filth.
Seldom did he look at her
Nor indulge in any love play
For, in the past he had suffered
At the hands of Lord Siva
For smelling a flower lovingly
Which mistake he dreaded to repeat.

நற்புடைய பெண்ணிவளை நல்லசிவ னாரறிய
கற்புடையா ளாகவைத்து காக்கவே வேணுமென்று

பெண்ணோ டிருந்து [1]பிரபலமாய் வாழாமல்
மண்ணோ [2]டவனும்வலு வட்டவுலா மடிபோல்
தூங்குமஞ் சந்தன்னில் துவண்டுறக்கங் கொள்ளாமல்
[3]பாங்கினுடனே [4]தெருவில் படபடென வேதிரிவான்

கைப்பிடித்துப் பெண்ணைக் கருதிமுகம் பாராமல்
[5]குப்பைக் குழியுடனே குண்டுகளும் மேடுகளும்
எங்குந் திரிவான் இவளைமுகம் பார்க்கறியான்

## பூரணவல்லியின் மனக்கலக்கமும் ஆமையரின் மனவடக்கமும்

மங்கைமுகம் வாடியவள் வாய்திறக்க மாட்டாமல்

வாமையுடன் நம்மைமறு மாப்பிள்ளைக்குச் செய்யாமல்
ஆமையற்கு நம்மை அயன்விதித்தா னென்றுசொல்லி
எல்லா மவள்தன் னிருதயத்தி லேயடக்கி
நல்ல வண்ணமாக நடந்துவரும் நாளையிலே

சருவி விளையாடான் சன்னைசொல்ல வுமறியான்
மருவி யவளோடே மதனகலை செய்தறியான்
தொட்டுப் பிடித்தெடுத்து தூங்குமஞ்ச மானதிலே
வட்ட மலரணைமேல் வைத்தாளே [6]யானாலும்

தவறிவிழுந் தவனும் தரைதனிலே தானூர்ந்து
[7]பதறி யிருப்பான் பகிர்ந்துமொழி பேசறியான்

## மைந்தனின் நிலைகண்டு அபிராமவல்லி கடிதல்

ஆமையும் பெண்ணும் அவர்கள் [8]நடக்கிறதை
வாமை யபிராம வல்லியவள் தானறிந்து

---

666. வலு — சாமார்த்தியம். வட்டவுலா மடி — வளைந்து இயங்கி சுருங்குதல், 667. தூங்குமஞ்சு — ஆடும்கட்டில். 674. அயன் — பிரமன். 677. சருவி — கொஞ்சிக் குலாவி. சன்னை — குறிப்பு; பரிகாச வார்த்தை. 678. மருவி — தழுவி; பொருந்தி. மதனக்கலை — காமசாத்திரம்.

**கவடிச்சொல்:** 679. தூக்கு மஞ்சி 681. தறைதணிலே.

**பாடவேறுபாடு:** 1. பொருந்தியிவன் 2. தான்திரிந்து 3. பருங்செடிகள் 4. தோறும் 5. பப்புடையுங் குப்பைக்குழியும் புழக்கடையும் 6. யாமாகில் 7. பதிய 8. நடக்கும்பாடும்.

He wanted the Lord to know
That he had not deflowered the girl
But kept her pure and unsullied
And hence deliberately abstained
From the manly duties of a devoted husband.

## The Sorrow of Pūraṇavalli
## and
## The swtrength of will of the tortoise

Pūraṇavalli suffered in silence
Regretting deeply that the creator
Had made her wed a tortoise
Instead of the bridegroom chosen.
The tortoise failed to make any love play
Did not utter endearing words
Or indulge in pleasant teasing.
Even when she hugged him tight
Refused to get excited.
When lifted tenderly
And placed on the bed
Bedecked with fragrant flowers
Toppled on the floor and crawled with unease
No strong feelings of happiness and thrill
Except sign of mad panic.

## Apirāmavalli frowns on her son's coldness

When Apirāmavalli observed
The coldness between the couple

ஏங்கிப் பெருமூச் [1]செறிந்தழுது [2]என்சொலுவாள்
ஓங்கிலைப் போலே உயர்கடலில் வாழாமல்
சந்தங் கெடுப்பதற்கு சந்ததியாய் [3]வந்தாயே
எந்தனுக்கு முன்னே இறையோன் விதித்தானே

ஊழிவிதி யோவெனக்கு உன்னோட மற்பிடிக்க
கோழிதனைப் போலே குப்பை [4]கிண்டியே புரளும்
ஆமையால் நானும் அலைமலர்ந்து நிற்கிறேனே
வாமையுள்ள பெண்ணினுட மாபாவம் [5]பெற்றேனே

அம்மான் மகளெனவே ஆணை[6]சொல்லி மாலையிட்டு
சும்மா யிராமலொரு தோஷத்தை ஏற்றேனே
[7]பண்பழிய வென்னை பலபேரு மேசுதற்குப்
பெண்பழியைக் கொண்டு பெரும்பாவ மேறேறேனே

அல்லல் [8]பட்டுன்னா லழிந்துநான் வாடுகிறேன்
சில்லப் படுத்தாமல் [9]செத்துநீ போகாயோ
எல்லாரைப் போலே யிருக்கயித மில்லாட்டால்
பொல்லாத வாணாளைப் போக்கிவிட மாட்டோயோ

பெற்றுவளர்த் துன்னாலென் பெருமை [10]குறைந்தேனே
எத்தனை பேரோ இறந்தா [11]ருலகத்திலே
உற்றார் களெந்தன் உறன்முறையா ரேசாமல்
செத்து விடாயோ [12]திரைகடலில் சாடாயோ.

---

686. ஓங்கில் — மீன். 687. சந்தம் — குணம்; அழகு. சந்ததி — பிள்ளை; மகன். 697. அல்லல் — துன்பம். 698. சில்லம் — அவதி. 699. இதம் — இன்பம்; நன்மை. 700. வாணாள் — வாழ்நாள்; சீவிய காலம்: 704. சாடாயோ — சேராயோ; போகாயோ.

பாடவேறுபாடு: 1. செறிந்தவளும் 2. ஏதுசொல்வாள் 3. வந்துதித்தாய் 4. தனிலே 5. ஏற்றேனே 6. இட்டு 7. பண்டே 8. பட்டுன்னாமல் 9. செத்திறந்து 10. குலைந்தேனே 11. வையகத்தில் 12. சமுத் திரத்தில்.

Grief struck her and she spoke:
Like fish leading a happy life
In the waters of the ocean
I expected you to live in harmony.
But alas, you are born
With the avowed aim of disturbing me.
I blame my fate
Which has willed that I battle with you.
I really become sick of life
When my tortoise son probes dirt
And wallows in it like hen.
Alas, I have sinned against
A girl pure and simple.
Foolish it was to have established my right
And claimed her as uncle's daughter.
I have verily ruined her life
And become a laughing stock,
A vile sinner in the eyes of the world.
I wish you end your life
Without causing me any more strife.
If you cannot lead a normal life,
It is better to give up the ghost.
By giving birth to you,
My reputation has suffered deeply.
So many are dying in this world
Why don't you follow suit
Or get lost in the sea?

## மகனின் மறுப்பும் மாதாவின் தவிப்பும்

வேகித்துத் தாயார் வெடுவெடெனச் சொன்னதெல்லாம்
கோபித்துக் கொண்டந்த கூனாமை ஏதுசொல்வான்
நன்றுநன்று நீயுரைத்தாய் நானுரைக்க வேகேளு
மண்டலத்தை யாளுகின்ற வாளரசன் றன்மகளை

[1]எனக்கு [2]மனையாளாய் இவள்க்குத் துணையாக
உனக்கு மருமகளாய் உடன்முடித்து வந்தொழிய
வாழேனி வளுடனே மாதாவே என்றுரைத்தான்.
கோளான வார்த்தையந்த கூனாமை சொன்னவுடன்

பொல்லாத வனேயிந்தப் பிழைவார்த்தை நீயுரைத்தாய்
நல்லரசன் கேட்டாலுன் நாககையறுப் பாரேயென்றாள்.

## நகர் சோதனைக்கு வந்த மன்னன் ஆமையரின் உள்ளம் அறிதல்

அந்தமொழி களெல்லாம் அந்நகரை யாள்[3]வேந்தன்
வந்துநகர் சோதனைக்கு மற்றொருவா காணாமல

[4]ஒண்டிப் பதுங்கி யொளித்துநின்று தான்கேட்டு
தொண்டியறி யக்கதவில் சுண்ணாம்புக் குறியுமிட்டு
அர்த்த [5]ராவானதிலே அரசன்பதி தனிற்போய்
நித்திரை கூடி[6]விழித்தார் நேரம் விடிந்ததுவே.

## வேந்தன் ஆமையரை அழைத்து வர ஆணையிடுதல்

**விருத்தம்**

10. விடிந்த பின்னெழுந் திருந்து வேந்தனு மமைச்ச ரோடே
கடிந்துடன் [7]கொலுவில் வந்து காவல னேது சொல்வான்
[8]படிந்தெமைச் சூழ்ந்து நிற்கும் பரிகலத் தோரே [9]கேளீர்
நடந்துசென் றாண்ம யாரை நம்முன்னே வருத்து மென்றார்.

---

712. கோளான — தீமையான. 717: ஒண்டி — தனிமை. 718. தொண்டி — களவுபோன பொருள். குறி — அடையாளம். 722. கொலு — அரசமண்டபம்.

**கவடிச்சொல்:** 710. முகித்து 715. அன்னகரை 717. யொழித்துநின்று.

**பாடவேறுபாடு:** 1. இன்னம் ஒரு 2. பெண்ணவ்வளை 3. மன்னர் 4. ஒன்றிப் 5. ராசாமம் 6. முழித்தார் 7. மந்திரி மாரோடே 8. படிந்தென்னைச் 9. நீங்கள்

### The Son explains his stand to the sorrowing mother

When the mother catalogued her woes
The angry tortoise replied as follows:
Well, Well, since you have spoken out
Permit me to explain my stand.
Till I wed the sword-weildings king's daughter
Till I make her your daughter-in-law
And boon companion to my wife
I shall desist from connubial felicity.
When the tortoise spoke these wicked words,
The mother burst out;
If only the King hears your words,
He shall forthwith cut your tongue.

### The King sensing the thought of the Tortoise

The king ruling the country
Overheard the words of the tortoise
During his personal round of town
When he stealthily moved about
To avoid recognition.
He put a chalk mark on the door
To help identification
Returned to the palace at dead of night
Retired to rest and sleep
And when he woke up, lo, it was morn!

### The King summoning the tortoise

10 When the king woke up at dawn
He rushed to the assembly
In the company of his minister
And addressed the retinue
That stood around him:
Off you go at once on foot
And fetch the tortoise forthwith.

## ஆமையர் வருகையும் மன்னன் விசாரணையும்

நடை

11. என்றரசன் சொல்ல இருந்தோர் [1]சிலரோடி
சென்றுவளைந் தாமையரைச் சீக்கிரத்தி லேகூட்டி
வந்தார்க ளப்போது வாளரசன் முன்பதிலே
கொந்தார் [2]புகழ்வேந்தர் கோமானை ஆமையரும்

வந்து தொழுதவரும் வாழ்பெரிய மன்னவரை
[3]எந்தன் பிரானே எமையழைத்த [4]காரியமேன்
கேட்ட [5]பொழுதில்வெகு கிருபையுடனே [6]சோழன்
[7]நாட்டை [8]யரசாளும் நல்லரச னேதுரைப்பான்.

இன்னிலத்தி லுள்ளவர்க ளெல்லோருந் தாமறிய
உன்னையழைத் தேன்நான் உண்மையொன்று கேட்பதற்கு
அழைத்ததே யல்லாமல் அட்டாதுட்டி [9]யொன்றுமில்லை
பிழைத்து [10]நடந்தெனக்குப் பிழைவேறு [11]செய்யவில்லை

இல்லைவே [12]றொன்றும்நீ இன்றிரவு சாமத்திலே
சொல்லொன்றுன் வாயதனால் சொன்னதுண்டோ வென்றுரைத்தார்.
[13]நேயமுட னுலகாள் நிருபனே யென்கோவே
வாயிருந்தால் யாருமொரு வாக்குரைக்க மாட்டாரோ

உரையாத வார்த்தை யுரைத்ததினா லேயழைத்தோம்
[14]அரசருட மக்களிலே யாரைமணஞ் செய்வையென்றார்.

## மன்னர் வினாவிற்கு ஆமையார் மறுமொழி

அந்தமொழி வேந்தன் அறிவுரைத்த [15]நேரமதில்
சிந்தைதனி லாமை [16]தெரிந்துநினை வாக[17]வெண்ணி
உன்னி மனதிலது உள்ளதென்று தான்பயந்து
மன்னவனே நானுமிந்த வார்த்தைஎந்தன் வாக்கதனால்
பன்னுதமிழ்க் காவலனே பரமார்த்த மாயடியேன்
சொன்னதல் லாமல்வேறு சூதா யுரைக்கவில்லை

---

735. அட்டாதுட்டி — அதிக துட்டத்தனம். 739. நிருபன் — அரசன். கோ — அரசன். 740. வாக்கு — சொல். 745. உன்னி — எண்ணி; நினைத்து. 747. பரமார்த்தம் — உண்மை.

சுவடிச்சொல்: 729. வாள்பெரிய.

பாடவேறுபாடு: 1. பலர்கூடி 2. குழலரசன் 3. என்தம்புரானே 4. காரியந்தான் 5. உடனேநல்ல 6. உலகை 7. சூட்ட 8. முடனாளும் 9. ஏதும் இல்லை 10. நடந்தவரை நமக்கு 11. செய்வதில்லை 12. என்றாலும் நீ 13. தேசம்அதையாளும் திசைபெரிய மன்னவனே 14. அரசாளும் 15. வேளையிலே 16. சிறந்து 17. உன்னி.

## The king interrogates the tortoise

11. Thus when the king spoke out
A few people hurried
And brought the tortoise to his presence.
After paying respects to the king
The tortoise wanted to know
Why at all he was hastily summoned
To which the kind king replied
'I called you to this open assembly
To elicit from you a truth.
Mistake not that it has anything to do with mischief
You are not guilty of any serious lapse.
But tell me whether in the early morn
You uttered those words.'
To which the tortoise replied
That speech is inevitable
When there is an organ for it.
The King now became specific
And asked him face to face
Whether he contemplated wedding
The King's daughter.

## The reply of the tortoise

When the king posed the question
The tortoise replied:
Protector of Tamil, I do admit
To have spoken those words,
Nothing else sinister or wicked.

கள்ளமில்லா மலவன் காசினியோர் தாமறிய
உள்ளது தானிந்த ஒரு[1]விசயஞ் சொன்னதென்றார்
உண்மையுடன் சொல்லி உலகாளும் வேந்தனுடன்
வண்மையுடனே [2]யவனும் [3]வார்த்தையொன்று தானுரைப்பான்

மெய்சொல்ல வேணும் விதிவந்து சூழ்ந்தாலும்
பொய்சொல்லி [4]யெங்கே [5]பிழைக்கலா மென்றுரைத்தான்.

## ஆமையரின் மறுமொழிகேட்டு மன்னன் மேலும் கூறுதல்

ஆமையார் சொல்ல அரசனுமங் கேதுரைப்பான்
வாமையுள்ளான் காணுமிவன் வையகத்தி லேபெரியோன்

தாமரை பொன்முத்து [6]சவரங்கோ ரோசனைபால்
[7]பூமரி [8]தேன்பட்டு புனுகுசவ் வாதனலும்
எங்கே பிறந்து யிருந்தாலுந் [9]தங்களுட
அங்கங் குறையாது அப்படிப் போல்யிவனும்

பேதக மாயிந்தப் பிறவித்துய ரானதுதான்
ஏதோ தெரியாது என்றுமன 'தில்லடக்கி
வல்லபுக ழாகவந்த மன்னவனு மேதுசொல்வான்.
நல்லதுதான் தம்பியொன்று நானுரைக்கி றேன்கேளு

749. காசினி — பூமி. 761. பேதகம் — பேதம்; வேற்றுமை.

சுவடிச்சொல்: 750. ஒரு விசுளஞ்

பாடவேறுபாடு! 1. விசேஷஞ் 2. மன்னவனும் 3. மன்னவனோடே 4. என்னை 5. புகழலாமே 6. சபரதங் 7. பூமாரி 8. தன்பட்டு 9 தன்னுடைய.

Veracity is very important,
Even when fate is unkind and adverse.
Who can hope to survive with dignity
After speaking untrue words?

### The King speaks again

The honest talk of the tortoise
Pleased the King so much
That he described him as great.
After all, birth and origin do not count
As in the case of lotus, pearl, cowbezoar
Honey, silk, civet and fire,
For, they never lose their intrinsic worth.
This is true of the tortoise as well,
Whose birth in this form may be pathetic and bizarre,
But since he is the repository of sterling merits
Deserves our respect and regard.

[1]தூய்மையா யுரைத்த தூஷணங்கள் நான்பொறுத்தேன்
தீமையா யுன்னையொரு தீங்குசெய்யவும் வேண்டாம்
ஆறென்றா [2]லென்ன அயனெழுத்தே யுண்டாகில்
வாராதோ [3]யோகம் வரிசைகளும் பொக்கிஷமும்

வீறாக முன்னாளில் [4]வீரமாற னொருவன்
நூறுமயி லாளை நொடிக்குமுன்கொண் டானிலையோ
பொற்கொடியா ளானதொரு பூவையரை முன்னாளில்
செக்கடி முண்டனுக்குச் செய்துகொடுத் தாரிலையோ

அப்படி நீயுமொரு வாண்பிள்ளை தானல்லவோ
எப்படியுஞ் சிங்கமதற் கில்லைகாண் பங்கமென்றார்
பொன்போல் பயின்றெடுத்துப் பூண்டறைக்குள் ளேயிருத்தி
[5]நண்பாகவே வளர்த்த நல்மகளை யுந்தனுக்கு
மாலையிட்டு நல்ல மணம்முடித்து நான்றருவேன்.

## ஈனன்-பேச்சி இவர்களின் வரலாறு கூறுதல்

வேலையிட்ட நல்ல மினுமினுத்தான் பட்டணத்தில்
தானாக வந்த [6]தடமான சீமையிலே
ஈனகிரி [7]யென்றுமங்கே யிருக்குமொரு மலைதான்

நன்றாக வம்மலைமேல் நாட்டமுட னேயிருபேர்
என்றுமிருப் பார்கள் ஈனன்யீ னாப்பேச்சி
பேச்சியுடனே யீனாப் பேயனுமச் சீமையிலே
[8]சேர்ச்சையுட னேபிறந்து செத்தபி ணங்கள்தனை

---

765. தூஷணம் — குற்றம்; நிந்தனை. 771. பூவையர் — பெண். 775. பூண்டறை,— பூட்டிய அறை. 784. சேர்ச்சை — சேர்க்கை.

பாடவேறுபாடு: 1. சோர்வையதாய் 2. ஆவதென்ன. 3. போமோ 4. வீரகுமாரன் 5. நன்றாகவே 6. தாடாளன் 7. என்னும் 8. சேட்ட முடன்பிணங் கள்தன்னை.

குறிப்பு: 699-772. வீரகுமாரன் ஒருவன் நூறு பெண்களை மணந்த செய்தியும், புரூருவன் சரிதை மற்றும் புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை என்ற நூல்களில் வரும் செக்கடி முண்டன் ஒருவன் அழகிய பெண்ணை மணந்த செய்தியும் இங்கு கூறப்படுகின்றன.

Look, I do not resent your remarks
Nor shall I do you any harm.
If only it is ordained by the creator
That one should attain to luck and prosperity
It is bound to happen.
Did not a brave youth of the māṟaṉ tribe
Marry a hundred girls in a jiffy
Are you not aware that a creeper-like damsel
Was given in marriage to an uncouth oilmonger?
Are you not also equally manly?
Lions seldom suffer any setback.
I shall certainly offer my daughter
Whom I have nursed with unusual care
To you in marriage.

## The Story of Īṉaṉ and Pēcci

In the city of Miṉumiṉuttāṉ
There was a hill called Iṉakiṟi
Where eternally lived a couple
Called Īṉaṉ and Iṉāppēcci
Who made a feast of corpses

பிச்சிப் பிடுங்கிப் பிணங்கள் தனைப்[1]புசித்து
அச்சித் திருபேரும் அம்மலையி லேயிருப்பார்
செவ்வாகக் கேளுமந்த [2]தேசமதன் [3]செய்கைதனை
[4]அவ்வாறாய்ச் சீமைதனி லாரொருவர் மாண்டாலும்

குட்டிக்குழந்தை பெரியோர் கூண்டிறந்து [5]போனவுடன்
கொட்டி முழக்கியவர் கூடிமிக [6]வேகரைந்து
குளிப்பாட்டித் தங்கள் குலமுறையெல் லாம்[7]நடத்தி
[8]இளைப்பாகவே பாடை எடுத்துயிடு காட்டில்வந்து

பேச்சியுடன் பேயன்வந்து பிணந்தின்று போமளவும்
[9]ஓச்சப்பரண் போட்டு உயர்பாடை மேலேவைத்து
ஓரிரவு மட்டும் உடனே யடக்காமல்
பாரவர்கள் தங்கள் பதிதனிலே போய்விடுவார்.
எல்லோரும் [10]போனால் இருகூறு சாமமதில்
[11]வல்லபிழை சங்கிலியும் வலுசாவு சங்கிலியும்
கைதனிலே கொண்டவர்கள் கருங்கழுகு போற்பறந்து
மையிருளில் பாடையின்மேல் வைத்தபிணத்தில் விழுவார்

விழுந்தால வர்கள்செய்யும் வீறான கைக்கேளு
இழந்துஉயிர் போய்க்கிடக்கும் இறந்த [12]சடந்தனிலே
பேயனுட கையதனால் பிழைசங்கி(லி)யை வைத்தால்
[13]ஒய்வினுடனே யிறந்த உயிர்தான் பிழைத்திளகும்

---

792. பாடை—பிணக்கட்டில். 792. இடுகாடு—பிணம் புதைக்கும் இடம்; சுடுகாடு. 794. ஓச்சப் பரண்—உயர்ந்த மேற்றட்டு. 795. அடக்காமல்—புதைக்காமல். 796. பதி—இடம்; ஊர். 801. வீறான—செயல்களான. 802. சடம்—உடல்.

கவடிச்சொல்: 794. ஓச்சப்பறண்.

பாடவேறுபாடு: 1. பொசித்து 2. சீமையில் 3. செய்திதன்னை. 4. அவ்வரசர் 5. போனாலும் 6. திரண்டு 7. முடித்து 8. ஏழை 9. உயர்ந்த 10. போனதின்பின் 11. வல்லபுகழ் 12. பிணந் தனிலே 13. ஓசையுடனே.

After tearing them wildly
Much to the dread of others.
Whoever died in the neighbourhood
Adult, child or infant
Was given a ceremonial bath
After a bout of crying and mourning
And following the completion of the rites
Was carried to the burial ground
To the accompaniment of drums.
There it was placed on a high pedestal
And allowed to rest overnight.
The burial seldom took place
Before Pēyan and Pēcci ate
Chunks of the corpse
To their hearts delight.
It was at dead of night
That the horrendous couple
Carrying the chain of life and the chain of death
Descended on the dead body
Like wild Vultures.
Let me enumerate in detail
Their eerie, repulsive acts.
Pēyan would place on the corpse
The so-called chain of life
And lo and behold, it would get revived.

முழித்த[1]பிரா ணத்துடனே முன்னடந்த செய்தியெல்லாம்
நளித்தங் கிருபேரும் நன்மையுட னேகேட்பார்
நன்மையுடனே யிறந்தால் நற்சடமென் றேபுசிப்பார்
தின்மை[2]மொழிந் ததுண்டால் தீண்டா ரிருபேரும்

[3]இறந்தமொழி [4]கேட்டு எழுப்பின தற்குபிறகு
மறுத்தெடுத்துப் பேச்சி வலுச்சாவு சங்கிலியை
செடமதிலே வைத்த[5]வுடன் சீவனது [6]வாங்கிவிடும்
உடனதன்மே லேயவர்கள் உயர்வரையி லேபோவார்

பேச்சிவரும் முன்னே பிணஞ்சுடுவா ராமாயின்
[7]தாழ்ச்சி பண்ணியவ்வூர்ச் சனங்களையும் கொன்றுவிடும்
வீடுகளைப் பிச்செறியும் விளையாடி யேதிரியும்
மாடாடு நல்ல மனிதரையுங் கொன்றுவிடும்

[8]சில்லங்கள் செய்யுமென்று தேசத்தி லுள்ளவர்கள்
அல்லல்செய் யாமலவரி லார்தான் மடிந்தாலும்
முன்னவர்கள் வந்து முகர்ந்துபிணந் தின்னுமட்டும்
இன்னமொரு நாள்மட் டெடுத்துயிடு காட்டில்வைத்து

இருக்குமொரு ராவுக் [9]கெரியி லடக்காமல்
மருக்குமறு நாளவர்கள் வந்தடக்கு வார்பிணத்தை
இப்படியே தானுமந்த யீனனீ னாப்பேச்சி
அப்படியே சோலிசெய் தவர்களிருப் பார்மலையில்

---

817. சில்லம் — துன்பம். 818. அல்லல் — துன்பம். 821. எரி — நெருப்பு; தீ. 824. சோலி — காரியம்.

பாடவேறுபாடு: 1. பிணத்தோடே 2. மொழியுரைத்தால் 3. இந்தவகை 4. கேட்க 5. துண்டால் 6. போய்விடும் 7. சட்டை 8. சில்லறைகள் 9. எருவில்.

Thereafter it would venture to recount its life
Packed with deeds good and bad.
If the deceased had done meritorious acts
The couple would eat him with contentment.
On the otherhand if the dead person
Had accumulated sin
By shady and nefarious deeds
The chain of death would be placed on him
And he would once again shed his mortal coil.
The wicked couple would then ascend
The impossible dizzy heights.
If inadvertently any corpse was burnt
Ere Pēcci's arrival
She would wreak bloody vengeance on the people
Kill them in cold blood
Destory their homes, livestock and what not.
Lest the sinister couple should
Perpetrate atrocious acts
The public at large used to prudently defer
Burials and cremations.
Helpless as they were
They used to give enough time for the cannibal twain
To relish and enjoy the corpses.

இருக்கு [1]மிவர்க ளிருபேர்கள் [2]தன்வசத்தில்
[3]வரிசையுடன் [4]சேவலொன்று வருஷமொரு நாளையிலே
[5]நீண்ட வுலகிலுள்ள நிலைமைகளைத் தானறிந்து
ஆண்டு திகைந்தா லரியசே வல்கூவும்

கூவுமந்த சேவல் குரலோசை [6]கேட்டதற்பின்
[7]நாவில் நவமணியும் ரத்தினங் களுள்ளதெல்லாம்
முத்து மணிகள் முதுபவளங் கள்சொரியும்

## ஆமையார் முப்பொருளைக் கொண்டு வந்தால் மன்னன் தன் மகளைத் தருவதாகக் கூறுதல்

பத்திரமாய் நீயுமந்த பவளவரிச் [8]சேவலையும்

உயிர் பிழைக்குஞ் சங்கிலியும் உடன்சாவு சங்கிலியும்
வயிரமுட னிந்த வகையானது மூன்று
சென்றுநீ தான்வாங்கி சீக்கிரத்தி லேகடிதாய்
கொண்டுயிங்கே வந்தால் குவலயத்தோர் தாமறிய

எந்தனிரு கண்மணிபோ லீன்றெடுத்த [9]பொன்மகளை
உந்தனுக்கு நல்லமணம் உடனேமுடிப் பேனென்றார்
தருவேன் மணம்முடித்து சம்மந்த மாலைதன்னை
ஒருவருக்குச் சொன்னா லுரைத்தமொழி[10]மாறேன்.

## ஆமையார் ஒப்புதலும் பயண வழிமுறை கேட்டலும்

என்றரசன் சொல்ல இயலாமை [11]ஏதுமொல்வான்
நன்றரசே யிப்போது நல்லமொழி தானுரைத்தீர்
ஆர்க்கு மொருவருக்கு ஆசைமொழி தானுரைத்து
வாக்குமா றும்[12]பேர்கள் வாழ்விழந்து [13]போவாரே

---

835. கடிதாய் — விரைவாக. 836. குவலயம் — பூமி; உலகம்.

கவடிச்சொல்: 838. முகிப்பேனென்றார் 839. முகித்து. 844. வாழ்விளந்து.

பாடவேறுபாடு: 1. அவர்கள் 2. வையகத்தில் 3. வரிக்குயிலுங் 4. கூவும் 5. நீணிலத்தில் 6. இட்டதுண்டால் 7. வாயில் 8. சாவலையும் 9. என்மகளை 10. மறகேன் 11. உரைக்கும் 12. பவுசி 13. போகாதோ.

Pēyaṉ and Pēcci had an enchanted cock
That would crow once in a year
Shedding pearls, rubies and other precious stones.

### The King strikes a bargain

The King said:
If only you fetch the magic cock,
The chain of life and the chain of instant death,
I shall solemnize your marriage in public
With my daughter Cammantamālai
Dear to me like my two eyes,
And be assured that I shall not
Break the promise given.

### The tortoise wants to know the location of the Enchanted city

When the King spoke so
Would the tortoise say no?
'Well spoken indeed, I commend your words,
But those who go back on promises sweet
Shall face ruin and downfall.

கோர்சிகர்க்கு யாகம் [1]குறையவே [2]பொன்கொடுத்து
ஆசிகமா [3]யயோத்தி [4]யாண்டஅரிச் சந்திரனும்
தாறோமென்ற வார்த்தை தவறா திருந்ததனால்
பேறுபெற்ற நல்ல பெரியோர்க [15]ளாகலையோ

கூறினீ ரிந்தமொழி கொற்றவனே யிப்போது
[6]மாறிநீர் [7]சொன்னால் வழக்கால் விடுவேனோ
அந்த வலுக்களெல்லா மாமையுடன் செல்லாது
விந்தை பயிலும் மினுமினுத்தான் பட்டணத்தில்
பண்டுபோய் நானுமந்த பாதையறியே னேயென்றார்.

## மன்னன் துணை தருவதாகக் கூறுதலும் ஆமையர் மறுத்தலும்

ஒன்றுக்கு மஞ்சாதே வுனக்குத் துணைவிடுவேன்
அந்தவுரை கேட்டவுட னாமைமன்ன னேதுரைப்பான்
எந்தனுக்கு நீங்கள்துணை [8]ஏவிடவும் வேண்டாங்காண்

ஒருவர்க் கொருவ ருடனே துணைவருகில்
கரும முத[9]வாதுசென்ற காரியமுங் [10]கெட்டாது
சேதியுடன் பொய்க்கருமம் சென்றுகட்டி யிங்குவந்தால்
பாதிப்பங்கு கேட்பான் பகைவருமே யன்னேரம்

வேடமது [11]போட்டு வெகுதூரம் போனாலும்
கூடத்துணை யெனவும் கூட்டவுமே [12]வொட்டாது
பிறக்கும் போதுள்ள பெருந்துணையே யல்லாமல்
இறக்கும் புவிதனிலே இங்குதுணை யுண்டாமோ

---

845. கோசிகர் — விசுவாமித்திரன். 845. யாகம் — வேள்வி. 846 ஆசிகமாய் — விருப்பமாய்; சிறப்பாய். அயோத்தி — சத்தபுரியுள் ஒன்று. 851. வலு — சாமர்த்தியம்.

**சுவடிச்சொல்:** 850. மாறினீர்.

**பாடவேறுபாடு:** 1. குறைதீரவே 2. பொருளை 3. கோசிநகர் 4. ஆளும் 5. ஆனார்காண் 6. மாறித்தான் 7. கொண் டால் 8. ஏகிவிட 9. ஆகாது 10. கூடாது 11. விட்டு 12. ஒண்ணாது.

Ariccantira who ruled Ayōttiya
Attained to eminence and prosperity
Because he kept his word
To liberally help Kaucika with gold
When the latter performed a ritual.
Mind you, respected monarch,
If you break your promise
The tortoise will not take it lying low
But will fight it out.
Since I have never gone to the enchanted city
Called MiṉuMiṉuttāṉ,
I do not know the way to it.

### The tortoise turns down the help extended by the King

'Fear not, I shall ask a friend
To accompany you' said the King.
The tortoise turned down the offer
And observed that a companion
Would be more of a hindrance
Than a help to fruitful achievement.
What kinship can be more solid
Than the ingrained one at the time of birth?
How can other friendships last
Which are rooted in earth ephemeral?

அஞ்சுபே ரென்னோடே [1]ஆதரவாகத் திரிவார்
பஞ்சமா பாதகங்கள் பலதொல்லைகள் விளைப்பார்
ஆளுக்கொரு புத்தி அவரவர்கள் [2]தானினைப்பார்
தோழமையாக [3]யிருப்பார் துணையொரு வரும்வேண்டாம்

பன்னி ரண்டுநாள் பயண மிருந்தாலும்
மன்னி நடப்பேன் வருஷமொன்று செல்லுமட்டும்

## பயணத் தவணையும் ஆமையர் புறப்படுதலும்

என்ற மொழிகேட்டு இயலரச னேதுசொல்வான்
நன்றுநன்று பிள்ளாய்நீ நாட்கடத்தப் போகாது

அப்படிநீ சொன்னா லநேகநாட் [4]சென்றுவிடும்
எப்படியு மிங்கே எண்ணிஎட்டு நாளையிலே
வரவேணு மிங்கேநீ வாராதே [5]யங்கிருந்தால்
தரமானதை யறுத்துச் சங்கரஞ் [6]செய்திடுவேன்.

நல்லதென்று சொல்லியொரு நாழிகையி லாமையரும்
வல்ல[7]மன்ன னைத்தொழுது வந்தான் மனைதனிலே
நடந்தபுது மையெல்லாம் நன்றாகப் பெற்றெடுத்த
மடந்தையபி ராமியற்கும் மன்னனுக்குந் தானுரைத்து

நன்றா யமுதுகறி நாழிகையிலே [8]புசித்து
[9]உண்டபின்பு நன்றாய் உறங்கியொரு சாமமதில்
அன்னையொடு தந்தையவ ராரு [10]மறியாமல்
தன்னையறி யப்பிறந்த [11]சமர்த்தனெனு [12]மாமையவன்

வீடுவிட்டுச் சென்று வெளியில்வந் தந்நேரம்

---

865. அஞ்சுபேர் — ஐம்பொறிகள். 866. பஞ்சமாபாதகம் — கொலை, பொய், களவு, கள்ளுண்ணாமை, குருநிந்தை என்ற ஐவகைக் கொடுஞ்செயல். 870. மன்னி — விடாமுயற்சி; உறுதியாய். 876. தரம் — தலை. 877. சங்காரம் — அழிக்கை.

**சுவடிச்சொல்:** 869. நாளைப்.

**பாடவேறுபாடு:** 1. அசராமலே 2. தான்விளைப்பார் 3. ஆகாது 4. சொல்லிவிடும் 5. நீயிருந்தால் 6. செய்வே னென்றார் 7. அரசனைத் 8. பொசித்தார் 9. உண்டுறங்கி 10. காணாமல் 11. தன்னறிவி 12. னாலவனும்.

My five senses of smell, touch and so on
Shall always stand by me
And act as constant companions,
Other friends may pull in varied directions
And prove harmful to single-minded devotion.
Even if it is an arduous journey lasting many days
I shall do it alone and with enthusiasm.

### The King sets a time limit

On hearing this the King said
That he would not allow endless time
But limit the period to eight days.
By the time if the tortoise did not turn up
His head would be plucked and
A garland of shells made.
The tortoise nodded approval
Paid obeisance to the King
And broke the news to his parents.
He ate heartily, slept soundly
And at an inordinately odd hour
Without the knowledge of the parents
Reposing confidence in self
Stepped out of the house.

## ஆமையர் ஈசனின் அருளினால் உருமாறுதல்

காடு[1] தனில் சென்றுவொரு கனசெடிக்குள் ளேபுகுந்து
இந்திரமா ஞால மிலங்குபிர காசமென்ற
மந்திரத்தை யுன்னியவன் வாழாமைக் கூடுவிட்டு

கூடுவிட்டு பட்டிமறு கூட்டில் [2]விளை யாடுதல்போல்
மாடுதனி லேறும் மகாதேவர் தம்மருளால்
மன்மதனைப் போலே வடிவுபிர காசமதாய்
தன்மதமான பெலமும் சத்திவொயி லானதுவும்

ஆகாசத் திற்கெவன மந்திரத்தி லோடுதற்கு
வாகான யீசர் வரப்பேறு தான்கொடுத்தார்.

## ஆமையர் விண்ணில் ஏகலும் மந்திரவாள் பெறுதலும்

வானத்தை நோக்கி வலக்கரத்தை நீட்டிடவே
தானத்து [3]மந்திரங்கள் தான்வந்து சேர்ந்ததுவே

மந்திரவாள் வந்து வசமாகச் சேர்ந்ததற்பின்
இந்திரமா ஞால மெடுத்தனன்கா ணம்மானை.

## ஆமையர் மினுமினுத்தான் பட்டணம் சேர்தல்

பன்னிரண்டு நாளைப் பயணமுள்ள[4] தூரமட்டும்
தன்னிரண்டு காலின் தடந்தரையிற் [5]பாவாமல்

விண்ணி [6]னிமர்ந்து விரைவாக வேயவனும்
கண்ணி மைக்குமுன்னே கடிதாகச் சென்றனனே
விந்தை பயிலும் மினுமினுத்தான் பட்டணத்தில்
[8]வந்தான் கதிரோன் மலையில டைந்ததுவே.

---

887. இந்திரமாஞாலம் — மாயவித்தை. 888. உன்னி — நினைத்து. 889. பட்டி — விக்கிரமாதித்தன் மந்திரி. 890. மகாதேவர் — சிவன். 893. கவனம் — காடு. அந்தரம் — ஆகாயம். 894. வரப்பேறு — அருட்கொடை. 904. கதிரோன் — சூரியன்.

**சுவடிச்சொல்:** 893. கெவனம்.

**பாடவேறுபாடு:** 1. வட்டந்தன்னில் 2. பாய்தல் 3. மந்திரவாள் 4. இருந்தாலும் 5. காணாமல் 6. நடந்து 7. அவர்தான் 8. கதிரான திற்பின் வந்து இனவீரன் சேர்ந்தனர்காண்.

## Transforming himself into a comely youth

The tortoise concealed himself
In the wild growth of the jungle
Chanted the magical incantation
And like proverbial Paṭṭi
Whose spells helped him enter other bodies,
Transformed himself into an elegant youth
As comely as cupid himself.
Thanks to the blessings of Lord Makātēva,
The rider of the bull
He gained unusual prowess
And was conferred the boon
Which enabled him to fly in the sky.

## Obtaining the magic sword

When he raised his right hand
Up in the air
He was gifted with a magic sword.
Thereafter he occupied himself
In practising the occult art *Intirajāla*.

## The tortoise reaches the enchanted city

The distance to be covered in twelve long days
He covered in no time
Pushing himself fast through the air
Without resting feet on earth
He reached the city of Miṉumiṉuttāṉ
Which synchronised with the appearance of the sun
Behind the lofty hills.

## மினுமினுத்தான் பட்டணத்து இடுகாட்டு நிகழ்வுகள்

கதிரோன் [1]மறைந்து [2]களத்தயிரு ளானபின்பு
சதிராக வந்துபிணந் [3]தானடக்குங் காடதிலே
இடுகாட்டில் வந்து (இ)லக்கறிய மாட்டாமல்
தடுமாற்ற மாகத் தனித்திருக்கும் [4]நேரமதில்

அந்தஊர் ஆளும் அரசன் திருமகளை
சிந்தையரவு கடித்துச் செத்தவளைத் தான்எடுத்து
தீண்டியர வங்கடித்து செத்தபிண மானதையும்
கூண்டயிடு காடதிலே கொண்டுவந்து வைத்தார்கள்.

அன்றுவலு பேயனொடு ஆனயீ னாப்பேச்சி
இன்றுகொண்டு வந்தபிண மினிதாக வேபுசிக்க
வாரமா யிங்கே வருவார்க ளென்றுசொல்லி
பாரப்பரண் போட்டு பாடையதன் மேலேவைத்து

காட்டுநரி செந்நாய் கழுகுபிராந்து கடுவாய்
கூட்டமிட்டு வந்துபிணம் கொண்டுபோ காதபடி
குழைமாறு போட்டொழித்துக் கூடிவந்த பேர்களெல்லாம்
[5]வழிமாறு டனவர்கள் மனைகளிலே தான்போனார்.

## ஆமையர் இடுகாட்டில் பேயன்பேச்சியை எதிர்பார்த்து மறைந்திருத்தல்

எல்லாருந் தங்கள்மனைக் கேகியே போனபின்பு
வல்லாமை யான வலுவுடைய மன்னவனும்
தந்திரமாக யிவர்கள் சங்கிலி[6]கொண் டிப்போது
இந்தராச் சாமமிரு பேரும்வரு வாரெனவே

நாம்வந்த வேட்டையது நன்றாக வாச்சுதென்று
தாமுந்த வேயெழுந்து சத்தப் படுத்தாமல்
பாடையின் கீழ்போட்டிருந்த பரணுக்குள் ளேபுகுந்து
ஆடையை மேற்சூட்டி யவனொதுங்கித் தானொளித்து

907. இலக்கு — திசை. 910. அரவு — பாம்பு 917. பிராந்து — பருந்து. 917. கடுவாய் — கழுதைப புலி. 919. குழைமாறு — பார்வையை மேற்செல்லவிடாது தடுக்கும் தழையின் செறிவு; மறைந்து ஒதுங்குகை.

**சுவடிச்சொல்:** 908. தடுமாட்ட 917. சென்னாய் 919. குளைமாறு.

**பாடவேறுபாடு:** 1. அடைந்து 2. காணயிரு 3. தான்கிடக்குங் 4. வேளையிலே 5. மனமாறியே 6. கொண்டப்போது.

## In the graveyard of Miṉumiṉuttāṉ city

When the sun went down
And pitch darkness spread everywhere
The tortoise entered a graveyard
And totally lost his way.
The body of the local king's daughter
Who had died of snake bite
Was brought there
And placed on a high pedestal
Providing feast for Pēyaṉ and his wife
Who were expected to come and eat the dead.
A shelter was put up
To guard against wild animals and birds
Like the wolf, fox, hyena vulture and eagle
Preying on the corpse.

## The tortoise lying in wait for the Pēyaṉ couple

When all the people left for their homes
The tortoise strong and valiant
Thought that the cannibalistic couple
Would visit the graveyard at some odd hour
Thanked his stars for early arrival
Silently crept below the pedestal
On which had been kept the body dead
Shrunk his frame, hid himself
And patiently lay in wait.

## பேயன் பேச்சி வருகையும் ஆமையர் செயலும்

[1]ஒண்டிப் பதுங்கி ஒளித்திருக்கும் வேளையிலே
அன்றி ராச்சாமம் அவர்க ளிருபேரும்
இரும்பிளகி [2]வெந்தாற்போல் இருகண்ணுந் தான்சிவந்து
பருங்கழுகு போற்பறந்து பாடையின்மேற் றான்விழுந்தார்.

ஈனனென்ற பேயனுட னீனாப் பேச்சிதானும்
[3]ஊனப் பிணத்தை உயிர்த்தேற்றிக் கேட்பதற்குப்
[4]பொருந்துபிழை சங்கிலியும் [5]புகழ்சாவு சங்கிலியும்
வருந்திய பாடைக்குள் வரவைத்தங் கிருபேரும்

தந்திரமாக [6]அவர்கள் தானெழுப்பிக் கேட்குமுன்னே
மந்திரவாள் தன்னாலே வலுவாக வெட்டிவிட்டான்
பாரவலு பேயன் [7]பதைபதைத்துத் தானோட
வீரமணி வாளாலே வெட்டினன்கா ணம்மானை.

## ஆமையர் பிழைச்சாவு சங்கிலியைச் சோதித்தல்

கத்திபட்டுப் பேயனுட கையில்மணிக் கட்டுமற்று
சத்திகெட்டுச் சாவுபிழைச் சங்கிலிபோட் டோடிவிட்டார்
பேயனுடன் பேச்சியுமாய்ப் பேதலித்தப் போனபின்பு
நாயனுடனே நமக்கு நாகமுனி யுண்டெனவே

வெற்றிபெறு சங்கிலிகள் விருதுரண்டை யும்மெடுத்துப்
பத்திரமாய் நாமுமினிப் பலிப்பறிய வேணுமென்று

929. ஒண்டி — பதுங்கி. 943. பேதலித்து — மனங்குழம்பி. 946. பலிப்பு — பயன்.

சுவடிச்சொல்: 928. தானொழித்து 930. ஒழித்திருக்கும் 945. வெத்திபெற 945. மெகுத்து.

பாடவேறுபாடு: 1. ஒன்றிப் 2. வந்தால்போல் 3. ஊதும் 4. உயிர்ப்பிறக்கும் 5. உயிர் இயக்கும் 6. உயிரைத் 7. புதறியலறி.

## The encounter between the cannibalistic Couple and the tortoise

That night both Pēyan̲ and Pēcci
With eyes red like molten iron
Swoopped on the dead body
Like wild vultures.
To infuse life into the corpse
And make it speak
They tried to use the chain of life
But ere they could do it
The tortoise with his magic sword
Inflicted a deep cut
Which made Pēyan̲ take to his heels.

## The tortoise examines the chain of life

The sword chopped off Peyan̲'s wrist
And sapped his energy so much
That he dropped the chains of life and death
And fled in panic with his spouse Pēcci
Whereupon the tortoise picked up the chains
To test their strength and efficacy.

## ஆமையர் பிணமாய்த் துயிலும் பேதையைக் கண்டு புலம்புதல்

பரணைவிட்டு வந்தவனும் பைங்கிளி[1]போ லேகிடக்கும்
மரணமடைந் தநல்ல மங்கையரைப் பார்த்துரைப்பார்.

புகழவொரு பெண்ணதையும் பூதலத்தில் முன்முடித்தோம்
இவளுங் கடக்காறி நமக்கீசன் [2]செயலெனவே
சங்கிலி வேண்டிநாமள் தான்போக வந்திடத்தில்
மங்கிலி யஞ்சூட்ட விதிவந்து [3]முடிந்துதெனவே

பையவொரு புறத்தில் பக்கத்தில் போயிருந்து
மையழகு கண்ணாள் வடிவழகு மொப்பனையும்
வாவி யினுள்ளே [4]மலர்ந்தசெந் தாமரைபோல்
ஆவி போயுந்தன் னழகுகுறை யாதபடி

சஞ்சலமாய்ச் சற்றே சரிந்துறங்கும் பேர்களைப்போல்
கஞ்சமுகத் தாளழகைக் கண்டவனுந் தான்மயங்கி
ஏங்கிப்பெரு மூச்செறிந்து யிருகண்ணீ ராறோட
தாங்கிமடி மீதில்வைத்துத் தன்மார்போ டேசேர்த்து

இலங்கு ம்முகத் தாளுடைய ஏத்தவடி வைப்பார்த்துப்
புலம்புவான் [5]றன்னிலவன் போதமறந் தேயுருகி
கன்ன [6]லொத்தாளே கனகநவ ரத்தினமே
உன்னை மணம்முடித்து உன்னுடனே வாழாமல்

பண்பான சொல்லுடைய பாவையரே [7]நானுமிங்கே
உன்பாடு காணவா [8]வூழெனக்கு வுண்டாச்சோ
எருவிலடக் காமலுன்னை இன்றுவைத்துப் பார்த்ததெல்லாம்
அரியயனு முன்னையெனக் கமைத்ததுகா ணென்றுசொல்லித்

---

950. கடக்காறி — வல்லமைக்காரி. 953. பைய — மெதுவாக. 954. ஒப்பனை — அழகு. 955. வாவி — நீர்நிலை. 958. கஞ்சம் — தாமரை. 962. போதம் — அறிவு. 963. கன்னல் — சர்க்கரை; கற்கண்டு 966. ஊழ் — விதி. 968. அரியயன் — திருமால், பிரமன்.

**கவடிச்சொல்:** 949. முகித்தோம் 954. ஒப்பினை.

**பாடவேறுபாடு:** 1. மேலே 2. ஏவலினால் 3. வளைந்ததெனவே 4. வளர்ந்த 5. தம்மில் 6. கரும்பே யமுதே 7. உன்னுடைய 8. ஊழ்விதி.

## The lament of the tortoise at the sight of a dead damsel

Descending from the high attic on the pyre
And eyeing the dead damsel
Lying in her loveliness,
The tortoise indulged in soliloquy.
Already my marriage is solemnized
Now what else is this than the hand of fate
That I, who came in quest of the chain of life,
Run into another ravishing beauty
And contemplate an auspicious union?
Quietly seating himself by her side
Whose eyes had been touched with collyrium
And ensemble revealed good taste
Who looked like a fresh lotus
Though life had ebbed out of her frame.
Sleeping on her side
Like one grossly agitated,
The lotus-like damsel cast a spell
On the admiring tortoise
Who deeply sighed and shed tears.
He lifted and kept her on his lap
Hugged her close to his heart
And prattled sweet no-no things.
My sugar candy, lovely pearl,
Instead of consummating marriage with you
And living in happiness and high spirits,
I cannot understand, oh, sweet-tongued girl,
Why fate has cruelly ordained
That I meet you in this plight?
Seeing you ere your burial
Was perhaps decreed earlier
By higher powers like Tirumāl and Piramaṉ.

## ஆமையர் மங்கையை உயிர்ப்பித்தல்

தன்னைத்தான் தேற்றிபிழைச் சங்கிலியைத் தானெடுத்து
உன்னித மாகஅவள் உச்சிதனில் வைத்தனனே
உயிர்பிழைக்குஞ் சங்கிலியை உச்சிதனில் வைத்தபின்பு
மயிர்[1]தொங்கி நின்றவுயிர் வந்தது[2]கா ணன்போரே
மேனிவெதும் பியவள் விழிதட்டி யேவிழித்துத்
[3]தானுயிரும் வந்தவட்கு சத்தியுமுண் டானதுவே
மடிந்த வுயிர்மீள மக(ா)தேவர் தம்மருளால்
[4]செடந்தனிலே [5]வந்தவட்குச் சீவன் பிறந்ததுவே

தியக்கந் தெளிந்தவளும் சேட்டமது வுண்டாகி
அயர்ந்த மனத்தில் அறிவுவந்து சேர்ந்ததுவே.

## உயிர்த்தெழுந்த பெண் மறுகுதல்

எங்கிருந்தோம் நாமுமிப்போ இங்கே யிருப்பானேன்
[6]அங்கஞ்[7]சுடு காட்டில்நம்மை ஆரெடுத்து [8]வைத்தார்கள்

ஆடையுஞ் சூட்டி அதிகபர ணும்போட்டு
பாடையின் [9]மேலேநாம் படுத்துறங்கக் காரணமேன்
திடமாக நாமுமங்கே தெளிய வுறங்கையிலே
இடுகாட்டில் நம்மை எடுத்திங்கே வைத்தவரார்

என்றுசொல்லி பின்னுமவ ளெண்ணியே [10]தானினைத்து

---

970. உன்னிதம் — தியானம். 975. மகாதேவர் — சிவன். 977. சேட்டம் — செழிப்பு. 981. பரண் — மேடை.

**சுவடிச்சொல்:** 974. பரந்ததுவே.

**பாடவேறுபாடு:** 1. தங்கி 2. காணம்மானை 3. தானியல்பு 4. தியக்கந் 5. தெளிந்தவட்கு 6. இங்கே 7. இடுகாட்டில் 8. வந்தார்கள் 9. மீதே 10. தானுரைத்து.

## The dead woman is revived

Consoling one's own self
And coming to terms with facts,
The tortoise deftly took out the chain of life
And placed it on the head of the dead woman
When lo and behold, life returned
The body throbbed, the eyes opened
And she regained her lost energy and Verve.
Thanks to the blessings of Makātēva,
When she woke up from her stupor
Her sense of judgment and discretion had returned.

## The Woman is bewildered

Where am I,
Why should I lie here,
Who brought me to the burial ground
Dressed me formally and put me on the pyre
Why should I sleep in this infernal place?
How at all did I reach this place
From where I was slumbering
Wondered the woman who had been revived.

## மறுகியவள் தெளிதலும் ஆமையரைக் காணுதலும்

அன்றுமனந் தேறியவ ளறிவுவந்தங் கேதுசொல்வாள்.
அரவுகடித் துவுயிர் அந்தரத்திற் போன[1]பின்பு
[2]விரைய வெடுத்துநம்மை வெங்காட்டில் வைத்ததுண்டு

என்று [3]சொல்லி மாறிமுகம் ஏறிட்டுப் பார்ப்பளவில்
மன்றுபுகழ மன்மதனைப் போலந்த மன்னவனும்
பொன்வடிவு போலிலங்கும் பூவையவள் [4]தன்றலையை
தன்மடியிற் போட்டிருக்கத் தான்கண்டு தையல்நல்லாள்

## உயிர்த்தவள் ஆமையரைக் கண்டு காதலுறுதல்

கண்டவுடனே யவளும் கனபிரிய மாய்மகிழ்ந்து
வென்றியுடன் நம்மை விஷந்தீர்த் தவரெனவே
பார்த்தா ளவனுடைய பாவனையும் ஒப்பனையும்
சேற்றிலெழுந் தேவளரும் செந்தா மரை[5]முகமும்

வன்னவுட லழகும் வாக்கும்வடி வுந்திறமும்
பொன்னினுட வாளும் புகழ்வீர சங்கிலியும்
கண்டு [5]மனமேங்கிக் கருத்தழிந்து ஏதுசொல்வாள்.
அண்டர் பதிக்கரசோ அயனோ திருமாலோ

வீமனோ சீவகனோ வேந்தனரிச் சந்திரனோ
காமனழகு மிந்தக் காவலர்க்குப் [7]போதாது
சீரர்க நம்முடைய சீவனைக்காப் பாற்றினவர்
ஆரோ தெரியாதிவ [8]ரளவறியப் [9]போகுதில்லை

என்று[10] வந்த மின்னா ளிவன்றன் வடிவுதன்னைக்
கண்டுமைய லாகிவெகு [11]காதல்கொண்டு தான்மயங்கி

---

987. அரவு — பாம்பு. 988. வெங்காடு — சுடுகாடு. 991. பூவை — பெண். 994. வென்றி — வெற்றி. 1000. அண்டர் — தேவர். 1003. சீவன் — உயிர்.

**கவடிச்சொல்:** 1006. மயிலாகி.

**பாடவேறுபாடு:** 1. துண்டும் 2. விரைவாய் 3. எண்ணி 4. தந்தனையும் 5. மலர்போல 6. மன மயங்கி 7 போராது 8. ஆணழகன் 9. தந்தனையும் 10. சொல்லி 11. காவலனும்.

## Face to face with the tortoise

When she gained full control
Over her senses
What did she say?
'After a snake bit me and life ebbed out
I was brought to the burial place.
So saying she cast her glance
On the tortoise who looked almost like cupid
The golden girl now noticed
That her head rested on his lap.

## The Girl falling for the tortoise

When she saw the tortoise
She was happy beyond words,
Hailing him as her saviour
From the bite of a venomous serpent,
She was impressed by his dress and demeanour,
Lotus visage, bodily features
Speech sweet, ability and resourcefulness.
His golden sword and chain of bravery
Cast such a spell on her
That she began to really wonder
Whether he was the king of the Gods,
Perhaps the creator himself or Lord Vishnu
Or Vīma, Cīvaka or King Ariccantira
He was so handsome
That cupid paled into insignificance.
'I am at a loss to know
Who this hero, the saviour of my life is,'
So thinking the girl desperately fell for the tortoise.

## காதல் மயக்கமுற்றவளை ஆமையர் தேற்றுதல்

முன்னே மயங்கும் முழுமயக்க மானதிலும்
மன்னவ னாராசை வலுமயக்க மானதுவே

[1]அயர்ந்தவளைத் தேற்றிவெகு ஆதரவாய் வார்த்தைசொல்லிப்
[2]பயந்தமுகந் துடவி [3]பாவைமன சைத்தேற்றிக்
குளிர்ந்தமொழி சொல்லியவன் கூறுவா னோர்வார்த்தை
இழந்தவுயிர் தன்னையுன்மே லிச்சைவைத்து [4]நான்திருப்பி

உன்னை மணம்முடிக்க உன்னிடத்தில் [5]நானும்வந்தேன்
என்னைமுகம் பாராமல் ஏன்கிடக் கிறாயெனவே
சொல்லியவன் [6]தேற்றச் சோத்தியமுந் தீர்ந்ததுவே.

## தன்னைத் திருமணம் செய்ய ஆமையரை வேண்டுதல்

வல்லியவள் தேறியந்த மன்னவன்றன் னோடிருந்து

மயக்கந் தெளிந்தபின்பு மன்னவனும் மங்கையரும்
[7]தியக்கமுடன் றங்களிலே செப்புவார் வார்த்தைகளை
[8]பேசும் மொழிகளெல்லாம் பெருகப் பறைந்தபின்பு
ஆசைமொ ழிகள்சொல்லி அகற்றியெனை விட்டுவிட்டு

தேசவழி நீர்போனால் தேடிவர மாட்டேனே
மோசமது செய்யாமல் முடியுமண மென்னையென்றாள்.

## ஆமையரின் திருமண வாக்குறுதியும் செயலும்

என்றவளுஞ் சொல்லவந்த ஏந்திழைக்கு ஏதுசொல்வான்
ஒன்றுக்கு மஞ்சாதே யுன்னைவிட்டுப் போறதில்லை

உலகறியக் கைப்பிடித்து உன்னைமணஞ் செய்யாமல்
கலைமிருகம் போலேயுனை காட்டில்[9]விளை யாடேனே

---

1015. சோத்தியம் — வியப்பு.

கூவடிச்சொல்: 1023. ஏந்திளை.

பாடவேறுபாடு: 1. அறிந்தவளைத் 2. மகிழ்ந்துமனந் 3. மாது 4. தான்எழுப்பி 5. இருக்க 6. தேத்தயவள் 7. தய வுடனே வார்த்தைகளும் தயவாக வேப்பேசி 8. வாசமலர்க் குழலாள் மன்னவனோ டேதுசொல் வாள் 9. மருகே னெனவே.

## The tortoise consoling the love-lorn lass

The tortoise spoke encouraging words,
Patted the face showing panic,
Provided her with solace and consolation
Said that he revived her
As he had desperately fallen for her
And wished to marry her,
It was rather strange that she was
Not casting even a glance on him.
These balmy words of the tortoise
Put an end to her suspense and surprise.

## The damsel wants the tortoise to wed her

The demsel relieved of stupor
Spoke as follows:
After uttering captivating words
Soaked in sweetness and honey,
If you desert me and go your way,
I shall not search for you.
It is better you marry me forthwith
Without playing any deceit.

## The Promise of the tortoise

In reply to her speech expressing doubt.
How did the tortoise react?
'Fear not, I shall not desert you
But marry you with the knowledge of the world,
Be sure, I shall not hunt you like a forest deer.

[1]பூச்செறியுங் [2]கூந்தல்மின்னாள் பொற்கொடியா டன்னோடே
வாய்ச்[3]சர சஞ்சொல்லி மகிழ்ந்து விளையாடி

அத்தலத்தில் நன்றாக அவர்களிரு பேர்களுமாய்
வெற்றிலை யுந்தின்று வெளிப்புறத்தி லெச்சிதுப்பி

[4]விடிகூறு மட்டும் விளையாடித் தானிருந்து
மடியில [5]வளுறங்க மறுத்தெடுத்துத் தான்கிடத்தி

தையலறி யாமலவன் சாவுசங்கிலி யைவைத்தான்
உய்யுமுயி [6]ரொடுங்கி ஒளித்தொதுங்கி நின்றதுவே.

## ஆமையர் திரும்பவும் மினுமினுத்தான் பட்டணம் வருதல்

நேரம்விடி யும்முன்னே நேமப்பர தேசியைப்போல்
பாரயிடு காடுவிட்டு பட்டணத்தில் [7]வந்தனனே

வீரநெடுந் தெருவில் மினுமினுத்தான் பட்டணத்தில்
சாரமுடனே [8]யிருக்குஞ் சந்தியம் பலந்தனிலே
சந்தியில் வந்து[9]சரிந் துறக்கங் கொண்டனனே
நந்துலவு மாநகராள் நாகமுனிவன் புதல்வன்

அப்போத வனுவந்து [10]அம்பலத்தி லேயுறங்க
மெய்ப்பாகக் கதிரோன் விடிந்ததுவே யம்மானை.

## மன்னன் இறந்த தன்மகளை அடக்க இடுகாட்டிற்கு வருதல்

**விருத்தம்**

12. விடிந்தபின் னெழுந்து நல்ல வேந்தனு மமைச்சர்[11] தாமும்
மடிந்தவள் தனைய டக்க [12]மன்னவ ரனைவ ரோடும்
படிந்தவ ராளுஞ் சேனை பரிகலத் துடனெல் லோரும்
கடிந்தவர் நடந்து நல்ல கனலிடு காட்டில் வந்தார்.

---

1033. தையல்—பெண். 1038. சந்தியம்பலம்—பலர்கூடும் வெளியிடம். 1046. கனல்—நெருப்பு.

பாடவேறுபாடு: 1. பூச்சொரியும் 2. கொங்கை 3. சமர்த்தாய் 4. விடியும் ஓர் நேரம் 5. அவனை யிறக்கி 6. சோர்ந்து 7. வந்தனர்காண் 8. அவனும் 9. சாய்ந் 10. அழகாய் 11. ரோடே 12. மனிதர்கள் பலபேரோடே.

He then chewed with the creeper-like girl,
Whose hair was bedecked with flowers
Betel leaves which they spat out,
Played a prolonged carnival of pleasure
Till it became down.
Overturning the girl gently and elegantly
Who slumbered deeply on his lap
He cooly placed on her body sweet
The chain of death
Which sucked her life
And she lay still.

### The tortoise returns to the city of Miṉumiṉuttāṉ

Before the sun rose
Like a wandering vagrant
He left the burial ground
Returned to the broad streets of Miṉumiṉuttāṉ
Slept in a public place
Where men crowded in large numbers.
When Nākamuṉivaṉ
Thus slumbered deeply,
The sun rose heralding the morn.

### The King comes to bury his daughter

12. After getting up at the crack of dawn,
The King and his minister,
Along with their retinue
Of soliders and fighting men
Went on foot to the burial ground
To do the last rites for a dead daughter.

## மன்னன் பரணைப் பார்க்கச் சொல்லுதல்

வேறு

13. வந்துவளைந் தெல்லோரும் வாய்த்தயிடு காடதிலே
கொந்தளமாய் நின்றவர்கள் கூறுவார் வார்த்தைகளை

இடுகாட்டிலே [1]பிரேதம் இங்குவைத்துப் போனபின்பு
வடுவாகப் பேயன்வந்து வாய்ப்பட்டா னானாலும்
கடுவாய் நரிகழுகு கைபகுந்து தானாலும்
திடமாய்ப் பரண்கீழே சென்றுபோய்ப் பாருமென்றார்.

## அரசன் ஆணைவயப்பட்டோரும் அவர்தம் விமர்சனமும்

பாருங்கோ வென்றிடவே [2]பக்கத்தில் [3]நின்றோர்கூடி
சாருங் குழைமாறு சாத்தினதைத் தான்நீக்கி
வந்துசில பேர்களந்த வாணுதலைப் பார்க்கையிலே
கொந்துசெறி யுங்குழலாள் கொலுவுறக்கங் [4]கொள்வதுபோல்

கிடக்குஞ் [5]சடத்தைக் கணிதமுட னேபார்த்து
அடக்கப் போகாதிவட்கு அடக்கங் கிடக்குதென்பார்
நேற்றிருந்த லட்சணமும் நிலைகளதும் வெவ்வேறே
பார்த்திருக்க யின்றுமுகம் பரிமளமாய்க் காணுதென்பார்

வானிலுயிர் சேர்ந்து மடிந்து கிடப்பவர்க்கு
மேனிசட மானதுதான் விம்மியுலை யாதோவென
காயங்க லங்கியுயிர் கண்ணுறங்கும் பேர்களுக்கு
வாயில்வெற் றிலைச்சிவப்பு வந்ததென்ன மாயமென்பார்

1048. கொந்தளம் — குழப்பம். 1055. வாணுதல் — ஒள்ளிய நெற்றியுள்ள பெண். 1056. கொந்து — திரள். 1057. கணிதம் — கணிப்பு. 1058. அடக்கம் — மூர்ச்சை. 1060. பரிமளம் — மிகுமணம்.

**சுவடிச்சொல்:** 1057. கெணதமுட 1059. லக்ஷணமும்.

**பாடவேறுபாடு:** 1. நாமும் 2. பரரசன் 3. தானுரைக்க 4. செய்தால்போல் 5. சடலத்தை.

## The King wants the pyre to be probed

13. When all gathered in the burial place
The king spoke as follows:
Examine with care the pyre and report
Whether Pēyaṉ has put his mouth on the corpse
Or damage done by hyena, fox or vulture.

## The reply of the King's men

When the King ordered
The examination of the corpse,
The layer of sweet smelling unguents was wiped
And the dead damsel
Who lay like one in deep sleep
Was studied with intense care.
Great wonder was expressed
At the change in the state of her face,
From lifeless stupor
To freshness and fragrance.
What wizardry is this
That the dead lips show
Signs of chewing betel?

பேச்சியொடு பேயன் பிணம்பிடிங்கித் தின்னாமல்
ஆக்கினையாய் காத்தவர்க ளாரோவென் பார்சிலபேர்
மற்றதெல்லாம் [1]போனாலும் மடிந்துகிடக் கும்பேர்கள்
வெற்றிலையுந் தின்றுதுப்ப மேதினியிற் கண்டதுண்டோ

உண்டோதான் முன்னாள் உலகிடத்தி லே[2]நாமும்
கண்டதுண்டோ விந்தக் கலியுகத்தை யென்பாரும்
ஆளுக்கொரு வார்த்தை யவரவரே தான்கூடி
சூழவளைந்து நின்று சொல்லுவா ரிப்படியே

கண்டவர்க ளெல்லாந்தன் கைவிரலை மூக்கில்வைத்து
நன்றுநன்று யிப்புதுமை நாம்கண்டோ மில்லையென்பார்
காட்டி லிவளைவைத்து காக்கவொண்ணா தென்பாரும்
வீட்டிலிவ ளையெடுத்து விரைந்தேகு மென்பாரும்

[3]அரும்பு முடிகுழலாள்க் காவிவந்து சேருமுன்னே
திரும்பயெடுத் திவளைச் சுமக்கவொண்ணா தென்பாரும்
எங்கெங்கு முள்ளவர்க ளிப்புதுமை யைக்கேட்டு
அங்கங் கிருந்துவந்தா ராடவரும் மாதர்களும்

மண்ணில் மடிந்தவள்தன் வாய்த்த புதுமைபார்க்க
எண்ணித் துலையாது எட்குறுணி [4]சேனைவர
இடுகாடு தன்னிலவ ரெங்கும் வளைந்துசெரும
படைவீடாய்க் கூடியவர் பார்த்தனர்கா ணம்மானை.

## தன் மகளை உயிர்ப்பிப்பாருக்கு மணம் முடித்துத் தருவதாக மன்னன் பறைசாற்றச் சொல்லுதல்

மெய்ப்புடைய சூரியன்போல் மின்னுமுடி மன்னவனும்
வைப்புடைய வேந்தன் மனதிலொரு நினைவாய்

1066. ஆக்கினை — கட்டளை. 1068. மேதினி — உலகம். 1077. ஆவி — உயிர்.
1082. எட்குறுணி — எட்டுப்படி கொண்ட தானிய அளவு. 1084. படைவீடு — பாசறை.
பாடவேறுபாடு: 1. போகட்டும் 2. கண்டதில்லை 3. அருமை 4. கோடிபடை 5. வேந்தன்.

Some wondered what forbade
Pēyan̲ and Pēcci from eating the corpse.
Leave everything else,
Has it ever occurred on this earth
Of a corpse chewing and spitting betel?
Some explained the strange phenomenon
As one of the perversities of *Kali Yuka*.
All wondered at the bizarre happening
Each speaking according to his fancy.
Would it be possible to protect the body here.
Better to remove it to the house in haste,
Before life returns to its abandoned abode.
On hearing the sensational news
Men and women thronged at the site.
Countless were they
Representing a cross section including mercenary soldiers,
The place verily looked like an encampment.

### The King willing to offer his daughter to her saviour

The King as glorious as the sun

ஆளடித்து நீக்கி [1]அனைவருக்கும் [2]புத்திசொல்லி
வாழ்மயிலாள் தன்னை வசமாக வேயெடுத்து

குளிர்ந்தநிழ லில்வைத்து கூண்டபட்டி னாற்குடி
இழந்த வுயிர்வருத்த யேத்தமுடி மன்னவனும்
மந்திரிமா ரோடுஅந்த மன்னவனு மேதுசொல்வான்
எந்தவூ ரானதிலு யெங்கிருந்தும் யிங்கொருவன்

வந்தவரு முண்டாகில் மந்திரிமா ரேநீங்கள்
நந்துலவும் நம்முடைய நகரமெங்கு மேதேடி
ஆய்ந்து விசாரித்து [3]அல்லோருந் [4]தானறிய
வேந்தன் மகளார்தான் விஷந்தீண்டி மாண்டவளை

[5]எக்குலத்தா ரானாலும் எங்கிருந்து வந்தாலும்
கக்கிஷமாய் நாகம் கடிவிஷத்தை மீட்டவர்க்கு
ஏலக்குழ லாளை எல்லோருந் தானறிய
மாலையிட்டு நாங்கள் மணம்முடித்துத் தாறோமென்று

உறப்பாக விந்தமொழி உலகறிய வேவிளம்பி
பறைக்காரனை வருத்திப் பறையறையச் சாற்றுமென்றார்.

## மந்திரிமார் பறைக்காரனை அழைத்துப் பறையறையச் சொல்லுதல்

வேந்தனு ரைக்கவங்கே விரையஅந்த மந்திரிமார்
பாந்தா மலங்கே பறைக்கார னை[8]யழைத்து

[9]அழைக்குபொழு தோடிவந்து அரியபறைக் காரனவன்
[10]உழைக்கும்புகழ் மந்திரியை [11]தான்றொழுதங் [12]கேதுரைப்பான்.

1094. நந்து — தழைத்து. 1098. கக்கிஷம் — பிரயாசம். 1102. பறை — மேளம்.

**சுவடிச்சொல்:** 1092. இந்தவூ 1098. மீண்டவர்க்கு.

**பாடவேறுபாடு:** 1. எல்லோரையும் 2. ஒதுக்கி 3. ஆளோடி 4. வாருமென்றார் 5. எந்தவூ 6. விரைவாக 7. வந்தவர் கள் 8. வருத்தி 9. அழைத்த 10. அழைக்கும் 11. தான்அழைத்து 12. ஏதுசொல்வான்.

After sermonizing to the crowd
Lifted the dead girl elegantly
Kept her in the shade, covered her with silk
And feeling the agony of bereavement
Spoke to the ministers,
If there can be found a man
Hailing from any country, any place
Of any creed or caste
Search for him, try to find him
Who can revive my darling daughter
Bitten by a viper vile and dead.
For him the king shall offer
His daughter's hand.
Publicize this through tom-tom,
Yes, summon the drummer.

## The Drummer instructed

When the King spoke so
The ministers rushed in haste
And summoned the drummer
Who queried quite submissively

நீண்டபுகழ் வளரும் நித்தியனே [1]என்கோவே
ஆண்டவனே யென்னை அழைத்தபணி யேதெனவே

வந்து [2]பரிவாய் வணங்கும்பறைக் காரனுடன்
சிந்தையுற்று மந்திரிமார் செப்புவார் வார்த்தையொன்று
அரவுகடித்த விஷ மாராலும் மீட்டவர்க்குத்
தருவோம் மணம்முகித்துத் தாரரசன் றன்மகளை

என்று விளம்பும்மொழி யெல்லோருந் தானறிய
வென்றி பறைசாற்றி விரைவாக யிப்பொழுது
கட்டாகவே [3]நீங்கள் கடுகஒரு நாழிகையில்
பட்டணத்தைச் சுற்றிப் பறை[4]யறைவு மென்றுரைத்தான்.

## பறைக்காரன் பறையறைதல்

சொன்னமொழி கேட்டு தொழுதுபறைக் காரனவன்
அன்னேரஞ் சென்று அழகுபறை [5]யறைந்தான்
வட்டமிட்டுச் சுற்றி வளமாய் மொழிபறைந்து
பட்டணத்தில் தோட்டி பறை[6]யறைந்தா [7]னம்மானை.

## பறையோசையை ஆமையர் அறிதல்

நிறையோசை யாக [8]நெடுந்தூரத் [9]தோரறிய
பறையறையுஞ் சப்தம் பலபேருந் தான்கேட்க
முந்திப் பறையை முழக்கி யபையமிட்டு
சந்தித் தெருவதிலே தான்வார வேளையிலே

எளியவ னாக யிரப்பனைப் போல்யிவனும்

1107. நித்தியன் — கடவுள். 1125. இரப்பன் — யாசகன்; பரதேசி.

கவடிச்சொல்: 1111. மீண்டவர்க்கு 123. முளக்கிய 1125. எழியவனாக.

பாடவேறுபாடு: 1. கலியாணியரே 2. பணிந்து 3. இப்போது 4. சாற்றும் 5. சாற்றி 6. சாற்றி 7. வந்தனர்காண் 8. நெடுந்தெருகெங் 9. குங்கேட்க.

My lord, why did you send for me?
To which the ministers made reply
The king's daughter will be offered in marriage
To her saviour from snake bite.
Drum this message quickly
In every part of the town.

### The Drum beats the message

On hearing the royal command
The drummer went round the town
And spared no pains
In publicizing the message,
He drummed it with sincerity.

### The tortoise hears the tom-tom

The drum beat was heard
Everywhere across the town,
And while the tortoise stepped into a junction
In all simplicity like a vagrant mendicant....

## ஆமையர் தான் விஷம் களைவதாகக் கூறுதல்

வழியிலே வந்துநின்று மறித்தேது வார்த்தைசொல்வான்
தெளிவாக யிந்த[1]வுரை செப்பிப் பறையறைந்தீர்
களியோ மொழிந்துதான் கட்டான வார்த்தையிதோ

ஆரொருவர் வந்து அரவுவிஷந் தீர்த்தவர்க்கு
தாரரசன் [2]பெற்றமகள் தன்னை மணம்முடித்து
தாரோமென்று சொல்லியவர் சம்மதிப்பா ராமாகில்
கோறைமொழி யில்லாமல் குவலயத்தோர் சம்மதிக்க

மானேந்துஞ் சீர்கரத்து வள்ளலார் தம்மருளால்
நான்வந்து அந்தவிஷம் நாழிகையில் [3]மீள்வனென்றான்.

## பறைக்காரன் தூதுவன் மூலமாக மன்னர்க்குச் செய்தி அறிவித்தல்

அந்த[4]வுரை கேட்டு அதிபிரிய மாய்மகிழ்ந்து
சிந்தை[5]களிகூர்ந்து சிறந்தபறைக் காரனவன்

[6]நாட்டை யரசாளும் நல்லரச னுக்குரைக்க
ஓட்டன் றனையழைத்து ஓடவிட்டான் சீக்கிரத்தில்
அப்போது ஓட்டனவன் அம்பில் விரைந்தோடி
தப்பாமற் சென்றவனும் [7]தார்வேந்த [8]னுக்குரைக்க

அஞ்சியொ துங்கிவெகு ஆசார மாய்ப்பணிந்து
[9]மிஞ்சுபுகழ் மன்னனுக்கு விண்ணப்பஞ் செய்யலுற்றார்.
[10]நன்கு பறைசாற்றி நடந்துவரும் வேளையிலே
எங்கிருந்து தானோர் இரப்பனைப் போல்வொருவன்

வந்துவழி மறித்து வாக்கான தைக்கேட்டு
இந்தவிஷந் தீர்ப்பவர்க ளில்லையோ வென்றுசொல்லி

1128. களி — மகிழ்ச்சி. 1129. அரவு — பாம்பு. 1132. கோறை — பழுது. 1132. குவலயம் — பூமி. 1138. ஓட்டன் — காலாற்செல்லுந் தூதன். 1144. இரப்பன் — யாசகன்.

சுவடிச்சொல்: 1132. குவலையத்தோர்.

பாடவேறுபாடு: 1. மொழி 2. என்மகள் 3. மீளுகிறேன் 4. மொழி 5. மொய்த்துநல்ல 6. நாட்டில் பறைசாற்றும் நல்ல பறைக்காரனவன் 7. தாரரசனைத் 8. தொழுது 9. ஆளும் அரசனுக்கு அடிவணங்கி யேதுசொல்வான் 10. நாங்கள்.

### The tortoise volunteers to nullify the poison

Blocking the path of the drummer
What did the intruding tortoise say?
You drummed the message in clear terms
That whosoever cures the King's daughter of snake bite
Shall be offered her hand in marriage.
If this word will be kept sacred,
I shall nullify the posion in a jiffy
With the blessing of the God
Who holds the deer in his hand.

### The message reaches the King

On hearing the words of the tortoise
The drummer was highly elated,
Informed one of the King's swift messengers
Given to delivering news on the run
Who in turn submitted the tidings
To the king with courtly submissiveness.
'Sir, while the message was being drummed,
A person with the looks of a mendicant,
Stood on the way
And volunteered to cure the princess

பறையறைய வேண்டாங்காண் பாரிலுள் ளோர்களறிய
அறையாமல் மன்னவனும் [1]ஐம்பூத மும்பொருந்தி

பாம்புவிஷம் மீண்டவர்க்குப் பாரறியத் [2]தன்மகளைச்
[3]சோம்பாமல் நல்லமணம் சூட்டுவிப்பா ராமாகில்
மீளுவோம் நாம்விஷமும் மெய்கேட்டு வாருமென்றான்
ஆளும் புகழானே அறிவிக்கவந் தோமென்றான்.

## அரசன் ஆமையரை அழைத்து வரச் சொல்லுதல்

ஓட்டனு ரைத்தமொழி வுண்மையுட னெல்லோரும்
[4]கேட்டங் கதிசயமாய் கெட்டிகெட்டி யென்றுசொல்லி
இந்நேரம் கூட்டி இமைக்குமுன்னே வாருமென்றார்.
[5]சாந்தமுடன் மன்னவனும் [6]தானனுப்பி னார்கடிதாய்

வேந்தன் [7]விடுத்தவர்கள் விரைந்துகடி தாகவேதான்
சூழ்ந்து நெருங்கிவரும் துரைமக்கள் தன்னுடனே
சந்தோஷ மாகத் தாரணியோர் கள்சூழ்ந்து
வந்தவர் களெல்லாம் வளைந்து செருமிநிற்க

பூட்டு[9]சிலை வீரனந்த பொன்னின்முடி மன்னர்முன்னே
கூட்டிவந்து விட்டார்கள் கொற்றவனார் தான்காண.

## ஆமையர் அரசனைக் காணுதலும் வாக்குறுதி கேட்டலும்

கண்டு[10]மகிழ்ந் தேயவனும் கைதொழுதான் [11]காவலனை
அன்றரசனும் மகிழ்ந்து ஆர்பிள்ளா யென்றுரைத்தார்

அரசனே யென்னுடைய அன்னைபிதா வையறியேன்
விரையவே யென்னூர் வெகுதூர மாயிருக்கும்
நாகசித்தன் மைந்தனென்று நம்மையுரைப் பாருலகோர்
ஏகமாய் நாமும் இருப்போம் மலைதனிலே

1148. ஐம்பூதம் — பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்சபூதங்கள். 1149. மெய் — உண்மை. 1154. கெட்டி கெட்டி — மிக நன்றுநன்று. 1156. கடிதாய் — விரைவாய். 1162. கொற்றவன் — அரசன்.

பாடவேறுபாடு: 1. அஞ்சுபஞ்சாக் ஷரமதை ஓதி 2. என்மகளை 3. செய்துதிரு மணந்தான் சிறப்புடனே வைத் தாக்கால் 4. கேட்டேனே கலியுகத்தை கெட்டிபிடி என்பாரும் 5. அந்நேரம் 6. ஆளனுப்பி 7. விடுந்தூதன் 8. மகிழ 9. சிலவீரனையும் 10. தொழுதே 11. அம்மானை.

If only the king would keep his word
And marry her off to him
With the pledge on the five elements.'
This was the message I came to deliver,
Sir, he is waiting to hear from thee.

### The King summons the tortoise to his presence

All listened intently to the messenger on the run,
And expressed great wonder and surprise.
Maintaining his equanimity and calm,
The king issued orders to his men
Who swiftly took to their heels
And brought the tortoise to the royal presence,
Where had gathered the rich gentry
And a motley crowd of happy men.

### The tortoise wants a promise from the king

The tortoise paid obeisance to the King
Who wanted to know his parentage
To which he made reply
That he did not know his parents,
But was known as the son of Nākacittaṉ
And that he lived alone in the hills,

மலையைவிட்டுத் [1]தானுமிங்கே வந்துநெடு நாளாச்சு
இலைமலரில் முன்னா ளிடறுசெய்த பேர்களைப்போல்
பரந்து திரிவோம் பலவிடமு மென்னாளும்
இரந்துகுடிப் பார்காண் எங்கள்குரு வானவரும்

ஆர்க்கும் விஷந்தீர்ப்போம் அரவுபிடிக்க மாட்டோம்
போக்குமொழி சொன்னாக்கால் போனவுயிர் மீளாது
வாக்குமா றாதவர்க்கு மந்திரம்நன் றாய்ப்பலிக்கும்
தாக்குபுக ழுடைய தார்வேந்தே யிப்பொழுது

திரைவளைந்து மந்திரத்தைச் செவித்து [3]யிரதைநான்
வரவழைத்தா லுன்மகளை மணம்நமக்குச் செய்வோமென்று
கைபோட்டு மெய்யாய்க் கடவுள்மே லாணையிட்டு
மெய்யாகச் சொன்னால் விஷமதைநான் [4]மீட்பனென்றான்.

## அரசன் ஆமையர்க்குப் பிரமாணம் செய்துதரல்

அந்தமொழி கேட்டு அரசனவன் கைப்பிடித்து
[5]முந்த வுரைத்த [6]மொழியானது வுனக்கு
பேறான யீசன் பெருமாள் திருவாணை
மாறே னெனவே வலக்கை மிகக்கொடுத்தான்

பொய்க்கும்மொழி சொன்னதுண்டால் போனவுயிர் மீளாது
அரசன் வலக்கைதொட் டாணையது இட்டபின்பு
திரைவளையும் மந்திரத்தைச் செவிக்க வேணுமென்றான்.

## மந்திரம் செபிக்கக் கூடாரம் அமைத்தல்

அந்தமொழி கேட்டு அருகில்நின்ற பேர்கள் சிலர்
வந்துமணிப் பட்டெடுத்து வளைந்தார் திரையாக

1170. இடறு — ஊறுபடுத்துதல். 1172. இரந்து — யாசித்து.

பாடவேறுபாடு: 1. நானும் 2. வெகு 3. வேந்தனையும் 4. தீர்ப்பேன் 5. முன்னே 6. மொழி யதுக்கும் மாறாமல் 7. பட்டுடுத்து.

•It was quite sometime
Since he had come down from the hills
As wandering from place to place
Was a deep seated habit with him.
His mentor and master
Depended on alms for his living,
Was good at mitigating the bad effects of poison
But seldom caught snakes.
Promises made lightly won't help revive the dead,
But those kept sacred will be efficacious
If only you take a pledge in God's name
To offer your daughter in marriage to me,
I shall use the sacred incantation
And cure her of snake bite.

## The King's pledge

The King held the hand of the tortoise,
Promised in the name of God
That he would not go back on his word
As a false pledge was disastrous
And may prevent the revival of the dead.
After making a solemn vow
In all sincerity,
The King requested the tortoise
To use the sacred words
That would restore life to the dead.

## A tent erected for chanting the sacred words

The King's men chose the best of silks
Made a curtain out of it

[1]கோட்டுந் திரைவளைந்து கூடார மும்போட்டு
நாட்டமுடனே யவர்கள் நாழிகை யிலேமுகித்தார்.

## அரசனும் மற்றவரும் தூர அமர்ந்திருத்தல்

வளைந்ததிரைக் குள்புகுந்து மந்திரத்தைத் தான்செபித்து
[3]இழந்தவுயிர் மீள யிங்கே யழைக்குமட்டும்
[4]மல்லாருந் திண்புயனே மந்திரிமா ரும்நீரும்
எல்லாருந் தூர யிருக்கவே வேணுமென்றார்

சொன்னமொழி யைக்கேட்டு சூழ்ந்துநின்ற பேர்களெல்லாம்
அன்னேரம் நீங்கியவ ரப்பாலே [5]போயிருந்தார்.

## ஆமையர் பிழைசங்கிலியை வைத்து உயிர்ப்பித்தல்

**விருத்தம்**

14. இருந்த பின்னெழுந் திருந்து யிவன்திரை க்குள்ளே சென்று
[6]பரிந்தவ ளருகே நன்றாய் [7]பாங்குட னிருந்து கொண்டு
[8]வருந்தி யேபிழை சங்கிலி [9]வாக்குட னெடுத்து வைக்க
திருந்திய கூட்டில் வந்து சீவனும் பரந்த தன்றே.

## உயிர்த்தெழுந்தவளுக்கு ஆமையர் மந்திரம் உச்சரித்தல்

**நடை**

15. சீவன் பரந்து தெளிந்துமயக் கந்தீர்ந்து
[10]ஆவுயடலி லமந்து அறிவுவந்த வேளையிலே

மங்கையர்க்கு மன்னவனும் மந்திரத்தை யுச்சரித்தான்
[11]இங்கிதமாய் மன்னவனு மேதுமந் திரமுரைத்தான்
[12]சேற்றா மரையாளே [13]தேன்மொழியே நாமுமிங்கே
நேற்று நடந்தபுதுமை நீணிலத்தி லுள்ளவர்க்கு

---

1194. மல் — வலிமை.

பாடவேறுபாடு: 1. பொட்டுந் 2. உச்சரித்து 3. இந்தஉயிர் மீட்பேன் இமைதட்டி முழிக்குமுன்னே 4. வல்லாருந் 5. தானிருந்தார் 6. வந்திவ 7. பரிவுட 8. பொருந்திய 9. பெண்ணரசாள் யிடத்தில் 10. ஆவின் குழலாளுக்கு 11. எங்கும் புகழ் 12. பூற்றா 13. பெண்ணரசே நம்மளிலே.

And manoeuvred to erect a tent,
The work done with sincere alacrity.

### The King and his men keep some distance

'Till I finish chanting the sacred words
The King, ministers and all strong men
Should keep away from this place.'
On hearing the words of the tortoise
The men present quit the tent's proximity.

### The tortoise reviving the dead

14. The tortoise got up and entered the tent,
Sat cosily by the side of the dead woman,
Deftly placed on her body the chain of life
And lo, life entered the shell it had abandoned.

### The tortoise addressing the girl

15. As one seriously preoccupied with
Curing the girl of snake-bite
He addressed her after she woke up
From her stupor and regained consciousness.
"Look, my lotus, sweet-tongued girl
Don't pass on the novelty of yesterday

சொல்லாதே வுன்னைநான் மணஞ்சூட்ட வேணுமென்றால்
வல்லாமை யாகவுன்னை மாலையிட்டே னானாலும்
அரிவையரே யுனைவளர்த்த அன்னைபிதா வானவர்க்கு
ஒருவர் தனக்குமிந்த உள்ளடக்கஞ் சொல்லாதே

பம்மந்த மாகஅவன் பாம்புவிஷம் [1]பார்ப்பவன்போல்
உம்மந் திரமாக உரைத்தனன்கா ணம்மானை.

## உயிர்த்தெழுந்தவளைக் காண ஆமையர் மன்னனை அழைத்தல்

ஓமென்று சொன்னா னுடனேவெளி யில்வந்தான்
தாமென்று லகாளும் தார்[2]வேந்தன் முன்பதிலே

வந்தனன்கா ணந்தநல்ல மந்திர வாதியவனும்
உந்தனுக் காய்நானும் உலகாளும் மன்னவனே
அக்கரவு தீண்டியுயிர் அந்தரத்தில் போனவளை
[3]கக்கிஷப் பட்டேனான் கடிவிஷத்தை மீட்பதற்கு

பாம்புவிஷந் தீர்ந்துதென்ன பதைப்புவந்து தாவெனவே
வாம்புகழும் மன்னாவுன் மகளைப்போய் பாருவென்றான்.

## மன்னன் உயிர்த்தெழுந்த மகளைக் கண்டு மகிழ்வுறுதல்

பையவந்து மன்னவனும் பைந்தொடியைப் பார்க்கையிலே
எய்யுஞ் சரவிழியாள் இமைதட்டி யேவிழித்தாள்

முளியும் விழியழகும் முகத்திலொளி வானதையும்
களிகூர்ந்து மன்னனிரு கண்குளிரக் கண்டபின்பு
ஆவிமகளை யெடுத்து அன்பாக முத்தமிட்டு
[4]காவிவிழி நீரொழுக காவலன் வாய்புலம்பி

மோந்து முகந்துமகள் முகத்தில் [5]முகஞ்சேர்த்து
[6]ஏந்தி யெடுத்திருத்தி இங்கிதமாய் முத்தமிட்டு

---

1210. அரிவை—பெண். 1212. பம்மந்தம்—வெளிவேஷம். 1219. கக்கிஷம்—பிரயாசம். 1222. பைய—மெதுவாக. 1224. முளி—வாட்டம். 1225. களி—மகிழ்ச்சி. 1227. காவி—கருங் குவளை. 1229. இங்கிதம்—கருத்து; இனிமை.

**சுவடிச்சொல்:** 1217. உந்தனக்காய்.

**பாடவேறுபாடு:** 1. தீர்ப்பவர்போல் 2. அரசன்முன் பில்வந்தான் 3. கஷ்டமிகப் 4. கண்ணில் குவிபாய 5. முகம் வைத்து 6. ஏங்கி.

To any living soul.
If I am to wed you
Dear Girl, don't disclose anything
Even to your father and mother
Who have brought you up with care.

## The tortoise invites the king to see his daughter

After uttering the sacred syllable *Ōm,*
The tortoise came out and stood before the King,
Indeed a great enchanter and marvellous wizard!.
'My lord, the ruler of the world
I strained myself quite a bit
To redeem the girl from sure death
Who had been bitten by a viper vile.
Go and see for yourself a daughter
Relieved of suffering and vibrating with life.'

## The King's Joy

The King moved at a slow pace
And looked at the girl
Whose eyes sharp as arrows
Winked showing signs of life
Verily sending rapture through his frame.
He kissed the phantom girl
Kept his face close to hers

இங்கிருந்து நாங்களுனை எல்லோருந் [1]தான்றேட
எங்கிருந்தா யின்னேரம் என்மகளே என்றுசொல்லி

மகளைமடி மீதில்வைத்து வளைந்ததிரை யைநீக்கி
பவளமணி மார்பழகன் பாரிலுள்ளோ ரையழைத்து
[2]வான்றட்டில் வாறமழை மேகம் போற்றிரண்டு
தேன்றட்டில் [3]யீயதுவும் செருமி வளைந்தாப்போல்

மின்போலி டையாளை [4]வேண்டிவந்து பார்ப்பார்கள்
மண்போட்டாற் கீழேவிழ மாட்டாது காணெருக்கம்
[5]தாள்நெருங் கினாற்போல் சனங்கள் பலபேரும்
ஆள்நெருங் கிப்பார்த்தார் அதிசயத்தை யம்மானை.

## மன்னன் அமைச்சரை அழைத்தல்

விருத்தம்

16. பார்த்தவர் செருமி நிற்கப் பாவையர் சரீர மெல்லாம்
வேர்த்துடல் வருகு தென்று மெல்லியர் கவரி வீச
காற்றை [6]விடுவ தற்கு காசினி யோரை நீக்கி
வீற்றிருந் தரசர் கோமான் விளம்பு லாரமைச் சரோடே.

## மன்னன் அமைச்சருக்கு உரைத்தல்

வேறு

17. அமைச்சர்களை வருத்தி ஆனபுகழ் மன்னவனும்
[7]குமைச்சலாய் நிற்குமந்த குக்கிளிப்பைத் தானிறுத்தி
தந்திரஞ்சேர் மன்னவனும் தானிருக்கும் வேளையிலே
மந்திரிமா ரோடுஅந்த மன்னவனு மேதுசொல்வான்

எங்கிருந்து பார்ப்பதற்கு இங்குவந்த பேர்களெல்லாம்
அங்கவர்கள் தன்மனையி லார்போனா ரானாலும்

---

1236. மின் — மின்னல். 1238. தாள் — கால். 1242. காசினி — பூமி. 1243. விளம்புவார் — சொல்லுவார். 1245. குக்கிளி — பூமியிலுள்ளோர்.

பாடவேறுபாடு: 1. தான்கூடி 2. வானகத்திலுள்ள 3. ஈச்சியது 4. மெதுவாகப் 5. சூழநெருங்கி 6. வருவதற்கு 7. இமைச்சர்க ளானதையும் எல்லோரை யும்வருத்தி.

Asked where she had been all the while
When everyone vainly searched for her,
Streched her on his lap
Removed the curvaceous screen
Summoned one and all to come and see.
Like clouds gathering in the sky
Or flies fluttering round honey
The crowd surged round the girl
Possessed of slender waist like lightning.
So thick was the gathering
That a speck dropped wouldn't touch the earth.
All viewed with eagerness
The strange and wonderful phenomenon.

## The King summons the minister

16. While the crowd stood gazing
Women began to fan
The girl's body soaked in sweat.
Pushing aside the men
To make room for breeze
The King addressed the minister.

## The King's speech to the minister

17. After summoning the ministers
The King in the midst of a crowd
Addressed them.
Look, even if all the people
Retire to their respective homes

அந்தரங்க மாய்க்கடித்த ஆடரவத் தின்விஷத்தை
மந்திரத்தால் [1]தீர்த்த மருமகன்போ காதவண்ணம்

காத்துப் பதனமதாய் கைக்குள்நிறுத் தாதிருந்தால்
வேற்றுமை [2]யாயுங்களைநாம் வெட்டிவைப்பே னென்றுரைத்தார்.

## ஆமையரை மக்கள் சூழ்ந்து கொள்ளுதல்

வேந்தனு ரைக்கநல்ல மிக்கதுரை மக்களெல்லாம்
சூழ்ந்து நெருங்கியவனைச் [3]சூட்சமுத்தா ரம்மானை.

பவள [4]யிதழனைய பாரரசன் றன்மகளை
[5]மகளை வளைந்திருப்பார் வந்துபெண்க ளாயிரம்பேர்
மூடா வுக்குள்ளே முகனைமக ளையிருத்தி
ஏடா ரும்மார்பன் எழுந்தருளி னார்வெளியில்.

## மன்னன் வேதியனிடம் நாட்பலன் கேட்டல்

விருத்தம்

18. வெளிதனில் வந்து மன்னன் வேதி யன்றனை யழைத்து
நளிமிகுந் தரசன்கோமான் நாட்பலன் கேட்ட போது
அழிவதொன் றில்லை நாள்தான் அமுதமா யோக மென்று
மொழியுரைத் தவனு மின்று முகூர்த்தமா மென்று சொன்னார்.

## கூடியிருந்த மக்களின் மனச்சஞ்சலம்

நடை

19. சோதிரிஷி சொன்னமொழி சுற்றிலுள்ளோர் தான்கேட்டு
ஏதுபோ லாச்சுதிந்த இரப்பனுக்கு மாலையிட
இந்தவுல கிற்பல ராசாக்கள் தானிருக்க
வந்தயி ரப்பனுக்கு மாலையிடு வோமெனவே

பெருமையுட னரசன் பெற்றெடுத்த பெண்மகளை
அருமையுடன் நல்லமணம் அம்புவியிற் செய்யாமல்

---

1255. சூஷ்சம் — சாமார்த்தியம்; தந்திரம். 1258. முகனை — முன்புறம். 1260. வேதியன் — பிராமணன். 1263. முகூர்த்தம் — சுபவேளை. 1265. இரப்பன் — யாசகன்.

சுவடிச்சொல்: 1255. சூக்ஷமுத்தா.

பாடவேறுபாடு: 1. மீண்ட 2. உண்டானால் வெட்டியும் தீர்த்திடுவேன் 3. சூட்சித்தா 4. முகத்தாளை 5. பார்க்க.

The son-in-law who chanted sacred words
Nullifying the effect of snake poison
Shall not be allowed to go.
If you inadvertently let him slip,
I shall not hesitate to axe you.

### The crowd gathers round the tortoise

When the king gave the ultimatum,
All the gentry gathered round the tortoise
And guarded him with great care.
After seating his daughter behind the screen
Who was surrounded by thousands of women,
The King, whose chest was bedecked with flowers, came out.

### The King consults the brahmin about an auspicious day

18. When the King came out
He asked the brahmin pundit
About the auspiciousness of the day
And got, a positive reply
To seize the day forthwith,
Ideal for all good activities!

### The restlessness of the crowd

19. When the crowd heard the pundit's words
They felt sorry for the king's daughter
Who had to marry a vagrant beggar
Leaving many eligible princess.
They regretted the decision of the King,
Who instead of celebrating the marriage
In keeping with his high status
Had stooped to offer the maiden
To one who depended on alms for his living.
Does destiny favour such men
Who have virtually no kinsmen to boast of ?

[1]சீராக நாட்டுவழி தேசத்தி லேதிரியும்
[2]ஆருமற் றார்க்கு அமைத்ததுவோ தெய்வமென்பார்

ஆர்க்குமொ ருவருக்கு ஆணையிட்டுத் தான்கொடுத்தால்
வாக்குரைத் தாலந்தமொழி மாறுமோ வென்பாரும்
[3]மாதுவிஷந் தீர்த்தவர்க்கு [4]மாநிலத்தோர் தாமறிய
போதத் திரவியமும் பொன்பணங்க ளுங்கொடுத்து

போவென்று [5]சொல்லிவிட்டாற் போகானோ வென்பாரும்
கூவென்று சொன்னாக்கால் குற்றம்வரு மென்பாரும்
காட்டிலி வனைநாம் கடத்திவிட்டோ மானாலும்
நாட்டில ரசன்நமை நாக்கறுப்பா னென்பாரும்

மண்ணாட்டுச் சொல்வதற்கு [6]வாக்கெழும்ப மாட்டாமல்
எண்ணாத தெண்ணி யிவர்களி ருக்கையிலே.

## மக்களில் ஒருவன் மன்னனிடம் தன் கருத்தை வெளியிடுதல்

தேறியொரு மன்னன் [7]தேர்ந்தரசன் முன்பில்வந்து
கூறுவான் செய்தியொன்று கும்பிட்டுத் தெண்டனிட்டு

அரசர் பெருமானே அல்லோர்க்கும் [8]நாயகமே
[9]விரைசேர் மணிக்குடைக்குள் மேதினியை ஆண்டவனே
மாறாத கீர்த்தி [10]வளரும் பெருமானே
[11]வீறாக நானுமொரு விண்ணப்பஞ் [12]செப்புகிறேன்
கீடிமீண்ட மன்னனுக்கு கனவரிசை கள்கொடுத்து
[13]படிமீதிலே புரக்கும் பார்த்திபர்கள் போரேறே
வேண்டிய பொன்னும் வெகுமான முங்கொடுத்து
ஆண்டவனே நீர்தாம் அனுப்பிவிட வேணுமையா

தன்னூர்க்குப் போகஅவன் றன்னை யனுப்பிவிட்டு

1289. பார்த்திபர் — அரசர். 1289. போரேறு — போர் செய்யவல்ல வீரன்.

**பாடவேறுபாடு:** 1. சாற்று 2. ஆருமற்ற மந்திரவாதி 3. பார் 4. பாரிலுள்ளோர் 5. சொன்னால் 6. வாய்திறக்க 7. தெளிந்தரசன் முன்பதிலே 8. தான்கோவே 9. விரைய 10. வளருகின்ற என்கோவே 11. வீறா யடியேன் ஓர் 12. சொல்லுகிறேன் 13. சதிராய் குதிரைகுடை தானதையும் தான்கொடுத்து.

Some averred quite solemnly
That a promise had to be kept at all costs.
Why not the king pack off the mendicant
Who cured his daughter of snake bite
With gold and other riches?
Would he refuse to go
If offered a tempting package?
In case we chase him to the forest,
The King is sure to cut our tongue.
So mutely mused many
Who lacked the courage to speak out.

### A Citizen speaks

One of the citizens came forward
Paid obeisance to the king
And spoke as follows:
Great king, leader of men
Ruler with a rising reputation
Permit me to make a submission.
Provide the saviour of the princess from snake bite
With enough pelf and rich rewards
And pack him off to his place.

[1]மின்னார்க்கு யிப்போது வேறுமணஞ் செய்யாமல்
[2]சொந்தமுடனே விஷத்தை சோதித்து நீக்கியிங்கே
வந்தயி ரப்பனுக்கு மாலையிடு [3]வோமாகில்

செம்பொன் முடிசூடி [4]தேசமதை யாண்டிருந்தால்
அம்புவியை யாளும் அரசருக்கு மேராது

### மன்னன் மறுத்து சினந்துரைத்தல்

சொன்னமொழி யைக்கேட்டுத் துங்கமுடி மன்னவனும்
[5]நன்னயமா கச்சிரித்து நாடியொரு வார்த்தைசொல்வான்.

மறுத்தோன்றும் வண்ணம் மகிழ்ந்துமே நீங்களெல்லாம்
[6]அரிதாயு ரைத்தீரே அதியரசன் முன்னாளில்
நெறியாகத் தன்வார்த்தை நிலைதவறா தபடிக்கு
குறியா யவனும் குறித்தமொழி தப்பாமல்

[7]பரிவாய் மகரமதைப் படுத்தபண்டா ரந்தனக்கு
திரைசேர் மடந்தையரைச் செய்துகொடுத் தானிலையோ
[8]கமனமதாகத் திரியுங் கல்விவித்து வான்களுக்கு
குமணனுந் [9]தன்றலையைக் கொய்துகொடுத் தானிலையோ

[10]அன்றுஅரிச் சந்திரனும் [11]அன்புடனே யோர்மொழிக்காய்
குன்றாமற் றேசமதைக் கோசிகற்கு யீந்திலையோ

---

1290. வெகுமானம் — நன்கொடை. 1293. மின்னார் — பெண். 1300. மறு — குற்றம்; களங்கம். 1304. மகரம் — மீன். 1304. படுத்த — கொணர்ந்த. 1305. மடந்தை — பெண். 1306. கமனம் — செல்லுகை. 1309. கோசிகர் — விசுவாமித்திரர். 1301-1309. பார்வதியம்மன் காவியத்தில் வருகின்ற அதியரசன் என்ற அரசன், கடலிலிருந்து மீனைத் தேடித்தந்த பண்டாரம் ஒருவனுக்குத் தன் மகளை திருமணம் செய்து கொடுத்த செய்தியும், குமணன் சாத்தனாருக்குத் தன் தலையைக் கொய்து கொடுத்த செய்தியும், அரிச்சந்திரன் விசுவாமித்திரர்க்குத் தன்நாட்டை ஈந்த செய்தியும் சொன்ன சொல் தவறாமைக்கு எடுத்துக்காட்டாகச் சுட்டப்படுகின்றன.

பாடவேறுபாடு: 1. மின்னாரை வேறேமணம் வேந்தருக்கு சூட்டுமென்பார் 2. இந்தப்படியே மணந்தான் இப்போது செய்யாமல் 3. வீராகில் 4. தேசங்களிலே இருக்கும் 5. மன்னர் பெருமான் மறுத்துரைத்தார் அம்மானை 6. அரியா துரைத்தாய் 7. மகளை தனைப்பிடித்து வந்த பண்டாரந்தனக்கு 8. பூதத்திலே 9. தேவகியை 10. பண்டே 11. பகரும்.

Instead of finding another groom for the princess,
If this beggar were to marry her
And inherit the crown
It would be unseemly and inappropriate
Lowering the dignity of kingship

### The King reacts angrily

Listening to the citizen's submission,
The King, wearing a smile spoke:
In your elation, you have made a suggestion
That is likely to reflect on me.
Did not in the distant past
A king marry off his daughter to
A Paṇṭāram commoner
For salvaging a fish from the sea
And keep his word sacred?
Have you not heard of Kumaṇaṉ
Who parted with his head
In favour of Cāttaṉār
And thereby honour a promise?
To keep a pledge
Did not king Ariccantira
Give his kingdom to sage Kōcika?

அப்படித் தானல்லோ [1]அவர்பேறு பெற்றார்கள்
இப்படிக் கொத்தபெரியோர் இன்னம்வெகு பேர்களுண்டு

ஏன்சொன் னீரந்தமொழி எந்தனக்கு மேராது
நான்சம்ம தித்து[2]விட்டால் நஷ்டமுண்டோ வுங்களுக்கு
குறித்தொரு வனுக்குமணம் கூறினபெண் ணானதையும்
மறுத்தொரு வர்க்கீந்தால் வசையென் றறியீரோ

மெய்ப்பாக வந்துவெறும் வீணரைப்போ லேவுரைத்தாய்
அப்பாலே போவென் றரசன் சினந்துரைத்தான்.

## மன்னனின் கருத்துப் பிடிப்பும் மக்களின் மனமாற்றமும்

**விருத்தம்**

20. வேந்தனு மிந்த வார்த்தை வேகமா யுரைத்த [3]பின்பு
சூழ்ந்திடும் பேர்க ளெல்லாம் சொற்படி கேட்போ மென்று
போந்துல காளுங் கோவே புத்திதான் சாமி யென்று
[4]சேர்ந்தினி நாங்க ளிப்போ செய்பணி யருளு மென்றார்.

## மகளின் திருமணத்திற்காக மன்னன் நகரை அலங்கரிக்கச் சொல்லுதல்

**வேறு (நடை)**

21. பணிவிடைதா னுங்களுக்குப் பண்பாகச் [5]செப்புகிறேன்
கணிதமுட னெங்குமுள்ள காசினி யோர்களறிய

இத்தலத்தில் நாமும் இருக்குமணிக்கோ வில்மட்டும்
நத்தலமாய் நீங்கள் [6]நடைகாவ ணங்களிட்டு
பட்டுவி தானங்கள் [7]பலவிதமா கப்புரிந்து
எட்டுத் தெருவும் இதமாய லங்கரித்து

தோரணங்கள் நாட்டித் துலங்ககொடி கள்கட்டி
பூரணக்கும் பந்தெருவில் பொற்றேரு கணிறுத்தி

---

1315. வசை — குற்றம். 1316. வீணர் — சோம்பேறி; துன்மார்க்கன். 1323. கணிதம் — அளவு. 1325. காவணம் — பந்தல். 1328. தோரணம் — அலங்கார வளைவுள்ள வாயில். 1329. பூரணக் கும்பம் — மாவிலை தர்ப்பை முதலியவற்றால் அலங்கரித்து நீர் நிறைக்கப்பட்ட குடம்.

**பாடவேறுபாடு:** 1. அருள்பேறு 2. துண்டால் 3. போது 4. செகந்தளில் **5. சொல்லுகிறேன்** 6. நிழல் 7. பலவிதங் களும் வகுத்து.

Their claim to immortality and fame
Rested on such sublime acts.
There were many other men
Who were conscientiously true to their word.
Knowing all this why do you suggest something
Unbecoming of a king like me?
Is it not gross slander
To withhold a girl already promised?
Will it not reflect
On my reputation?
Off you go now
Who have volunteered advice
That smacks of flippancy
And is worthy only of a wasterel.

### The people agree to abide by the King's order

20. On hearing the torrent of words,
The crowd experessed its desire
To abide by the King's order
Asked him to instruct them suitably.

### The King wants the city to be decorated for his daughter's marriage

21. 'I shall enumerate the services called for
In clear unambiguous words
Couched in elegance and courtesy.
Quickly take steps to erect a shamiana
Streching from here to the temple.
Decorate the place in myriad ways,
Let the eight streets wear a festive look
With festoons of flowers and leaves,
Flags fluttering and flapping in the air
The vessel carrying holy water
Given pride of place.

தாழைமல ரும்நல்ல தாமரைப்பூ மாலைகளும்
வாழைக்க முகுகுலை வாய்த்த கரும்புடனே

பொன்மாலை [1]நன்மாலை பூமா லைகளுடனே
அம்மாலை யெல்லா மழகா யலங்கரித்து
நேத்திர மாக நிலைவிளக்கு நின்றிலங்க
கோத்திரத் திலுள்ளோர் கொலுவிருக்கும் மேடைகளும்

தூக்குவிளக் குடனே தூண்டாச் சுடர்விளக்கும்
வர்க்குடனே யிந்தவகை கனெல்லாஞ் சீக்கிரத்தில்
கலியாண மென்றுசொல்லி காசினியெல் லாமறிய
**வலுவாய் பறைசாற்றி வாருமென்று தானுரைத்தான்.**

அரசன்மொழி தப்பாமல் அந்தப்படி யேயவர்கள்
**விரைவா யலங்கரித்து மீண்டுவந்தா ரம்மானை.**

## சேனைப்படை அணிவகுப்பும் பல்லினத்தோர் வருகையும்

புணிவிடைகள் செய்துமணப் பந்தலது இட்டபின்பு
அணியிட்டார் சேனைபடை ஆனைகுதி ரைத்திரளும்

**ஒட்டகை [2]கோலால்வண்டி ஒரு லக்ஷங் காலாளும்**
[3]பட்டையம் கேடயங்கள் பதினெட்டு ஆயுதமும்
வில்லணியும் வாளணியும் வேந்தர்பெரு மான்படையும்
வல்லணிய தாகவங்கே வாறதுரை [4]மக்களுடன்

சாதிபதி னெட்டுவகை சலுப்பர் துலுக்கர்களும்
[5]காதிவருந் தொட்டியரும் கன்னடியர் [6]சிங்களரும்

1331. கமுகு — பாக்குமரம். 1334. நேத்திரம் — கண்; பட்டாடை. 1335. கோத்திரம் — வமிசம். கொலு — ஆஸ்தான மண்டபம். 1336. தூக்கு விளக்கு — தொங்கு விளக்கு. 1336. தூண்டா சுடர் விளக்கு — தூண்ட வேண்டாதபடி எப்பொழுதும் எரியும் நந்தாவிளக்கு. 1344. ஒட்டகை — ஒட்டகம். 1345. பட்டையம் — வாள். 1348. சலுப்பர் — சணலிலிருந்து நாரெடுக்கும் ஒரு சாதியைச் சார்ந்தவன்; சணப்பன். துலக்கர் — முகமதியர். 1349. தொட்டியர் — நாயக்கர். 1349. கன்னடியர் — கன்னட நாட்டான். சிங்களர் — ஈழநாட்டான்.

**சுவடிச்சொல்:** 1348. சலிப்பர்.

**பாடவேறுபாடு:** 1. பூமாலை பூசனங்க ளானதுவும் 2. கால்வண்டி 3. ஒட்டையமுங் 4. தானிகளும் 5. கருதி 6. கன்னடரும்.

Let garlands of lotus and other flowers
Along with sugarcane and plantain trees
With fruits raw and green
Adorn the pathway
Besides the lamp with the pedestal
Let there be hanging lamps fixed
Above the platform where kinsmen will meet.
Let wide publicity be given
Through the use of the tom-tom
About the wedding in the offing.
So ran the order of the King
Which was executed to perfection.

## The arrival of guests and others

After the shamiana was erected
The various units of the army.
The infantry, the cavalry
Elephant and camel forces
Along with countless mercenaries
Drew up to offer formal salute.
Swords, javelins, sheaths and arrows
Lay cheek by jowl,
People hailing from eighteen castes
And different regions
Muslims, workers on fibre and Nāyakkars
Were present with Kannadikās and Sinhalese.

## பலவகையான அலங்கரிப்பும் வாத்தியங்களும் சூழ்ந்து வருதல்

முத்துக் குடையும் முறுக்குவர்ன நற்குடையும்
பத்திபத்தி யாக பவள [1]மணிக்குடையும்

சந்திரவட் டக்குடையும் சகலாத்துப் பூக்குடையும்
இந்திரவா ளிக்குடையும் இடக்கியஞ்சே றாடிகளும்
வெஞ்சா மரையும் விருதுகுஞ்ச மானதுவும்
குஞ்சரங்கள் மேலே கொடிவிருது பேரிகையும

பஞ்சவர்னத் தீவட்டிப் பகலேற்றிக் காளாஞ்சி
அஞ்சுவர்ணக் கொடியும் ஆலத்திக் காரர்களும்
பல்லக்குக் காரர்களும் பட்டாளம் பாளையமும்
வல்லவட நாட்டு வன்னியருஞ் சென்னியரும்

தண்டிகையும் மூடாவும் சதுரங்கக் காலாளும்
கண்டிலக்க மில்லையவர் காலாளாய் வாறவர்கள்
மத்தளங் கொம்புகுழல் வாத்தியங்க ளானதுவும்
வெற்றி முரசுதவில் விருதுதா ரைதிடிமன்

பத்தி விளக்குப் பகல்விளக்குக் காளாஞ்சி
குத்து விளக்குக்குலை வாழைகளிற் றானிருத்தி
நாகசுரங் கொம்புகுழல் நவுரி[2]சின்னம் வீராணம்
சேகர மான திடிமன்டம் மானமுடன்

கொட்டுந் தவில்முரசு குரைகடல்[3] போலவதிர
எட்டுத் திசையும் இடிபோல் வெடிமுழங்க
கருநாகக் குத்தி கருமருந்து பூவாணம்
ஒருகாத நீள மொழுங்காக குத்துவெடி

கட்டு வெடியுங் கவுத்துவெடி சக்கரமும்
மட்டில்லா திந்த வகைகளெல்லாந் தானடத்தி

---

1352. சகலாத்து — ஒருவகைக் கம்பளித்துணி. 1353. இடக்கியம் — தேர்க்கொடி. சேறாடி — ஒரு வகை விருது. 1354. வெஞ்சாமரை — இராச சின்னமாகக் கொள்ளப்படும் கவரிமானின் மயிர்க் கற்றை. குஞ்சம் — பூங்கொத்து. 1355. பேரிகை — முரசு; பறை. 1356. தீவட்டி — தீப்பந்தம். காளாஞ்சி — தாம்பூலமெடுக்குங்கலம். 1357. ஆலத்தி — தீபாராதனை. 1358. பாளையம் — சேனை. 1359. வன்னியர் — ஒரு சாதியினர். சென்னியர் — கூத்தர். 1360. தண்டிகை — பல்லக்கு வகை. 1363. தாரை — நீண்ட ஊதுங்குழல். 1366. நாகசுரம் — துளைக்கருவி வகை. நவுரி — நீண்ட எக்காள வகை. வீராணம் — ஒருவகைப் பெரிய பறை. 1367. டம்மானம் — உடுக்கை என்னும் சிறு பறை. 1368. குரைகடல் — ஆராவரிக்கும் கடல்.

சுவடிச்சொல்: 1353. இடக்கயம் 1356. தீவெட்டி.

பாடவேறுபாடு: 1. வர்ண 2. குழல் 3. போல் முழங்க.

## The Colourful welcome

Umbrellas of various shapes and hues
Wrought of flowers, wool, pearl and coral,
Imposing flagstaffs
Impressive lamps of different types
Drums mounted on elephants
Torches galore,
Plates holding auspicious betel leaves,
Palanquins and palanquin bearers,
Infantry men and other fighting forces.
Priests and professional dancers,
Musical instruments like drum and pipe
The procession to welcome the groom
Roared verily like the sea
Against the backdrop of booming fireworks
Marked by variety and colour.

## ஆமையரை மாப்பிள்ளைக் கோலம் செய்தல்

போய்ப்பிழைக்க வந்தவனைப் [1]பூதலத்தோர் தாமறிய
மாப்பிள்ளைக் கோலம் [2]வரிசைசெய்தா ரம்மானை.

பன்னீரால் நீராட்டிப் பரிமளங் களும்பூசி
முன்னிரு காதுக்கு முகனைப் பணியணிந்து
முங்கை மோதாரி முறுக்குவளை [3]கைச்சவடி
தங்கமுடுகு [4]வீரச்சங் கிலியும்பொன் னரைஞாண்

கச்சைப் பிறமிடையிற் கட்டினார் [5]பட்டரைஞாண்
[6]பச்சை மரசதத்தாற் பத்துவிரல் மோதிரங்கள்
இச்சையுடன் மார்பி லேகாவ டம்பதக்கம்
மற்சிக யானபுகழ் மன்மத வீரனுக்கு

பொற்சரிகைக் குல்லாவும் பொன்னின் முடிசூடி
இந்திர வாளிப்பட் டெடுத்திடையி லேயுடுத்தி
மந்திர வாளு[7]மெடுத்து மாப்பிள்ளைக்கு[8]த் தான்கொடுத்தார்

## ஆமையர் — நாகமணிமாலை இருவரையும் மணப்பந்தலுக்குள் அழைத்து வருதல்

சேனை [9]நெருங்கத் திடிமன்டம்மா னம்முழங்க
ஆனையின் மேலே யலங்கார மாகவைத்து
நாகமணி மாலையென்ற நன்னுதலாள் தந்தனையும்
வாகா யலங்கரித்து வாய்த்தபல் லக்கி[10]லேற்றி

நடைகாவ ணத்தூடே நடைசங்கீ தம்முழங்க
விடையேறு மீசன் விமலன் திருவருளால்
விட்ட குறையின் விதியா லிருபேரும்
**பட்டணத்தி லிட்டமணப் பந்தலுக்குள் வந்தனராம்.**

---

1377. முகனை — தட்சணம். மோதாரி — ஒருவகை கை அணிகலன். 1378. சவடி — கழுத்தணி வகை. 1379. முடுகு — மோதிரவகை. பொன்னரைஞாண் — பொன்னாலான அரையணி. 1380. கச்சை — அரைக்கச்சு. 1384. பொற் சரிகை — பொன்னிழை. 1391. காவணம் — பந்தல். 1392. விடை — எருது; காளை. 1392. விமலன் — சிவபிரான்.

சுவடிச்சொல்: 1380. கச்சப் 1382. பதைக்கம் 1384. பொற்சருகை.

பாடவேறுபாடு: 1. பூதலத்தி லுள்ளவர்கள் 2. விதானித்தா ரம்மானை 3. கணணிந்து 4. கனகரத் தினங்கள் 5. தங்க வளை 6. பத்திரமாத்துத் தங்கம 7. கொடுத்து 8. சோலம் சமைத்தார 9. முழங்க 10. லைத்து.

## Honouring the bridegroom

A vagrant in search of living
Was turned into a bridegroom
Openly and publicly by the King.
Dressed and adorned richly and pompously
As befitting a King's son-in-law,
He was given a holy bath in rose water,
Perfume applied liberally to the body,
Ear studs were fixed
Emerald rings for all the fingers
Jewels for the hand and wrist
Girdles made of pure gold
Ornaments for the chest
Bracelets and bangles
Embroidered head wear,
The cupid-like bridegroom
Was gifted a sword as well!

## The arrival of the bride and the bridegroom

With the soldiers lined up
Amidst great pomp, din and music,
On a decorated elephant
The King's daughter Nākamaṇimālai
And the prospective bridegroom
Riding a palanquin
Entered the *shamiana* erected for marriage,
Thanks to the grace of Lord Siva
And as ordained by fate.

## திருமணம் செய்வித்தல்

[1]வந்து மணவறையில் வாகாக வேயிருத்திச்
[2]சந்தமுடன மன்னனுக்கும் தையல்நல் லாள்தனக்கும்
வலுவரசன் பெற்றமக ளார்க்கும்மாப் பிள்ளைக்கும்
[3]குலமரபுக் குள்ளபடி குறையாம லேநடத்தி

சாத்திரத் திலுள்ள சடங்குகளெல் லாம்முடிதது
[5]மாற்றுரையில் லாதமணி மாங்கிலிய முந்தரித்து
நாகமணி மாலைதனை நாகமுனி மைந்தனுக்கு
வாகுமணிப் பந்தலுக்குள் [6]மாநிலத் தோர்களறிய

பட்டணத் திலுள்ள பல[7]சனங்க ளுஞ்செரும
கட்டாய் மணமுடித்து கைப்பிடியுங் கூடியபின்

## மணமக்களுக்குப் பலவகை சீதனப் பொருட்களைத் தருதல்

பணப்பெட்டி யாயிரமும் பரிகரியுங் காலாளும்
கணக்கில்லாத புரவும் காவேரி யுங்குளமும

வாரமிறை [8]பகுதி வையகத்தி லுண்டான
சேரு[9]கப் பலுங்குடியும் சீதன மாகவார்த்து
ஆதிமறை வேதியர்க்கு அன்னதா னங்கொடுத்து
[10]மாதரசி மாப்பிள்ளையும் மணவறையி லேயிருந்தார்.

## திருமணத்தைக் காணவந்தோர்க்கு வரிசைகள் கொடுத்தல்

இருந்த பொழுதவர்க ளெங்கெங்குந் தானிருந்து
திருந்து கலியாணமதில் சிறப்பாக வந்தவர்க்கு

---

1400. மாங்கிலியம் — தாலி. 1405. பரிகரி — குதிரையானை. 1406. புரவு — ஆறு முதலியவற்றி லிருந்து நீர்பாயும் வயனிலம். 1409. வேதியர் — அந்தணர்: பிராமணர்.

சுவடிச்சொல்: 1395. மணவடை 1400. மங்கிலியம் 1410. மாதரசு 1410. மணவடை.

பாடவேறுபாடு: 1. பந்தலுக் குள்வந்து பலகையின் மேலிருத்தி 2. வேந்தனுக் கும்நல்ல மின்னிடையாள் தந்தனக்கும் 3. குலமரபி லுள்ள சடங்கு குறையாமல் 4. குறையாமல் 5. மாத்திரத்திலுள்ள 6. வையகத் 7. பேர்கள் தானறிய 8. பவுரி 9. வயல்தடமும் 10. மாதுமண வாளனுமாய்.

## The Marriage

After seating them comfortably
In the ceremonial shamiana
All the rites according to hoary custom
Were elaborately performed
And the *mańkala sūtrā* was tied.
Thus the marriage of Nākamāmuṉi Maintaṉ
With Nākamaṇimālai
Was solemnized in the shamiana
With the citizens as witnesses.

## Gifts for the couple

One thousand boxes containing money
Elephants, horses and footmen
Fertile land unlimited
With adequate water resources
Were gifted to the couple,
The brahmins good at lore
Were hospitably fed
While the newly married couple
Enjoyed bliss in their chamber.

## Gifts for the quests

For the distinguished guests
Who honoured the wedding by their presence

அன்னங் கறிசோ றடைக்காயுந் [1]தான்கொடுத்து
**வன்னமுடனே [2]யவர்க்கு வரிசைகளெல் லாங்கொடுத்தார்.**

## ஆமையர் மனைவிக்கும் மன்னனுக்கும் சொல்லுதல்

எல்லாருந் தங்கள்மனைக் கேகியே போனபின்பு
வல்லபுக [3]ழாமையரும் மங்கையரு மாகவேதான்
இருந்து சிலநா ளிவர்வாழும் நாளையிலே
மருந்துபுகழ் தேவியற்கும் மாமனுக்கு [4]மேதுரைப்பான்

குன்றாத [5]வல்லபுகழ் கோமானே [6]நீருமிப்போ
நன்றாக வேயிருந்து ராச்சியத்தை யாண்டுவந்தீர்
அன்று மடிந்தபேரை [7]அன்றடக்கஞ் செய்யாமல்
**[8]கன்றியிடு காட்டில்வைத்து காத்தங் கிருப்பதுவும்**

ஈனனீ னாப்பேச்சி என்றங் கிருபேரும்
ஓநாய் போலோடி வுடன்வாற பேர்களுக்கு
நன்றாய்ப் பயந்திருந்து நாட்டை யரசாண்டீர்
[9]இன்றுமுத லவ்ர்க ளிங்குவ ராதபடி

பேச்சியொடு பேயன் பிணம்பிடுங் [10]காமலினிமேல்
ஆககினைகள் செய்துஅவர் களிங்கே வாராமல்
தடுத்து விலக்கியவன் தன்[11]சிறையும் நான்பிடித்து
[12]விடுத்து முழிக்குமுன்னே வீறுடன்போய் வாறேனென்று

வாய்ப்பகட்டாய் சொல்லியவன் வரிசைசே வல்வாங்கி
போய்பகட்டாய் வார்த்தைசொல்லி **போகத் துடங்கினனே.**

---

1413. அடைக்காய் — பாக்கு; தாம்பூலம். 1419. கோமான் — அரசன். 1422. இடுகாடு — சுடுகாடு. 1428. ஆக்கினை — தண்டனை. 1431. பகட்டு — ஆடம்பரம்.

**சுவடிச்சொல்:** 14·20. ராஷியத்தை 1424. ஓனாய் 1430. மிழிக்குமுன்னே.

**பாடவேறுபாடு:** 1. வெள்ளிலையும் 2. நல்லவகை கள்எல் லாங்கொடுத்து 3. மன்னவரும் 4. மேதுசொல்வான் 5. நல்லபுகழ் 6. நீயுமிங்கே 7. அடக்காமலே நீங்கள் 8. பண்டுலகி லுண்டோ பரண்போட்டு காத்தவர்கள் 9. எண்ணாம லினிமேல் 10. காதபடிக்கு 11. இறகையும் பிடுங்கி 12. விடிந்து.

Choice food, rice and curry
Along with betel nuts to chew
Were provided on the festive day.

## The tortoise addresses his wife and father-in-law

When all had left for their homes
And the tortoise had spent a few days with his wife,
He addressed his father-in-law:
Revered king with spotless reputation,
You have been ruling the kingdom well,
But always living in perpetual fear
Of dreadful Pēyan̲ and his dangerous wife
Who forbade the burial of bodies on the day of death
And hounded everyone like wild wolves.
Noble King, shed your fear forthwith
For, henceforth they shall not dare to snatch bodies
Or come any where near your abode.
Such drastic action shall I take
That they would cease to be
Threats to everybody's body and soul.
Give me leave to proceed
Before it becomes dawn,
I shall soon fetch the magic cock as well
Said he with pride and left the place.

## ஆமையர் ஈனகிரி மலைக்கு வருதல்

இந்திர மாஞால மிலங்குபிர காசமென்ன
மந்திரத்தை யுன்னியவன் வந்தான் [1]வெளிதனிலே
ஈனகிரி யென்று [2]யிருந்தமலை யானதிலே
ஞானமுனி வன்புதல்வன் நாழிகைக்குள் வந்தனனே
வந்துமலை யினுட வளமான தும்பார்த்து
சிந்தையுட னம்மலையின் சிறப்பதுவெல் லாமறிந்து
மலைப்பிலத்துப் பேயன் வலுபேச்சி தானிருக்கும்
கல்லடர்ந்த கல்ப்புடையைக் கண்டனன்கா ணம்மானை.

## பேயன் பேச்சி இருக்கும் இடத்திற்கு ஆமையர் வருதல்

விருத்தம்

22 கல்ப்புடை கண்ட போது காவலன் மனது மெய்த்து
இப்புடை தன்னி லிங்கே இருவரு மிருப்பா ரென்று
மெய்ப்புடன் கச்சை கட்டி வீரவா ளெடுத்துப் பூட்டி
வைப்புட னவர்கள் வாழும் வலுபுடை தன்னில் வந்தான்.

## பேயன் பேச்சி காட்டிற்கு ஏகுதல்

நடை

23. வந்துபுடை வாசலிலே வாளுமித மாய்ப்பிடித்துச்
சிந்தை தெளிந்தவனும் தேறிநிற்ப தற்குமுன்னே
பேச்சியொடு பேயன் பிணம்பிடுங்கித் தின்பதற்குப்
[3]பாச்சல் புலிபோலே [4]பறியவே வேகிவிட்டார்.

---

1433. இந்திரமாஞாலம் — மாயவித்தை. 1434. உன்னி — தியானித்து. 1440. கல்புடை — கற்புடை; மலைக்குகை. 1442. புடை — பக்கம்; இடம்.

சுவடிச்சொல்: 1437. வழமானதும் 1445. வாழுமித.

பாடவேறுபாடு: 1. மலைதனிலே 2. இசைந்தகிரி 3. பாயும் 4. பதறியங்கே ஓடிவிட்டார்.

### The tortoise reaches Iṉakiri

The tortoise came out
Resting his mind on the mystic incantation
To which he had been initiated
22. And which had built-in occult powers,
Reached Īṉakiri in no time,
Mused on the mountain and its merits,
And soon located the cave of Pēyaṉ and Pēcci

### Pēyaṉ and Pēcci make their appearance

23. While standing at the cave's mouth
With sword in his hand
Ere he steadied himself and collected his thoughts
Like two springing tigers
Pēyaṉ and Pēcci made their appearance.
With a view to snatching bodies.

## பேச்சிமகள் ஆமையரைக் கண்டு மயங்கி வினவுதல்

இருபேருந் தானகல ஏகியே போனபின்பு
பெருகுமலர்க் குழலாள் பேச்சிமகள் தானொருத்தி

வந்துநிற்கும் மன்னனுட வாக்குவடி வுந்திறமும்
சிந்தையுறக் கண்டு தியங்கி மயங்கியவளும்
அங்கவளுங் கண்டு அவன்மேல் வெகுமயலாய்
எங்கிருந்து யிங்கேநீ ரேன்வந்தீ ரென்றுரைத்தாள்.

## ஆமையர் வினாவும் பேச்சிமகள் பதிலும்

வந்தேனா னுன்னையெந்தன் வசமாக்க வேணுமென்று
தந்தையரு முன்னுடைய தாயாருமெங் கேயென்றான்.
பேச்சியொடு பேயனென்னை பெற்றெடுத்தார் மாபாவி
பாச்சற் புலிபோல் பலவிடமுந் தான்றிரிவார்

பட்சிப் பறவைகளும் பாரிலுள்ள மாடாடும்
எச்சளளியோர் வலியோர் [1]ஏத்த மனிதரையும்
கொன்று கொலைசெய்து கொடும்பிணங் களைவிழுங்கி
இன்று [2]வருவார்க ளீனனீ னாப்பேச்சி

[3]தீராத கோபமுடன் தீப்போற் விழிசிவந்து
[4]ஆரானா லுமவரை அசையிடுவார் கண்டீரே
வங்கு நரிபோல் வலுபிணங்கள் தின்கிறவர்
பங்கப் படுத்தியும்மைப் பாதகங்கள் [5]செய்திடுவார்

வலுகடுகாய் போலே மலையிடத்தில் வாழ்கிறவர்
கொலையிடுவார் உம்மைக் குளிர்ந்தமொழி சொல்லறியார்
வங்கண மதாகவெகு வார்த்தைகளைச் சொன்னாலும்
தங்குண மில்லாதார் [6]தயவறிய மாட்டாரே

1451. வாக்குவடிவு — வடிவழகு. 1464. அசையிடு — வருத்துதல். 1465. வங்குநரி — மலைக்குகை. 1467. கடுவாய் — கழுதைப்புலி. 1469. வங்கணம் — நட்பு; காதல். 1470. தயவு — அன்பு; அருள்.
சுவடிச்சொல்: 1459. பக்ஷிப் 1460. எழியோர்.

பாடவேறுபாடு: 1. எதிர்த்த 2. அவர்கள் 3. சீறென்ற றியார்கள் 4. ஆரென்று பாரார் 5. பண்ணி வைப்பார் 6. தவறு செய்ய.

### The daughter to Pēcci falls for the tortoise

After Pēyan̲ and Pēcci left the place.
Pēcci's daughter with a sweet tongue
Espied the stranger
Whose form and conduct
Impressed her so much
That she instantly fell for him
Queried who he was
And his errand there.

### Pēyan̲'s daughter replies to the tortoise

Spake the tortoise:
 I have come here
 To make you my own.
 Where are your father and mother?
Spake Pēyan̲'s daughter:
 Great sinners Pēyan̲ and Pēcci
 Are my parents.
 They are given to wandering
 Like the springing tiger.
They mercilessly kill and eat
Birds, cows, goats and men
Who dare to question them.
Any moment they are expected here.
With red eyes bespeaking wrath
They spare not anybody.
Eating raw human flesh
Like cave-dwelling foxes
They are sure to harm you.
Like the hyena of the mountains
They will kill you in cold blood
Soft words and sobriety
Are totally alien to them.
Even if you are kind and gentle
They will not cease to be cruel
Since compassion and pity
Are unknown to them.

கோவிக்கும் பேயன் கொடியவளீ னாப்பேச்சி
பாவிக் கிரையாய் பழி[1]கொடுக்க வந்தீரோ
வந்தவுமக் கென்னையவர் மாலையிட்டுத் தாராட்டால்
எந்தவித மாகிலும்நா னேகுவே னும்மோடே

## பேச்சிமகள் ஆமையரை மறைந்திருக்கச் சொல்லுதல்

ஆனாலு மின்னமொரு ஆனபுத்தி சொல்லுகிறேன்
ஈனனொடு யீனாப் பேச்சி யிருபேரும்
வருமளவுஞ் சற்றே மறைய ஒருபுறத்தில்
இருமவர்கள் வந்தால் இருபேர்கள் [2]தம்முடனே

தின்மையுட னவர்கள் தீங்குசெய்ய வேணுமென்று
உம்மிடத்தில் வந்து உறுபூசல் செய்யாமல்
நன்மையுடன் புத்திசொல்லி நானவரை ஆணைகொண்டு
வண்மையுட [3]னும்மை வரவழைத்தால் நீர்வாரும்

அழைக்கு மளவும்நீ ரப்பா லிருவுமென்று

## ஆமையர் மறைவிடத்தில் மறைந்திருத்தல்

பழிப்பில்லா மங்கையவள் பகர்ந்தமொழி யைக்கேட்டு
சிரித்து மகிழ்ந்தவனும் செப்புவா னோர்வார்த்தை
ஒருத்தி யுனைப்போல் உறுதியுள்ள[4]வள்காணேன்

[5]நிச்சயமாய்ச் சொன்னாய் நிறைந்தநவ ரெத்தினம்போல்
பேச்சிக்கு நீயுமொரு பிள்ளையென வேபிறந்தாய்
மோசமில்லா தமலைக்குள் முரட்டு [6]மரத்துடனே
வாசமுடன் சந்தனமும் மகிழ்ந்துடனே நிற்பதுபோல்

---

1480. உறுபூசல்—கைகலந்த யுத்தம். 1481. ஆணை—அதிகாரம்.

**சுவடிச்சொல்:** 1489. முறட்டு.

**பாடவேறுபாடு:** 1. போக 2. தன்னோடே 3. புத்திசொல்லி மேவிய ழைத்ததுண்டால் 4. பேர்களில்லை 5. நீல வர்னச் செப்புக்குள்ளே 6. மரங்களைப்போல்.

Have you come all the way
To be killed by short tempered Pēyan̲
And sinister Pĕcci?
If my parents on their return
Refuse consent to marry you
I shall somehow come with you.

### Pēcci's daughter wants the tortoise to go into hiding

I suggest that you go into hiding
Till my parents come.
Meanwhile I shall tactfully
Gain upon them
And see that they do not harm you.
Beware, till I signal you to come out
Kindly keep away.

### The tortoise follows her advice

Listening to the speech of the simple girl
The tortoise felt highly elated and spoke:
True, I haven't so far run into
Any girl with such firm convictions.
Like a pure gem with inherent worth
Your speech or assurance
Pointed to Your faith and confidence.
Like the fragrant sandal wood tree
In the midst of wild trees,

பேச்சி வயிற்றில் பிறந்திருந்து முந்தனக்கு
தாழ்ச்சியில் லாப்புத்தி தரிப்பித்தா ரீஸ்பரனார்
என்றுசொல்லி மன்னவனும் இங்கிதமாக [1]மகிழ்ந்து
[2]பண்டு புருஷா மிருகத்தின் பால்வாங்க

வீமன் மலைக்குள் விரைவாக வந்தபின்பு
தாமிருக மீன்றகுட்டி தானுமொழி யக்கேட்டு
வீமன வனன்று விரைந்தொழித்த வாறதுபோல்
ஓமென் றிவனு மொளிந்திருந்தா னம்மானை.

## பேயன் பேச்சி தம் இல்லிடம் வருதல்

**விருத்தம்**

24. ஒளிந்தவ னிருக்கும் போது ஒருநொடி தனிலே யந்த
பழித்தொழில் பேயன் பேச்சி பலவிட மலைந்து [3]மீண்டு
களித்தவர் வாழு மந்த கல்புடை தனிலே வந்து
நளித்தவர் மகளைப்பார்க்க நலிந்தவள் சரியக் கண்டாள்.

## பேச்சி தன்மகளின் நிலையினைக் கண்டு வினவுதல்

**நடை**

25. சரிந்த மகளைப் பேச்சி தட்டி யடித்தெழுப்பி
திருந்த வொருவார்த்தை [4]செப்பினள்கா ணம்மானை.
ஆவியுடன் தீயிட்ட டுப்பிலுலை வையாமல்
பாவி மகளேநீ படுத்துறங்கக் காரணமேன்

## பேச்சிமகள் தன் தாயிடம் உரைத்தல்

என்றமொழி கேட்டுமந்த ஏந்திழையு மேதுசொல்வாள்
[5]இன்றுமினி மேலும்நம்மால் ஏலாது வேலைசெய்ய
அயத்தி தலைவலிக ளாலோச னைகடிதாய்
[6]கயத்தியமாக நானும் [7]கஷ்டப் படுகிறதால்

---

1493. இங்கிதம் — குறிப்பு; கருத்து. 1494. பண்டு — பழமை; புருஷாமிருகம் — புருஷ முகங் கொண்ட விலங்கு வகை. 1501. கல்புடை — மலைக்குகையின் பக்கம். 1505. உலை — சோறு சமைத்ததற்காகக் கொதிக்க வைக்கும் நீர். 1508. ஏலாது — இயலாது. 1510. கயத்தியம் — கலங்கு தல்; சோர்தல்

**சுவடிச்சொல்:** 1498. மொழிந்திருந் 1507. ஏந்தின்ள 1510. கயித்தியமாக.

**பாடவேறுபாடு:** 1. வார்த்தைசொல்லி 2. மன்று 3. கொண்டு 4. செப்புவாள் அம்மானை 5. என்னாலே 6. கக்கிஷமாய் 7. கட்டில்தனில் படுத்தேன்.

You are endowed with supreme goodness
(Thanks to the grace of Siva)
Though your mother is crude and cruel.
Like Vīma of old who stepped into
The cave of the animal with a masculine face to milk it
And wisely withdrew on hearing the voice of its kid,
The tortoise also discreetly hid himself.

## Pēyaṉ and Pēcci return to the cave

24. Hardly had the tortoise hidden himself
When Pēyaṉ and Pēcci
Doing an obnoxious job
Returned to the cave
Where they found their dear daughter
Languishing drowsily.

## Pēcci addresses her daughter

25. Pēcci patted the slumbering daughter
To wake her up.
She then asked her anxiously
Instead of boiling water to cook
Why are you sleeping?

## Pēcci's daughter speaks to her mother

How did Pēcci's daughter react
To her mother's words?
Hereafter mummy, I cannot work
As great exhaustion is my lot.

காச்சிக் கலக்கியுங்கள் கையாற் குடிப்பதல்லால்
பேச்சிபெற்ற பேச்சிதனை பேயேற்றங் கொள்ளாதே
இந்தநோய் தீர்ந்து எழுந்திருந்தே னானாலும்
[1]உந்தன்கண் காணாமல் ஊருவழி நான்போவேன்

போவேன் பரதேசம் பொருந்தாது வுங்களிடம்
தாவான குண்டுகுழி தன்னில்வி ழுந்துசாவேன்
குவளை விழியாளும் கூறினதைத் தான்கேட்டு
மகளேயுனக் குயிப்போ வந்ததுய ரேதுரையாய்

[2]குறையே தெனக்குயிப்போ குமரிருந்து நான்[3]சடைக்க
பறையாதே வார்த்தைகளை பரதேசம் போவனென்றாள்.

## மகளின் திருமணத்தைப் பற்றி பேயன் பேச்சி பேசுதல்

[4]என்னைவிட்டுத் தேசவழி ஏன்போகி றாய்மகளே
உன்னைமணஞ் செய்யவொரு மாப்பிள்ளையை [5]ஓர்நொடிக்குள்
கொண்டுவரு வோமெனவே கூறினார் களிவர்கள்
அன்றவளை நோக்கியந்த அன்னைபிதா வுமுரைக்க

## பேச்சிமகள் தன் பெற்றோர்களிடம் சத்தியம் கேட்டல்

களிகூர்ந் தவர்கள்நின்று கட்டுரையைச் சொன்னவுடன்
[6]நளிசேரும் பூங்குழலாள் நங்கையுமங் கேதுரைப்பாள்

தேடித்திரிந் தெனக்குச் சேகரிக்க வேண்டாங்காண்
நாடியொரு வரிங்கே நம்மிடத்தில் [7]வந்ததினால்
அழைக்கவரு வாரவரும் அஞ்சுகிறா ருங்களுக்கு
[8]இளைக்கஅவ ரையொரு யீடுசெய்வ தில்லையென்று

மலையாம லெந்தனக்கு வலக்கைபோட் டாணையிட்டு
தலையிலடித் துண்மையுடன் சத்தியஞ்செய் வீராகில்

---

1512. பேய்பற்றம் — பேய்பிடிக்கச் செய்தல். 1512. பரதேசம் — அயல்நாடு. 1519. சடைக்க — சோர்வடைதல். 1530. ஈடு — துன்பம்

பாடவேறுபாடு: 1. [illegible] 2. குறையேது நான் 3. சலிக்க 4. எங்களை 5. சீக்கிரத்தில் 6. நளிசேர்ந்த மின்னாள் நளினமுடனங் கேதுசொல்வாள் 7. வந்ததுண்டும் 8. இளையவரை.

Except eating what you provide
I may not be of much use.
Please don't get unduly provoked
Even if I recover fully
I am likely to leave the house
And go to some unknown country.
Who knows, I may even kill myself in a pond.
When the daughter uttered the depressing words.
The mother was terribly upset
Who consoled the girl and pleaded with her
Not to entertain thoughts of any foreign land.

### Pēyaŋ and Pecci on their daughter's marriage

Why do you want to leave me, daughter
And go to a foreign country?
We shall find for you a husband in a jiffy
Said the anxious parents.

### The promise of the parents

When they spoke so,
The girl opened her mouth and said:
You need not search for a husband
As already one has come seeking my hand.
If I call him, he will come
But for fear of bodily harm by you.
If only you give your hand and promise in all seriousness
That he will not be hurt

நட்பாக யிங்குவந்த நல்லபுகழ் மன்னவரை
இப்போத ழைப்பே னெனவுரைத்தா [1]ளேந்திழையும்

## பெற்றோர் சத்தியமும் ஆமையர் வருகையும்

வந்தமன்னர் தன்னையொரு வந்திசெய்வ தில்லையென்று
அந்தப்படி யேயவட்கு ஆணையிட்டுத் தான்கொடுத்தார்
உண்மை செய்தபோது ஒளிந்தவனைத் தானழைக்க
நன்மையுட னேயவனும் நாழிகைக்குள் வந்தனனாம்.

## பேயன் பேச்சி ஆமையரின் அழகைக் கண்டு உபசரித்தல்

வந்தான் கதிரோனும் [2]வானிலெழுந் தாற்போல்
செந்தா மரைபோல் சிறந்த முகத்தழகும்
மந்திரவா ளும்மார்பில் முத்துத் தாழ்வடமும்
செந்தூரப் பொட்டழகும் சிகையில் முடியழகும்

[3]வுன்னமொத்த மார்பன் வடிவு முடலழகும்
பொன்னுமுத்து மாலைகளும் பூண்ட பணியினழகும்
கண்டுமகிழ்ந் தார்கள் கானகப் பேயன்பேச்சி
நன்றுநீர் வந்ததுவும் நன்மகளின் யோகமென்ன

அன்று உபசரித்து அமுதுகறி யுங்கொடுத்து

## மகள் சச்சகிரிமாலையை ஆமையர்க்கு மணமுடிக்கத் தருதல்

உண்டுபசி யாறி உகந்துமக ளார்தனையும்
வையகத்திற் போய்நீர் மணஞ்செய்து கொள்ளுமென
தையலந்த பேச்சி[4]மகள் சச்சகிரி மாலைதன்னை

---

1535. வந்தி — பலவந்தம்; சண்டை. 1541. தாழ்வடம் — கழுத்தணி; உருத்திராக்கமாலை.

**சுவடிச்சொல்:** 1534. ஏந்திளையும் 1537. ஒழித்தவனைத்

**பாடவேறுபாடு:** 1. மெல்லியரும் 2. வானிலுதித் ததுபோல் 3. வர்னமுத்து மார்பழகன் வடிவும் உடல் ஒப்பனையும் 4. அவள்.

I shall summon him to your presence
Who has voluntarily made a friendly approach.

### The tortoise comes out of the hide

When Pēyaṉ gave his word
That he would not hurt or harm
She signalled to the tortoise to come out
And out came he from the hide!

### The Parents satisfied

He looked verily like the rising sun
With his blooming lotus face
Shining magic sword
Chain embedded with pearl round the neck
Glossy tuft, red dot on the forehead
Rich jewels on the chest.
The forest-dwelling Pēyaṉ and Pēcci
Were happy beyond words
Hailed dame luck
Who was favouring the girl
And fed him with choice dishes.

### Offers his daughter to the tortoise

After eating a hearty meal
And enjoying some rest
Pēyaṉ said:
You are free to marry my daughter Caccakirimālai.

துய்யச் சரடு[1] சேர்த்து சொற்பெரிய மன்னன்வசம்
கையைப் பிடித்தவளைக் [2] கருத்துடனே தான்கொடுத்தார்.

## திருமணம் செய்வித்தல்

[3] தாழ்ச்சையி லாஅந்தத் தடவரையி லேவாழும்
பேச்சிமகள் தன்னைமணம் பெருமையுட னேமுடித்து
மாதுமண வாளனுக்கு மகிழ்ந்துமலைப் பேயனவ்ன்

## பேயன் தான் தரப்போகும் சீதனப் பொருள்களைக் கூறல்

சீதனம் வார்க்கும்போது செப்பலுற்றான் மாப்பிள்ளையும்
வன்னமுட னீனமலை வாழுகின்ற மன்னவனே
என்னவகைச் சீதனங்க [4] ளீய்கிறீ ரெங்களுக்கு

அந்தமொழி கேட்டவனும் அப்போதங் கேது[5] சொல்வான்
[6] சந்தோஷ மாகவும்நான் தருகிறே னுங்களுக்கு
மலையில் விளை[7] புரவும் வாழை பலா[8] கமுகும்
கொலைசெய்து நானிதுமுன் கொன்றுதின்ற பேர்களுட

பொன்னுடமை யானதொரு பூஷணங்க [9] ளுள்ளதெல்லாம்
உன்னுடமை என்னுடமை உள்ளதெல்லா [10] முங்களுக்கு
தாரேனா னெந்தன் தயிலப்பா னைமுதலாய்
மாறாமல் சீதனங்கள் வார்க்கிறே னென்று[11] சொன்னான்.

## ஆமையர் கேட்கும் சீதனம்

அந்தமொழி கேட்டரு மையுள்ளமாப் பிள்ளையும்
இந்தவகை களெல்லாம் எங்கள்[12] மனை தன்னிலுண்டு
உண்டெனக்குப் பொன்னும் உடைமை திரவியமும்
பண்டுள்ளோ ரெங்களுட பாட்டனார் [13] தேடிவைத்தார்

---

1551. சரடு — முறுக்குநூல். 1553. தடவரை — வளைவு. 1565. புரவு — நிலம். கமுகு — பாக்கு. 1563. பூஷணம் — ஆபரணம்; அணிகலன். 1566. சீதனம் — வரதட்சணைப் பொருள்.

சுவடிச்சொல்: 1551. சறடு 1566. ஸ்ரீதனங்கள்.

பாடவேறுபாடு: 1. கெட்டி 2. கையிலளித்தார் அம்மானை 3. வாசம்புகழ் மார்பனந்த மலைக் கடலி லேவாழும் 4. எனக்குநீர் தாரீர்காண் 5. உரைப்பான் 6. சிந்தையுட னிம்மலைக்குள் தேன்சொரியும் மாவுகளும் 7. மாவும் 8. மாங்கனியும் 9. ளானதுவும் 10. உந்தனுக்கு 11. உரைத் தான் 12. வீட்டில் உண்டு 13. கெட்டிவைத்த.

He then offered the holy thread
And the hand of his daughter
To the tortoise groom.

## The Marriage

Pēyaṉ living in the bend of a hill
Offered the following things as dowry
To the bridegroom
After the marriage was formally solemnized.

## The details of the dowry

While enumerating the riches from the girl's house
Embodied in a ritual
The bridegroom asked the lord of Īṉamalai
To spell out the items that would be given
Where upon Pēyaṉ said
That he would gladly give fertile land,
Plantain trees, jack trees and palm trees
And the jewels he had laboriously collected
From his human victims
Whom he had eaten mercilessly.
He also promised odds and ends
Including pots to keep oil.

## The tortoise makes a demand

On hearing the words
The darling son-in-law said
All the things you enumerated
Are available with us at home.
Since my grandfather has left behind a rich legacy

பொன்னும் பணமும் பொருட்டல்ல வெந்தனுக்கு
சின்னமதி நுதற்குச் சீர்தனம்வார்ப் பீராகில்
வன்னமுடன் நீர்வளர்க்கும் [1]வரிசைச் சாவலதுவும்
பொன்னுமணிப் பெட்டகமும் பூட்டுந் திறவுகோலும்

இந்தவகைப் [2]படியே எங்களிரு பேர்களுக்கும்
[3]தந்துவிடி லிவ்வளவும் தான்போது மென்றுரைத்தார்.

## சாவல் தங்கமணிப் பெட்டகம் ஆகியவற்றைச் சீதனமாகத் தருதல்

அந்தவுரை கேட்டு அம்மலையில் பேயனவன்
சிந்தை மகிழ்ந்தவனும் சீர்தனமா [4]கக்கொடுத்தான்

அரியபுக ழானதொரு ஆள்வீ ரன்தனக்கு
வருஷமதி லொருநாள் [5]வளமாக வேகூவும்
சாவலுட னேயந்த தங்கமணிப் பெட்டகமும்
ஆவலுட னே[6]யெடுத்து அப்போது கையளித்து

மணமுகித்துப் பேச்சி மகளும்மண வாளனுமாய்
தினமகிழ்ந்து நன்றாய் தெளிந்தங் கிருக்கையிலே

## பேயன் பேச்சி இருவரும் காட்டிற்கு ஏகுதல்

ஈனனுமீ னாப்பேச்சி எப்போதும் போலவர்கள்
வானில்பற வைபட்சி மாடாடு கள்பிணங்கள்

தேடி யிருபேரும் திசை நோக்கிப் போனபின்பு

## ஆமையர் தயிலப்பானைக்குள் தன் விரலைவிடுதல்

நாடிவந்த மன்னவனும் நன்றா யெழுந்திருந்து
கல்லறையும் வீடும் [7]கற்புடையும் பானைகளும்
வல்லபமாய்த் தேடி[8]மறு தயிலப்பா னைதன்னை

---

1572. மதிநுதல் — பிறைநெற்றி. 1574. பெட்டகம் — மணப்பெண்ணுக்கு வரிசைகள் கொண்டு செல்லும் பெட்டி.

கவடிச்சொல்: 1586. பக்ஷி.

பாடவேறுபாடு: 1. வரிச்சேவ லானதுவும் 2. மூன்றும் 3. தந்ததுண்டால் இந்தவகை 4. வார்த்து 5. வரிச்சேவல் தான் 6. கொடுத்து 7. கல்வடையும் 8. வைத்தவலு.

I have plenty of gold and other possessions.
If you are keen on giving dowry
To the girl with the crescent forehead
Give the enchanted cock
That you are rearing
Along with the box of gold, its lock and key.

### Obtaining the demanded dowry

The lord of the hills Pēyaṉ
Gave with pleasure as dowry
To the valiant and resourceful son-in-law
The Enchanted cock
That would crow full — throated
Only once in a year,
He also gifted him the box of gold
And felt highly elated.

### Pēyaṉ and Pēcci leave for the forest

When Pēyaṉ and Pēcci
As was their wont
Went to prey on birds of the air
Beasts and corpses.............

### The tortoise dips his finger in potion

The Tortoise searched frantically
The house, cave and what not
Ultimately dipped his finger
In a pot of potion

பார்க்கும் பொழுதுபத் தரைமாற்றுத் தங்கமென
தீய்க்கும் பழுப்பாய்ச் சிவந்திருக்கக் கண்டனனே
கண்டுமகிழ்ந் தேயவனும் கைவிரலைத்[1]தானமுக்கி
மன்னுபுகழ் மன்னவனும் மறுத்துவிர லைப்பார்க்க

பெருவிர லுக்கடுத்த பின்னும்விர லானதிலே
ஒருவிரலுந் தங்கமதா யொட்டியதே யம்மானை.

## விரல் தங்கநிறமாதலும் ஆமையர் திகைப்பும்

தன்விரலை [2]முக்கத் தயிலப்பா னைதனிலே
தன்விரலும் பொன்விரலாய் தங்கம தாகவிருக்க

கண்டுமன [3]முள்நடுங்கி காவலவ னப்போது
இன்றிவர்கள் வந்துகண்டால் என்செய்வா ரோவெனவே
வன்பேயன் பேச்சியவர் வந்தாலுந் [4]தோற்றாமல்
தன்சீலை யைக்கிழித்து தன்விரலைத் தான்பொதிந்து

விரலிற் பழஞ்சீலை விரைந்துசுற்றும் வேளையிலே

## ஆமையரின் திகைப்பினைக் கண்டு மனைவி வினவுதலும் ஆமையரது பதிலும்

திருவையிளங் குழலாள் செப்பமுடன் கண்டுசொல்வாள்
துய்யபுக ழுடைய சொற்பெரிய மன்னவனே
கையிலென்ன பட்டுதுகாண் காவலனே என்றுரைத்தாள்.

என்றந்த மின்னா ளியம்புமொழி யைக்கேட்டு
மன்றுபுகழ் மன்னன் மறுவார்த்தை ஏதுசொல்வான்
[5]உள்ளலகு கத்திகொண்டு உடனேஎந்தன் கையதனால்
வெள்ளோலை வார்ந்தேன் விரலில்வந்து [6]பட்டுதென்றான்

## சச்சகிரிமாலை கணவனின் செயலை அறிந்து தைரியம் ஊட்டுதல்

இந்தமொழி மன்னன் எடுத்துரைத்த வேளையிலே
கந்தமரும் பூங்குழலாள் கலகலென வேசிரித்து

---

1597. முக்க — அமிழ்க்க. 1609. அலகு — ஆயுதம். 1610. வெள்ளோலை — எழுதப்படாத ஓலை. வார்ந்து — ஓலையை எழுதுவதற்குரிய இதழாகச் செம்மை செய்தல். 1612. கந்தம் — வாசனை; சந்தனம்.

பாடவேறுபாடு: 1. போட்டான் 2. மூக்கில் வைத்து 3. மகிழ்ந்து 4. காணாமல் 5. உள்ளோலை 6. பட்டதுகாண்.

Whose surface looked like gold unalloyed
The crimson hue piercing the eye.
He felt joyous and dipped his finger in it
And lo, the finger next to the thumb
Was totally smeared with gold.

### The tortoise taken aback

When he found that his finger
Had turned golden,
He was perplexed and bewildered.
Apprehension overtook him
About the reaction of the Pēyaṉ couple
If they came to know of his stealthy act.
To cover up his guilt,
He Tore a piece of his own cloth
And while bandaging the finger....

### His wife questions him

His young and pretty wife
On seeing his secret act spoke:
My lord with spotless fame
What happened to your finger?
In reply to her anxious query
What did the tortoise say?
While fashioning the palm-leaf for writing with a knife
I hurt myself.

### His wife inspires confidence

On hearing his reply,
The sweet-smelling damsel
Laughed gaily and chirped

வாரடைவைத் தோலைதனை வார்ந்தால் வழுகாது
சேரடையா யிந்தமொழி செப்பினீர்கா ணென்னோடே

நல்லது[1]கா ணிக்கருமம் நானறிந்த காரியந்தான்
வல்லமையா யும்மையொரு வந்திசெய்யும் போர்களிலை
ஈனனுமீ னாப்பேச்சி இங்கு வருமளவும்
ஆனாலுஞ் சீலை அவிழா தேயுமெனவே

சொல்லி யிருபேரும் சுகமாயி ருக்கையிலே

## பேயன் பேச்சி தம் இல்லிடம் சேர்தல்

[2]வல்லியல் பேயனந்த வலுப்பேச்சி யானவளும்
அந்திப் பொழுதில் அலறிப் [3]பெரு மூச்செறிந்து
வந்தா ரிருபேரும் வாழுகின்ற கற்புடையில்

கற்புடையில் வந்து கருத்தாய்ப் பசியாறி

## பேயன் மருமகனின் கைவிரலில் வடு ஏதெனக் கேட்டல்

மல்ப்புடைய பேயன் மருமகனைப் பார்ப்பளவில்
கைவிரலிற் சீலைதனை கண்டவனு மேது[4]ரைப்பான்
மைப்பரவும் [5]கண்ணாளே வடுவே தெனக்கேட்க

## சச்சகிரிமாலை பெற்றோருக்கு உரைத்தல்

[6]என்னுடைய மன்னவரும் ஏழைபர மாத்தியவர்
பொன்தயிலப் பானையிலே புகழாக வேயிவரும்
ஏதென்று சொல்லியிவர் விரலைத் தானமுக்கி
சூதொன்று மில்லாத சொற்பெரிய மன்னவரும்

1613. வாரடை — பனை முதலியவற்றின் ஓலை யீர்க்கு. 1614. சேரடை — இடையீடின்றித் தொடர்ச்சியாக. 1615. கருமம் — செயல். 1616. வந்தி — துன்பம். 1620. வல் — வலிமை. 1621. அலறி — மிக்கொலித்தல். 16'24. :மல் — வலிமை. 1620. வடு — காயம். 1627. பரமாத்தி — உலக அனுபவம் அற்ற.

பாடவேறுபாடு: 1. தான்செய்தி 2. வல்லதொரு 3. வெகு சத்தம்யிட்டு 4. சொல்வான் 5. கண்ணானே வகையே தெனக் கேட்டான் 6. எந்தனுட தாயாரே.

'Processing the palm-leaf, dear
Will not cause any wound.
Why did you glibly speak
And conceal the truth?
Well, I can surmise what happened,
But you need not apprehend any fear
Since there in none here to hurt or harm you
However, do not remove the bandage dear
Till Īnan̲ and Pēcci come.
Thus while they enjoyed themselves.....

### The arrival of the Pēyan̲s

When dusk set in,
Pēyan̲ and Pēcci returned to the cave
With thunderous bellowing.
After appeasing their hunger......

### Pēyan̲ notices the wound

On eyeing his on-in-law dear
Pēyan̲, the strong man
Asked him quite anxiously
About the bandage on the finger.

### Caccakirimālai addresses her parents

My husband lacking worldly wisdom
Dipped his hand in the pot of potion

பார்க்கும் பொழுதிலந்த ப்ாக்கியவான் [1]கைவிரலில்
ஆக்கமுடன் தங்கம் [2]அடைவாய்ப் பிடித்ததினால்
அம்மானார் நம்மை ஆக்கினைசெய் வாரெனவே
தம்மால் பதறி [3]சடைத்து முகம்வாடி

கள்ளத் தனமாகக் கத்திபட்டு தென்றுசொல்லி
வெள்ளைப் பழந்[4]துணியால் விரலை மிகப்பொதிந்து
சஞ்சலித்து மெத்தச் சடைத்திருக்கி றாரெனவே
கொஞ்சுங்[5]கிளி மின்னாளும் கூறினள்கா ணம்மானை.

## பேயன் மருமகனை தயிலப்பானைக்குளிட்டு எடுத்தல்

என்றமொழி கேட்டதற்பின் ஈனமலைப் பேயனவன்
சென்று மருமகனைச் சிக்கெனவே தான்[6]பிடித்து
[7]தலைக்கழுத்து மட்டவனை தங்கத்துக்குள் ளேயமுக்கி
சிலைபோலே [8]தூக்கித் திரும்பவெளி யில்விட்டான்

## மருமகனின் உடல் தங்குநிறமாதல்

விட்டபொ ழுதிலவன் மேனி வடிவழகும்
[9]கட்டழகு மொப்பனையும் கனகமய மானதுவே
[10]வாரியின் மேலே வளமாயெ [11]ழுந்துவரும்
சூரியனைப் போலே துலங்கினா ணம்மானை.

[12]மானிலத்தி ல்லா வடிவுபிர காசமதாய்
மேனியைப் பொன்னாக்கி வெகுமானஞ் செய்திடவே
பண்டுகை யைவெட்டிப் பறித்தோமே யென்றுசொல்லி
அன்றவன் றன்கையை அவதான மாய்ப்பிடித்து

## பேயனின் கை முளைத்தலும் மனம் திருந்துதலும்

உன்னியொரு மந்திரத்தை உச்சரித்த வேளையிலே
முன்னதுபோற் கையும் முளைத்ததுவே யம்மானை.
பேய்க்குணத்தை மாற்றிப் பெரும்பிணங்கள் தேடாமல்
தாக்கியிருத் தியவன் சாத்திரையுந் தான்கேட்டான்

---

1632. அடைவாய் — முறையாய். 1633. அம்மான் — பெண் கொடுத்தவன். ஆக்கினை — தண்டனை. 1634. சடை — சோர்வு. 1640. சிக்கு — இறுக்கு. 1645. வாரி — கடல். 1646. துலங்கு — பிரகாசித்தல். 1648. வெகுமானம் — வெகுமதி; பெருமதிப்பு. 1650. அவதானம் — சாதுரியம்; கவனம். 1651. உன்னி — தியானித்தல். 1654. சாத்திரை — சாத்திரம்.

பாடவேறுபாடு: 1. தன் விரலில் 2. அடரப் 3. சலித்து 4. சீலையினால் 5. மொழி 6. எடுத்து 7. தலைமறையும் மட்டும் 8. முக்கித் திரும்ப யெடுத்த வேளையிலே 9. வட்டமதி சந்திரனைப் போலே வடிவழகும் 10. வானத்தின் 11. எழுந்தருளும் 12. மானின் நிறமதுவும்.

And got his finger smeared with gold.
Simple soul that he is
Fear and panic have gripped him.
He apprehends danger
And is upset and sorrow-laden.
He tried to hide his fear and shame
By covering his finger with cloth
And blaming it on the knife.
Crest-fallen is he
And fear-stricken greatly
Said the girl with the sweet tongue.

### Pēyan̲ dips his son-in-law in the potion

Pēyan̲ on hearing her words
Lifted his son-in-law bodily
Dipped him in the magic potion
Drew him out like a statue
Wrought in pure gold.

### The Golden touch

His body and magnificant physique
Got clothed in gold,
He verily looked like the sun
Emerging from the sea.
For rewarding him with
A body of gold
The son-in-law was grateful.
Recollecting with regret his cutting of Pēyan̲'s hands,
He now held the mutilated limb
With unusual deftness and care.

### The hands of Pēyan̲ grow

The tortoise after deep meditation
Uttered an incantation
That helped Pēyan̲'s mutilated hands
To grow and become normal again.
Instantly he gave up his evil ways,
Stopped hungering for human flesh
And showed interest in learning the lores.

## சாவலையும் பெட்டகத்தையும் சீதனமாக ஈதல்

கைப்பிடித்த பெண்ணும் கனகவரிச் சாவலையும்
மெய்ப்புடைய மன்னனுக்கு வெகுமான மாகவேதான்
மாணிக்க மானநல்ல வர்னமணிப் பெட்டகமும்
[1]தானிச்சை யானவரிச் சாவலையும் [2]முன்னேவைத்தான்

வல்லபுகழ் மன்னவன் மாமனா ரைத்தொழுது
நல்லவள மானவெந்தன் [3]நாட்டில்நான் போறேனென்று

## ஆமையர் விடைபெறுதல்

அந்தமொழி கேட்ட அரியமலைப் பேயனவன்
எந்தவகை யுங்கள் இருவருக்கும் வேண்டுமென்றான்

ஆவலுடன் பொன்னுடைமை ஆளடிமை [4]தாரதிலும்
சாவலொன்று மெந்தனக்கு தந்ததுநீர் போதுமென்றான்
ஊருக்குப் போய்நாமும் ஓலையிட்ட நேரமதில்
வாருமென்று சொல்லி வழி[5]கொண்டா னம்மானை.

## மினுமினுத்தான் பட்டண அரசன் முன் இருவரும் வருதல்

பெண்ணின் றலைமீது பெட்டகத் தையுமேற்றி
கண்ணிமைக் குமுன்னே கடிதா யிருபேரும்
இந்திரமா ஞாலம் எடுத்துச் சடுதியிலே
[6]அந்தர மான அருஞ்சுரமும் கல்கறடும்

[7]பரந்த மலையும் பலவனங் களுங்கடந்து
சூழ்ந்தயிருள் நீங்கிச் சூரியனார் தோன்றுமுன்னே
விரைந்து கடிதாய் மினுமினுத்தான் பட்டணத்தில்
வந்தார்கள் மின்னுமுடி வாளரசன் முன்பதிலே

---

1655. வரிச்சாவல் — அழகுடைய சாவல்; கோடுடைய சாவல். 1665. ஓலை — ஓலைமுடங்கல். 1669. சடுதி — விரைவாக.

பாடவேறுபாடு: 1. தாணிக்க மான 2. உள்ளே வைத்து 3. நாட்டுக்குப் போய்வாறேன் 4. தான் வேண்டாம் 5. கேட்டா ரம்மானை 6. மந்திரத்தி னாலே வலுவாக வேகடிதாய் 7. பார்த்து.

## The Enchanted cock and the precious box given as dowry

Along with the bride
Pēyaṉ offered the groom
A costly coloured box,
Verily a chest
And the striped enchanted cock.
After saluting his father-in-law
The tortoise expressed his desire
To return to his country.

## The tortoise bids good bye

When Pēyaṉ heard those words
He asked the son-in-law
To name the things he needed,
Gold, men or anything else.
Replied the tortoise
That he was fully satisfied
With the enchanted cock
And did not want anything else.
'When I send an invitation from my place
Please come' said he and departed.

## The couple come to the city of MiṉuMiṉuttāṉ

Keeping the box on the bride's head
Within a winking movement of the eye
Using the sorcery called *Intira Jālam*
They overcame obstacles
Hills, deserts and so on
And ere the sun rose
Reached the city of Miṉumiṉuttāṉ
And presented themselves before the King.

## அரசன் மருமகனை வரவேற்றல்

வந்த மருமகனை வாளரசன் கண்டதற்பின்
சிந்தை மகிழ்ந்து சிரித்துக் [1]களிகூர்ந்து
சந்தோஷ மாகவவன் தானிருந்தா னம்மானை.
சச்சகிரி மாலையையும் தன்மரும கன்றனையும்

இச்சையுடன் கூட்டி இலங்குமணி மாளிகையில்
துண்டுமதி நுதலாள் தோகையந்தப் பெண்கொடியும்
கண்டுபதம் பணிந்து காவலனைக் கைதொழுது

## மக்கள் ஆமையரின் செயலை வியந்து பாராட்டல்

அந்தவூர் தன்னிலுள்ள ஆடவரும் மாதர்களும்
வந்தவர்க ளெல்லாம் வளமா யுபசரித்து
ஈனகிரி மலையில் எவரா கிலுமொருவர்
போனவர்கள் மீளப் பொருந்திவரக் காணோமே

ஏது போலாச்சு இவர்செய்த வீரியந்தான்
பூதலத்தில் முன்னாளில் பொன்னுமுடி பாண்டியனும்
தேவி தலைவலிதான் தீரவே வேணுமென்று
காவில் புலிப்பால் கறந்துவரச் [2]சொன்னதற்கு

அரியோன் திருவருளால் ஐயனார் முன்னாளில்
வரிப்புலியை யும்[3]பிடித்து வாய்த்தகுட் டியுமெடுத்து
சிலையழக னானதொரு தெய்வமுடிப் பாண்டியன்முன்
[4]மலைப்புலி கொண்டையன் மதுரைதனில் வந்தாற்போல்

சாவலுடன் பெண்ணதுவும் தங்கமணிப் பெட்டகமும்
ஆவலுடன் கொண்டுவந்தா [5]னானவீர னென்பாரும்
இலகுவித் தையுண்டு இவன்கையி லென்பாரும்
உலகுதனி லிப்படித்தா னொருவருண்டோ வென்பாரும்

---

1676. களி—மகிழ்ச்சி. 1697. பூதலம்—பூமி. 1689. கா-சோலை. 1690. அரி—திருமால். ஐயனார்—அரிகரபுத்திரன். **குறிப்பு:** (1687-1693) தன்னை வளர்த்த பாண்டியனின் மனைவியின் தலைவலியைத் தீர்ப்பதற்காக புலிப்பால் கொண்டுவரச் சென்ற ஐயப்பன் புலியையும் புலிக்குட்டியையும் கொண்டுவந்த புராணக்கதை இங்கு சுட்டப்பெறுகின்றது.

**பாடவேறுபாடு:** 1. நகைபுரிந்து 2. சொன்னதுபோல் 3. எடுத்து 4. மலையில் புலியைக் கொண்டு 5. ஆள்வீரன்.

### The King of Miṉumiṉuttāṉ welcomes his son-in-law

On seeing his prospective son-in-law
The King was highly elated
Spent his time happily and merrily.
Caccakirimālai and the son-in-law
Were hospitably received
And housed in a palatial building.
Caccakirimalāi with forehead like the crescent moon
Offered her salutations to the King.

### People pay encomiums to the tortoise

The men and women of the place
Were all praise for the tortoise.
Whoever went to Īṉamalai in the past
Never came back.
This man is really valorous
His deed is as daring as that of
Ayyaṉār who in days of yore
Went on foot to fetch tiger's milk
To cure the malady of a Pandiya king's wife
And achieved the impossible
With the grace of Lord Tirumāl.
Yes, Ayyaṉār caught the tiger
And brought its cub as well.
The return of the tortoise with the striped cock and treasure chest
Is as glorious as the triumphant return
Of Ayyaṉār to the capital of the Pandya Kingdom, Madurai.
Some acknowledged the tact and resourcefulness of the tortoise
While others wondered whether he had an equal.

## மக்கள் விருந்துபசரித்தல்

பட்டுப் பணியும் பலவரிசை செய்வாரும்
கொட்டு [1]முரசதிரக் கூடிவந்து பார்ப்பாரும்
வட்டம தாய்க்கூடி [2]வளைந்துநின்று பார்ப்பாரும்
எட்டுத் தெருவும் இடங்கிடையா தென்பாரும்

சோலை கிளிமொழியார் சுருள்வைத்துப் பார்ப்பாரும்
மாலைப் பதக்கம் மணிமார்பி லிடுவாரும்
தங்கநிறமான பொன்னின் சங்கையுள்ள மன்னனுக்கு
முங்கைமுக தாரியுடன் முத்துவட மீவாரும்

தீட்டும் புகழுடைய தீர்க்கமுள்ள மன்னனுக்கு
வீட்டுக்கு வீடு விருந்துகொடுப் பார்கள்சிலர்

## கன்னியர் காமங்கொண்டேங்குதல்

கள்ளவிழி மடவார் கண்டுமையல் கொண்டேங்க
[3]வள்ளைக் குழலார் மயங்கிவிழு வார்சிலபேர்

[4]சோலையிளங் குயில்போல் தோகைமட வார்கள்சிலர்
மாலையிடா னோநமை மன்னவனென் பார்கள்சிலர்
[5]ஆரமும் மார்பும் அணிஸ்தனமுந் தானெருங்க
சேரநலம் பாராட்டிச் சேரானோ வென்பாரும்

மாமோகந் தீர மருவிளை யாடி[6]மன்னன்
தாமாக வந்துதழு வானோ வென்பாரும்

---

1696. இலகு — சுலபம். 1702. சுருள் — வெற்றிலைச் சுருள். 1703. பதக்கம் — கழுத்தணிகலன். 1704. சங்கை — மரியாதை; கனம். 1712. ஆரம் — பூமாலை. 1714. மருவி — தழுவி.

கொச்சைச்சொல்: 1703. பதைக்கன்

பாடவேறுபாடு: 1. முரசுதவில் 2. வந்துநின்று 3. வள்ளல் 4. தோகை யிளங்கிளிபோல் 5. ஆரமணி மார்பன் அணைமலைமேல் சேறானோ 6. நம்மை.

## Gifts and feasts

Gifts poured from the public
Silken robes and other precious things
Some celebrating the event with the beat of drum
Some standing around him
And gazing with awe and wonder,
Men from eight streets were there
With hardly breathing space,
Women lining up with betel leaves,
Some gifting garlands and jewels
To the handsome hero commanding respect
Each house vying with the other in hospitality.

## The Girls fall for him

Girls with coquettish eyes
Fell for him instantly.
Some like the cuckoo danced and fluttered.
Would he not wed me?
Mused a few.
Would not his chest adorned with flowers
Come close and hold me tight?
Would he not hug me of his own accord
And cool my lust?

[1]சேர்த்தன மின்னார்கள் வந்துசெருமி வளைந்திவனை
பார்த்தவர்கள் [2]ஆவிபறிக்க வந்தா னென்பாரும்

சீவகனோ நான்முகனோ தேவேந்தி ரன்றானோ
[3]கோவலனோ சூரியனோ [4]குமரனோ வென்பாரும்
[5]தாமயங்கி நம்மை சருவிவிளை யாடாமல்
காமச்[6] சிங்கி பூட்டிநமை கண்ணியிட்டா னென்பாரும்

வண்டமிழ் சேர்மன்னன் வடிவுபிர காசமதை
கண்டு [7]பெரு மூச்செறிந்து காதல்கொண்டு நிற்பாரும்
[8]மன்றுதனில் லாவடிவு கொண்டு வந்துயிவன்
[9]பெண்டுகட்கு காமநோய் பெருக்கவந்தா னென்பாரும்

ஆசை மயலாகி அவரவர்கள் தானுருகி
மாய வலைக்குள்ளே மறுகிநிற்பார் கள்சிலபேர்

## மயங்கித் தெளிதல்

தேறாமல் நின்று தியங்கிவிழும் பேர்களுக்கு
[10]நீறானதைப் போட்டு நேர்ந்திடுவார் கள்சிலபேர்

[11]காதிமையல் மிஞ்சி கலங்கிவிழும் பேர்களுக்கு
ஓதித்தண் ணீரெறிந்து உட்குடிக்க வுங்கொடுப்பார்
இப்படியே மின்னார் இவன்றனக் காகமயங்கி
நற்புடைய மாதர் நடுக்கமது வுந்தீர்ந்து

இச்சித்த மாதர்க் கிடையூறு வாராமல்
[12]சச்சொழிந்து வங்கே [13]சனநெருக்கம் நீங்கியபின்

---

1716. செருமி — நெருங்கி. 1720. சருவி — கொஞ்சிக் குலாவுதல். 1721. சிங்கி — பின்னல்; வசப் படுத்து. கண்ணி — முடிச்சு. 172[illegible]. மயல் — மயக்கம். 1734. இடையூறு — துன்பம். 1735. சச்சு — தொந்தரவு; சந்தடி.

சுவடிச்சொல்: 1718. தெய்வேந்திரன்.

பாடவேறுபாடு: 1. சோர்ந்துமுக மின்னார் 2. கண்ணை 3. தான்முகனோ 4. சமுத்திரனோ 5. தான்பதுங்கி 6. சங்கிலி 7. கொண்டு 8. மண்ணுலகி லில்லா வடிவுபிர காசமதாய் 9. பெண் களை காமசங்கிலி பூட்டிவந்தா னென்பாரும் 10. நீரதையும் 11. கருதி மையல் கொண்டு மயங்கிவிழும் மின்னார்க்கு 12. கச்சொழிந்து 13. கனநெருக்கம்.

Some circled round him
Averring that he was out to break hearts.
But then who is he?
Is he Cīvaka, Lord Piramaṉ
Or Intira
Perhaps Kōvalaṉ, sun or Kumaraṉ.
Instead of making love to us
He has bound us with chains.
Some were so carried away by his looks
That they stood aghast.
His mission perhaps is to
Aggravate love-sickness.
Some pined in thought
Victimised by the seductive spell.

### Love sickness treated

For those who lost their hearts to him
Sacred ash was applied and prayers offered,
For those who lost consciousness
Holy water was sprinkled
And made to drink.
After the fret and fever went down
And virtuous women shed all fear
When the crowd melted
Without any mishap or misdeed....

## மன்னன் பெண்ணும் பெட்டகமும் ஏதெனல்

மின்னுமுடி சூடும் வேந்தர்பெரு மானவனும்
மன்னவனு மப்போ மருமகனைத் [1]தான்பார்த்து

சொல்லுவான் [2]செய்தியொன்று சொற்பெரிய மன்னவனும்
[3]கல்லுவா ரமான கானமலைச் சார்வதிலே
போனவிடத்தி லுமக்குப் பெண்ணுமிந்தப் பெட்டகமும்
ஈனனீ னாப்பேச்சி இருந்த மலைக்குவட்டில்

**வந்தவகை யேதுமக்கு [4]மருமகனேநீர் சொல்லுமென்றார்.**

## மருமகன் பதிலுரைத்தல்

அந்த[5]வு ரையைக்கேட் டதிகபுகழ் மன்னவனும்
மாமனார் கேட்க மருமகனார் யேதுசொல்வார்

ஏதுசொல்லப் போறேனா னீனமலைப் பேயனவன்
சேதப்படுத்[6]தவென்று சேயிழையைக் கொண்டுவந்து
[7]பத்தாள்ப் புருஷமுள்ள பாதாளக் கற்புடைக்குள்
வைத்தானி வளைவதைகள் செய்யும் முன்னேதான்

அப்பொழுது நானும் அதற்குமுன்னே சென்றொளிந்து
தப்பாமல் வெட்டியவன் றன்னையுமங் கேசெயித்தேன்
பேயனுயிர் மடிந்தான் பேச்சிதப்பி யோடிவிட்டாள்
[8]நேயமுட னென்காலில் நேரிழையாள் தான்வீழ்ந்து

பொன்னின்முடி மன்னவனே பூவுலகி லு[9]ம்முடனே
என்னைக்கரை யேற்று மென்று[10]சொல்லி தான்பணிந்தாள்
ஆனதினால் நானுமிந்த ஆயிழையை யுங்கூட்டி
ஈனகிரி தன்னில் இருபேரும் வாழுகின்ற

கட்டான பேயனுட கற்புடையைப் பார்க்கையிலே
பெட்டகமும் பொன்னும் புடைக்குள் ளிருந்ததுகாண்

1741. குவடு—குன்று; மலையுச்சி. 1748. வதை—துன்பம். 1757. கற்புடை—கற்துவாரம். 1758. புடை—துவாரம்.

**சுவடிச்சொல்:** 1746. செய்யிளை 1749. சென்றொழித்து 1752. நேரிளை 1755. ஆயிளை.

**பாடவேறுபாடு:** 1. நோக்கி 2. வார்த்தையொன்று 3. ஆனைமதம் பொழியும் அடவிமலைச் சோலையிலே 4. மாப் பிள்ளை 5. மொழியைக் 6. தாமலிந்த சேனையைக் 7. பார்த்தான் பரிசமுள்ள 8. வாய்க்குழலி யவள் வந்து விழுந்தே் அழுதாள் 9. எந்தனையும் 10 இவள் தானழுதாள்.

### The King questions the tortoise

The King asked his son-in-law
To enlighten him
On the acquisition of a girl and a treasure chest
From the God-forsaken hilly region
Where lived the dreadful Pēyaṉs.

### The Son-in-law replies

What reply did the tortoise give
To his father-in-law?
The Pēyaṉ of Īṉamalai
Brought a helpless damsel
To his deep cave with intent bad,
Ere he outraged her modesty
Hiding myself in the cave
I cut him and killed him.
His wife fled the place
While this girl, his daughter
Fell at my feet
Implored me to accept her
And rescue her.
When I examined Pēyaṉ's cave
I found the treasure chest
Also plenty of gold

சும்மாவரா தேயிந்த [1]சொர்னங்க ளானதெல்லாம்
அம்மானார் தந்தமக்கு ஆகுமென்று [2]தானெடுத்தேன்

கொண்டுவந்தே னிந்தவகைக் கோப்பென்று தானுரைத்தான்.
தண்டமிழ்சேர் மன்னவனும் சந்தோஷ மாய்க்கேட்டு

## மன்னன் மகிழ்ச்சியுறுதல்

**விருத்தம்**

26. கேட்ட போதரசன் றானும் கிருபை[3]யுற்றேதோ சொல்வான்
தாட்டி மையுமைப்போல் நானும் சமர்த்தரைக் காணே னென்ன
வாட்ட மொன்றில்லை யெந்தன் மகளுடன் மகளும் வந்தாள்
நாட்ட மாய்க்கூட வைத்து நடத்துவீர்[4]விவாக மென்றார்.

## ஆமையர்க்கு பெண்களை மணம் செய்வித்தல்

**நடை**

27. மருமகனார் தந்தனக்கும் மக்களிரு பெண்களுக்கும்
[5]திருவினுக் கொப்பாக சிறப்பாய் பணிபூட்டி

பெற்றமகள் தனிலும் பிறகுவந்த பெண்மகட்கு
உற்றபணி களெல்லாம் ஒட்டிரெட்டி [6]யாயணிந்து
பந்தலிட்டு நல்ல பல[7]வாத் தியம்முழங்க
சந்தோஷ மாகவவர் சடங்குகளெல் லாமுடித்து

மலையிலி ருந்துவந்த [8]மாமயிலாள் தந்தனையும்
தலையெழுத் தாலிவளுந் தன்மகளென் றேயவரும்
சலியாமல் மன்னவனும் தாரணி யோர்களறிய
கலியாணமும முகித்துக் கைப்பிடித்துத் தான்கொடுத்தார்.

## ஆமையர் விடைபெறல்

அமுதுகறி சோற டைக்காயும் வெள்ளிலையும்
குமுதமொழி மின்னாருங் கொற்றவருந் தான்புசித்து
பட்டணத் திலுள்ள பலபேர்கள தங்களுக்குக்
கட்டாக நல்ல கறிசோறுந் தான்கொடுத்து

---

1760. அம்மான் — மாமனார். 1761. கோப்பு— சுமை. 1764. தாட்டிமை — சாமர்த்தியம். 1766. விவாகம் — திருமணம். 1768. திரு — இலக்குமி. 1775. தாரணி — உலகம்; பூமி. 1777. அடைக்காய் — பாக்கு. வெள்ளிலை — வெற்றிலை.

பாடவேறுபாடு: 1. திரவியங் 2. தானுரைத்தார் 3. யாயிருந்து 4. என்றார் மன்னன் 5. திருமனது மொய்த்து 6. பொன்பூட்டி 7. வாச்சியம் 8. வாழ்மயிலாள்.

Which I took for myself
As dead father-in-law's gifts,
This is the tale
Behind the heavy load I brought.
The King listened to this account
With great jubilation.

### The King is happy

26. The King now spoke kindly
'Never have I seen anybody so able like you
There is nothing to be sorry about,
Let the marriage of this girl be celebrated
Along with my daughter's.'

### The Marriage

27. The bridegroom and the brides
Were made to wear ornaments rich
Reminding one of the Goddess of prosperity
Giving more of everything to the new girl
Than to his own daughter
Erected a shamiana quite majestic
And against the backdrop of instrumental music
Marked by colour and variety
His begotten daughter
And the girl from the hill,
Whom fate had willed to be his own
Were married off publicly.

### The tortoise wants to go

After the king, daughters and son-in-law
partook of choice and delicious dishes.
Chewed betel leaves and areca nut
Distributed food to the public at large,

நல்ல[1]வண்ணமாக நடந்துவரும் [2]வேளையிலே
வல்லபுகழ் மன்னனந்த மாமனைப்பார்த் தேது[3]சொல்வான்
ஆருக்கும் நல்லபுக ழானவனே என்னுடைய
ஊருக்குப் போக வுத்தரவு தாருமென்றான்.

## மன்னன் வழித்துணைச் சேனைத் திரட்டல்

சொன்னமொழி யைக்கேட்டு சொற்பெரிய மன்னவனும்
அன்னேரம் மன்னன் அமைச்சர்களைத் தான்வருத்தி
வாகுபெற வெந்தன் மருமகனார் தன்பதிக்கு
போகவென்று சொல்லி பொருந்தி மிகவுரைத்தார்

ஏடாரும் மார்பன் இருந்த பதிவரைக்கும்
கூடத்துணை யாகவே நீர்கூட்டியே போவதற்கு
ஆனைக் குதிரைப்படை அரசர்துரை மக்களையும்
சேனைத் திரளதையும் சேகரியு மென்றுரைத்தார்.

## ஆமையர் வழித்துணைச் சேனையை மறுத்தல்

**விருத்தம்**

28. என்றவ னுரைத்த வார்த்தை இசையவே மருகன் கேட்டு
மண்டலத் தரச ரோடு மன்னவ னேது சொல்வான்
இன்றிது சமைய மல்ல எனக்கொரு படையும் வேண்டாம்
ஒன்றுநா னுரைக்கும் வார்த்தை வுகந்துநீர் கேட்பீ ரென்றார்.

நடை

29 தாயுமெனைப் பெற்றெடுத்த தகப்பனார் தன்னுடனே
வாயுரங்கள் சொல்லியேநான் வாதாடி பாசையிட்டு
கத்திகொண்டு நானும் கடுகவரும் வேளையிலே
உத்தபடை கொண்டுவந்து உனைசெயிப்பே னென்றுசொன்னேன்

தந்தையர்க்கும் தாயார்க்கும் சந்ததிநா னல்லாமல்
விந்தையுட னென்னையன்றி வேறுமொரு பிள்ளையில்லை
படிமீதி லெங்களையா பரமாத்தி காணுமவர்
இடிமுழக்கம் கேட்டதுண்டால் ஏழறைக்குள் ளேஒளிப்பார்

---

1787. பதி — ஊர். 1798. பாசை — மொழி; ஆணை. 1801. சந்ததி — மகன். 1803. பரமாத்தி — உலகனுபவமறறவன். 1804. ஒளிப்பு — பதுங்கி மறைதல்.

சுவடிச்சொல்: 1804. ஒழிப்பார்.

பாடவேறுபாடு: 1. படியாக 2. நாளையிலே 3. உரைப்பான்.

The son-in-law requested the king
Beloved by everybody
To permit him to go home.

### The king wants a retinue to be sent

The King summoned his ministers
And addressed them:
My son-in-law desires to go home.
Let a retinue accompany him
Along with the cavalry and the elephant force.
Let the soldiers on foot and the gentry
Also keep helpful company.

### The tortoise declines the offer

28. 'This is not the opportune time
To collect an army of men to accompany me.
Let me make the position clear.
29. I had a heated argument with my parents
And took a pledge that I would shortly
Arrive with an army and win over.
My parents have no other issue
To call their own.
Simpleton that my father is
Even if he hears the rumble of thunder
Would safely seal himself within seven rooms.

ஆள்மிகுதி கண்டால் அஞ்சிவெளி யில்வாராார்
வாள்மதமாய் நானும் மனுவோடே போனாக்கால்
பாவிமக னென்மேற் படைகொண்டு வாறானெனவே
ஆவிமயங்கி யெந்தன் ஐயா மடிந்திடுவார்

பெண்களிரு பேரும் பெருமையுடன் நானுமல்லால்
அங்கே துணையாக ஆள்கள்வரப் [1]போகாது
மூன்றுபே ரல்லாது முகனையுட னென்னுடனே
ஆண்டவனே [2]வேறுமொரு ஆளனுப்ப வேண்டாங்காண்

## மன்னனது ஐயமும் மருமகனது பதிலும்

என்றிவன் றான்சொல்ல இயலரச னப்போது
நன்றுநன்று யிக்கருமம் நல்லதென்று மன்னவனும்
காட்டுவழி யாய்நீங்கள் [3]கடுகநடக் கும்போது
கூட்டமிட்டுக் கள்ளர்வந்து கொடுமையது செய்யாரோ

அண்ணல் பரமசிவனார் ஆதியரு ளாலெனையும்
மண்ணிலுள்ளோ ரென்னோடு வந்தெதிர்க்க மாட்டார்கள்

## மன்னன் வாழ்த்தி வழியனுப்புதல்

சொன்னமொழி யைக்கேட்டு சொற்பெரிய மன்னவனும்
மின்னும்நவ ரத்தினங்கள் வேண்டியதெல் லாம்கொடுத்து

கொடுத்துவெகு தூரம்வந்து [4]கோவும் வழியனுப்பி
எடுத்துமகளை முகர்ந்து இங்கிதமாய் வார்த்தைசொல்லி
கோமான் திருவருளால் குறைகளொன்றும் வாராமல்
சீமானா யும்முடைய சீமையில்போய் வாருமென்று

ஏத்தரிய மன்னன் இவர்கள்மூ பேர்களையும்
சாத்திரையுஞ் சொல்லியவர் தங்களையும் போகவிட்டு
பண்டுபோல் மன்னன் பதியில்வந்து [5]வீற்றிருந்தான்.

---

1806. மனுவு — மக்கள். 1811. முகனை — தலைமை. 1821. கோ — அரசன். 1822. இங்கிதம் — கருத்து; குறிப்பு. 1823. கோமான் — அரசன். 1826. சாத்திரை — சாஸ்திரம்.

சுவடிச்சொல்: 1822. முகந்து

பாடவேறுபாடு: 1. ஒண்ணாது 2. கூடயொரு 3. கருதிவழி போனதுண்டால். 4. கொலுவாய் 5. தானிருந்தார்.

If only he sees me with men in large numbers
He will not dare to come out at all.
He may even misconstrue
That his bad boy is coming with an army to fight,
May swoon and give up the ghost.
It is enough if I have the company
Of these two women
And the grace of the Almighty.'

## The King's doubt cleared

When he said so
The king nodded approval
But raised a genuine doubt
Whether highway men might not
Perpetrate cruel and sinister acts.
To which the tortoise made reply
'Thanks to the blessings of Lord Siva
None on earth shall dare to challenge me.'

## The King offers his blessings

The king gave the tortoise
Nine precious gems and odds and ends,
Accompanied the three to some distance,
Lifted his daughter and caressed her
Spoke kind and gentle words:
May your journey to your country
Be free of setbacks
With the blessings of God.
Thus bidding goodbye to all the three,
The king returned to his place.

## ஆமையர் மனைவியருடன் ஊர் வருதல்

[1]மன்றுபுகழ் மன்னவனும் மாத ரிருபேரும்
இட்டமுட னங்கோர் [2]இடையூறு வாராமல்
பெட்டகமுங் கொண்டுவழி போயினன்கா ணம்மானை.
உன்னியொரு மந்திரத்தை உச்சரித்த வேளையிலே
பன்னிரண்டு நாளைப் பயணமொரு [3]நாளிரவில்
மங்கையருந் தானும் வழியிலொரு [4]நாளிரவு
தங்காமல் வந்தார்கள் சம்மந்த மாநகரில்

## மறைத்து வைத்திருந்த ஆமைக்கூட்டை எடுத்தல்

விருத்தம்

30. சம்மந்த மாநகரில் வந்து தான்[5]கதிர் விடியும் முன்னே
முன்[6]வந்த வாறதெல்லாம் மொய்குழல் [7]மார்க்குச் செப்பி
செம்மந்த [8]மங்கே தானும் செடிக்குள் முன்போட்டு வைத்த
சம்மந்த ஆமைக் கூட்டின் சட்டையை எடுத்து வைத்தான்.

## மனைவியர்க்குத் தன் இரகசியத்தை வெளியிடல்

நடை

31. ஆமையின் கூட்டை அரிவையர்கள் முன்பில்வைத்து
தாமையுடன் வார்த்தைகளைத் தானுரைத்தா னம்மானை
[9]பெண்சொரூப மானயிந்தப் [10]பேருலகில் உள்ளவர்கள்
என்சொரூபங் கண்டவர்க ளில்லையிந்தப் [11]பூவுலகில்
இருபேரும் நீங்களிப்போ தென்சொரூபங் கண்டதல்லால்
[12]ஒருபேரு மென்சொரூபம் உலகுதனிற் கண்டதில்லை
தேனே யறுசுவையே தெள்ளமுதே சீரரசே
மானே மரகதமே வஞ்சியர்க்கெல் லாமரசே
கன்ன லமுதே கனகநவ ரத்தினமே
வன்ன வரிக்குயிலே வயிரவை டூரியமே

---

1829. இடையூறு — துன்பம். 1831. உன்னி — தியானம். 1835. கதிர் — சூரியன்; வெயில். 1839. அரிவை — பெண். 1841. சொரூபம் — அழகு. 1847. கன்னல் — கரும்பு 1848. வயிரம் — நவமணிகளுள் ஒன்று.

**சுவடிச்சொல்:** 1841. சொருபம்

**பாடவேறுபாடு:** 1. மண்ணுலகில் 2. இடைகூறு 3. நாழிகையில் 4. நாழிகையில். 5. கதிரோன் 6. வார்த்தை யெல்லாம் 7. அறிய 8. மாக 9. யான்சொரூ 10. பூவுலகில் 11. சீமை யிலே 12. ஒருவரும் எந்தன் உருவறிய மாட்டார்கள்.

### The return of the tortoise with the women

The tortoise and the two women
Without any obstacle
Marched ahead with the treasure box.
On chanting a sacred syllable
After deep meditation,
The journey of twelve days
Got abridged to one
And so without spending any night en-route
Reached Cammantamānakar.

### Finding the tortoise shell

30. Before the sun rose
They reached Cammantamānakar,
The tortoise made a clean breast of the past
To the two women
And took out from the bushes
The shell that he had hidden.

### Disclosing the secret to his wives

31. Placing the shell before the women,
The tortoise spoke these words:
No one in this world has seen
My real self.
You two have been let into the secret
For the first time.
He then addressed them with endearing words
Honey, dear, pearl, precious gem
Striped cuckoo, diamond, gold

பொன்னே அரும்பொருளே பூவிலதி க்மணமே
மின்னே ரிடையாரே மெலிபிறை போன்றநுதலே

வள்ளைக் குழலாரே மாமோக ளக்கிளியே
கிள்ளை மொழியாரே கிஞ்சுகவா யஞ்சுகமே
சொல்லத் துலையாது தோகையரே வுங்களுடன்
கல்லு முருகுமிருட் கண்ணும் வெளியாகும்

மடக்கொடியே என்சொரூபம் மனிதருக்குக் காட்டாமல்
அடக்கம தாகநானும் ஆமைக்கூட் டிலிருப்பேன்
பொங்குகடல் சூழுலகில் பூதலத்தி லுள்ளவர்கள்
இங்கிருக்கும் பேரொருவ ரென்சொரூபங் கண்டதில்லை

அடக்கமாய் நீங்கள் அறிந்தகரு மங்களெல்லாம்
கடக்க ஒருவருடன் கட்டுரைக்கப் போகாது
உங்கள் மனதில் உடனறிந்த காரியத்தை
எங்குமுரை யாதிருங்கோ வென்றவரை ஆணைகொண்டு

காவலவன் பின்னுமப்போ காரிகை மாரோடே
ஆவலுடன் சொல்வான் அடக்கமதா யோர்வார்த்தை
முன்னே ஒருபெண் முகித்திருப்ப துண்டுமிங்கே
அன்னை பிதாவுமிந்த அவனிதனி லுள்ளவரும்

ஆமை யுருவென்று அறிவார்க ளல்லாமல்
வாமையா யெந்தன் வளமை யறியமாட்டார்

## இரகசியத்தைக் காக்கும்படி ஆணையிடல்

இருபேரும் நீங்கள் என்சொரூபங் கண்டதல்லால்
ஒருபேரு மெந்தன் உருவறிய மாட்டார்கள்

பொய்கொண்ட பேர்கள் பொருந்தாது வெந்தனக்கு
மெய்கொண்ட தாலே விளம்பினே னுங்களுக்கு
நீங்கள றிந்தயிந்த நிலைமையுள்ள காரியத்தை
பாங்காக வேறே [1]பலர்க்குமுறையா தேயுங்கோ

1852. அஞ்சுகம் — அழகிய கிளி. கிஞ்சுகம் — சிவப்பு. 1857. பூதலம் — பூமி. 1859. கருமம் — செய்தி. 1860. கட்டுரை — புனைந்துரை. 1863. காரிகை — பெண். 1865. முகித்து — முடித்து. 1866. அவனி — பூமி.

சுவடிச்சொல்: 1862. வென்றுவரை 1868. வழமை.

பாடவேறுபாடு: 1. பலபேர்க்குஞ் சொல்லாதே.

Sweet parrot and so on
Expressed his intent to withdraw himself
Into the shell
And live as a tortoise.
'In the wide world with the roaring sea,
None knows the truth about me.
Whatever new knowledge you have acquired
Should be kept as a top secret,
This is a vow
Which you should not break.'
After uttering these words
He whispered modestly
That he had another wife there
Whose parents and others
Were familiar only with his tortoise form
And were unaware of his prowess or appearance.

### Takes a pledge from the Women

'Except you two who have seen my real form,
Others have no knowledge of it.
Since it does not become of me
To utter falsehood
I have come out with the truth.'

என்றிவர்கள் தன்னை [1]யிருதயுமா யாணைகொண்டு
மன்றுபயில் மன்னன் மறுவார்த்தை ஏதுரைப்பான்.

## தன் வீட்டின் அடையாளத்தைக் கூறுதல்

இன்னா தெரியுதுகாண் எங்கள்மனை யும்[3]வீடும்
சொன்னாலும் நீங்கள் தொகுப்பறிய மாட்டீர்கள்

நாட்டுக் குள்ளிந்த நகரான பட்டணத்தில்
வீட்டுக் கடையாளம் [4]விளம்புகிறேன் மெல்லியரே
தெற்குத் தெருவதிலே தென்மேல் மூலையிலே
நிற்குமொரு செண்பகமும் நெடிய[5]கமு கின்மரமும்

மாதளையும் வாழை வருக்கைப் பலாமரமும்
சீதளமாய் நிற்குமெங்கள் [6]சீமானார் தன்வளவில்
சீர்வேந்தன் [7]மெய்க்குகின்ற சீமானார் வாசலிலே
[8]பேரீந்து மூன்றுமெங்கள் பேருழவன் றன்மனையில்

அருங்கய மானகிணறும் ஆடுதுலா வானதுவும்
முருங்கை மரமுமெங்கள் முற்றத்தில் நிற்குதுகாண்

## தலையில் சுமந்து வீட்டிற் சேர்க்கும்படி வேண்டுதல்

இந்த அடையாளம் இலக்காக வே[9]யிருக்கும்
அந்த இடத்திலெனை அவதான மாயெடுத்து

கொண்டுபோய் வையுங்கள் குறைகளிலை யுங்களுக்கு
மண்டு விழியாரே மாதளம்பூ மேனியரே
தீமைகளொன் றில்லாமல் தேவியரே நானுமெந்தன்
ஆமையின் கூட்டுக் ககத்தே புகுதுகிறேன்

---

1878. தொகுப்பு — எல்லை; கூட்டம். 1884. வளவு — மனை. 1886. பேரீந்து — பேரீஞ்சுமரம்; 1887. ஆடுதுலா — நீராடுதற்கு ஏற்ற மரம். அருங்கயம் — அழகிய நீர்நிலை. 1888. முற்றம் — வீட்டின் முன்னிடம். 1890. அவதானம் — கவனம்.

சுவடிச்சொல்: 1886. பேருளவன் 1887. ஆடுதிலா.

பாடவேறுபாடு: 1. நிறுபுயமாய் 2. சொல்வான் 3. வளவும் 4. மேவக்கேள் 5. மரமுங் கமுகும் 6. திருவாசல் முற்றமதில் 7. எனை ஈன்ற 8. பேரீந்துமுண் டுமெங்கள் பேர்பெரிய வாசலிலே 9. தானும்.

After making the women swear
Never to reveal the secret,
He again chose to address them.

### The location of the house

'Yonder lies my house,
I shall tell you a few landmarks
That may help locate it.
In the southern corner
Of the southern street
There will be a champak tree
Jack tree along with three date palm-trees
Spreading cool shade
A well with a rich water surface
And a Muruṅka tree
In the front court yard'.

### The tortoise wants him to be carried

'Damsels with lovely eyes
And skin resembling pomegranate leaves!
Keep in mind the landmarks
And carry me there most carefully
I shall withdraw myself
Into my shell.

புகுந்தாற் சடையாமல் பூவையரே யுங்கள்கையால்
[1]சுகந்தா னெனவெடுத்து தோகையரே யுன்றலையில்
வைத்துச் சுமந்தால் வழிசொல்வே னுங்களுக்கு
மெத்தக் [2]கனக்காது மெதுவாகு மென்னுடம்பு

இலகுவாய் மெத்தவுந்தான் எடுக்கயித மாயிருக்கும்
தலையிலி ருந்துவழி தப்பாமல் நானுரைப்பேன்
கற்றபுக ழாமையவன் [3]கட்டா யுரைத்தபின்பு

## ஆமைக் கூட்டினுள் புகுதல்

உற்றபுகழ் மின்னார்கள் ஓமென்று சம்மதித்து

சம்மதித்து மின்னார்கள் சத்தியமுஞ் செய்தபின்பு
நன்மை[4]பெற்று தின்மைபெறா நாகமுனி வன்புதல்வன்
கன்மமகல முன்னாள் கடவுளார் சொற்படியே
பூனை புடைக்குள் புகுந்தது போலவனும்
ஆனைமுக னருளால் ஆமைக்கூட் டிற்[5]புகுந்தான்.

**கலிவிருத்தம்**

32. மட்டி லாத வரம்பெறு மன்னவன்
[6]விட்ட நல்ல விக்குறை யாலிவன்
அட்ட மாகிரி [7]தாங்கிய வாமையின்
[8]சட்டை யானதி லன்று தரித்தனன்

**சந்தவிருத்தம்**

33. வாக்கி னாற்சிவன் [9]பாக்கிய மீயவும்
[10]வன்ம மேறியகன் மங்கள் நீங்கவும்
போக்க வேணுங் கொடுவினை யன்றுநாம்
பூவிற் செய்(தி)டும் [11]புன்மைகள் தீரவே
ஆக்க மாகிய ஆமையின் சட்டைக்குள்
[12]அன்ற வனும கத்தில் புகுதவே
தாக்க மாயிரு பேர்களுங் கூடியே
தாஙகித் தன்மனைக் கேவழி கொண்டனர்.

---

1895. சடை — சோர்வு. 1905. கன்மம் — வினைப்பயன். 1906. புடை — வளை. 1907. ஆனை முகன் — விநாயகர். 1912. வன்மம் — துன்பம். 1913. புன்மை — சிறுமை; குற்றம்.

பாடவேறுபாடு: 1. ஏந்தி எடுத்தென்னை இதமாக 2. கனவாது மேனியது என்னுடலும் 3. கட்டுரைத்த வேளையிலே 4. வைத்துப் பயின்ற 5. வந்தான் 6. விடுகுறையால் 7. மெய்க்க 8. கூட்டில் புகுந்தார் 9. மோட்சம் 10. மனமேதே றியகமகிழ்ந்து 11. கொடுவினை 12. அன்றவ னும் புகுந்த நன்றே.

Without showing signs of lassitude
Place me gently on your head
While I shall tell you the route.
Fear not, I shall not be very heavy,
My body shall so shrink and become soft
That carrying me will be easy.
I shall guide you properly
From the top of your head.

### The tortoise enters the shell

The women agreed to keep the secret
And took a solemn vow.
As suggested by Lord Siva,
Nākamāmuṉivaṉ to redeem himself from fate
Entered the shell of a tortoise
With the blessings of Lord Vināyaka.

32. Thanks to the good deeds done in the past
The blessed protagonist
Wore the shell of the tortoise
Credited with shouldering eight mountains.

33. To concretise Siva's word of redemption
And release from the effects of bad deeds,
To absolve him of sins done in the world
Both the women carried him to his house with great care and ardour.

## ஆமையரை மனைவியர் தலையில் சுமந்து செல்லுதல்

நடை

34. உச்சந்த மாய்க்கூட்டி னுள்ளே புகுந்தபின்பு
சச்சந்த மாலைதங்கப் பெட்டகத்தைத் தானெடுத்தாள்
வாகுபெறு மீசர் மலர்ப்[1]பதத்தைத் தான்றொழுது
நாகமணி மாலையந்த நல்லாமை யையெடுத்தாள்

அன்னமென வேநடந்து அரிவை யிருபேரும்
முன்னே யொருபெண் முதுகில்வைத்து ஆரியனை
தான்சுமந்தாற் போலவிந்த தைய லிருபேரும்
கோன்சுமந்த நல்லதிருக் கொன்றை மலரெனவே

இலைமலரில் முன்புசெய்த இடையூறு தீரவென்று
தலைமீது வைத்தவர்கள் தான்சுமந்தா ரம்மானை.

## ஆமையர் வழிகாட்டலும் மனைக்கு வருதலும்

எடுத்துச் சுமந்தங் கிருபேரு மாகவேதான்
அடுத்தங் கவர்களுக்கு ஆமையரும் பாதைசொல்ல

முன்னே நெடுங்கதையாய் [2]மூதறிவோர் சொற்கேட்டு
இன்னாளி லிக்கதையை எழுதியம் மானைகூற
பொன்காத்தா னிக்கதையைப் [3]பொருந்தி யுரைத்தாற்போல
கண்பார்த்து ஆமையரும் கன்னியர்க்குப் பாதை[4]சொன்னான்

சொன்ன பொழுதேயவர்கள் சொன்ன[5]லக்குத் தப்பாமல்
[6]மன்னுபுக ழாமை மனையில்வந்தா ரம்மானை.

---

1916. உச்சந்தம்—தணிவு. 1921. ஆரியன்—ஆரிய வகுப்பினன். 1923. கோன்—அரசன். 1932. லக்கு—அடையாளம். குறிப்பு: 1921. உடல் நலமில்லாத தன் கணவனை அவனது விருப்பத்திற்கிணங்க நளாயினி, தாசி வீட்டிற்குச் சுமந்து சென்ற புராணச் செய்தி சுட்டப் பட்டுள்ளது.

பாடவேறுபாடு: 1. தானை தான் நோக்கி 2. முன்னோர்கள் 3. பொருளது தானது போல் 4. சொல்ல 5. மொழி 6. வல்ல.

## The wives carrying the tortoise

34. After the shell was worn deftly
Caccantamālai took out the treasure chest
Offered a prayer at the feet of Lord Siva
And lifted the meritorious tortoise.
Both the women walked with swan's gait
Carrying their husband like a tender flower
More or less like the lady of ancient lore
Who bore her husband on her back.
The women took pains to carry the tortoise on their head
In the fond hope that he would be relieved of the sin
Of smelling a flower in the past.

## Reaching the residence

While the two women carried him,
The tortoise directed them
With great accuracy
More or less like Poṉkāttāṉ
Who has condensed into Ammāṉai form
With great fidelity
A long tale told by elders.
The women reached the house
Without missing their way
Within the time specified.

## பெற்றோரைத் தொழுது மனைவியரை அறிமுகப்படுத்தல்

**விருத்தம்**

35. வந்தன னாமை மன்னன் மனைதனிற் பெண்க ளோடே
தந்தைதாய் முன்பில் வந்து தாளிணைத் தொழுது போற்றி
வந்தன னுனக்கு நல்ல மருமக்கள் தனையுங் கொண்டு
விந்தையா யிவரை யங்கே வீட்டுக்குள் வருத்து மென்றான்.

## அன்னையார் கடிந்துரைத்தல்

நடை

36. அந்தமொழி கேட்டு அபிராமி வல்லியவள்
சிந்தையுற்று வார்த்தையொன்று செப்புவா ளப்போது

முன்னே முகித்தபெண்ணை முகம்பாரா மற்றிரிந்தாய்
இன்னமிந்தப் பெண்பாவ மேற்கவோ நீபாவி
தாறுமா றாகவேநீ சப்பாணி போற்றிரிந்து
போறயிடங் களெல்லாம் பெண்கொண்டு வாராயே

மெய்வருந்தி நீயுமிந்த வீடுமனை பாராமல்
கைமருந்தைப் போட்டிவரைக் கன்னமிட்டு வந்தாயோ
ஆளுக்களி [1]யான்றனக்கு ஆக்கியிடு வேனெனவே
[2]ஏழைச் சிறுக்கியிவ ரெங்கிருந்து வந்தார்காண்

## மனைவியருடன் மகிழ்வுடன் இருத்தல்

அபிராம வல்லிசொல்லும் அழிவான வார்த்தையெல்லாம்
[3]விபரமாய்ப் பெண்கள் விகடமாய்க் கூட்டாமல்
வந்ததொரு ஆமையரும் வரிசையிரு பெண்களுமாய்
சந்தோச மாகயிவர் தானமுது செய்துகொண்டு

வெள்ளிலையும் பாக்கும் விதமாக வேயருந்தி
கள்ளமில் லாமலவர் கருத்தாக வேஇருந்தார்.

---

1937. வருத்து — அழைப்பித்து. 1942. சப்பாணி — நொண்டி. 1945. கன்னம் — களவு. 1946. களியான் — குடியன். 1950. விகடம் — வேறுபாடு; தொந்தரை. 1952. வெள்ளிலை — வெற்றிலை.

பாடவேறுபாடு: 1. யானுக்காய் அழுதுவிடுவோமெனவே 2. ஆக்கமாய் பெண்கள் ஆமையுடனே தொடர்ந்தீர் 3. விகரமாய்ப்.

## Introducing his wives

35. Came the hero tortoise to his house
With his wives
Saluted his parents
Sprang a surprise on them
By beseeching them to receive formally
The daughters-in-law

## The mother put out

36. On hearing those words
Apirāmavalli was disturbed
And burst out:
Look, earlier you married a girl
And showed total indifference.
Like an irresponsible (n'er-do-well)*
You are wandering about
And acquiring wives from various places.
Do you want to add to your sins
Of ill treating women?
Ignoring your household duties
You are loafing about.
Did you use any charm
To seduce these girls?
Tell me from where you brought
These innocent girls.

## Enjoying bliss with his wives

The girls did not misconstrue
The hot and pungent words of Apirāmavalli.
On the other hand the tortoise and his wives
Were merry and happy
Chewed betel and areca nuts
And lived a guile-less simple life.

---

* The dictionary meaning of Cappāṇi is no doubt cripple. Here it is used in the sense of an irresponsible idiot who loafs about.

## சம்மந்தராச மன்னனிடம் தன்னைச் சுமந்து சென்று விடும்படி அன்னையாரை வேண்டுதல்

இருக்கும் பொழுதிலந்த 'ஏத்தபுக ழாமையரும்
உருக்கமதாய் வார்த்தை ஒருக்காலே தானவனும்
தேன்போலே வார்த்தைகளை சிறப்பாக வேயுரைத்து
தான்பாக மாயவனும் தாயார் தனைத்தொழுது
ஆசார வார்த்தைசொல்லி ஆமையுரு வானவனும்
தாயாரை நோக்கியவன் சாற்றுவா னோர்வார்த்தை
அத்தனரு ளாலுலகை ஆளு மரசனிடம்
கொற்றவனார் முன்பில் குணமாக வே[1]நீயும்
அன்னம்போல் என்னை அவதான மாகவேதான்
வன்ன மயிலனைய மாதாவே யென்தாயே
என்னையெடுத் துன்றலையில் [2]ஏற்றிச் சுமந்துகொண்டு
சன்னைமொழி சொல்லி [3]சபதமது கூறிவிட்ட
சேர்ந்த புகழ்[4]வளருந் தேசமதை யாளுகின்ற
வேந்தன் முன்பிலென்னை விரைவில்வைத்து வாருமென்றான்.

## அன்னையார் மீண்டும் கடிந்துரைத்தல்

அந்தமொழி கேட்டு அபிராம வல்லியவள்
சிந்தை [5]சலித்துவிழி தீப்போல வேசிவந்து
முந்தவொரு வார்த்தை மொழிந்தனள்கா ணம்மானை
சந்தங்கெடுப் பதற்கோ தான்பிறந்தாய் பிள்ளையென்று
பண்டுமொரு சுமைநான் பந்தல்மட்டு மேசுமந்தேன்
இன்றுமொரு சுமைதான் ஏறுகிறாய் நீயெனவே

## அன்னையை ஆற்றுப்படுத்துதல்

அன்னை யுரைக்கவந்த ஆமையவ னேதுசொல்வான்
என்னையுந்தான் முன்னமேநீ எத்தனைநா ளாய்ச்சுமந்தாய்
ஈரைந்து மாசமதாய் என்னையுந்த னுந்தியிலே
பாரஞ்சு மந்துவெகு பாடுபட்டுக்கீ ழேவைத்தாய்
அன்று சுமந்தருஞ் சுமையே யல்லாமல்
இன்று சுமையுனக்கு இல்லைகாண் மாதாவே

---

1958. ஆசாரம் — நன்னடை. 1960. அத்தன் — சிவன். 1961. கொற்றவன் — அரசன். 1965. சன்னை — குறிப்பு; பரிகாச வார்த்தை. 1974. சந்தம் — சுகம். 1976. உந்தி — வயிறு.

சுவடிச்சொல்: 1980. சேயிளை 1981. முற்கதை.

பாடவேறுபாடு: 1. எனையும் 2. ஏந்தி 3. சமாதானங் 4. அரசன் 5. சடைத்து.

### The tortoise wants his mother to carry him

After paying due respects to his mother,
The tortoise spoke words soaked in honey.
Take me on your head, mother
To the king who rules the country
With the blessings of Lord Siva;
The king who used words of scorn
And made me take a solemn vow;
The king who is heading a land
That grows in fame and reputation.
Please carry me gingerly
As if I am a delicate swan.

### The mother gets annoyed

Those words evoked in Apirāmavalli
Anger and disgust.
Her eyes turned lurid red
And she asked
Are you born as my son
To rob me of my peace of mind?
Earlier I carried you to the shamiana,
Do you want me to carry the burden again?

### The tortoise pacifies his mother

What did the tortoise reply?
True, you carried me in the past
For ten long months in your womb
And delivered the burden with great unease
That was indeed a heavy load
But not what I suggest now.

## அன்னை ஆமையரை சுமந்து மன்னனிடம் செல்லுதல்

செப்பும் மொழிகேட்டு சேயிழையு மேதுசொல்வாள்
ஒப்புமுப கதையும் ஒருக்காலே நீயுரைப்பாய்
ஏத்தபுக ழாக எடுத்துரைத்து என்னையுந்தன்
வார்த்தையி னாலே மழுப்பாதே என்றுசொல்லி

மண்ணுல கிலுள்ள மனுடர்[1]பல பேர்நகைக்க
உன்னைச் சுமக்கவெனக் கூழின்விதி தானெனவே
[2]தட்டிலா தாமையரைத் தன்றலை[3]மே லேயெடுத்து
பெட்டக முங்கொண்டு புறப்பட்டா ளம்மானை.

## கண்டோர் கூற்றும் மன்னனிடம் கொண்டு வைத்தலும்

பரிந்துலகி லுள்ளவர்கள் பார்த்துமிக வேசிரிக்க
விரைந்துகடி தாகவந்த மெல்லியபி ராமவல்லி
கண்டவர் களெல்லாம் கலியுகமா கப்பார்க்க
கொண்டுபுறப் பட்டாளே கோலநெ டுந்தெருவில்

தெருவில் நடந்தவளும் சீர்வேந்தன் முன்பதிலே
அருகில் வரும்போது அங்கிருக்கும் பேர்க[5]ளெல்லாம்
இன்னா பாருங்கோ இதுவுமொரு கோலமது
வன்னமுறுஞ் சின்னமா ணிக்கக்கூத் தாமெனவே

வலைதனிலே பட்டதிந்த வல்லாமை தன்னை[6]யவள்
தலைதனிலே[7]ஏற்றியிப்போ தான்சுமந்து [8]நம்மிடத்தில்
எங்கிருந்தோ யிங்கேஇவள் வாராள்பேச் சி[9]யைப்போல்
அங்கிருக் கும்பேர்க ளனைபேரு மிப்படியே

சொல்லி யனைவோரும் [10]சுழன்றுவந்து பார்க்கையிலே
வல்லிய பிராமியந்த [11]வான்பெரிய வாமைதனை
மண்டலத்தை யாளுமந்த மன்னன்சோ ழேசன்முன்பில்
கொண்டுவந்து தானிறக்கிக் கோதையரும் வைத்தனளே.

---

1984. மனுடர் — மனிதர். 2003. கோதை — பெண்.

சுவடிச்சொல்: 2002. சோளேசன்.

பாடவேறுபாடு: 1. சில 2. தாட்டிமையாய் 3. யிலேயிருத்தி 4. நடந்தாளே 5. சொல்வார் 6. இப்போ 7. வைத்த வளும் 8. தன்னருகே 9. என்று 10. சூழ்ந்துநின்று 11. வாழ்பெரிய.

## The mother carries the tortoise to the King

The mother commended truly
The son's ingenuity in drawing parallels
But forbade him the use of clever talk,
She cursed her lot which made her carry him earlier
Becoming a laughing stock in the eyes of all.
At any rate she kept him on her head
And proceeded with the precious box.

## The tortoise placed before the king

To the amusement of all and sundry
Apirāmavalli moved at fast pace
With the tortoise on her head
Drawing comments from some onlookers
Who laid the blame on the perversities of *Kaliyuka.*
To some her hastening to meet the king
Had all the makings of a street play
Who said that she looked the very image of Pēcci
Carrying a tortoise caught in a net
Most incongruously and indelicately on her head.
While men spoke differently
And gathered round her
The woman placed her burden
Before Cōḻēcaṉ, the ruler of the country.

## மன்னன் மனச்சோர்வடைதலும் ஊழின் செயல் என எண்ணுதலும்

**விருத்தம்**

37. வைத்தபோ தரசனுந்தான் மனமேச டைத்துமக ளாலே
[1]சுத்தவெளி யாயிவ னுடைய சூட்சமத்தை நாமறி யாமல்
உத்தமொழி நானுரைத்த தெல்லாம் வூழ்விதி யின்படி யெனவே
[2]மொய்த்த குழாலென் மகட்கு [3]முகூர்த்தநாள் வந்தடுத்து தென்றார்.

**கலிவிருத்தம்**

38. என்று மன்ன னிருதயந் தன்னிலே
நன்று நன்றிது நன்மக ளார்விதி
பண்டு செய்த பழவினை யாலிதை
இன்று கொண்டிப்போ திங்குவந் தானென்றார்.

## அன்னை தன் மனைக்கு ஏகுதல்

**நடை**

39. என்றுசடைத்து மன்னன் [4]எண்ணாது மெண்ணியெண்ணி
கன்றிமுகம் வாடிக் கவிழ்ந்து தலை[5]குவித்து
தண்டமிழ் நூலாராயும் சம்மந்த ராஜனவன்
மண்டலத் தோர்காண முகம்வாடி யிருக்கையிலே
ஆமையார் தன்னை அபிராமி யங்கிருத்தி
தாமக்குழ லாளும் தன்மனையிற் போனபின்பு

## சேனைத் தளகர்த்தோரும் மற்றோரும் சூழ்தல்

சுற்றி வளைந்து துரைமக்கள் தானிருக்க
பத்திபத்தி (யாக[6]வெகு) பாளையங்கள் தானெருங்க
ஆனை குதிரைபடை அணியணியா கச்சூழ
சேனைத் [7]தளகர்த்தர் செருமி வளைந்துநிற்க
உம்பளக் காரர்களும் ஊழியஞ்செய் யும்பேரும்
கம்பளத் தொட்டியரும் [8]காலாள்க்க ளானவரும்

---

2005. சூட்சம் — சாமார்த்தியம். 2007. முகூர்த்த நாள் — திருமணநாள். 2019. பாளையம் — சேனை. 2022. உம்பளக்காரர் — உயர்ந்தோர். 2023. கம்பளத்தொட்டி — தொட்டிய சாதியான்; குடு குடுப்பாண்டி.

**சுவடிச்சொல்:** 2005. சூக்ஷமதை.

**பாடவேறுபாடு:** 1. சுத்தும் வினையால் 2. மறமா 3. மாலையிட 4. எண்ணாத எண்ணம் எண்ணி 5. குனிந்து 6. நல்ல பாலகனைப் பார்த்திருக்க 7. தலைவர் 8. கன்னடருங் கின்னடரும்.

## The bewildered king blames fate

37. When the tortoise was placed before the king
He felt highly crest-fallen
All because of his daughter.
'It is a pity I gave word
Without knowing he is sharp as needle,
What else can explain my action
Than the workings of fate?
At any rate, the day for fixing the marriage date
Of my dear daughter is drawing near.'

38. So mused the king
It is all destiny at work
Actions done in the past
Are boomeranging
And account for the present happenings.

## Apirāmavalli hastened to his home

39. The king's thoughts ran wild

His face registered misery.
Thus when Cammantarācan̲
Looked terribly blue and
Apirāmavalli left the tortoise there
And hastened to her home.....

## The tortoise surrounded by the King's men

The tortoise was encircled by the gentry
Various units of the army
Cavalry, elephant force
Commandants and dignified personnel
Servants and footmen

ஆளும் பலவூர் அரசர்களுந் தாமிருக்க
வாளும் பரிசை[1]குந்தம் வல்லயங் களும்நெருங்க
வில்லணியும் வாளணியும் வேந்தர்துரை தானிகளும்
வல்லணியாய் சூழ்ந்து மகிழ்ந்திருக்கும் அந்நேரம்

## ஆமையர் மன்னன் முன்பில் முப்பொருள்களையும் வைத்தல்

அன்னேரந் தானுமந்த ஆமை[2]மக ராஜனவன்
மன்னர்திரு முன்பதிலே வந்திருந்த பேர்காண
நாட்டமுட னேயவனும் நல்லமணிப் பெட்டகத்தை
பூட்டைத் திறந்தவனும் பெட்டகத்துக் குள்ளிருந்த

வாய்த்த[3]பிழைச் சங்கிலியும் வலுசாவு சங்கிலியும்
ஏத்தபுக ழானதொரு [4]ஈனவரிச் சாவலையும்
இந்தவகை மூன்றுமெடுத் தவன்றன் கையாலே
சிந்தை[5]மெய்த்து எல்லோரும் செருமி[6]வளைந் தேபார்க்க

விரைசேர் மணிமார்பன் மேவலரை வெற்றி[7]கொள்ளும்
அரசனி னிதிருக்கும் அழகியசிங் காசனத்தில்
வானவர்கோன் மெய்க்குமந்த மணியாச னந்தனிலே
தானவனும் வைத்து சரியிருப் தாகவேதான்

[8]தேடுபுகழ் மன்னனுட சிங்கா சனமதிலே
கூடவே வந்தவனும் கொலுவிருந்தா னம்மானை
அரியபுகழ் மன்னனுட ஆசனத்தி லேறியவன்
சரியாகவே [9]கொலுவில் தானிருந்தா னம்மானை.

## வரிச்சாவல் கூவுதலும் பொன் சொரிதலும்

கூண்டவரிச் சாவலது கூவுதற்கு [10]நேரம்வந்து
ஆண்டு வருஷம்[11]நிறைந் தப்பொழுதே தானறிந்து
வருஷமொரு நாளையிலே வாச மாய்க்கூவும்
அரியதிருச் சேவல் ஆரவா ரத்துடனே

---

2025. பரிசை — கேடயம். குந்தம் — வேல். வல்லயம் — ஈட்டிவகை. 2032. பிழைச்சங்கிலி — உயிர்ப்பிக்கும் சங்கிலி. சாவுச்சங்கிலி — இறப்பிக்கும் சங்கிலி. 2036. மேவலர் — பகைவர். விரை — வாசனை 2037. சிங்காச ாம் — சிங்கம் தாங்குவது போல் அமைக்கப்பெற்ற இருக்கை. 2038. வானவர்கோன் — இந்திரன். ஆசனம் — இருக்கை. 2041. கொலு — இருப்பு; இருத்தல். 2047. ஆரவாரம் — பேரொலி.

**பாடவேறுபாடு:** 1. பல வல்லா யுதம்நெருங்க 2. உரு வானவனும் 3. புகழ் 4. இயன்ற 5. மகிழ்ந்து. 6. மிகப் பார்க்க 7. கொண்டான் 8. தென்புகழும் 9. கூடதா னிருக்கும் வேளையிலே 10. வேளை யதாய் 11. திகைந்து அந்நேரம் அம்மானை.

Kings of various countries
Weapons galore
Archers, swordsmen and soon....

## The tortoise places before the king three rare things

In the august presence of the king
And other curious spectators,
The tortoise opened the coveted box
Took out the chain of life
Along with the chain of death.
Also he produced the striped cock
To the wonder and surprise
Of those who encircled and watched.
Placing them on the throne of the king
Whose chest smelt of sandal paste
And who was a terror to his enemies
He ascended the mighty throne
And sat on equal footing with the ruler.

## The Cock crows

The striped enchanted cock felt that
The opportune time had come
For it to crow
Since one full year had elapsed.

[1]உக்கிர மாகச் சாவலுடனே சிறகுதட்டி
[2]கொக்க(ர)க் கோவெனவே கூவியதே யன்னேரம்
வன்னமுத்துச் சாவலுட வாயிலிருந்து சொரியும்
சன்னமுத்து நற்பவளம் தங்கநவ ரத்தினமும்

நாகமணி வயிரம் நல்லவை டூரியமும்
வாகுபெறு பச்சை மரகதங்கோ மேதகமும்
ஆணிக்கனகப் [3]புட்ப ராகம பரஞ்சியுடன்
மாணிக்க [4]நீலரத்தினம் வாயிலி ருந்துசொரியும்

[5]மெய்ஞான யீசன் விமலன் றிருவருளால்
சிங்கா சனத்திற் சிறப்பாக வே[6]நிறைந்து
மாரி[7]பொழிந் தாற்போல் வரிசைச்சா வல்வாயில்
சோராமற் சொர்னம் சொரிந்ததுவே யம்மானை.

## மன்னனும் மற்றையோரும் திகைத்தல்

விருத்தம்

40. இவ்வகைக் கண்ட போதங் கிருந்தவ ரெல்லாம் [8]பார்த்து
செவ்வகை யிவன்றா னிப்போ தேவனோ திருமால் தானோ
எவ்வகை யாக நாமு மிவன்றனை யறிவோ மென்று
அவ்வகை யறியா வண்ணம் [9]அரசனுந் திகைக்க லுற்றான்.

## மன்னன் வரிச்சாவலை எடுத்தலும் சங்கிலியைக் கேட்டலும்

நடை

41. திகைத்திருந்த மன்னனுக்கு செப்பலுற்றார் மந்திரிமார்
வகுத்தப்படி யால்நமக்கு வந்தாலென் செய்வமென
பாரிலரச னங்கே பரிமளமா யப்போது
வாரியெடுத் தரசன் வரிசைச் சாவலதையும்

தன்வச மாக்கியவன் சங்கிலியைக் கேட்பளவில்

---

2048. உக்கிரம் — ஊக்க மிகுதி. 2049. கொக்கரக்கோ — கோழி கூவும் ஓசை. 2054. அபரஞ்சி — புடமிட்ட பொன். புட்பராகம் — நவமணி. 2056. ஈசன் — சிவன். விமலன் — சிவன். 2058. மாரி — மழை. 2059. சோராமல் — சோர்வடையாமல். சொர்னம் — பொன். சொரிந்த — உதிர்ந்த; கொட்டுதல். 2066. பரிமளம் — மிகுந்த ஆவல்.

**பாடவேறுபாடு:** 1. உபதேசமாகச் சேவலுடனே இறகுதட்டி 2. கூகூ வெனவே கூவியதே யம்மானை 3. அழகுவரிச் சேவலும் 4. பச்சை 5. மெய்யான 6. சொரிய 7. சொரிந்தாற் 8. மெய்த்து 9. அமைச்சரும் கேட்க லுற்றார்.

Fluttering its feathers in all glory
It crowed cock-a-doodle-doo
When from its mouth fell coral, gold
Emerald, nine precious gems, amethyst
Diamond, opal, beryl and jade.
Thanks to the blessings of Lord Siva
There was an incessant down pour
Verily like the rain.
The cock laid the precious stones
Without sloth or tiredness.

### All were wonderstruck

40. People who witnessed the unusual event
Wondered whether the tortoise
Was Tirumāl or some other God
With supernatural powers.
Unable to size up the tortoise
They stood perplexed and bewildered
As also the king.

### The King wants the chains of life and death

41. While the ministers told the king
Who was verily stupefied
That one has to bow willy-nilly
To whatever is ordained
He gathered in his hands
The striped cock with great eagerness
And when he demanded the surrender
Of the chains of life and death.....

## ஆமையர் நிபந்தனையும் சங்கிலியைத் தரமறுத்தலும்

நல்வச மானபுகழ் நாகமுனி வன்புதல்வன்
சொல்லுவான் வார்த்தையொன்று [1]சோர்வில் லாமலவனும்
வெல்லும் புகழுடைய [2]வெற்றிமுடி மன்னவனே

சாவல்நவ ரத்தினமும் தங்கமணிப் பெட்டகமும்
ஆவலுட னுமக்கு ஆக்கிவைத்தேன் கண்டீரே
வீரமறிய [3]வேலை வேண்டிவரச் சொன்னதினால்
பாரறிய வேண்டியுந்தன் பட்டணத்தி லிங்குவந்தேன்

கொண்டுவந்த தெல்லாம்நீர் கொள்ளை[4]கொள் ளவேநினைத்தால்
ஒன்றுங்கிடை யாதுயினி உம்மாணை [5]சொல்லுகிறேன்
கள்ளத்தன மாகக்கலி யாணஞ்செய் வேனென்று
உள்ளபொரு ளெல்லாம் உடன்பறிக்க வே[6]சமைந்தால்

தாரேனு மக்கிதுவும் சம்மதமில் லை[7]யெனக்கு
வாராது காணுமக்கு வரிசைச் சாவலதுவும்
சிந்தையுடன் வார்த்தையொன்று செப்பக்கேள் மன்னவனே
உந்தன் மகள்தன்னை உலகறிய வே[9]யெனக்கு

மங்கிலியஞ் சூட்டிமணம் [10]செய்யவில்லை யென்றாலும்
**சங்கிலி நானுங்களுக்குத் தாரதில்லை யென்றுரைத்தான்.**
குழப்பமதா யென்னோடே குமண்டையிடு வீராகில்
வழக்காலு மும்மைவிட மாட்டேன்[11]காண் மன்னவரே

---

2075. பார் — உலகம். 2079. சமைந்தால் — தொடங்குதல்; ஆயத்தமாதல். 2084. மங்கிலியம் — கலியாணத்திற் கட்டப்படும் தாலி. 2086. குமண்டை — மகிழ்ச்சியாற் குதித்தல்; செருக்கு மேலிட்டுச் செய்யும் செயல்.

**சுவடிச்சொல்:** 2069. வசனமான.

பாடவேறுபாடு: 1. சொல்பெரிய மன்னருடன் 2. வீரமுடி 3. என்னை 4. இடவே துணிந்தால் 5. கண்டீரே 6. துணிந்தால் 7. காண் தானுமக்கு 8. சேவலானதுவும் 9. நமக்கு 10. முகித்துத் தாராவிட்டால் 11. கண்டீரே.

## The tortoise refuses to part with the prize

Spake Nākamāmunivan̲ Putalvan̲,
Oh king with creditable achievements
I have successfully brought the striped cock
Precious gems and the coveted box
In answer to the challenge flung by you
To my bravery and prowess.
If you try to deceive me or swindle my prize
I swear you will not get any of it.
Assuming that I might marry your daughter on the sly
If you try to wrest my things,
I, for one, would not put up with it.
Look, if you do not publicly solemnize my marriage with your daughter,
I shall not give you the magic chains.
If you make things difficult for me
The matter will be hotly pursued and disputed.

## கண்டோர் வியந்து பாராட்டி நிற்றல்

[1]செய்யவுரை கேட்டோர் சிரித்துக் கலகலென
கைவிரலைமூக் கில்வைத்துக் கண்டுநின்ற பேர்க[2]ளெல்லாம்
ஆமையல்ல வேயிவனும் ஆண்மையுள்ள வீரனென்பார்
வாமையுள்ளான் றன்னையினி வம்புசொல்ல[3]ப் போகாது

எட்டுக்குளந் தனிலும் எங்குந்தண் ணீர்காட்டி
தொட்டவழக்கை விட்டுத் தோற்க[4]வுந்தான் மாட்டானே
சரி[5]யிருப்ப தாகமன்னன் றன்னோ டிருந்தவன்காண்
வரிகண்ட மானகள்வன் வம்பனிவன் றானெனவே

அப்படியே சொல்லி யனைவோரும் நிற்கையிலே

## மந்திரி மன்னனுக்குரைத்தல்

செப்பரிய மன்னனுடன் செய்ய[6]புகழ் மந்திரிமார்
வாய்பொத்தித் தெண்டனிட்டு வாளரசன் றன்னோட
சேய்புத்தி யாகவவர் செப்புவார் மந்திரிமார்

தேறிநீர் முன்னேமணஞ் செய்வமென்ற வார்த்தைதனை
மாறினா லீசனுக்கும் வானவர்க்கு மேராது
ஏழைக்கு நல்லமொழி சொல்லிமறுத் தில்லையென்றால்
சூழும்வெகு பாவமந்த தோஷமது தீராது

தாழாமலே யிவனைத் தான்[7]வெருட்டி விட்டாலும்
பாழாகி [8]நம்முடைய பட்டணத்தில் தீங்குவரும்
உண்மை யொருவருக்கு உறுதிசொன்ன தை[9]மறுத்தால்
நன்மை கிடையாதவர்க்கு நாதனருள் கிட்டாது

கிட்டாது மோட்சகதி கீழ்நரகத் தில்விழுவார்

---

2091. வம்பு — வீண் வார்த்தை; தீம்பு வார்த்தை. 2092. குளம் — தடாகம்; ஏரி. 2093. வழக்கு விவகாரம். 2095. வம்பன் — துஷ்டன். 2098. தெண்டன் — வணக்கம். 2099. செப்பு — சொல்லுதல். 2101. வானவர் — தேவர்; இந்திரன். 2103. தோஷம் — குற்றம். 2104. வெருட்டி — அச்சுறுத்தல்; ஓடச் செய்தல். 2107. நாதன் — கடவுள்; சிவபெருமான். 2108. மோட்சம் — முத்திநிலை. நரகம் — உயிர்கள் தீவினைப்பயனை அனுபவிக்கும் பாதாள உலகம்.

**சுவடிச்சொல்:** 2108. மோக்ஷகெதி.

**பாடவேறுபாடு:** 1. செப்புமுரை கேட்டு 2. சொல்வார் 3. கூடாது 4. பதுவுங் காணாது 5. வண்ணமாகயிவன் 6. புகழானதெல்லாம் 7. விரட்டி 8. உம்முடைய 9. மறந்தால்.

## Men pay encomiums

Many laughed in glee
Expressing wonder and surprise
'He is not a despicable tortoise
But a hero robust and virile
No more a wicked son to his mother.
He is not going to take it lying low
But would dispute it and is sure to win'.
The men continued to talk
Payig tributes to the pluck of the tortoise.

## The advice of the ministers

The wise ministers of the great king
Kneeling and closing their mouth with hands
In humble supplication
Slowly ventured to speak.
Sir, if you break the promise of marriage,
It is sure to irk Siva and the divines.
After promising something to the poor
Any attempt to break it would breed sin
For which there is no redemption.
Haughtily if you drive away the tortoise
Destruction is sure to overtake the city.
God's grace will cease to be yours
If you fail to keep your word sacred.
There is also the danger of your being thrown
Into the wild abyss of hell.

## வாக்குத் தவ்றாத பெரியோரின் பெருமையை மந்திரி சுட்டிக்காட்டுதல்

தட்டாமல் பேறுபெற்றோர் தன்பெருமை சாற்றுகிறேன்
பூர்வத்தி னாலே புகழ்பெரிய மன்னவனே

[2]மன்றிலொரு புதுமை [3]மாறன்வளர் நாடதிலே
[4]வென்றியொரு மின்னைமணம் வீரகுபே ரன்றனக்கு
மறுத்துமொழி சொல்லாமல் வாக்கொன்று சொன்னதினால்
குறத்தலையனுக் கொருபெண் குன்றாம லீந்திலையோ

வெற்றியரிச் சந்திரனும் மெய்யொன்று சொன்னதினால்
குன்றாமற் றன்னாட்டைக் கோசிகற்கு யீந்திலையோ
உள்ளஞ்சோ திக்கவென்று உண்ணவந்த ஆண்டார்க்கு
பிள்ளை யறுத்துப் [5]பேறுபெற்றுக் கொள்ளலையோ
தாயைக் குதிரையாக்கி தாரமதை ஈடுசெய்து
சேர்மனு பார்த்துபொறுத்துச் சொர்க்கலோகஞ் சேர்க்கலையோ
பதிவாய் மகரம் படுத்துவந்த ஆண்டியற்கு
அதியரசன் தன்மகளை அன்றுகொடுத் தானிலையோ

இப்படியல் லோபெரியோர் ஈசனருள் பெற்றார்கள்.

## திருமணம் செய்விக்க சொல்லுதல்

எப்படியும் மாதைமணம் [6]ஈயுமென்றா ரம்மானை
மெய்பரவு மீசருந்தான் மெய்யறிய வேநீர்தான்
தப்பரவு சொன்னால் தவப்பேறு கிட்டாது

[7]இங்கே பிறந்தோரி ருப்பதுவும் நிச்சயமோ
அங்கே பரகதிக்கு ஆகும்வழி தேடுமையா
வீறான கீர்த்தியிந்த மேதி[8]னியோர் தாமறிய
மாறாமல் பெண்ணைமணஞ் செய்யுமென்றார் மந்திரிமார்.

---

2109. சாற்று — சொல்லு. 2111. மன்றில் — சபை. மாறன் — பாண்டியன். 2112. மின்னை — பெண்ணை. 2113. வாக்கு — சொல்; சத்தியம். 2114. ஈந்தல் — கொடுத்தல். 2116. கோசிகர் — விசுவாமித்திரர். 2117. ஆண்டார் — கடவுள்; சிவபெருமான். 2119. தாரம் — மனைவி. 2121. மகரம் — மீன். 2124. மாதை — பெண். 2128. பரகதி — மோட்சம். 2129. மேதினி — உலகம்; பூமி.

**குறிப்பு :** 2111-2123. பாண்டிய மன்னன் தன்வாக்கைக் காப்பாற்ற தன்மகளை குறத்தலையனுக்கு மணம் செய்வித்ததும்; அரிச்சந்திரன் தன் நாட்டை விசுவாமித்திரர்க்கு ஈந்ததும்; சிறுத்தொண்டர் தன்மகனை அறுத்துக் கறி சமைத்து இறைவனுக்கு படைத்ததும், மீனைக் கடலிலிருந்து தேடித்தந்த ஒருவனுக்குத் தன் மகளைத் திருமணம் செய்து தந்த அரசன் செயல்களும் சொன்னசொல் தவறாமைக்கு எடுத்துக்காட்டாக ஆசிரியரால் மந்திரி வழி சுட்டப்பெறுகின்றது.

**சுவடிச்சொல் :** 2128. பரகெதி.

**பாடவேறுபாடு :** 1. கேட்டிலையோ 2. பண்டும் ஒரு 3. பாண்டி 4. வென்றியுள்ள மன்னன் வீரகுமா ரனொருவன் 5. கறி சமைத்துக் கொடுத்திலையோ 6. ஈந்துகொடு தானிவர்க்கு 7. எங்கே யிருந்தாலும் இறப்பதுவும் நிச்சயந்தான் 8. எங்கும் விளங்க.

## The Minister lists greatmen who kept their word

Let me speak of men
Who attained to immortality
By honouring their pledge or promise.
Did not a Pandya King of old
Marry off his daughter to a freak
To keep his word?
Have you not heard of Ariccantira
Who parted with his kingdom
In favour of Kaucika to uphold a pledge?
To keep his word to Siva
Did not Ciruttoṇṭar cook his own son
And was later admitted to the kingdom of God?
To fulfil the promise given to his wife
Did not an ancient convert his mother into horse
And later became a realised soul?
Who does not know about the rectitude of the Ancient King
Who gave his daughter to a vagrant
For salvaging a fish from the sea?
That was how great men obtained
The grace of God.

## Suggesting marriage

It would be most prudent
To arrange forthwith the marriage of your daughter.
If you break your word
You will not get salvation.
Death being most certain
It is better you make peace with God.
To keep up your prestige and reputation
Marry off your daughter at once
Suggested the ministers.

## மன்னன் திருமண அறிக்கைச் செய்தல்

விருத்தம்

42. மண்மது [1]செய்யு மென்று மந்திரி மார்கள் செப்ப
குணமது [2]வென்று வந்த கொற்றவன் [3]மனது தேர்ந்து
சிணமதில் கோப்புண் டாக்கி தேசத்தி லறிக்கை செய்து
கணபதி தன்னைப் [4]போற்றிக் காவண மிட்டார் [5]மன்னன்.

## நகரை அலங்கரித்தலும் சேனைமக்கள் சூழ்தலும்

நடை

43. காவணமு மிட்டுக் கதலிக் குலைநிறுத்தி
பூமணக்கு மாலைகளும் பொற்சரிகை யுந்தூக்கு
பட்டுவிதா னங்கள்செய்து பற்பலவாய் கோலமிட்டு
கொட்டு முரசதிர கொம்புகுழ லும்முழங்க

மத்தளத் [6]தம்புருக்கள் வாத்தியங்கள் [7]தானதிர
கைத்தாளம் நட்டுவர்கள் கையில்பட்டந் தான்பிடிக்க
ஆரவார மாக அரசர் துரை[8]மக்களவர்
சேரத்திரண் டிவர்கள் செருமி வளைந்துநிற்க

பட்டணத் திலுள்ள பலசனங்க ளானதுவும்
வட்டக்கடல் போலே வளைந்து செருமிநிற்க
சேனைத் [9]திடிமன் திரைகடல் போல்முழங்க
ஆனைகுதிரைப் படைகள் அலங்கார மாயதிர

குப்பப்படை கள்குரை கடல்போ லேயொலிக்க

## சம்மந்தமாலை தோழிகளுடன் இருத்தல்

ஒப்பித்துப் பெண்ணுமந்த உள்ளறையி னுள்ளிருக்க
மாதிருக்க வுள்ளறைக்குள் மங்கையர்கள் தன்னோடே
பேதையிளங் கன்னியர்கள் பெண்கள்சில பேர்கள்வர

---

2132. கொற்றவன் — மன்னன். 2133. கோப்பு — அடக்கம். 2134. கணபதி — விநாயகர். காவணம் — பந்தல். 2135. கதலி — வாழை. 2136. பொற்சரிகை — பொன்னாலான சரிகை. 2137. விதானம் — மேற்கட்டி. 2138. கொம்புகுழல் — ஊதும்குழல். 2139. தம்புரு — பக்க சுருதிக்கு உதவும் ஒரு நரம்புக் கருவி. வாத்தியம் — இசைக்கருவி. 2140. நட்டுவர் — நாட்டியம் ஆட்டுவிப் போன். பட்டம் — பறை வகை.

சுவடிச்சொல்: 2136. பொற்சருகை. 2141. ஆரபாரம்.

பாடவேறுபாடு: 1. முடிக்க வேண்டி 2. என்று நல்ல 3. தெரிந்து நன்றாய் 4. தொழுது 5. அன்றே 6. தம்புருக்கை 7. நின்றதிர 8. முழக்கசிலர் 9. திரட்டிமன்னன்.

## Announcing the marriage

42. On hearing the counsel of his ministers
To marry off his daughter,
The king saw reason
Displayed great restraint
And after praying to Kanapati
Publicized the wedding and
Erected the auspicious shamiana.

## The Prelude to marriage

43. A shamiana was erected
Plantain trees put in
Silken canopies spread
And *Kōlams* artistically done,
The drum was beaten
Along with pipes of various types
Instruments galore,
The tabor and the cymbal
Of dance maestors
Producing a musical rattat,
Encircled by the gentry
And a cross-section of the town
Armies and their units
Blasting and booming,
The cavalry and the infantry
Majestically lining up
With the place resounding the echoing
Verily like the roar of the ocean!

## Cammantamālai with her friends

While the maiden remained in the inner chamber
With other ladies,
Innocent girls encircled her
And indulged in merry making and horse play.

கூடி[1]வளைந்து மின்னார் கொஞ்சிவிளை யாடிவர
சேடியர்கள் கூடிச் செருமிவனைந் தேயிருக்க
இப்படியே மின்னா ரிருந்துவிளை யாடுவதை

## சம்மந்தமாலையின் துயரம்

கற்புடைய மாதுநல்லாள் கன்னிசம் மந்தமாலை
வீறிட்டு மின்னார் விளையாடும் பாவனையை
ஏறிட்டும் பாராமல் இங்கிதங்கள் சொல்லாமல்
வள்ளைக் குழலாள் மனம்வாடி யேமெ.பிந்து
கள்ளத்தன மாய்க்கவிழ்ந்து [2]கண்ணில் நீரொழுக

[3]தருவிருக்குஞ் சிந்தைநல்லாள் சம்மந்தமா லையவள்
ஒருவருக்குந் தன்னுடைய உள்[4]துயரஞ் சொல்லாமல்
அம்புவியில் நம்மையிந்த ஆமையற்கோ வென்றுசொல்லி
வெம்பி[5]வெகு மூச்செறிந்து மேனியெல்லாந் [6]தள்ளாடி

ஆமையற் கோநம்மை அயன்விதித்தா னென்றுசொல்லி
தாமநறுங் குழலாள் சம்மந்த மாலையவள்
தோழியர்கள் தம்மடியில் [7]துவண்டுறங்கும் பேர்களைப்போல்
[8]ஆளில மூகிஅயர்ந் துறங்கும் வேளையிலே

## ஆமையரை மாப்பிள்ளைக் கோலம் செய்தல்

சம்மந்த ராசனுட [9]தங்கமணி மண்டபத்தில்
உம்மந்திர மாஞ்சடங் குள்ளதெல்லாந் தான்முடித்து
அன்னேரம் மன்னவர்கள் ஆரவா ரத்துடனே
மன்னுபுக ழாமையரை மாப்பிள்ளைக் கோலங்கள்செய்து

---

2151. மின்னார் — அழகிய பெண்டிர். 2152. சேடியர் — தோழியர். 2154. சம்மந்தமாலை — சம்மந்த ராசனின் மகள். 2162. வெம்பி — வாடுதல். மேனி — உடல். 2163. அயன் — பிரமன்.

**சுவடிச்சொல்:** 2154. சம்பந்தமாலை 2169. ஆரபாரத்துடனே.

**பாடவேறுபாடு:** 1. வந்து 2. கண்ணீர் தான்சொரிய 3. தர்ம மருக்குஞ் 4. மசக்கஞ் 5. நெடு 6. தான்வாடி 7. துயின்று றங்கும் 8. ஆளியுலகறிய 9. தங்கமணி பெட்டகத்தை.

## The agony of Cammantamālai

Chaste girl Cammantamālai
Cold shouldered the pranks cf friends
Secretly nursed an inward agony
Head hung, eyes shedding tears
She lamented her fate
That had thrust on her a tortoise husband,
Became a victim of languor
And like girls resting drowsily on the laps of friends
Fell into the arms of Morpheus
Dead tired and lay still.

## The tortoise dressed up as bridegroom

In the golden mansion of king Cammaṉtarācaṉ
After the completion of various rituals,
Fellow kings in high spirits
Smartened the tortoise
And dressed him up as a bridegroom.

## ஆமையரை அவரது பெற்றோருடன பந்தலுக்குள் அழைத்து வருதல்

கோலங்கள் செய்துநல்ல கூண்டமணி [1]மாலையிடம்
ஏலங்குழ லார்கள் இரைந்து குரவைபாட
வாச்சியங்கள் கொம்பு [2]வலுவாக வேமுழங்க
காட்சி வெகுவாகக் காவலவ னப்போது

குத்துவெடி முழங்கக் [3]கொடிவிருது தான்செரும
பத்திபத்தி யாகப் படைத்தலைவர் தானெருங்க
அபிராம வல்லியுவ [4]ளானகரை யாளனுடன்
தவிராம லேயவர்கள் தங்கள்மனு வுஞ்சனமும்

ஆடல்பரி யேறிநல்ல அன்னைபிதா [5]முன்நடக்க
[6]கூடவரவே யிவர்கள் கோத்திரத்தி லுள்ளவர்கள்
மகத்துவமாய் நல்லதுரை மக்கள்பல பேர்சூழ
பகுத்தா யபிராமி பல்லக்கி லேறிவர

சித்திரக் கோவில்விட்டு தெருவீதி யானதிலே
அத்திரி வேல்விழியா ளபிராம வல்லிவர
பந்தங் காளாஞ்சி பகலேற்றித் தன்னுடனே
[7]வந்தரசன் கோமான் மருமகனார் தந்தனையும்

[8]வாலிபஞ்சேர் மன்மதன்போல் மாப்பிள்ளைமார் பின்னேவர
நாலுதெரு வுமவர்கள் நன்றாக வேயுலாவி
சித்திர மாகச் சிறந்ததொரு மாப்பிளையை
அத்திரவேல் மன்னவர்கள் அல்லோருங் கொண்டாட

---

2172. இரைந்து — சத்தமிட்டு. குரவை — மகளிர் விசேட காலங்களில் நாவாற் குழறி இடும் மகிழ்ச்சியொலி. 2173. வாச்சியம் — வாத்தியம். 2178. மனுவு — மக்கள். 2179. பரி — குதிரை. 2180. கோத்திரம் — வமிசம். 2184. அத்திரி — அம்பு. 2185. பந்தம் — கைவிளக்கு; தீவட்டி. காளாஞ்சி — தாம்பூலம் எடுக்கும் கலம்.

**சுவடிச்சொல்:** 2175. குத்திவெடி 2184. அத்திர 2188. லாவி.

**பாடவேறுபாடு:** 1. பந்தலிட்டு 2. வகையாய் தான்முழங்க 3. குரவையது முழங்க 4. ஆழியகரை 5. மன்னவர்கள் 6. கூடிவரவே 7. வாக்காகவே 8. வாலுருவுஞ் சோமனைப் போல்.

## The tortoise and his parents brought to the shamiana

Beautiful designs were rendered
In *Kōlam* form
Instruments galore were played
The drum was struck
Pipes were blown
Fireworks displayed.
Apirāmavalli with her husband
The Karaiyāḷar
Kinsmen near and dear
Elephants in the lead
Members of the same clan
And gentry of the town
Constituted the colourful procession.
With Apirāmavalli seated in a palanquin
Gifted with dart-like eyes
The pageantry of wedding
With ceremonial grandness
Left the temple and stepped into the street
Followed by torches and plates of auspicious betel.
After covering the four streets
Quite adequately
The bridegroom,
The apple of everybody's eye

மந்திர வாளுமி[1]லங்க மாப்பிள்ளை[2]யை யன்னேரம்
கொந்தள மாகஅவர்கள் கொண்டுவந்தார் பந்தலுக்குள்

## சம்மந்தமாலை நஞ்சுண்டு உயிர் மடிதல்

பல்லக்கை [3]விட்டிறக்கி பந்தலுக்குள் [4]வைத்தபின்பு
முல்லை நகையாள் முழித்திளகி யேசடைத்து

ஏதுபோ லாச்சுநமக் கிந்தவிதி தானெனவே
[5]மாதுநல்லார் நம்மை வசையாகப் பேசுதற்கு
ஆமைக்கு நம்மை அயன்விதித்தா னோவெனவே
தாமக்குழ லனைய சம்மந்த மாலையவ.:

இந்தச்சடம் வைத்திங் கிருக்கவொண் ணாதெ[6]னவே
தந்தையொடு தாயாரும் தானறி யாமலிவளும்
கஞ்சிகுடித் துக்[7]கவிழ்ந் துறங்கும் பேர்களைப்போல்
நஞ்சுகுடித் தவளும் நடுங்கிவிட்டா ளம்மானை.

## மணப்பெண்ணைப் பந்தலுக்குள் அழைத்துவரச் சொல்லுதல்

**விருத்தம்**

44. உயிரது மடிந்த செய்தி யுடன றியாத பேர்கள்
தயிரிய மாகத் [8]தானே சடங்கது செய்வ தற்கு
வயிரமொத் திலங்கும் வெண்மை மரகதம் போலே [9]வொத்த
பயிரிளங் கிளியாள் தன்னை பந்தலில் வருத்து மென்றார்.

## மடிந்தவளைக் கண்டு தோழியர் கதறுதல்

**கலிவிருத்தம்**

45. என்ற வார்த்தை யியம்பிடச் சேடியர்
சென்று பார்த்திடவே யந்தச் சேயிழை
மன்றல் மாது மடிந்து கிடப்பதைக்
கண்டு மாதர் கரஞ்சென்னி கொட்டினார்.

---

2192. கொந்தளம்—குழப்பம். 2196. மாது—பெண். வசை—பழிப்பு. 2197. அயன்—பிரமன். 2199. சடம்—உடல். ஒண்ணாது—இயலாது. 2202. நஞ்சு—விஷம். 2204. சடங்கு—சாஸ்திர விதி பற்றியும் வழக்கம் பற்றியும் அனுஷ்டிக்கும் கிரியை. 2206. வருத்து—அழைப்பி. 2208. சேயிழை—பெண். 2209. மன்றல் மாது—கலியாணப்பெண்; வாசனைமிகுந்த. 2210. சென்னி—தலை; உச்சி.

**சுவடிச்சொல்:** 2194. முளித்திழுகி 2202. நஞ்சி 2208 சேயிளை.

**பாடவேறுபாடு:** 1. நல்ல 2. தன்கைகொடுத்து 3. விட்டிறங்கி 4. வந்தபின்பு 5. பேருலகில் நம்மை 6. தென்று சொல்லி 7. கண்ணுறங்கும் 8. நல்ல 9 வேந்தன்.

Holding the sword sacred
Was brought to the shamiana
With great pomp and splendour.

### Cammantamālai consumes poison

After getting down from the palanquin
The sweet-smiling bride was languorous
Cursed her malevolent fate
Which had ordained that she wed a tortoise
Giving room for slanderous gossip.
Indeed it was difficult to bow to creator's decree
What is the use of this body
What use this earthly life,
Mused she pathetically
And without the knowedge of her parents
Consumed deadly poison
Slept like those fed on gruel
Slumbered deeply topsy-turvy.

### The bride summoned

44. Those ignorant of her death
Summoned 'The gem of a girl' to the shamiana
To perform the rituals
Pertaining to marriage.

### Lament of the maids in attendance

45. On hearing the summons
The maids in attendance
Rushed headlong to fetch her
But found her stone dead
Which made them hit their heads
In desperate madness.

## மடிந்த தன் மகளைக் கண்டு தவமாலை புலம்பல்

**நடை**

46. வலுவாயு யிர்மடிந்த மங்கையரைக் கண்டமின்னார்
**தலையிலடித்** [1]தபயந் தானிட்டா ரம்மானை.
[2]அபயமிட்ட சத்தம் அறிந்துதவ மாலையவள்
[3]குமைய லேதென்றுசொல்லி கொம்பனையு மோடிவந்து

வந்துமகளைப் பார்த்து வாய்குழறித் தான்விழுந்து
சிந்தைகலங் கியவள் சோர்ந்துமுகத் தோடறைந்து
நெஞ்சோ டறைவாள் நிலமதிலே தான்[4]புரள்வாள்
பஞ்சுபோற் பின்னி பறிப்பாள் தலைமுடியை

வயிற்றிலடிப் பாள்விழு வாள்[5]மகளே மகளேயென
பயித்தியங்கள் கொண்டவர்போல் [6]பாவைதவ மாலையவள்
தலையில டித்துவிழுந்து தரையில்[7]முட் டியேபுரள்வாள்
அலையிற் றுரும்பதுபோல் ஆவி[8]யெல்லாந் தள்ளாடி

ஐயோ மகளேயெனை அகற்றிவிட்டா யோவெனவே
கையைமுகத் [9]தறைந்து கவிழ்ந்து[10]விழு வாளழுவாள்
பூங்குழலாள் கூந்தல் புழுதியிலே தான்புரள
ஏங்கிவிழு வாளழுவாள் எங்கேபறப் பனென்பாள்

குவளை [11]விழியழகி கோதைதவ மாலையவள்
மகளைவந்து சேர்த்தெடுத்து வாரிமுகத் தோடணைப்பாள்
முத்துவாள் வாயை முகத்தைமுகத் தோடுவைப்பாள்
குத்தியடித் [12]தேவிழுவாள் [13]கூகூகூ கூவெனவே

---

2212. அபயம் — அடைக்கலம். 2213. தவமாலை — சம்மந்தராசனின் மனைவி. 2214. குமையல் — இரைச்சல்; சத்தம். கொம்பனை — கொம்பு போல் ஒல்குத்தன்மையுள்ள பெண்டிர்.

**சுவடிச்சொல்:** 2212. தபையந் 2213. அபையம்.

**பாடவேறுபாடு:** 1. அவயம். 2. அவயமிட்ட செய்தி 3. குவயம் 4. விழுவாள் 5. வர்ன மயிலே என்பாள் 6. பதை பதைப்பாள் தேன்மொழியாள் 7. விழுவாள் அழுவாள் 8. சேர்த்து எடுப்பாள் 9. தில்வைத்து 10. நிலத்தில் விழுவாள் 11. விழியாள் 12. தழுவாள் 13. கூகூவெனுயலறி.

## The lament of Tavamālai

46. Seeing the pretty lass
Who had wilfully courted death
The maids-in-attendance wailed loudly
Hearing which the mother of the deceased
Tavamālai frantically rushed
And hit herself wildly on the face
Unable to withstand the shock and grief.
She rapped her own chest
Rolled restlessly on the ground
Plucked her hair
Battered her stomach
let out a hysterical scream
My daughter, my darling!
Like one who had lost her balance
She shouted helplessly
Most miserably
Banged her head on the floor
Turned, twisted and gyrated
Like speck caught in the ocean waves.
Madly she gathered the corpse in her hands
Hugged it, kissed it
Kept it on her lap

பிடியை யிளமயிலை பெண்ணமுதைச் சேயிழையை
[1]மடியிலி ருத்தியவள் வாய்மொழிகேட் டேயழுவாள்
நானழுத கண்ணீரை நன்றாக வேதுடைத்து
எனழுதா யம்மேயென்று என்மகளே கேளாயோ

[2]ஒய்யார மாகவென்னோ டுள்துயரஞ் சொல்லாமல்
[3]ஐயோ வுன்னுடைய ஆவியைவிட் டாய்மகளே
அன்னமே தேனே அமுதே பசுங்கிளியே
உன்னைவிட்டு நானிங் கொருநாழி கை[4]தரியேன்

கனிவாய் மொழியாளே கண்ணமு தே[5]யென்மகளே
இனியாரை நம்பிநா னிருப்பேனென் றேயழுதாள்
[6]காவிக்கருங் கண்ணுமுந்தன் கருங்கனுடை யொப்பனையும்
பாவிநான் காணப் பலன்பெற்றே னில்லையையோ

[7]நளிசேர்க்க நங்குழலும் நல்லமுத்துப் பல்லொளியும்
[8]வழுவில்லா தேயிலங்கும் மரகத மேனி[9]யழகும்
பண்ணமையைய சொல்லாளே பாவனையை [10]நானினிமேல்
கண்ணில்நான் காண்பேனோ காரிகையே என்மகளே

## தவமாலை தன்னுயிரை மாய்க்கத் துணிதலும் சூழ்ந்து நின்றோர் தடுத்தலும்

வாக்காக [11]வென்னுடைய மகளோடே [12]யென்னுயிரை
நாக்கைப் பிடுங்கி[13]யிப்போ நான்விடுவே னென்றுசொல்லி
துணியும் பொழுதவளைச் சூழ்ந்து[14]நின்ற பேர்விலகி
வணிதமுடன் கைபிடித்து வாணுதலா ளையிருத்தி
ஆசார வார்த்தை அவரவரே புத்திசொல்லி

---

2231. பிடி — பெண்யானை. சேயிழை — பெண். 2232. மடி — மடித்த தொடையின் மேற்பாகம். 2236. ஆவி — உயிர். 2241. ஒப்பனை — அலங்காரம். 2243. நளி — செறிவு. 2244. வழு — பாவம். 2245. பண — இசை. பாவனை — ஒப்பு: அடையாளம். 2246 காரிகை — பெண். 2247. வாக்கு — உறுதி. 2250. வணிதம் — செப்பம். வாணுதலாள் — ஒள்ளிய நெற்றியுள்ள பெண்.

சுவடிச்சொல்: 2231. செய்யிளையை 2245. பாவினை.

பாடவேறுபாடு: 1. மடிமீதிலே கிடத்தி மகளே எனஅழுதாள் -2. ஒளியாமல் என்னோடே உன் துயரத்தைச் 3. ஐயையோ 4. பொழுது 5. உன்னைவிட்டு 6. காவிவிழிக் கண்ணும் கலிங்க முகத்தொப பனையும் 7. நளினமுகத்தின் அழகும் நல்லமுகத்தின் ப[illegible]கும் 8. பழுதில்லா 9. நிறமும் 10. ஒப்பனையும் 11. நானுமெந்தன் 12. எந்தனுட 13. உயிர் 14. நின்றோர் தான்

And cried her eyes out.
Won't you wipe my tears
And console me?
Without disclosing your deep agony
Why did you resort to the extreme step
And give up the ghost?
My swan, my honey
Parrot dear,
I can't bear this separation.
Sweet-tongued darling, my own flesh and blood,
In whom will I repose trust hereafter?
Won't I see you again richly arrayed?
Oh my daughter,
Sinner that I am
Will I ever get a chance
To adore your row of teeth,
Rich locks or sublime looks?

## Tavamālai tries to kill herself

'I shall also end my life
Along with my darling daughter
By forcibly pulling out my tongue'
Said she and while attempting the desperate act
Was made to sit and steady herself
By those who stood around her,
Followed by words of consolation and advice.

## மந்திரி மன்னனுக்குச் செய்தி உரைத்தல்

தாயாரை யங்கிருத்தித் [1]தந்தையர்க்குச் செய்திசொல்ல
உம்மந்தி ரமாக உலகாளும் வேந்தரென்ற
சம்மந்த ராசனவன் தானிருக்கும் வேளையிலே

மன்னுபுகழ் மந்திரிமார் வந்தரச னைத்தொழுது
என்னசொல்லப் போறோ மினிநாங்க ளிப்போது
உகமுடிந் தாப்போலே உலகாளு [2]மன்னாவுன்
மகள்மடிந் தாளெனவே மந்திரிமார் [3]களுரைத்தார்.

## மன்னன் மகளை சென்று எடுத்தல்

உரைத்தமொழி யைக்கேட்டு உரைகுழறி மன்னவனும்
[4]இரைத்தமன மாகிமன்னன் எண்ணமெல்லாம் புண்ணாகி
ஏங்கிப் பரதவித்து எண்ணமுற்றுப் [5]பின்னுரைப்பான்
தீங்கு [6]வந்தால் நாமுமினி செய்வதுவே றொன்றுமிலை

ஆனாலு [7]மீசுரர்மேல் ஆணைமற வாதபடி
தேனாரை யிந்த சகமேழுந் தானறிய
ஆமைக்குச் சொன்ன அவதிமொழி யானதெல்லாம்
[8]வாமையுடன் நானுரைத்த வார்த்தைமா றாதபடி

செய்யச் சமைந்தேன் சிவன்றனக்கு மேத்துதில்லை
ஐயோ நான்பெற்ற அதிர்ஷ்ட மிதுவெனவே
நாட்டையர சாளுகின்ற நல்லபுகழ் மன்னவனும்
பூட்டறைக் குள்சென்று புகழுமக ளையெடுத்து

## மன்னன் பலவாறெண்ணிப் புலம்புதல்

மகளையெடுத் துஅந்தமன்னன் மடிமீ தில்வைத்து
புகழான மன்னன் புலம்பலுற்றா னம்மானை.
அன்னமே தேனே யமுதே பசுங்கிளியே
கன்னலே யெந்தனிரு கண்மணியாய் வந்தவளே

---

2257. உகம் — பூமி; ஊழி. 2263. ஆணை — கட்டளை. 2264. சகம் — பூமி. 2265. அவதி மொழி — பழிச்சொல்.

**சுவடிச்சொல்:** 2257. உலகாழு 2269. சாழுகின்ற.

**பாடவேறுபாடு:** 1. தைதலற்கு புத்தி சொல்லி 2. மன்னவனே 3. உரைப்பார் 4. எரிந்த 5. மீண்டு சொல்வான் 6. செய்தரல் 7. ஈஸ்பரன் பேர் 8. வாண்மையுடன் உரைத்த.

## The ministers inform the king

Leaving the mother there,
The ministers hastened to the king
Cammantarācaṉ
Saluted him formally and said,
Sir, we don't know how to break the news,
Like the world ending with a bang,
Your daughter's life has become extinct.

## The king lifts his daughter

When the king heard the news,
Words failed him,
He was deeply pained.
Collecting his thoughts he said
If evil overtakes me,
Nothing can be done.
I kept my pledge to the tortoise
Taken in the name of God
And have carried it out
With great sincerity.
What bad luck
Exclaimed he in dejection
And entered the room
Where his daughter lay
And lifted her gently.

## The king bemoans the loss

Keeping his daughter on his lap
The king began to sob and wail.
My swan, my honey, green parakeet
Dear Dear one, my darling child

பொன்னே பொருளே புத்திரியாய் வந்தவளே
[1]என்னபுத்தி நீபடித்தாய் என்னுடைய கண்மணியே
தந்தையர்க்கு நல்ல தவப்பேறு [2]வேணுமென்று
சிந்தை [3]வைத்துநீயும் சிவகதியைத் தேடாமல்

இறந்தாய் நீயிப்போது என்னபல னுந்தனுக்கு
சிறந்தபுக ழானயிந்த தேசத்தி லுந்தனுக்கு
மணக்கோலங் காண [4]வகுத்தமணிப் பந்தலுக்குள்
பிணக்கோலங் காண[5]வும்நான் பெரும்பிழைகள் செய்தேனோ

நிறையோசை [6]வாத்தியங்கள் நிறைந்திருக்கும் பந்தலிலே
பறையோசை கேட்கவும்நான் பாவியாய் [7]போனேனே
வாரணம் போலெந்தன் மகளேநா னுந்தனுக்கு
காரணமோ [8]நானுமிந்த காட்சிகா ணவிருந்தேன்

பொன்னான யீசருட பூமலர்பொற் பாதமதில்
உன்னாலே மோட்சமெனக் குண்டாகு மென்றிருந்தேன்
புகழாகவே யுலகில் புண்ணியங்க ளானதுதான்
மகளாலே நானும் [9]மணம்பெறலா மென்றிருந்தேன்

வாக்குமா றாமலுன்னை மாலையிட்டுத் தான்கொடுத்து
தாக்காக வென்னைத் தவம்பெறநீ யொட்டாமல்
வஞ்சவினை நீக்கும் மகாபொருளை யெண்ணாமல்
நஞ்சைகுடித் திறந்தாய் நன்மைவரு மோமகளே

ஒன்றாகி நின்றபொரு ளுண்மையறிந் தேயிரங்கி
நன்றாக மோட்சகதி நன்மைதரு மென்றிருந்தேன்
தட்டாத மோட்சத் தவப்பேறு கிட்டுதற்கு
விட்டுதில்லை விட்ட விடுகுறைகள் தானிருந்து

கல்லும் விசும்பும் கடலுமண்ட தாவரமும்
எல்லாம் பொறுத்த இறையொரு வனல்லாமல்
மணங்கொண்ட பூவுலகில் மாநிலத்தி லுள்ளதெல்லாம்
கனங்கொண்டி ருப்பதிந்த காசினியெல் லாமழியும்

---

2278. சிவகதி — முத்தி. 2280. தேசம் — நாடு. 2284. பறையோசை — தப்பட்டை ஓசை. 2285. வாரணம் — யானை; சங்கு. 2288. மோட்சம் — முத்திநிலை. 2291. வாக்கு — உறுதி. 2294. நஞ்சு — விஷம். 2299. விசும்பு — ஆகாயம். 2302. காசினி — பூமி.

**சுவடிச்சொல்:** 2278. சிவகெதி 2288. மோக்ஷமெனக்.

**பாடவேறுபாடு:** 1. என்னைமறந் திங்கே ஏகிவிட்டாய் என்மகளே 2. வேணுமினி 3. தனக்குத்தான் 4. வந்தேன் பெண்மதலை 5. பெற்றவிதி இத்தனையோ 6. வாச்சியங்கள் நின்றதிர பந்தலுக்குள் 7. ஆனேனே 8. யிந்தகண் காட்சி காணுதற்கு 9. வரம்.

Gold in the guise of a daughter!
You ought to have sought fulfilment in Siva
And thereby assured your father of deliverance
Instead of dying cowardly.
In fact, what did you achieve by dying?
Am I such a vile sinner
To see you as a corpse on marriage day
Instead of as a cheerful bride?
Alas, the drums wich ought to play cheerful notes
Are echoing the dirge.
How I fancied that I would reach the holy feet of Siva
Through your meritorious actions!
By being true to my word and marrying you off,
I expected liberation,
But alas, you have spoiled it.
Instead of meditating on the great power
That destroys all evil,
You have stooped to drink poison,
Would any good come out of it?
My hopes of redemption
Have been totally shattered.
All things are bound to perish on earth
Stone, sea and plants
Except the Infinite.
Nothing will last
Except the word and the spirit.

ஆவியுஞ் சொல்லும் அழியா தொருநாளும்
பாவி மகளேநீ பயனறிய மாட்டாமல்
ஒருவனேயெங் குமுயிர்க்கு வுயிராகி நின்றோன்
கருவாயு ருவாயிக் காசினியெ லாமவனாய்

மறைவாக வேயிருந்து மாயவிளை யாடுகின்ற
இறையவனே யென்றும் இறவா திருப்பதல்லால்
பார்மே லிருந்து பகுமானஞ் செய்வதெல்லாம்
நீர்மேற் குமிழியென நிச்சயித்துத் தான்மனது

மகள்மடிந் [1]தாளென்ற மனக்கிலேச மில்லாமல்
[2]தவமழிந் தேனென்று தலையிலடித் தேயழுதான்
மெய்ப்புடைய கற்பு[3] நிலை மேதினியில் மேவாமல்
இப்படித் தானம்மேநீ யிறந்ததினா [4]லென்னபலன்

முன்னமே நானும் மொழிந்தமொழி மாறாமல்
அன்னமே [5]முன்னா ளதியரசன் கீர்த்திகள்போல்
வார்த்தைமா றாமலுன்னை மாலைமணஞ் சூட்டுதற்கு
[6]ஊற்றையுறுங் கூட்டிலுந்தன் உயிரைவைத்துப்[7] பாராமல்

கல்லழிந்து போனாலும் காசினிதா னுள்ளமட்டும்
சொல்லழியா தே[8]புவியில் சூரியனா ருள்ளமட்டும்
புகழே நடக்கப் பொருந்தாம லென்னுடைய
மகளேயுன் னாவிதனை [9]வம்பில்முடித் தாயெனவே

மாணிக்க மான மகாபொருளை [10]நெஞ்சில்வைத்து
ஏணிப் பழுதா யிருக்கும்வெகு தூரமதாய்
எட்டாத தூரத்தி ருக்குமிறை யோனமக்கு
தட்டாத மோட்சகதி தருவாரென் றேயிருந்தேன்

என்றழுது மன்ன னிரு[11]கண்ணீ ராறோட
[12]மன்னுலகி லுள்ளோர் [13]மனதுருகிப் பார்த்துநிற்க
மெலிவில்லா மலிருந்து மேதினியோர் தாமறிய
கலியாணஞ் செய்யவந்த காவலவன் றந்தனக்கு

2303. ஆவி—உயிர். 2307. மாயவிளை—மாயவித்தை. 2309. பகுமானம்—வேறுபாடு. 2311. மனக்கிலேசம்—மனத்துயர்; துக்கம். 2312. மேதினி—உலகம். 2316. கீர்த்தி—புகழ். 2320. புவி—பூமி.

கூவடிச்சொல்: 2312. தவமழிந் தேனென்ன 2326. மோக்ஷகெதி.

பாடவேறுபாடு: 1. ததாலே 2. தவமிழந் தேனென்று 3. நலம் 4. லேதுபலன் 5. நானும் 6. ஊக்க: முற்றுக் 7. காத்தி லையோ 8. வெகுநாள் 9. வம்பால் மடிந்தாயே 10. காணென்பாரும் 11. கண்ணால் நீரொழுகி 12. மன்றுலகி 13. மனமகிழ்ந்து.

He who is omniscient and
Plays a will-o-wisp game
Alone is immortal.
All other things
Are bubbles on water's surface.
The king bemoaned the loss of merits
Accruing out of righteousness and rectitude
More than the death of his daughter
As death is inevitable.
If chastity and virtue are not justified
What is the use of birth?
What significance has it?
Oh swan of my heart,
Like my forebears
I wanted to keep my word of promise
And attain to spotless reputation.
I wanted to marry you off
In keeping with my pledge,
But you have allowed life to ebb out of the cage
Rather hastily.
Stones may get destroyed
But never the word of rectitude
So long as the sun shines.
Why did you kill yourself
In this unnatural way
When I was aspiring for redemption
With the far-away supreme force in mind?
Thus the king wailed
With copious tears rolling down
In the presence of every one.

மணமான பெண்ணை மணஞ்செய்ய வந்தவர்க்குப்
பிணமானதை முடிக்கப் போமோவெ னப்பிதற்றி
செஞ்சொ லுற்றமன்னன் தியங்கி மயங்கிய[1]வனும்
சஞ்சலித்து மெத்தத் தடுமாறும் வேளையிலே

## ஆமையர் மன்னனைத் தேற்றுதல்

அன்னேரந் தன்னிலந்த ஆமையுரு வானவனும்
வன்னப் பலகையிலே மாப்பிள்ளை யாகயிருந்து
சகலகலை [2]கற்றதவ முனிவன் [3]புத்திரன்றான்
அகமெலிந்து வாடும் அரசன்முன்பு செல்லவென்று

மணிப்பலகை விட்டிறங்கி மாமனுடமுன் பில்வந்து
[4]தணிப்பாக அக்கினியைத் தண்ணீர்விட் டாற்றுதல்போல்
மாமன் மனந்தேற மருமகனா ரப்போது
ஆமையுரு வானோன் [5]அறிவுபல செப்பலுற்றான்.

நன்றாய் சடைத்தீர்காண் நல்லபுகழ் மன்னவனே
இன்றுளோர் நாளைக் [6]கிருப்பதுவும் நிச்சயமோ
[7]அன்று பிரானான ஆதிபர னல்லாமல்
உண்டோ வுலகில் உயிரழி யாதபேர்கள்

நன்மை [8]வந்துதானால் நமக்கென்று கொள்ளுவது
தின்மை [9]வந்ததானால் திருப்பினால் போவதுண்டோ
முன்னிருந்து ஆண்டு [10]முடிந்தபல பேர்கள்மெத்த
இன்னம் [11]பிறப்போ ரிறப்பதுவே நிச்சயங்காண்

உறைப்பாக வார்த்தை வெகு உச்சிதமாய் பேசுவதும்
மரப்பாவை சூத்திரங்காண் மன்னவனே பல்லுயிரும்
திடமாகவே யுலகில் சீவனென்ற பல்லுயிரும்
உடல்கண்டி ருப்பதல்லால் உயிர்கண் டிருப்பதுண்டோ

மருள்கொண்ட பூவுலகில் வல்ல பலவுயிரும்
உருக்கண்ட தல்லாதே ஓசைகண்ட பேருமுண்டோ
கயப்புயினிப் பும்புளிப்பும் காற்றும்வெயிலும் பனியும்
மயக்கும் வறுமைபிணி வாராதோ யாபேர்க்கும்

---

2340. அக்கினி — தீ. 2345. ஆதிபரன் — கடவுள். 2348. தின்மை — தீமை. 2349. மெத்த — மிகவும். 2351. உறைப்பாக — அழுத்தமாக. உச்சிதம் — மேன்மை. 2352. மரப்பாவை — மரப் பொம்மை. 2355. மருள் — வியப்பு. 2356. உரு — வடிவு; உடல். ஓசை — ஒலி. 2357. கயப்பு — கசப்பு. 2358. பிணி — நோய்.

**சுவடிச்சொல்:** 2332. முகிக்கப் 2339. விட்டழகி 2348. வந்துதானால்.

**பாடவேறுபாடு:** 1. மனம் 2. பெற்றதவ 3. புத்திரனும் 4. தணிப்பின் 5. அவதாரஞ் 6. இறவா திருந் ததுண்டோ 7. அண்டர்புகழ் ஞானசிவ ஆதியொன்று மல்லாமல் 8. வந்ததுண்டானால் நாம் அனுபவித்தால் 9. வந்தால் வேறே தீம்பாக கொடுக்கலாமோ 10. முடிவேந்தர் எத்தனைபேர் 11. மற்றபேர்.

What a pity,
To those who have come to celebrate marriage
I am presenting a lifeless lump,
So prattled the disturbed king
Quivered, tumbled and tottered.

### The tortoise consoles the king

The tortoise bridegroom
Son of a sage well-versed in arts
Climbed down from the auspicious seat
To console and cool the king
Whom sorrow consumed
Verily like fire.
He gave a sermon
Replete with truths.
Oh king with unsullied reputation,
Why are you so down with grief ?
Nothing lasts in this world
Nothing is everlasting or eternal.
Except the primordial Siva
None is immortal.
We are prone to welcome good and make it our own
Forgetting that evil and bad tidings cannot be ploughed back.
So many have come and gone
So many will be born.
None can aspire to live for ever.
After all, we are wooden puppets
Without any free will.
Imagine the universe vibrating with life
In creatures varied, great and small,
But we are aware only of the body
And have no access to the active force called life.
We know only the shape of things,
Nothing beyond that.
When life becomes extinct,
Can you hope for voice or sound?
Tastes like bitterness, sweetness and sourness
Are common to all and constitute the scheme.
So are the sun, the wind and the fog.

பேரிளமை யின்பம் பிணிமூப்பு சாக்காடு
ஆறுங் கருவி லமைத்தபடி யேவருங்காண்
வழுவில்லா மலுலகில் வாழலா மென்றாலும்
எழுதியவா றேவருங்கா ணிவ்வுலகில் யாபேர்க்கும்

தானினைத்த வண்ணந் தவப்பேறு கிட்டாது
ஏனமுதீர் வீணில் இறந்தவுயிர் வாரதுண்டோ
சீரான பூவுலகில் செல்விதனைப் பெற்றெடுத்தால்
ஆராரரோ வென்றிவளை ஆராட்ட வில்லையோநீர்

பிறந்தவுட னிவளைப் பேசினீர்கா ணாரெனவே
இறந்த வெறும்விடக்கை என்மகளென் றாலாமோ
மாய வலைக்குள்ளே மயங்கியிருந் துந்தனுள்வாம்
காய முருகிக் கலங்குவதுங் காரணமோ

மாயனுட பாதம் மறுமையிலே கிட்டுதற்கு
நாயனருள் தேட நல்லபுத்தி வந்ததுகாண்

## மடிந்தவளை மணம் சூட்டுவிக்க ஆமையர் வேண்டுதல்

சவத்தை விரும்பிமனச் [1]சஞ்சலங் களில்லாமல்
சிவத்தையு ருகிவிரும்பித் தேடினீர் புண்ணியரே

உறுதியாகச் சிவனை உண்மைகொண்ட பேர்களுட
இருதயத்தி லீசன் இருப்பதுவும் நிச்சயங்காண்
மங்கைப் பதியில் வளரு மதியரசன்
அங்கவன் றான்செய்த [2]அதிகபுக ழானதுபோல்

அப்படிப்போ லும்முடைய அஞ்சுபஞ்சா வும்பொருந்தி
கைப்பிடித்து [3]எந்தனுக்குக் கட்டாக நீர்தருகில்
சவமென்று [4]கொள்ளாமற் சங்கரனாற் [5]தம்மருளால்
சுகமென்றி வளைமணஞ் சூட்டுவிக்க வேண்டுமென்றான்

[6]பொய்யாமல் வார்த்தை [7]பிரமாணம் போகாமல்
[8]மையத்தில் மாலையிட்டு மன்னவரே [9]நீர்தருகில்
புகழுமற வாதுவுந்தன் போத[10]மதுங் குன்றாது
மகளிறந் தாளென்றுன் மனது மயங்கவேண்டாம்

[11]உன்மனசு தேறி யுடன்தருவீ ராமாகில்
சம்மதந்தா னெந்தனுக்கு தர்க்கமில்லை [12]யென்றுரைத்தார்.

---

2359. மூப்பு — முதுமை. சாக்காடு — சாவு. 2360. கரு — கருப்பம்; பிறப்பு. 2361. வழு — குற்றம். 2365. செல்வி — புதல்வி. 2368. விடக்கை — சவம். 2370. காயம் — உடல்.

**சுவடிச்சொல்:** 2388. சம்மதிதா.

**பாடவேறுபாடு:** 1. சங்கடங் 2. அரிய 3. தத்தம் 4. சொல்லாமல் 5. தன்னருளால் 6. பொய்யான 7. பகுமானந்தப்பாமல் 8. வையகத்தில் 9. தாருமென்றார் 10. ராகுந் தப்பாது 11. உன்மனதைத் தேற்றி உடனேதரு வீரானால் 12. என்றுசொன்னான்.

Indigence and suffering
Youth, happiness, old age, disease and death
Are the common lot
And are preordained in the womb
Which cannot be changed or altered.
A spotless life can be easily lived
But deliverance is not assured
Nor can be claimed as right.
Why did you vainly shed tears for your daughter
Has the dead ever returned?
True, when she was born, you sang lullabies
And bestowed on her a distinct identity.
But is it not foolish to claim the dead as your own?
Since you are still in the grip of illusions,
You are crying your eyes out
Viewed in the proper perspective
Is this not an eye opener
To obtain liberation in the next birth
becoming one with the infinite?

### The tortoise volunteers to marry the dead girl

Spake the tortoise:
True to your word,
If you offer your daughter in marriage to me.
I shall accept her ungrudgingly
And view her not as a lifeless lump
But as a precious gift of Lord Siva.
Such an act will add to your stature
Without lessening your wisdom.
Did not an ancient king of Mankaippati
Marry off his daughter to an aged man
In keeping with his promise
And attain to fàme and glory?
After all Siva dwells in the hearts of those
Who pin their faith to him.
If you live down the death of your daughter
And offer her to me
In the formal way holding the five fingers
I shall wed her without any dispute.

## மன்னனும் ஆமையரும் மணப்பந்தலுக்குள் வருதல்

**விருத்தம்**

47. உரைத்தவன் [1]மனதைத் தேற்றி வுலகினி லுள்ளோர் [2]மெய்க்க
சிரித்த வனிருந்து மெத்த செருமிய சனத்தை நீக்கி
வருத்த மேதுமக்கு யிப்போ வரும்விதி வந்து தானால்
கருத்தழி வாரோ வென்ன கைப்பிடித் தழைத்து வந்தான்.

**நடை**

48. ஆமையார் மெத்த அவதானங் களுரைத்து
மாமனையுங் கூட்டி[3]மணப் பந்தலுக்குள் வந்தனராம்

## திருமணச் சடங்கு செய்தல்

வந்துமணப் பந்தலுக்குள் [4]வாத்தியங்கள் நின்றதிர
இந்துநுத லாளைஎடுத் திருத்தி மின்னார்கள்
அணிந்த பணியுடைமை ஆபரணங் களிலங்க
பணிந்துமட வார்சேரும் பாவையரை யப்போது

மணிப்பலகை மேலேவைத்து மன்னனையுந் தேவியையும்
கணிப்பாய் மனமகிழ்ந்துக் கச்சிதமா கவவர்கள்
கலிப்பா யுலகோர்க் கலியுகமா கப்பார்க்க
சலிப்பாய் [5]மகட்குச் சடங்குசெய்ய வேண்டுமென்று

சேர்த்துமணி மார்போடே சென்றுமக ளையெடுத்து
பார்த்தவர்கள் தானிரங்கப் பந்தலுக்குள் கொண்டுவந்தார்.

**விருத்தம்**

49. பந்தலுக் குள்ளே வந்து பாகுசேர் [6]மொழியி னாளை
விந்தையா யெடுத்து வந்து மெல்லியர் புடைகள் சூழ
கொந்தலர் அரசர் கோமான் குவலயத் தோர்கள் மெய்க்க
சந்தமாய்ப் பலகை மீது தான்வைத்துச் சடங்கு செய்தார்.

---

2389. மெய்க்க — காணுதல்; சூழுதல். 2390. செழுமிய — நிரம்பிய. சனம் — மக்கள்; கூட்டம். 2393. அவதானம் — சாதுரியம்; மேன்மையான செயல். 2396. இந்து — சந்திரன்; பிறை. மின்னார் — பெண். 2401. களிப்பாய் — மகிழ்வாய். 2405. பாகு — சர்க்கரை; அழகு. 2406. மெல்லியர் — பெண்டிர். 2407. குவலயம் — பூமி; 2408. சந்தம் — அழகு.

**சுவடிச்சொல் :** 2400. கெணிப்பாய் 2400. கெர்ச்சிதமாய்.

**பாடவேறுபாடு :** 1. மனசுதேற்றி 2. காண 3. மணிப்பந்தல் 4. வாச்சியங்கள் 5. அவர்களுக்கு 6. குழலினாளை.

## The King and the tortoise enter the shamiana

47. Consoling the king and holding his hand
The tortoise asked him to wear a cheerful look.
'Lament not any more
For the ways of inexorable fate' said he
And persuaded him sweetly
To come to the shamiana
Which he did forthwith,
Watched by kinsmen and others.

## The Rituals performed

48. Against the play of music
The girl with the crescent forehead
Bejewelled richly and lavishly
Was kept on the auspicious wooden plank
And while the world watched the scene
With awe and wonder
As on typical of *Kaliyuka*,
The king and the Queen
Were kept in high spirits.
49. To perform the rituals
The king deftly lifted the girl
Hugged her close to his heart
And pitied by every one present
Brought her to the marital shamiana.
50. Against the backdrop of instruments
And the beat of drums and fireworks
Surrounded by blemishless virgins
The girl in silken robes
Was placed on the holy wooden seat.

நடை

50. செய்தசடங் கதுவும் சேயிழைக்கும் மன்னவர்க்கும்
மெய்யாக வாத்தியங்கள் [1]மேளங்கள் தான்முழங்க
[2]விளங்கும் பலமேளம் வெடிகளிடி போல்முழங்க
[3]களங்க மிலாதபல கன்னியர்கள் தான்சேரும
அட்டதிசை யெங்கும் அவரவரே தான்செரும
பட்டுமடிந் தவளைப் பலகையின்மே லேயிருத்தி
அபிராம வல்லிபெற்ற ஆமையுரு வானவர்க்கும்
சபதான மாகவந்த சம்மந்த மாலையர்க்கும்
கோத்திரத்தில் மன்னர் குலமரபு தப்பாமல்
சாத்திரத் [4]திலுள்ள சடங்குசெய்தா ரம்மானை.

## மன்னன் ஆமையற்கு மகளை மணம் சூட்டுவித்தல்

[5]வல்லா மையான வலியபுகழ் [6]மன்னனுக்கு
எல்லாச் சடங்கு மியல்பாக [7]வேநடத்தி
[8]கன்மந் தொலையவென்று காசினியோர் கள்மகிழ
சம்மந்த மாலையவள் தன்னையந்த மன்னவர்க்கு
[9]மையத்தில் மாலையிட்டு மாங்கலிய முஞ்சூட்டி
[10]கையும் பிடித்துக் கருத்தாக வேகொடுத்தார்.

## மன்னன் மகளுக்குச் சீதனம் வார்த்தல்

விருத்தம்

51. கையது பிடித்த போது கண்ணினா லருவி[11]பாய
ஐயையோ மகளே யெந்தன் [12]அதிர்ஷ்ட மித்தனை யோவென
மையது துவளுங் கண்ணாள் [13]மகள்தனக் கினிமேல் நானென்
செய்வது சிவனே யென்று சீதனம் வார்க்க லுற்றான்.

2409. சேயிழை — பெண். 2416. கோத்திரம் — வமிசம். 2421. கன்மம் — வினைப்பயன். காசினி — உலகம்; பூமி. 2423. மையம் — நடு; பூமி. மங்கலியம் — கலியாணத்திற் கட்டப்படும் தாலி. 2428. சீதனம் — மகட்குக் கொடுக்கும் பொருள்.

சுவடிச்சொல்: 2409. செய்யிளைக்கும்.

பாடவேறுபாடு: 1. மேளதாளங் கள்முழங்க 2. முழங்கிய 3. களங்கடவார் கள்சிலர் 4. தில்நல்ல 5. வல்லாண்மை 6. ஆமையர்க்கு 7. தான்நடத்தி 8. கர்மம் 9. வையகத்தில் 10. கையைப் 11. ஓட 12. அரி கிருட்டிண விதியோ 13. வாணுதல் வடிவை நோக்கி.

The king performed the marriage rituals
As enshrined in the holy books
Without any deviation,
The bridegroom being the tortoise
The darling progeny of Apirāmavalli.

## The King marrying off his daughter

All the routine rituals
Obligatory to a bridegroom
Were performed without omission.
While the people felt happy
That the effects of malignat fate were wearing off
The hand of Cammantamālai was offered to the tortoise
After ceremonies like garlanding
And the tying of *Tāli* were gone through.

## The giving of the dowry

51. Holding her hands
With tears flooding the eyes
'Ah, my dear daughter
How unlucky I am!
Blessed be the lord,
I am at a loss to think
How to fill the niche'
Bewailed the king
And ceremoniously gave away
The articles of dowry.

## மன்னன் எவ்வகைச் சீதனம் வார்ப்பேன் எனல்

நடை

52. எண்ணத் தொலையா திருகண்ணு மாறோட
கண்ணீரை மாற்றியந்தக் காவலவ னப்போது

தாதுசெறி மார்பன் சம்மந்த [1]ராசமன்னன்
ஏதுவகை சீதனங்கள் [2]என்மகட்கு யீவனென்றான்
அந்தமொழி [3]சொல்லி அதிபிரிய மாய்மகிழ்ந்து
[4]வந்தானே நீர்வார்க்க [5]வர்னமணிப் பந்தலுக்குள்

பொற்கெண்டி யானதிலே போதவே நீர்கோதி
[6]மைக்கொண்ட கண்ணாட்கும் மருமகனா [7]ராமையற்கும்
அன்னசுற்றத் தார்க ளனைபேருந் தாமறிய
என்னவகை சீதனங்கள் யான்வார்க்க [8]வேணுமென்றான்.

## மகள் உயிர்ப்பித்து எழ இறைவனைத் தொழுதல்

தாமாக யிந்தமொழி தாரரசன் [9]றானுரைக்க
மாமனுரைக்க மருமகனு மேதுரை[10]ப்பான்
முன்னே யுரைத்தமொழி [11]மாறாப் புண்ணியனே
இன்னேரஞ் சீதனங்க [12]ளெங்களுக்கு யீவீரால்

[13]இழந்தஉயிர் மீளவிப்போ எல்லோருந் தான்காண
தெளிந்தபுக [14]ழெந்தன்மகள் சீவன்வர வேணுமென்று
களித்துமகிழ்ந் தெல்லோருங் கலியுகமா கக்காண
முழித்துமகள் எந்தனுட முன்னேவர வேணுமென்று

அப்படியே சொல்லி அரனார் தனைத்தொழுது
இப்படியே சீதனங்க ளிருபேர்க்கும் வார்க்குமென்றான்.

---

2434. நீர்வார்க்க — தாரைவார்த்தல். 2435. பொற்கெண்டி — பொன்னாலான மூக்குள்ள செம்புவகை. போதவே — அதிகமாக. நீர்கோதி — நீர் எடுத்து. 2444. சீவன் — உயிர். 2445. களித்து — மகிழ்ந்து. கலியுகம் — நான்காம் யுகம். 2447. அரன் — சிவன்.

பாடவேறுபாடு: 1. ராசனவன் 2. என்மகளே வேணுமென்றார் 3. கேட்டு. 4. வந்தார்கள் 5. வன்னமணிப் 6. மெய்க்கொண்ட 7. தந்தனக்கும் 8. வேணுமென்று 9. அப்போது 10. சொல்வார் 11. தவ றாமல் 12. ளெந்தனுக்கு நீர்தருகில் 13. இறந்தஉயிர் மீளவைப்பேன் 14. உந்தன்மகள்.

## The nature of the dowry

52. Emotion choking
The eyes were flooded with tears
What dowry shall I give
Wondered Cammantarācaṉ
As he entered the shamiana
With affection and love
To pour holy water formally
And seal the deed.
From the golden vessel used for the purpose
Water flowed into the hands of the girl
Who had darkened her eyes
And to the hands of the tortoise son-in-law.

## Let prayer to God be the dowry

When the king spoke those words
What did the son-in-law say?
'You are indeed a noble soul
Who is true to his word.
If you are keen on dowry
Please pray heartily to Lord Siva
In the presence of all
For a miracle to be watched in *Kaliyuka*
Which would fill every one with joy
That your darling daughter should spring to life
And stand before you in flesh and blood.
Let this gift of life
Be your dowry to us!

## மன்னன் சிவனைத் தொழுதலும் சிவன் அருள் கொடுத்தலும்

என்றமொ ழியைக்கேட்டு இயலரச னப்போது
நன்றெனவே யீசுரரை [1]நலமா யடிதொழுது

வளையத்திரை வளைந்து வர்னமணிப் பந்தலுக்குள்
தெளிவாக மன்னவனும் சிந்தையுற்றங் கெல்லோரும்
[2]அவசங்க ளில்லாம லந்தவுயிர் [3]மீள்வதற்குச்
சிவகதியே யுங்களுக்குச் சீதனமென் றேவார்த்தான்

மெய்யு றுதிகொண்டு [4]விமலன்றாள் போற்றுகையில்
ஐயா விரங்கி அருள்கெடுத்தா ரம்மானை

## மடிந்தவனை ஆமையர் உயிர்த்தெழச் செய்தல்

புண்ணியவான் நீர்வார்த்துப் புறத்தில்வந்த வேளையிலே
நண்ணுபுகழ் சங்கிலியை நாகமுனி வன்புதல்வன்

உம்மந்தி ரமான உறுபொருளை [5]நெஞ்சில்வைத்து
சம்மந்த மாலையற்குச் சங்கிலியை வைப்பளவில்
ஆண்டவனார் சித்தத் தருளர் லிவள்தனக்கு
மாண்டவுயிர் மீள வந்ததுகா ணம்மானை.

## மன்னன் துயர் நீங்கி மகிழ்தல்

விருத்தம்

53. உயிரது வந்து மின்னா ளுடன்மிழித் தெழுந்த போது
பயிரது தழைத்து நல்ல பாக்கியம் வந்த தென்று
தயரத [6]ராமா ராமா சங்கரா சிவனே யென்று
துயரது நீங்கி நன்றாய் துன்பமற் றிருந்தா ரன்றே.

---

2451. வளையத்திரை — வட்டம் இடுதல். 2453. அவசம் — துன்பம். 2454. சிவகதி — முத்தி. 2455. விமலன் — சிவன். 2458. புகழ்சங்கிலி — உயிர்ப்பிக்கும் சங்கிலி. 2459. உறு பொருள் — கடவுள்.

வடிச்சொல்: 2464. வந்து.

பாடவேறுபாடு: 1. நன்றாய் அடிபணிந்து 2. அவகெதிக 3. மீளுதற்கு. 4. விமலனருள் பேறு பெற்று 5. தானி னைந்து 6. ராமசாம் சிவசிவா வென்றெல்லோரும்.

## The Prayer answered

Acting on the words of the tortoise
The king prayed with strong feeling
Along with others equally concerned
For the restoration of the girl's life
Spelling out the divine power of Lord Siva

As the dowry for the couple.
So intense and true was the prayer
That the Lord yielded to the appeal.

## The dead revived

When the devout king poured water formally
And sealed the dowry pact,
Nākamāmunivan̲ meditating on the lord
Placed the chain of life
On the body of Cammantamālai
When lo and behold,
The Lord's mercy revived it.

## The King is jubilant

53. When the dead daughter returned to life
The king thanked his lucky stars
That had helped the crop survive and sprout.
Free from sorrow and despair
He called out the names of the Gods,
Rāma, Caṅkara and Siva.

## ஆமையரை மக்கள் வியந்துரைத்தல்

நடை

54. சீவன் பரந்தவட்கு தெளிவுவந்த வேளையிலே
தாபந் தெளிந்ததுகாண் சம்மந்த ராசனுக்கு
மண்ணு லகிலுள்ள மனுடர்பல பேர்களுந்தான்
கண்ணினால் மங்கையரைக் கண்டு நளினமுற்று

கண்டுகலி யுகமாய் கைவிரலை மூக்கில்வைத்து
நன்றுநன்று யிப்புதுமை நாங்கள்கண்ட தில்லையென்பார்
கூண்டுவளைந் தவர்கள் கூறுவார் வார்த்தைகளை
மாண்டவுயிர் தான்மீள வந்ததென்ன மாயமென்பார்

[1]கண்ணனோ மாலோ கடவுள்பர மேஸ்வரரோ
மண்ணு லகிலுள்ள மனுடனிவ னல்லவென்பார்
அரசன்மகள் தன்னுயிரை அழைப்பித்த புண்ணியவான்
திரைசேர் [2]மடந்தையைமுன் செய்தவரை போலவென்பார்.

## மன்னன் தனிக்குடில் அமைத்துத் தருதல்

இப்படியே [3]பேசி இருக்குமந்த நேரமதில்
நற்புடைய சோறுகறி நன்றாக வேகொடுத்தார்
சடங்கு முடிந்து சனங்கள்பல பேர்களுந்தான்
மடங்கள் பதிதோறும் மனைகளிலும் போனபின்பு

கொத்திலங்கு மின்னாட்கும் கூண்டபுகழ் மன்னனுக்கும்
பத்தும் பதினாறும் பண்பாய்க் கடந்தபின்பு
மன்று[4]பயில் மன்னன் மகளும் மருமகனும்
அன்றுவெகு நாளாய் [5]அவரிருக்கும் நாளையிலே

கடக்க யிருந்தரசன் காரிகையும் மன்னவனும்
நடக்கும் வளமையெல்லாம் நன்றாக வேயறிந்து

---

2468. தாபம் — துன்பம். 2469. மனுடர் — மனிதர். 2478. மடந்தை — பெண். 2483. கொத்திலங்கு — பூக்குலை. 2485. மன்று — சபை. 2487. காரிகை — பெண். 2488. வளமை — செய்தி.

சுவடிச்சொல்: 2468. சம்பந்த 2481. முகிந்து 2488. வழமை.

பாடவேறுபாடு: 1. கண்ணுத லோன்தானோ 2. மடந்தையரை செய்தவந்தான் என்பாரும் 3. சொல்லி இருக்கின்ற 4. புகழ் 5. இவரிருக்கும் வேளையிலே.

## The tortoise praised

54. When the girl regained consciousness
And king Cammantarācaṉ's disquiet lessened
People who witnessed the unusual sight
Were taken aback,
Attributed it to *Kaliyuka*.
We have never seen such a thing
Averred the old and elderly,
What wizardry is this,
The restoration of life to the dead?
This man who has effected resurrection
This noble soul does not belong to the human stock
But is a divine, perhaps Kaṇṇaṉ, Tirumāl or Lord Siva Himself.

## The king arranges a separate abode

After the rituals were over,
The king fed sumptuously the guests
Who went to their habitats and homes.
And when the couple crossed
The significant ten and sixteen days
The king who was well-informed

எல்லா மறிந்தவனும் இருதயத்தி லே[1]யடக்கி
[2]நல்லதல்லவே யிவர்கள் நம்மிடத்தி லேயிருந்தால்

ஆரும்வரு வார்களிந்த [3]அரண்மனை வாசலிலே
சேரும்புவி யிலுள்ள தென்னவர்க்கு மேராது
மாப்பிள்ளையும் பெண்ணும் வடிவழகைக் கண்டவர்கள்
கோப்பழித்து நம்மைக் [4]கொச்சைசொல்லு வாரெனவே

அறியாமலே யிவரை அப்பா லொருபுறத்தில்
[5]பறியயிருக் கவவற்கு பதியா னதும்முடித்து
மட்டுப்பா வீடும் [6]வளரும்மணி மேடைகளும்
தொட்டி [7]மடப் பள்ளிகளும் தூங்கு[8]மஞ்ச மெத்தைகளும்

மாடகூடஞ் [9]சதுக்கை வளமாக வேமுடித்து
கூடமுங் கட்டி குளிக்கப்புரை யும்வைத்து
ஆளடிமையுங் கொடுத்து அவர்களிரு பேர்களுக்கும்
வாளரச னப்பாலே வைத்தனன்கா ணம்மானை.

## ஆமையர் மனைவியுடன் கலவாதிருத்தல்

விருத்தம்

55. அப்பா லிவர்க ளிருபேரும் அழகாய் மனையிற் குடி[10]புகுந்து
மெய்ப்பா யிருந்து மவளோடே [11]மேவுந் துயரொன் றுரையாமல்
உப்போ புளியோ வென்றுமுத லுரைக்க வறியா [12]தூமைகள்போல்
வைப்பா யிருந்து மனைவியுடன் [13]மருவா தாமை யிருந்தனனே.

நடை

56. இருந்துவெகு நாளாய் ஏற்றமொழி பேசாமல்
பரந்துதிரி வானொழிய பஞ்சணையி[14] லேதரியான்
சரிந்துறங்கு வான்தெருவில் சந்தியும் பலந்தோறும்

---

2489. இருதயம் — மனம். 2492. தென்னவர் — பாண்டியர். 2494. கோப்பழித்து — இரகசியத்தை அழித்து; அடக்கத்தை அழித்து. கொச்சை — இழிவு. 2496. பறியயிருக்க — தனித்து இருக்க. பதி — வீடு; உறைவிடம். 2498. மஞ்சம் — கட்டில். 2499. சதுக்கை — சந்து. 2500. கூடம் — தாழ்வாரம். புரை — சிறிய அறை. 2501. ஆளடிமை — அடியாள்; வேலையாள். 2506: வைப்பாய்-பொய்யாய்; வகையாய். மருவாது — தழுவாது. 2509. சந்தி — சாலைநதி முதலியன கூடுமிடம். அம்பலம் — வெளியிடம்.

சுவடிச்சொல்: 2494. கோப்பளித்து 2496. முகித்து 2499. முகித்து.

பாடவேறுபாடு: 1. யிருக்க 2. நல்லதில்லையே 3. அரசன்மனை 4. வெகு கொச்சை பறைவாரே 5. பாரறிய 6. வளவுமணி 7. கெட்டும் வீடும் 8. மிஞ்சியானதுவும் 9. சவுக்கை 10. இருந்து 11. மெலிவு 12. பேர்களைப்போல் 13. வண்மையாக 14. மேலே சரியான்.

About worldly ways felt
That it was not prudent to retain
His daughter and son-in-law with him
As the frequent visitors to the palace
May indulge in gossip and slander,
Decided to arrange a separate abode for them
Away from the palace where he dwelt.
So a beautiful house was built
With decorated platforms and basements
Tubs, kitchenettes and saloons
Comfortable beds and cosy cots
Baths, spacious halls and parlours
And slaves in plenty to carry out commands.

## The tortoise avoids physical contact

55. Both began their conjugal life
Her remaining glum without expressing any complaint
Even trivial things were left unspoken
Whether a dish was saltish or sour
Verily they were like dumb creatures,
56. Their false felicity devoid of physical contact
Which the tortoise deliberately shunned.
He spoke no loving words
But loafed about aimlessly
Seldom sought the bed,
Slept sideways in all crossroads

அம்பலத்திலே கிடப்பான் அழைத்தாலும் வீட்டில்வரான்
கொம்பிழந்த மந்தியைப்போல் குறுகுறென வேமுழிப்பான்
பெண்ணோட [1]கூடிப் பிரியமுற்று வாழாமல்
தன்னோடே [2]ஆமையவன் சட்டைக்குள் ளேயி[3]ருப்பான்

## சம்மந்தமாலையின் செயலும் துயரமும்

[4]உளமா யிவர்களுட உண்மையறி யாதபேர்கள்
[5]வளமா யிவளோடே வாழுகிறா னென்பார்கள்
அப்படியே தானிருப்பார் [6]அளப்பறி யாதபேர்கள்
மெய்ப்புடைய [7]மாது மெல்லிசம் மந்தமாலை

சொற்பெரிய மின்னாள் [8]சொகுசாக வேயிவளும்
உப்பரிகை தன்னில் உயர்ந்தமணிப் [9]பந்தலிலே
மைப்பிறஞ்சே[10] ருங்குழலாள் மாதுசம் மந்தமாலை
சப்பிர [11]மஞ்சமது தான்தட்டி லேவிரித்து

பொன்னெழுத்து மெத்தையிட்டு பூமலரும் [12]மேல்பரப்பி
தன்னெழுத்தின் வாறையவள் தானறிய மாட்டாமல்
மைப்பரவுங் கண்ணாள் மணவாள னாரோடே
கைப்பரவி தானும் கலந்துவிளை [13]யாடவென்று

பள்ளியறை தன்னில் பகுமான மாயவளும்
வெள்ளி விளக்குவைத்து [14]விதமா யலங்கரித்து
சேர்ந்தபுக ழாமையரைச் சேயிழை தன்கையாலே
ஏந்தியெடுத் தவளும் இங்கிதமாய் முத்தமிட்டு

---

2510. அம்பலம் — பலர் கூடும் வெளியிடம். 2511. மந்தி — குரங்கு. 2515. வளமாய் — செழிப்பாய்; சிறப்பாய். 2516. அளப்பு — ஆராய்ந்தறிகை. 2517. மெய்ப்பு — புகழ்ச்சி. மாது — பெண். 2519. உப்பரிகை — மேல்மாடம். 2520. மைப்பு — கறுப்பு. 2521. சப்பிரமஞ்சம் — மேற்கட்டமைந்த சிங்காரக்கட்டில். 2523. வாறை (வாறு) — வலிமை. 25.26. பள்ளியறை — துயிலிடம். 2529. இங்கிதம் — இனிமை; கருத்து.

சுவடிச்சொல்: 2519. உப்பரிக்கை 2528. செய்யிளை.

பாடவேறுபாடு: 1. ஆமை 2. ஆடையுடை 3. இருக்க 4. ஊரிலிவனுடைய உள்ளமறி யாதவர்கள் 5. களவா யிவனுடைய காரணங்க ளறியாமல் 6. அறியாத பேர்களைப்போல் 7. மாதுநல்லாள் 8. சொகுசு பெறவேயிவளும் 9. மேடையிலே 10. சேரும் விழியாள் 11. மஞ்சமீதில் தங்கமணித்தொட்டி லிலே 12. மேல்விரித்து 13. யாடாமல் 14. விஸ்தாரமாய்.

Lay flat in temples
And refused to come home
Often stared stupidly like a monkey
Never indulged in any intimate act
To please his wedded wife
But withdrew into his shell.

## The sorrow of Cammantamālai

Those who did not know the truth
Averred they were a happy match.
Those who did not probe deep
Believed in their conjugal felicity.
Cammantamālai, the noble soul
With dark locks and blackened eyes
Spread the embellished and bedecked bed
On a cot with intricate workmanship
Strew irregularly sweet smelling flowers
Lighted the silver lamp
Envisaged a carnival of love play
Lifted the tortoise delicately
And imprinted a loving kiss
Most tenderly and deftly.

## பாராமுகமாக இருத்தல் கண்டு சம்மந்தமாலை வினவுதல்

[1]சருவிவிளை யாடியந்த சம்மந்த மாலையவள்
உருகிமனம் வாடி [2]உடனவளு மேதுசொல்வாள்
ஏதுபோ லாச்சுதுநீர் என்னைமுகம் பாராமல்
[3]வாதுக்கோ நீரும் வலுவா யிருக்குகிறீர்

[4]கையேற்று வென்னை கலியாண முமுடித்து
[5]மையத்தில் மாலையிட்டு மாண்டவுயிர் மீண்டீரே
[6]ஆச்சினையாய் நீருமிந்த ஆமை யுருவாக
[7]ஏச்சல்லோ நீரும் இருக்கிறீ ரென்கோவே

மன்னவரே யென்னை மருவிவிளை யாடாமல்
என்னைச் சிறையா யிருத்திவைக்க [8]ஞாயமுண்டோ
[9]பட்சி பறவைமுதல் [10]பாசமுண்டு தங்களிலே
உச்சிதமா யென்னோடு உசிதமில்லை யோவுமக்கு

[11]இம்மையிலே மாலையிட்டு என்னைமுகம் பாராமல்
[12]கன்மமாக நீர்தான் கவிழ்ந்திருக்கக் [13]காரியமேன்

## ஆமையரின் மௌனமும் சம்மந்த மாலையின் துயரமும்

நல்லுருவ தாமவளும் நளினமுற்று [14]சொன்னமொழி
கல்லுருகுங் கேட்டதுண்டால் கற்பசுவும் பால்சுரக்கும்

மன்னுபுக ழாமையரும் மனமிரங்கா தேயிருந்தான்
துன்னு புகழுடைய தோகைய ருமன்னேரம்
முந்தியிற் சீலை[15]கொண்டு முகம்மறைத்துக் கண்பிசைந்து
[16]பந்தியொதுங் கியழுது பாவையரு மேதுசொல்வாள்

---

2530. சருவி — கொஞ்சிக்குலாவி. 2532. ஏது — ஏன்; காரணம். 2533. வாது — தருக்கம்; சண்டை. 2536. ஆச்சினை — பரிகாசம். 2537. ஏச்சல் — பழித்தல்; இகழ்தல். கோ — அரசன். 2539. ஞாயம் — நீதி. 2541. உச்சிதம் — மேன்மை. உசிதம் — தகுதி. 2542. இம்மை — இப்பிறப்பு 2548. முந்தி — சீலைத்தலைப்பு. 2549. பந்தி — ஒழுங்கு.

**கவடிச்சொல்:** 2534. முகித்து 2540. பக்ஷி.

**பாடவேறுபாடு:** 1. சருவியுறவாடி 2. உடனேது வார்த்தை 3. வாதுசொல்லி நீரும் வாயமா யிருக்கிறீர் 4. கையெடுத்து 5. வையகத்தில் 6. அச்சுதமாய் 7. ஏச்சுகிறீர் எந்தனையும் என்னுடைய மன்னவரே 8. வந்தீரோ 9. பச்சி 10. பச்சமுண்டு 11. இளமையிலே 12. களவாக 13. காரணமேன் 14. சொன்னதெல்லாம் 15. சேர்த்து 16. பயந்து பதுங்கியழுது.

## Cammantamālai questions her husband

After making love play most vigorously
The much disappointed Cammantamālai
Asked her husband why he was cold and indifferent.
Was his unconcern a prelude to any dispute?
'After accepting my hand
And formally marrying me,
You resurrected me
Continuing to remain a tortoise
Much to the derision of many.
Is it fair to keep me a prisoner
Without indulging in love making?
Even birds and beasts
Display close and intimate attachment.
Tell me whether I don't deserve
Your warmth and love.
Garlanding me and seeking my hand,
Why are you phlegmatic and impassive?'

## The silence of the tortoise and The sorrow of his wife

In sheer disgust Cammantamālai uttered moving words
Capable of melting hard stone
And making sculptured cows yield milk,
But the tortoise continued to be indifferent.
She then hid her face with the flap of her Cāri
Wiped a tear or two and then spoke:

எழுதியவர் றானா லெனக்குவந்த தங்கமதை
பழுதுசொல்லப் போமோவென [1]பங்கெடுத்தல் லோதீரும்
தழுவி யெடுத்தவனை [2]சப்பிரமஞ்சமீ தில்வைக்க
வழுவிவிழு வான்றறையில் [3]வாக்கதனா லொன்றுசொல்லான்

கூண்டதொட்டில் விட்டிறங்கி கோதைசம் மந்தமாலை
மீண்டெடுத்த துண்டால் விழுந்துதரை யில்புரள்வான்
களங்கமுலை யோடேயவள் [4]கட்டி யெடுத்தாலும்
அழுங்குபோலே கிடந்து [5]ஆமைசுருண்டு கொள்வான்

தொட்டெடுக்க முள்ளெலிபோல் சுருண்டு கிடந்து[6]கொண்டு
பட்டணத்தைச் சுற்றிப் பரபரென வேதிரிவான்
தாமக்கு ழலனைய சம்மந்த மாலையவள்
[7]வாமநுதல் மின்னாள் [8]மனங்கலங் கியேவாடி

ஏதுசெய்வோம் நாமும் இறையோ னெ[9]ழுத்தெனவே
வேதன்விதி [10]யீதெனவே விம்மியழு தேயிருந்தாள்.

## மன்னன் கலைநிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தல்

விருத்தம்

57. அழுதவள் துயர்தா னீங்க அரனுட [11]கிருபை யாலே
பழுதற யிவட்கு நல்ல பாக்கியம் வாற காலம்
பொழுதது விடிந்த போது பூதல மாளும் [12]மன்னன்
[13]வழுவில் லாக்கூத்துப் பார்க்க மன்னவ னருளி னானே

## பலநாட்டரசர்களையும் அழைப்பித்தல்

நடை

58. மெய்ப்புடைய மன்னன் வேந்தர்பெரு மாளவரும்
தப்பறையில் லாமலந்த தார்வேந்த னன்னாளில்

சம்மந்த ராஜன் தலத்திலனை [14]பேர்களுக்கும்
உம்மந் திரமாக வுடனே வரவழைத்து
அழைத்துப் பலவூர ரசர்களை யும்வருத்தி
களித்து மகிழ்ந்து களிகூர்ந்தங் கெல்லோரும்

---

2551. பழுது — குற்றம். 2552. சப்பிரமஞ்சம் — மேற்கட்டமைந்த சிங்காரக்கட்டில். 2557. அழுங்கு — விலங்குவகை. 2558. முள்ளெலி — எலிவகை. 2559. பரபரவென — துரிதமாக. 2561. வாமநுதல் — ஒளி பொருந்திய நெற்றி. 2564. அரன் — சிவன். 2565. பாக்கியம் — நல்வினை. 2566. பூதலம் — பூமி. 2567. கூத்து நாடகம். 2569. தப்பறை — பொய்; சூது. 2573. களித்து — சிரித்து.

பாடவேறுபாடு: 1. பதங்கெடுக் கிரீரெனவே 2. சப்பிரமஞ் சந்தன் னில்வைத்து 3. வாக்குஇவளோடுரையான் 4. கையால் 5. ஆமைகிடந்து 6. கொள்வான் 7. வாதுபெறும் 8. மனம்ஏங்கியேசடைத்து 9. விதி யெனவே 10. எனவே 11. அருளி னாலே 12. வேந்தன் 13. பழுதறவே கூர்த்துப் 14. பேர்களையும்.

The gem of a husband fate has willed
Should not be spurned or found fault with.
If he is hugged with passion
And placed gently on the cot
He deliberately slips on to the floor
Without uttering even a single word.
If he is again gathered in arms
He rolls on the earth most miserably.
Even a warm intoxicating hug
With the touch of tender breasts
Does not excite him or stir him
For, he shrinks like an animal
And withdraws himself.
If he is again picked up with love
He curls himself like a furry mouse
And begins to loaf about the town,
Cammantāmalai
With a bearing forehead
Was really in a fix.
Except blaming fate
And shedding desperate tears
She couldn't find a way out.

## The King arranges an art festival

57. With the blessings of Lord Siva
The tearful girl found a silver lining,
When in the morning
The king ruling the earth
Invited her to witness a show.

## Inviting other kings

58. The King with a spotless reputation
Cammantarācan̲
Ignorant of deceit and low cunning
Invited the kings of various countries
And when they were all merry.....

## கலை நிகழ்ச்சிகளை பல்லோரும் காணுதல்

பட்டணத் திலுள்ள [1]பலசனங் களுங்கூடி
வட்டக் களரியிட்டு வந்துதுரை மக்களெல்லாம்
[2]வீற்றுக்கொலு வாகவெகு வேடிக்கை யாயிருந்து
கூத்துக் களானபல கோலங்க ளைவருத்தி

[3]ஆர்க்க சபைதனிலே ஆடிவரும் நாடகத்தை
[4]பார்த்து சனங்கள் பலரும் மனம்மகிழ
நாடகங் களானபல நாட்டியங் களானதுவும்
ஆடப் பலவிதமா யல்லோருந் [5]தான்காண

பட்டணத் திலுள்ள பலசனங் [6]களுமிருந்து
கொட்டி முழக்கியவர் கூத்தாடு [7]மன்னேரம்
மத்தாள சத்தம் வாய்த்தொ னிமுழங்க
கைத்தாளக் காரனவன் கையில்வட்டந் தான்பிடிக்க

[8]பாடினதோர் ராகம் பரிந்துசுதி யாகவேதான்
ஆடிவருங் கூத்தை அனைவோரும் பார்த்துநிற்க
கண்ணகி சூர்ப்பநகை காந்தாரி நாடகமும்
[9]பண்ணமைந்த மன்னருட பண்பான நாடகமும்

[10]சென்னிமன்னன் சோழனுட தேசத்தில் முன்சமைந்த
[11]பொன்னுருவி நாடகமும் புகழாக ஆட்டிவர
இந்தப்படி கூத்து எல்லோருந் [1]தான்பார்க்க
பந்தங் காளாஞ்சி பகலேற்றி [2]தானெரிய

---

2575. களரி — நாடகசாலை; கூத்து நடைபெறுமிடம். 1583. கொட்டி முழக்கி — வாத்திய கோஷம். 2584. மத்தளம் — பறைவகை. தொனி — ஓசை; சத்தம். 2586. சுதி — ஒலி; இசை; சுருதி. 2589. பண் — இசை. 2590. சென்னி மன்னன் — சோழ மன்னன்; சமைந்த — செய்த. 2591. பொன் னுருவி — கர்ணனின் மனைவி. 2593. பந்தம் — தீவட்டி. காளாஞ்சி — தாம்பூலமெடுக்குங் கலம்.

**சுவடிச்சொல்:** 2576. வீத்துக் 2578. ஆற்க 2586. சுதையாகவே.

**பாடவேறுபாடு:** 1. பலசனங்களை யும்வருத்தி 2. விரைந்து கொலுவாக வேடிக்கை யாகவேதான் 3. அந்தச்சபை தனிலே 4. மாது மகிழ பலநா டகம் ஆடி 5. தான்பார்க்க 6. களுமறிய 7. வேளை யிலே 8. பாடி வரும் இன்னிசையை பரிந்துபரி வாகவேதான் 9. பண்ணவந்தார் நல்லதுரை மக்கள் பல பேர்காண 10. சேர மன்னன் சோழரசன் 11. பெண்ணரசி நாடகமும் பூவையர் தானாட. 1. பார்க்கையிலே 2. நின்றெரிய.

## The cultural show

The cultural show began
Witnessed by a cross section of the city
In the theatre specially put up
Where men could enjoy
Various types of entertainment.
Dramas, dances and music
The beat of drums, soloists
Men keeping tune with cymbals
Frolic and pleasantry
Merry making and rejoicing
Plays depicting Kaṇṇaki and Kāntāri
The tale of Poṉṉuruvi
Originating in the Cōḻa Kingdom
Amidst torches and plates of betel
Symbolising auspiciousness.

## ஆமையர் கூத்தின் இன்னிசையைக் கேட்டுக்காண ஆவலுறுதல்

அந்தராச் சாமம் [3]அடித்தமத் தளத்தொனியை
சிந்தையுறக் கேட்டு திறலரிய வாமையரும்
பாட்டினுட யின்னிசையும் [4]பாடு மிருதயமும்
[5]தாட்டிமை யாகக்கேட்டுத் தரித்திருக்க [6]மாட்டாமல்

மங்காத வாமை மயங்கியொரு சாமமதில்
சங்கீதம் பார்ப்பதற்குத் தான்போக வேணுமென்று

## மாயவித்தையினால் கூட்டிலிருந்து வெளிவருதல்

ஆமையுரு வோடேயவ னஞ்சறை யினுட்புகுந்து
பாவைநல்லாள் [7]கண்ணுறங்கும் பள்ளியறை யைப்பார்த்தான்

பார்க்கும் பொழுதிலவன் பஞ்சணை மெத்தைமீதில்
[8]சாச்சும் புகழுடைய சம்மந்த மாலையவள்
மூச்சுவிட்டு நன்றாய் முழியா துறங்கிவிட்டாள்
பெண்ணரசி தானும் பெருமூச்சு விட்டுறங்க

நல்லபுக ழாமையவர் நன்றாக வேயறிந்து
சீரான [9]தேவியரும் சேடியர் களானவரும்
ஆருமொ ருவரறி யாமலே யவன்றான்
ஆமையின் கூட்டைவிட்டு அவதான மாகவேதான்

ஊமைபோற் [10]சத்தம் உரையாம லேயவனும்
வந்தான் வெளிதனிலே [11]மாஞால வித்தையினால்

## கூட்டை மறைத்து இந்திரமாஞாலம் எடுத்தல்

[12]செந்தேன்மொ ழியனையாள் தேடுகினும் காணாமல்
கொஞ்சும்புக ழாமையரும் கூட்டையவன் கையதனால்
பஞ்சணை மெத்தைக்குள் [13]பரிவா யொளித்துவைத்து

---

2594. ராச்சாமம் — நடுஇரவு. 2597. தாட்டிமை — பெருமிதம்; சாமார்த்தியம். 2599. சங்கீதம் — இசை; சங்கிதப்பாட்டு. 2600. அஞ்சறை — துயிலறை. 2601. பள்ளியறை — துயிலிடம். 2602. பஞ்சணை — பஞ்சுமெத்தை. 2607. சேடியர் — ஏவல் செய்பவள். 2609. அவதானம் — கவனம்; சாதுரியம். 2610. ஊமை — மூங்கைத்தன்மை. 2611. மாஞாலவித்தை — மாயவித்தை. 2614. ஒளித்து — மறைத்து.

**கவடிச்சொல்:** 2604. முளியாது 20614. ஒழித்து.

**பாடவேறுபாடு:** 3. அடித்தாரே கிண்ணரிகை 4. பம்பைத்தவில் கொம்புஊத 5. தாட்டிகமாகக் 6. ஒட்டாமல் 7. தானுறங்கும் 8. தழைக்குங் குழலனைய 9. நல்ல 10. அவரும் உரையாடா மல்பதுங்கி. 11. மாயசால 12. செந்தா மரையாள் 13. பரிவாக வேஒளித்து.

## The tortoise bewitched by the music

At dead of night
When the tortoise heard the beat of drums
The songs and the depth of feeling they aroused
He became restless and impatient
Longed to witness the show.

## The tortoise comes out of the shell

In the form of a tortoise
He entered the bed room
And observed his wife Cammantamālai,
The one with spotless reputation
In sleep's embrace.
When he knew for certain
That she was slumbering deeply,
Without her knowledge
And that of her maids-in-attendance
He deftly emerged from the tortoise shell,
Discarded it anon
Thanks to his occult knowledge
Aquired earlier.

## Hiding the shell

The tortoise hid his shell
Inside the soft bed of cotton
So shrewdly that even if she searched
She wouldn't locate it.

ஒளித்து வெளியில்வந்து உச்சரித்து மந்திரத்தை
[1]நளித்து மனமகிழ்ந்து நாகமுனிவன் புதல்வன்
இந்திரமா ஞால [2]மெடுத்துயெம சூட்சமதாய்

## களரிக்கு அப்பால் வந்து தனித்து நிற்றல்

மந்திர வாளும் வலுவீர சங்கிலியும்

தங்கநிற மேனி சரியாம லேநிமிர்ந்து
[3]தொங்கல் நடையும் சூரியனைப் [4]போலொளியும்
வன்னமுத்து மாலைகளும் மாணிக்கத் தாழ்வடமும்
பொன்னுடனே ரெத்னமணி பூஷணங்க ளானதுவும்

கஸ்தூரிப் பொட்டும் [5]கையிலுடை வாளழகும்
விஸ்தார மானதொரு [6]வெள்ளைமதி போல்முகமும்
மானிலத்தி லில்லா வடிவுபிர காசமதாய்
[7]நீணிலத்தோர் கூடி நிறைந்த களரியிலே

[8]கூடியொன்று போலிருந்து கூத்துப்பார்க் கும்நேரம்
நாடியவ னத்தலத்தில் நாழிகையி லேகடிதாய்
அந்தமுறு காமனிலும் இரட்டிப் பேரழகாய்
வந்தா னவனும் வானில்கதி ரொளிபோல்

[9]களரிக்கு மப்பால் கடக்க வொருபுறத்தில்
புளகிக்கும் மன்னன் புறம்பாக [10] நின்றனனே.

## நின்றவனின் வடிவழகைக் கண்டு கூத்துக் காண்போர் திகைத்தல்

நின்றவனைக் கண்டு நிலைமையுள்ள மன்னவர்கள்
அன்றுமயங் கியவனை ஆளறிய மாட்டாமல்

2615. ஒளித்து — மறைத்து. 2616. நளித்து — பெருமித்து. 2617. இந்திர மாஞாலம் — மாயவித்தை; இந்திரசால வித்தை. எமசூட்சம் — எமதந்திரம். 2620. தொங்கல்நடை — விரைவான நடை. 2621. தாழ்வடம் — கழுத்தணி. 2622. பூஷணம் — அணிகலன். 2626. களரி — நாடகசாலை. 2629. அந்தம் — அழகு. இரட்டி — இருமடங்கு. 2630. கதிரொளி — சூரியஒளி. 2632. புளகிக்கும் — பெருமகிழ்ச்சியுறுதல்; புறம்பாக — வெளியிடம்; தனித்து.

**கவடிச்சொல்:** 2617. சூக்ஷுமதாய். 2629. மையிரட்டிப்.

**பாடவேறுபாடு:** 1. சிரித்து 2. எடுத்து வெகு சூட்சமதாய் 3. தோணுதவனுடைய நல்ல 4. போலழகும் 5. கையினுட 6. வெண்மதிபோ லேயழகும் 7. நீனிலத்தில் குடிநி றைந்திருக்கும் வேளையிலே 8. கூடியேயிருந்து 9. கழனிக்கு 10. நிற்கயிலே.

After coming out with pride and clan,
He uttered the sacred syllables
And used the secret knowledge.....

## Standing away from the crowd

Wearing the sword and chains potent,
With handsome body held erect,
Walking brisk, bright as the sun,
Wearing round the neck costly jewels,
Bedecked with pearls and other precious stones,
A musk dot on the forehead
And face like the moon
Effulgent beyond words
He entered the theatre
Where the men were absorbed in the show
Kept away from then,
The hero with the lustre of the sun
Stood aloof and alone in a corner.

## The public drawn by his figure

On seeing his figure so stately
Whom they could not place or identify,
All were terribly impressed.

தன்மட்டுந் தானிருந்து சங்கீதங் [1]கேட்டவர்கள்
[2]மின்வெட்டி யாற்றாற்போல் விழிகள் மிகமருண்டு
பட்டா ளமாகப் பரிவா யிருந்தவர்கள்
தட்டழிந்து மெத்தத் தடுமாறி யேமயங்கி

காதலுட னங்கே கருத்தா யிருந்தவர்கள்
பேதலித்து [3]மன்னவர்கள் பேரழகைக் கண்டவுடன்
[4]சேரத்தி கைத்தவர்கள் செப்புவார் வார்த்தைகளை
பாரத் துரைமக்கள் [5]பலபேரு மென்சொலுவார்

சிவனோ திருமாலோ தேவேந்தி ரன்றானோ
[6]எவனோ யிவனென்று இலக்கறிய கூடுதில்லை

## காண்போர் அழைத்தலும் ஆமையர் மிரண்டு ஓடுதலும்

[7]கார்கொண்ட கைத்தலத்துக் காவலர்க ளப்பொழுது
ஆரென்றா லும்நாமும் ஆசரிக்க வேணுமென்றுத்

தானாக [8]உட்களரி தன்னிலிருக் கும்பேர்கள்
ஆனாலுங் [9]கூட அழைத்திருத்த வேணுமென்று
வடக்கிலிருக் கும்பேர்கள் வாருமிரு மென்றுரைத்தால்
கடக்கஅவ் விடமிட்டு கடந்துகிழக் கேவருவான்

கிழக்கிருக் கும்பேர்கள் கிட்டயிங்கு வாருமென்றால்
நழுகிநழுகி மெல்ல நடந்துதெற் கேவருவான்
தெற்கிலிருக் கும்பேர்கள் சிறப்பாக வேயழைத்தால்
மிக்கபுகழ் மன்னவனும் மேற்கேவந்து பார்த்துநிற்பான்

கொலுவிருக்கும் மன்னவர்கள் கூட்டுதற்குச் செல்கையிலே
கலைமிருகம் போல்வெருண்டு கடிதாக ஓடலுற்றான்.

---

2636. மின்வெட்டி — மின்னல் (ஒளி) அடித்தல். ஆற்றாது — தாளாது. மருண்டு — மயங்குதல். 2637. பட்டாளம் — கூட்டம். பரிவாய் — இன்பமாய். 2640. பேதலித்து — மனம் குழம்பி. 2644. இலக்கு — அடையாளம். 2645. கார் — அழகு. 2646. ஆசரிக்க — ஆதரிக்க; உபசரிக்க. 2647. களரி நாடகசாலை. 2651. கிட்ட — பக்கத்தில். 2655. கொலு — ஓலக்க இருப்பு; அமர்ந்திரு. 2656. கலைமிருகம் — ஆண்மான். கடிதாக — விரைவாக. வெருண்டு — மருளுகை; அச்சம்.

சுவடிச்சொல் : 2644. லககறிய.

பாடவேறுபாடு : 1. பார்த்தவர்கள் 2. மின்வெடி உயர்ந்ததுபோல் 3. மன்னன் பேரழகைக் கண்டவர்கள் 4. சேரத் திரண் டவர்கள் 5. பகருவார் வார்த்தையொன்று 6. இவர் ஆரோ வென்று இலக்கறிய மாட்டா மல் 7. கார்கொண்டு உலகாளும் காவலவ னப்போது 8. யுள்ளகழனி 9. கிட்ட அணைந்திருக்க.

Those listening to songs
Felt they were struck by lightning
And looked dazed and confused.
Members of the motley crowd
Were also bewitched and felt bewildered,
Even lovers lost their balance
On seeing his manly form.
Those caught by his looks
Wondered whether he was Lord Siva,
Tirumāl or Intira Himself!

### The Men invite him

Those gathered there
Wanted to extend their hospitality
To the stranger, whoever he be.
When men seated on the Northern side invited him,
Under the pretext of crossing, he went to the East.
When men sitting the East
Called him to their side
He made his way to the south.
And when an invitation came from the South
He coolly went towards the west.
When the seated men proffered him a friendly hand,
He fled in fear like a mountain roe.

## மனையில் வந்து ஆமைக்கூட்டினுள் புகுதல்

ஓடியவன் மாளிகையின் உள்ளறை [1]யினுட்புகுந்து
கூடியவ னாமையுட கூட்டுக்குள்வந் தேபுகுந்தான்.

## கதிரோன் விடிதலும் காண்போர் இல்லந்திரும்புதலும்

நாடகம் பார்த்ததுவும் நாட்டமுடன் வந்ததுவும்
தேடும்புக ழுனையான தேவி யறியாமல்
கதிரோனு [2]தித்தபின்பு காரிகையா ளும்முழித்து
சதிரா [3]யிருக்கமுனம் சங்கீதம் பார்த்தவர்கள்

எல்லோரும் தங்கள்மனைக் கேகியே போனபின்பு

## காண்போர் மன்னனின் மகளைச் சந்தேகித்துப் பேசுதல்

[4]வல்லாமை யோடே மனையளவும் போனவர்கள்
[5]சந்தியரண் மனையுஞ் சாவடியும் மேடைகளும்
வந்திருக்கும் பேர்கள் [6]வளைந்திவர்கள் தங்களிலே

தங்களிலே கூடி [7]சமுசார மாயவர்கள்
திங்கள்நுத லாருடைய செய்திகளும் வாறுகளும்
மந்திரி மாரும்நல்ல வாசல் பிரதானிகளும்
அந்தரங்க [8]வார்த்தை அவரவர்கள் தங்களிலே

மன்னன் மகளுடைய வளமைதனை நாமளினி
என்னசொல்லப் போறோ[9]மென் றெல்லோருந் தங்களிலே
வாமையுள்ள மன்னன் மகள்தனை யுமிப்போது
[10]ஆமையருக்குச் செய்தசுணை அல்லோர்க்கும் [11]பேச்சாச்சே

---

2661. கதிரோன் — சூரியன். காரிகை — பெண்; இங்கு சம்மந்த மாலையைக் குறிக்கிறது. 2663. மனை — வீடு. 2667. சமுசாரம் — குடும்பம்; செய்தி. 2668 திங்கள் — நிலவு. வாறு — வலிமை; விதம். 2669. வாசல் பிரதானி — தலைமை மந்திரி; தலைமை வாயில் காப்போன். 2670. அந்தரங்கம் — இரகசியம். 2671. வளமை — தகுதி; மாட்சிமை. 2674. சுணை — சுரணை; நாணுதல்.

சுவடிச்சொல்: 2661. முளித்து 2671. வழமைதனை.

பாடவேறுபாடு: 1. குள்ளேபுகுந்தான் 2. விடிந்தபின்பு 3. கவேகழனி 4. வல்லாண்மை 5. சாய்ந் திருக்கும் பேர்கள் 6. வளைநதுகொண்டு 7. சமதான மாய்க்கூடி 8. மாக 9. ஏந்திழையாள் தன் வளமை 10. ஆமைக் குச் 11. பேச்சிதென்ன.

### The tortoise enters the shell

He who ran in panic entered the house
And wore the shell he had discarded.

### All return home after the show

All went home after witnessing the show
The tortoise had already returned
Who had gone without his wife's knowledge.
And when the sun rose
Cammantamālai woke up......

### People indulge in slanderous talk

Those who returned to their houses
Gathered in all odd places,
Junctions, mansions, hutments and platforms
Particularly those with families
Gossiped about the king's daughter
Gifted with a cresent forehead,
Chief ministers and others of the King's retinue
Also spoke in whispers
About the morals of the king's daughter
Who had betrayed the tortoise's trust
And brought humiliation to him.

## பட்டணம் முழுவதும் பழிச்சொல் பரவுதல்

கூத்திருந்து பார்த்ததுவும் குலமழிவு வந்ததுவும்
நேற்றவன் றான்வந்து நிலமைய[1] ழிந்ததுவும்
[2]பெண்ணா ளுடைய பெருமைதனை நாமுமினி
சொன்னாற் சுணைகேடு சூழ்புவிக்கு மேராது

நாஞ்சொன் னதாலே [3]நடக்காது காரியங்கள்
ஏஞ்சொல்ல [4]வேணுமினி இலச்சைகெட்ட காரியத்தை
அப்பிவளைந் தவனை ஆக்கினைகள் [5]செய்யுமுன்னே
தப்பிவிட் டான்நேற்று தடத்தோடே [6]ஓடாமல்

என்றவர் கள்தம்மி லிருந்து[7]வி சாரமுற்று
அன்றவர்கள் [8]தானுரைத்த அந்தரங்க மானதெல்லாம்
ஊற்றமுறு வார்த்தை உரைத்ததெல்லாந் தான்கேட்டு
வார்த்தையது [9]பட்டணத்தில் வளர்ந்ததுவே காற்றாக.

## மறுநாளும் கூத்துப்பார்க்க ஆமையர் எண்ணுதல்

விருத்தம்

59. மதுரமின் மொழியாள் செய்தி வளமதா யுரைத்த தெல்லாம்
சதிருட னிருந்த பேர்கள் தங்கள் தன்மனை யிலேக
கதிரவன் விடிந்த போது காவலன் பின்னுங் கூத்து
[10] பதிவுடன் நின்று ஆடிப் பார்க்கவே வேணு மென்றான்.

## களரிக்கு வந்து கூத்துப் பார்த்தல்

நடை

60. மறுநாள்க் கதிரடைந்து வானிலிருள் வந்தபின்பு
[11]செறுவித மாய்க்கூத்துக் கேளிக்கை தான்பார்க்க
ஒத்திணங் கியவ்வூரி லுண்டான பேர்களெல்லாம்
பித்தா னாட்கூத்து பெருமையுடனே பார்த்தார்.

---

2678. சுணைகேடு — சுரணைகேடு; வெட்கக்கேடு. 2680. இலச்சை — வெட்கம். 2681. அப்பி வளை — கவ்வி வளைதல். ஆக்கினை — தண்டனை. 2683. விசாரம் — கவலை. 2684. அந்தரங்கம் — இரகசியம். 2685. ஊற்றம் — இடையூறு; கேடு. 2687. மதுரம் — இனிமை. 2689. கதிரவன் — சூரியன். 2691. கதிர் — சூரியன். வான் — ஆகாயம். 2692. கூத்து — நாடகம். 2694. பித்தான் — மிக்க ஈடுபாடு.

கவடிச்சொல்: 2680. லெச்சை.

பாடவேறுபாடு: 1. அறிந்ததுவும் 2. பெண்ணுக்குடைய 3. நடவாது 4. போறோம் நாம்கண்ட காரியத்தை 5. செய் வதுக்கு 6. ஒட்டாமல் 7. வீரர்கள் கூடி 8. சொன்ன அதிசயங்க ளானதுவும 9. காற்றால் வளைந்ததுவே யம்மானை 10. பதிபெற அரசன் நன்றாய் 11. செவ்வாகவே கூத்து சேவிக்கவே பார்க்க.

## The Scandal spreads

When witnessing the show
The stranger of yesterday
Has caused the reputation
Of the royal family suffer setback.
We cannot hereafter
Speak proudly of the princess.
The humiliation that has come
Is too horrendous for the earth to bear.
It is pointless discussing it
As nothing is in our hands.
Before punishment could be meted out to the culprit
He deviously made good his escape.
What the people spoke in sorrow
Assumed huge proportions
And spread like the blowing wind.

## The tortoise wants to witness the show again

59. Those who were present at the show
Spoke at home about the scandal
That rocked the town.
And when the sun rose
The tortoise again cherished thoughts
Of visiting the theatre.

## Witnessing the show

60. Next day after the sun set,
And darkness spread
The citizens of the town
Bound by bonds of unity
Went to witness the show
With great involvement.

அன்றவனும் [1]பார்ப்பதற்கு ஆமையுட கூட்டைவிட்டு
[2]மன்றல்கம ழுங்குழலாள் மகிழ்ந்துறங்கும் வேளையிலே
சிறக்கும்புக ழானதொரு [3]செப்பரிய மன்னவனும்
[4]புறக்களரி தன்னில்வந்து [5]போகமீ ளத்திரிவான்

வட்டார மாய்த்திரிகை [6]வளையவட்ட மிட்டாற்போல்
கொட்டாடி யேத்திரிவான் கூத்தையி ருந்துபாரான்
எல்லோருங் கூடியிருப் பதற்குத் தான்பிறகே
குல்லாத் தனமாய்க் கொலுவாக வேதிரிவான்

## காண்போர் அழைத்தலும் ஆமையர் அஞ்சி ஓடுதலும்

[7]அடுத்திருக்கும் பேர்கள் அவன்வடிவைக் கண்டவுடன்
கடுத்துரைத்து [8]வந்தவனைக் கைகள்செய்யப் போகாது
பார்த்துநின்ற மன்னவன்றன் பாவனையைக் கண்டுரைப்பார்
நேற்றுவந்து கூத்து[9]நிலையில்நின்று பார்த்தவனும்

வந்துநிற் கிறான்காண் வரவழையு மென்றுரைப்பார்
அந்த மொழியைக் கேட்டு அப்பாலே ஓடலுற்றான்.

## மனையில் வந்து கூட்டினுள் புகுதல்

ஓட்டத்தைக் கண்டு உடனேசில பேர்துடர
வீட்டுக்குள் சென்று விரைவாய்ப் புகுந்துகொண்டான்

மன்றுபயில் மின்னாள் [10]வளமாய் அறியுமுன்னே
பண்டு போல்வந்து பதுங்கியொளித் தான்கூட்டில்
அங்குவந்து கூட்டில் அவதான மா[11]யொளிக்க
கங்குல் விடிந்து கதிரோனுந் தான்[12]விடிந்தான்.

---

2696. மன்றல் — வாசனை. 2698. புறக்களரி — நாடகசாலையின் வெளிப்புறம். 2699. வட்டார மாய் — வட்டமாய். திரிகை — திருவை; அரைகல் யந்திரம். 2702. குல்லாத்தனமாய் — ஏமாற்றுத் தனமாய். 2704. கடுத்துரைத்து — கடிந்துரைத்து. கைகள்செய்ய — காட்டிக்கொடுக்க. 2705. பாவனை — அடையாளம்; நடத்தை. 2711. மன்றுபயில் — வாசனை பயில்கின்ற. 2712. பண்டு — முன்பு; முன்னையது. பதுங்கி — மறைந்து. 2713. அவதானம் — சாதுரியம். 2714. கங்குல் — இரவு. கதிரோன் — சூரியன்.

சுவடிச்சொல்: 2705. பாவினை.

பாடவேறுபாடு: 1. பண்டதுபோல் 2. மன்றிலவும் பூங்குழலாள் 3. சொல்பெரிய 4. புறக்களந் 5. புகழ்ந்து மகிழ்ந்து 6. வளையமது விட்டால்போல் 7. அங்கிருக்கும் 8. இவரை கைகாட்டப் போகாது 9. நிலமையுடன் 10. வளமை 11. யொளிந்தான் 12. உதிர்த்தார்.

The tortoise also cast off his shell
And when his wife
With sweet-smelling locks was fast asleep
Went on tiptoe to the theatre
Wandered about here and there
Circled the place like a turning stone grinder.
Seldom witnessed the entertainment
But stealthily moved about here and there
With great restlessness.

### The tortoise flees

Those who were seated
On seeing his majestic form
Did not utter angry words
Or venture to grab him.
Instead they exclaimed that
The stranger was there
And wanted him to be welcomed.
On hearing their words,
The tortoise fled the place.

### Entering the shell

On seeing him running,
Some chose to follow him.
Harried by he entered the house
And slipped into the discarded shell
Before the sweet-smelling damsel
Could smell a rat
He cleverly manipulated things.
Meanwhile the night wore off
And the sun rose gloriously.

## மக்களின் அவச்சொல் அறிந்து சம்மந்தமாலை மனம் கலங்குதல்

**விருத்தம்**

61. விடிந்துபின் னெழுந்து [1]மின்னாள் வேதனை யாக மிக்க
சடைத்தவள் கவிழ்ந்து கொண்டு தரைதனிற் றுரும்பு குத்தி
கடிந்துசொல் விசன மெல்லாம் காதினிற் கேட்ட போது
**வடிந்திரு கண்ணாற் கண்ணீர் வடியவே திகைத்திருந்தாள்.**

**நடை**

62. பம்மந் தக்காரர் பலவார்த்தை சொன்னதினால்
சம்மந்த [2]மாலைமனம் சஞ்சலித்து மூச்செறிந்து
அன்னமருந் தாமல் [3]அதிகத்துய ராய்மனதில்
[4]என்னவிதியோ வெனக்கு இந்தவசை கேட்பதற்கு

அனைவோருங் [5]கூடிஎனை அழிமதியாய் பேசுதற்கு
மனையிலொரு வரெந்தன் மனதறிய வந்ததில்லை
வந்தவர்க ளில்லையென்றன் வாசல் நடைகடந்து
இந்தவுரை கேட்கநமக் கிறையோன் விதியெனவே

அற்பக் கதவுகளில் ஆணிதெறித் தால்நீங்கும்
கற்புக் கதவு கலங்காதென் றேயிருந்தேன்
என்றவளும் தம்மில் இருந்துவி சாரமுற்று
தன்னை யறியாமல் தவம்விளையு மென்றுரைப்பார்

என்னையறி யாமலெனக் கிந்தவிதி வந்ததென்ன
ஆனை விளாங்கனியை [7]ஆசித்தெ டுப்பதல்லால்
தானாகவே கனியுந் தங்குமோ[8]கா ணுந்தியிலே
[9]நமனையறி யாதுயிரும் நற்சடமிட் டேகாது

சிவனே [10]யெனதுடைய சிந்தையறி யாமலிப்போ

---

2715. மின்னாள் — பெண்; அதாவது சம்மந்தமாலை. 2716. சடைத்த — சோர்ந்த. துரும்பு — கூளம்; சிராய். 2717. விசனம் — துக்கம்; துன்பம். 2719. பம்மந்தக்காரர் — வெளிவேஷக்காரர். 2722. வசை — பழிப்பு; குற்றம். 2723. அழிமதி — அறிவிழந்து. 2724. மனை — வீடு. 2726. இறையோன் — கடவுள். 2727. அற்பம் — இலேசு; சிறுமை. ஆணி — மரவாணி. 2728. விசாரம் — கவலை; வேதனை. 2730. தவம் — புண்ணியம். 2732. ஆனை — யானை. விளாங்கனி — விளாம் பழம். ஆசித்து — விரும்பி. 2733. உந்தி — வயிறு. 2734. நமன் — எமன். சடம் — உடம்பு.

**சுவடிச்சொல்:** 2730. தவம் விழையும்.

**பாடவேறுபாடு:** 1. திருந்து வேதனை யாக வேந்தன் 2. மாலையவள். 3. அதிகிலேச மாயவளும் 4. என்னவிதி யாச்சு ஏச்சுஎனக்கு உண்டாச்சே. 5. கூடிநம்மை அழிமொழிகள் சொல்லி 6. தவம் வளரும் என்றுரைத்தாள் 7. எடுத்தும் பொசிக்குற போல் 8. சந்தியிலே 9. எமனையறி யாம லுயிரும் நற்சடமிட்ட தேகாணம் 10. என்னுடைய.

## Cammantamālai upset

61. Like one who trod on a sharp wooden chip
Cammantamālai was sunk in sorrow
On hearing the loose scurrilous talk,
Shed profusely tears of pain and anguish.

62. The glib talk of the hypocrites
Perturbed Cammantamālai
Who sighed deeply in grief.
She forewent food
Cursed her adverse fate
That made everybody vilify her
None coming forward to pity her
None crossing the threshold with a kindword.
Flimsy doors may yield to forcible nailing
But not the door of personal purity.
So mused she very much disturbed,
Liberation comes of its own accord
When one is least conscious of it
Like the malignant fate that had visited her.
The wood apple never enters the elephants stomach
Unless it deliberately stoops to pick it up.

வந்தவர்க ளாருமில்லை மனதறிய [1]வேயொருவர்
[2]இந்தவிதி கேட்கநமக் கிறையோன் [3]விதியெனவே

## தன்னைப் பேணாது மனம் சஞ்சலித்திருத்தல்

பாங்கியரைத் தேடாள் பாக்குவெற்றி லையருந்தாள்
[4]ஏங்கிவிழு வாளழுவாள் எழுந்திருந்து மூச்செறிவாள்
பொருந்தும்விழி [5]மூடாள் பூவணைமே லேசரியாள்
[6]திருத்துமலர்க் குழலாள் திருநீறு தான்பூசாள்

வென்னீர் குளியாள்தன் மேனிதனை யும்பேணாள்
பன்னீரு மாடாள் மரிமளங்க ளும்[7]பூசாள்
பாங்கியர்க ளோடே பகிர்ந்துமொழி [8]கள்பேசாள்
[9]தூங்கிவிழு வார்களைப்போல் துக்கமுற்றுச் சஞ்சலித்து

[10]வையம்நகைக்க நமக்கு வந்தவிதி காணுமென
[11]கையாற் றுரும்புகுத்தி கமலமுகம் வாடிநின்றாள்
[12]தேங்குமலர்க் குழலாள் செல்விசம் மந்தமாலை
**ஏங்கிப் [13]பெருமூச் செறிந்திருக்கும் வேளையிலே.**

## சம்மந்தமாலையிடம் ஆமையர் பேசுதல்

சோதிபர மேஸ்பரனார் சோதனையி னாலிவர்கள்
மாதுமனத் துயரம் [14]மாறுகின்ற நாளையிலே
திண்ணமுடன் பெண்ணைமணம் செய்திருக்கும் நாளையிலே
பெண்ணைமுகம் நோக்கியன்பு பேசாத மன்னவனும்

கஞ்ச முகமுடைய காரிகையா ளைநோக்கி
**[15]வஞ்சமிலா வாமையுரு வானமன்ன னேதுசொல்வான்.**

---

2738. பாங்கியர் — தோழியர். 2740. பூவணை — மலர்ப்பள்ளி; மலர்த் தூவிய மெத்தை. 2742. வென்னீர் — சுடுநீர். மேனி — உடல். 2743. பன்னீர் — ரோஜா முதலிய பூக்களினின்று இறக்கப்படும் வாசனை நீர். 2746. வையம் — பூமி. 2754. கஞ்சம் — தாமரை. காரிகை — பெண். 2755. வஞ்சம் — கபடம்; பொய்.

**பாடவேறுபாடு :** 1. இங்கொருவர் 2. இந்தமொழி 3. விதித்ததென்ன 4. ஏங்கி யழுவாள் இறையோன் விதித்த தென்று 5. மடவாள் 6. திருந்துமலர் சூடாள் திருநீறு தானணியாள் 7. அணியாள் 8. பேசறியாள் 9. தூங்கி விழுவாள் துயரமாய்ச் சஞ்சலித்து 10. வையகம் நமைநகைக்க வந்த விதி மாயமென்ன 11. கையில்துரும் பெடுத்துக் கவிழ்ந்துமுகம் வாடிமின்னாள் 12. தேமக்குழலாள் 13. அழுது இவளிருக்கும் 14. மாற்றுகின்ற வேளையிலே 15. வஞ்சமற.

Life too never ceases to be
Unless Yama, the lord of death wills it.

### Cammantamālai's agitation

Seldom she searched for her maids
Nor chewed betel and areca nut,
Wept profusely, sighed deeply
Did not sleep even a wink
Shunned the flower-decked bed
Didn't wear the sacred ash on forehead
Avoided hot baths and personal comforts
Perfumes and rose water
Felt terribly drowsy
Mused on the great misfortune
That made all malign her.
With her lotus face enveloped in gloom
Cammantamālai let out sighs of grief.

### The tortoise addresses his wife

Thanks to the blessings of Lord Paramēcvara
The sorrows of the woman were getting dispelled
For, the tortoise who had not uttered any loving word
Spoke to his lotus-faced wife at last!

## தலைமுழுக மனைவியிடம் வெந்நீர் வேண்டுதல்

வல்லபஞ் சேர்மாதே வடமயிலே சேயிழையே
கல்லிடையுங் காடும் கரடுமுர டுங்குமடும்

குண்டுகுழி மேடும் குமடுபள்ள மானதுவும்
சண்டு ,சருகான தலங்களெல்லாம் [1]நான்திரிந்தேன்
மேனியுட லெல்லாம் மெலிந்துலைந்து நோகுதுகாண்
கோனிடையன் போலே கொடுங்காட்டி லேதிரிந்து

பெண்ணேயென் [2]மேனிவெகு புண்ணாக நோகுதுகாண்
எண்ணையொடு புண்ணாக்கும் ஏற்றவென்னீ ரும்வெதுப்பி
விரைவாய்த் தலைமுழுகி வேதனை தீரவெனக்குத்
தருவாயே யானால் [3]சடைவதுவும் மாறுமென்றார்.

## கணவர் பேசியது கண்டு சம்மந்தமாலை மகிழ்தல்

என்றமொழி யைக்கேட்டு [4]இசைந்துசம் மந்தமாலை
நன்றுநன்று [5]யெந்தனக்கு நல்ல காலமெனவே
ஊமைபோல் வார்த்தை உரையா திருந்தவரும்
[6]தாமாக வாய்திறந்து சாற்றினார் நம்முடனே

சலிவுமனத் துயரம் சங்கடங்க ளானதெல்லாம்
கலிதீர்ந்தோ மென்றுசொல்லி கன்னிசம் மந்தமாலை

## நீராடுவதற்கான பொருள்களை எடுத்து வைத்தல்

[7]மெய்யழகுங் கையழகும் மேவுபணி செய்யுமந்த
[8]தையல் கனகவல்லி தன்னைய வளழைத்து

தேங்குமலர்க் குழலாள் [9]சேயிழையாள் தன்மனையில்
[10]தூங்குமுறி தனிலே சொகுசுடனே சேர்த்துவைத்த
சந்தனாதித் [11] தைலந் தன்னைய வள்வெதுப்பி
கந்தமுறுங் குழலாள் கன்னிசம் மந்தமாலை

---

2756. வல்லபம் — திறமை; அருஞ்செயல். வடமயில் — சரம் அணிந்த பெண். சேயிழை — பெண். 2757. கல்லிடை — கற்கள் அமைந்துள்ள இடம். 2761. கோனிடையன் — இடையர் சாதியினர். 2764. வென்னீர் — சுடுநீர். வெதுப்பி — காய்ச்சி. 2765. சடைவு — சோர்வு. 2760. இசைந்து — சம்மதித்து. 2770. சலிவு — சலிப்பு. 2771. கலி — துன்பம். 2773. தையல் — பெண். கனகவல்லி — சம்பந்தமாலையின் வேலைக்காரி. 2775. தூங்குமுறி — பண்டம் வைக்கும் பொருட்டுத் தொங்க விடும் உறி. 2776. சந்தனாதித்தைலம் — சந்தனம் முதலிய பொருள்களினின்று வடிக்கும் தைலம். 2777. கந்தம் — வாசனை.

சுவடிச்சொல்: 2756. செய்யிளையே 2762. பிண்ணாக 2763. பிண்ணாக்கும் 2774. செய்யிளையாள்.

**பாடவேறுபாடு:** 1. தான்கிடந்து 2. மேனியது 3. சடலையது தீருமென்றூர் 4. ஏலங்குழலி 5. தானமக்கு 6. நாசி திறந்து நம்மோடே கேட்டதினால். 7. மையல்போல் நடனம்டும் மங்கைசம் மந்தமாலை 8. கை வேலை செய்யும் கனகவல்லி யையழைத்து 9. சேயிழையை தானழைத்து 10. தாங்கும் உறியில் தூரையில் வைத்த எண்ணைதன்னை 11. எண்ணைத் தான்கொணர்ந்து.

### Asking for hot water

Resourceful woman,
Look, I roamed about in hillocks and shrubs
Thickets galore and jungles filthy
In pits and dents high and low
In woodlands amidst twigs and leaves
My body is emaciated and aches terribly.
Like a shepherd, I have been wandering about in the forest,
My muscles pain severely,
Won't you give me oil, powder and water boiled
So that I can take a refreshing bath
And get rid of my fatigue?

### Cammantamālai feels happy

On hearing his words
Cammantamālai nodded approval,
Good times have dawned at last
Since the person who was dumb all along
Has voluntarily chosen to speak,
Sorrow and low spirits are sure to quit
Exclaimed Cammantamālai......

### Getting ready the bath

Cammantamālai summoned
Her maid-in-attendance Kaṉakavalli
Capable of acting quickly and deftly
Ordered her to take out of the suspended pot
Sandalwood oil collected over a period
And boil it to a soothing hot,

[1]பாயுங்கயல் விழியாள் பைந்தொடியு மன்னேரம்
[2]சீயக்காய் நெல்லிப் பருப்புடனே சீராக்கி
வெதுப்பி யிறக்கியவள் வென்னீருங் கொண்டுவந்து
மதுப்போல் மொழியழகி மங்கைசம் மந்தமாலை

கொல்லைப் புறமான [3]கோட்டைக் கதவடையில்
மெல்லவென் னீர்ப்பானை விதமாய் றக்கிவைத்து
சம்மந்த மாலை[4]யுடன் தன்னடியா ளுங்கூட
கன்மந் [5]தொலைவதற்கு காவலவன் முன்பதிலே

வெள்ளமிறக் கிவெதுப்பி [6]வென்னீர் கொண்டுவந்து
[7]**உள்ளம் மகிழ்ந்தவர்க ளுடனிறக்கி வைத்தார்கள்.**

## தலைவாயிலை அடைத்து ஆமையர்
## தனித்திருக்கச் சொல்லுதல்

வெளிதனிலே வைத்தபின்பு வேந்தன்மக ளைப்பார்த்து
களிகூர்ந்தங் [9]காமையரும் கன்னியர்க்கு ஏதுரைப்பான்

சிலைபோல் நுதலுடைய [10] தேன்மொழியே நீகேளாய்
தலைமுழுகு மட்டுமிந்தத் தலைவாயி லுமடைத்து
அப்பாலே நில்லு அடுக்கவர வொண்ணாது
எப்போதும் போல்நீங்க ளிருங்கோ வொருபுறத்தில்

எண்ணையொடு புண்ணாக்கு என்கையால் [11]தேய்ப்பதல்லால்
திண்ணமுடன் வேறொருவர் தேய்க்கவொண்ணா து[12]யெனக்கு
இட்டமுடன் எண்ணை எடுத்தொருவர் கையதனால்
தொட்டொருவர் தேய்க்கவெகு தோஷமுண்டு மின்னாரே

---

2778. கயல் — மீன். பைந்தொடி — பெண். 2781. மது — தேன்; கள். 2782. கொல்லைப்புறம் — புழக்கடை. 2785. கன்மம் — வினைப்பயன். 2786. வெள்ளம் — நீர். 2789. களி — மகிழ்ச்சி. 2790. நுதல் — நெற்றி. 2791. தலைவாயில் — கதவின் மேல்நிலை. 2795. திண்ணம் — நிச்சயம். 2797. தோஷம் — பாவம்; குற்றம். மின்னார் — பெண்.

**சுவடிச்சொல்:** 2785. கற்மந் 2794. பிண்ணாக்கு.

**பாடவேறுபாடு:** 1. பாவுசேக்குங் குழலாள் 2. சர்க்கரையும் நெல்லிப் பருப்பும்மி ளகுஅரைப்பும் 3. கோட்டைசிகர் தானடியில் 4. யவள் தானடை யாளமாக 5. தொலைந்ததுகாண் 6. எண்ணை 7. வள்ளல்குழ லாளும் வைத்தாள் வெளியதிலே 8. நோக்கி 9. காவலவன் 10. தேன்மொழியா ளேநமக்கு 11. அல்லாதுக்கு 12. தெந்தன்.

Meanwhile she got ready
The powder used for oil bath
By mixing the various ingredients
Such as amla and powder of goose berry.
Got ready steaming water
Both women carrying the pot to backyard
And placing it on the floor with great joy.

### The tortoise wants the women to keep out

After the vessel was duly placed
What did the tortoise say?
Girl with pretty forehead, sweet one, listen
Till I complete my bath
Close the door and keep out
It is improper to be here, by my side.
Believe me, oil and powder should be applied
Only with one's own hands
And not by any one else.

வேறொருவர் தேய்த்து[1]அவர் வேர்வையது மேல்விழுந்தால்
மாறாது பாவம் வரும்பிணிகள் [2]தீராது
மூத்தோர்கள் [3]சொன்ன முறைமைதனைக் கேளாமல்
சாத்திரத்தை மீறித் தலைமுழுகேன் [4]கண்டாயே

முல்லை நகையாளே[5] மொழியும்வகை நீகேளாய்
சொல்லைப் புறத்திலந்த கோட்டை[6]மதிற் குள்ளாக
எண்ணையும் புண்ணாக்குடனே ஏத்தவென்னீ ரானதுவும்
ஒண்ணுங் குறையாமல் உள்ளேவைத்துத் தாள்பூட்டி
குளித்து வருமளவும் கூடத்தே நில்லுமென்றான்.

## ஆமையர் உருமாறி தியானித்து நீராடுதல்

[7]நளித்து மடவார்கள் நல்லதென்று கொண்டாடி
சொன்னபடி [8]வைத்தவர்கள் தூரநிற்கும் வேளையிலே
அன்னேரஞ் [9]சென்று அடைத்துக் கதவைப்பூட்டி

தாள்பூட்டி ஆமையுட சட்டையை விட்டுவெளியில்
வாள்பூட்டுஞ் செங்கரத்தான் வந்தான் [10]கதிரவன்போல்
தனியாகவே யவனும் தானு மிருந்துகொண்டு
மனிதருரு வாகவெண்ணை வார்க்கின்ற [11]வேளையிலே

மாநிலத்தில் நான்கேட்கும் வரங்களெல்லாம் எந்தனுக்கு
கிருபை யுடனேதர வேணுமென்று அடிதொழுதான்.

## சம்மந்தமாலை சுவரைத் துளைத்து நீராடுதலைப் பார்த்தல்

அன்னேரந் தன்னிலந்த [12]அரிவைசம் மந்தமாலை
இன்னேரந் தன்னிலவர் ஏதுசெய்கின் றாரெனவே

ஆருமறி யாமல் அப்பாலே நின்றவளும்
[13]சீராகக் கோட்டைச் சுவரையறுத் துத்துளைத்து

---

2798. வேர்வை — உடலின் மேல்புறத்துத் தோன்றும் நீர்த்துளி. 2799. பிணி — நோய்; துன்பம். 2806. கூடம் — மறைவு. 2807. நளி — பெருமை. மடவார் — பெண். 2810. ஆமைசட்டை — ஆமையின் மேலுறை. 2813. எண்ணெய் வார்க்கின்ற — எண்ணெய் ஊற்றுகின்ற. 2816. அரிவை — பெண்.

**சுவடிச்சொல்:** 2804. பிண்ணாக்கு.

**பாடவேறுபாடு:** 1. அந்த 2. நீங்காது 3. சொல்லை முறைமையேளா மலிருந்தால் 4. கண்டீரே 5. மொழிவ தொன்று சொல்வதுகேள் 6. மதிலகத்தே 7. நளினமொழி மடவாள் 8. வைத்தவளும் 9. தான வனும் அடைத்துமெள்ள தாள்பூட்டி 10. வெளிதனிலே 11. நேரமதில் 12. அரிய 13. சீரானக்.

If oil is applied by others
Great sin will follow,
Besides, sweat from the other body
May trickle and fall
Causing illnesses of all kinds.
Know that I am abiding by the words of elders
Who have wisely prescribed this mode
Girl with a jasmine smile,
Listen to me carefully.
Leave the oil and the powder
Along with the water boiled
In the rear courtyard.
And seal the door tightly
Till I complete my bath
Wait patiently in the hall.

## The tortoise meditates

While the women commended his stand with pride
And discreetly withdrew themselves,
The tortoise tightly sealed the door
And emerged out of the shell
A sword wielding hero glorious like the sun
Alone he applied oil to his body
Uttering a prayer that the Lord
Should bless him with whatever boons he asks.

## Cammantamālai peeps through a hole

Cammantamālai
Fired by great curiosity
To know what her husband was doing
Made a hole in the wall of the fortress
Without the knowledge of anybody
Bore a hole with a crowbar
As deep as her arms lenght

கைபோகு மட்டும் [1]கடப்பாரை யாற்துளைத்து
[2]மையோடு கண்ணாள் மனமகிழ்ந்து பார்க்கையிலே

## உண்மை வடிவழகைக் கண்டு சம்ம்ந்தமாலை மகிழ்தல்

துலங்கிக் கதிர்வீசும்[3] சூரிய னாரைப்போல்
இலங்கு பிரகாசம் இவனுடைய பேரழகும்
[4]வன்னவடி வுமவன் வாய்த்தவுட லொப்பனையும்
[5]இன்னவித மென்றவரா லெழுதவுமோ வொண்ணாது

ஒருகண்ணால் பார்த்தவளும் உள்ளமி கக்குளிர்ந்து
இருகண்ணால் பார்த்தாக்கால் [6]என்னசொல்லப் போறேன்யான்
ஆமையென்று [7]சொல்லிநம்மை ஆதரவுசெய்யாமல்
[8]பாமைகரை யேற்றியெந்தன் பாவத்தை ஏற்றாரே

அரைத்திருந்த சந்தனத்தை அள்ளியணங் கொள்ளாமல்
[9]மரித்தவர்போல் நாமிருந்தோம் வாசமறி யாமலேதான்
இப்படியோ நம்மையிவர் [10]ஏய்த்தார்கா ணென்றுசொல்லி
கற்புடைய மாதுமின்னாள் கன்னிசம் மந்தமாலை

கனிவாய் மொழியழகி கனபிரிய மாய்மகிழ்ந்து

## பல்வகை உணவுப் பொருள்களை சமைத்தல்

இனிமேற் றுயரம்நமக் கில்லையென்று மின்னாளும்
வாசமலர்க் குழலாள் மங்கையரு மப்போது
நாயன் திருமனது நமக்கிரங்கி னாரெனவே

அன்னங் கறிசோறு அடைகள் [11]பலகாரமுடன்
தன்னுடைய கையதனால் சமைத்தாள் சடுதியிலே.

---

2820. கடப்பாரை — இரும்பினாலான மண்தோண்டுங் கருவி. 2823. இலங்கு — பிரகாசம். 2824. ஒப்பனை — அலங்காரம். 2825. ஒண்ணாது — இயலாது. 2829. பாமை — பாமம்; கோபம். 2831. மரித்தவர் — இறந்தவர். 2835. மின்னாள் — பெண். 2837. நாயன் — கடவுள். 2839. சடுதி — விரைவு.

**சுவடிச்சொல்:** 2838. கறிசேர.

**பாடவேறுபாடு:** 1. கடும்பாதை யாய்துளைத்து 2. மைகொட்டுங் 3. சூரியனைப் போலழகும் 4. வன்ன வடி வழகும் 5. இன்னதென்று சொல்லி 6. என்ன செய்யப் போறேன்நான் 7. எண்ணி நாமிவரை 8. பாவம் பலிப் பதற்கோ பார்த்திருந்தேன் நான்பாவி 9. மடிந்திருந்தோம் 10. ஏச்சாரே என்றுசொல்லி 11. பலகார மெல்லாம்.

Peeped with eagerness through the hole,
The woman with darkened eyes.

### Cammantamālai is happy

Like the sun with his glorious rays,
He was bright beyond words,
A shapely figure with comely looks.
Satisfied with the view obtained by a single eye
She wondered what marvellous sight it would be
If both the eyes were used.
Misleading us by styling himself a tortoise
He has incurred my wrath and sinned greatly.
Instead of enjoying the fragrance of sandalwood
We have been dead to its merits.
What a ploy is this?
Mused Cammantamālai
Her mind filled with inward glee.

### Cooked various dishes

'No more sorrows' said the woman
Wearing fragrant flowers
'The God has answered my prayer'
So saying, she cooked rice and other delicious fare
With the speed of lightning.

## வெளிவந்த ஆமையரை சம்மந்தமாலை அணைத்து மலரணையில் வைத்தல்

வேண்டும்பல காரமந்த மெல்லியரு முண்டாக்கி
கூண்டபுகழ் மன்னன் குளித்து [1]முழுகியபின்

கதவு திறக்குமட்டும் காரிகையாள் [2]நேர்நிலையாய்
திறமாகவே யவளும் [3]சுவரினிேனா டொண்டிநின்றாள்
அப்போது மன்னன் அடைத்தக்கத வைத்திறந்து
மெய்ப்பாக ஊர்ந்து வெளியில்வரும் வேளையிலே

கட்டி யெடுத்தவளும் கனமார்போ [4]டேசேர்த்து
**வட்ட [5]மலரணைமேல் வைத்தனள்கா ணம்மானை.**

## அமுது ஊட்டியபின் தகப்பனார் முன்பில் வருதல்

**விருத்தம்**

63. வைத்தவள் மனையி லந்த மன்னனுக் கமுது மூட்டி
மெத்தையில் சரியச் சொல்லி மேனிகால் முறுக்கி மின்னாள்
நித்திரை [6]முழிக்கு முன்னே நிமிஷத் திலெழுந்த மாது
**தத்திர மாகத் தானே தகப்பனார் [7]முன்பில் வந்தாள்.**

## மன்னவன் முகம் வாடி சஞ்சலித்திருத்தல்

**நடை**

64. வந்தமகளை நோக்கி வாழ்பெரிய மன்னவனும்
சந்தோஷ மாகத் தயவுமொழி பேசாமல்
வெம்புச் சடைத்துமுகம் மெலிவாக வேயரசன்
**[8]சம்பி முகம்வாடி சலித்திருந்தா னம்மானை.**

---

2840. மெல்லியர் — பெண்; இங்கு சம்மந்தமாலை. 284. காரிகை — பெண். 2843. ஒண்டி — ஒளித்து. 2847. மலரணை — மலர்தூவியமஞ்சம். 2850. நித்திரை — உறக்கம். 2851. தத்தரம் — தந்திரம். 2854. வெம்பி — வாடுதல். 2855. சம்பி — சோர்ந்து.

**சுவடிச்சொல்:** 2843. சிதமாக 2851. தத்திரமாகத்.

**பாடவேறுபாடு:** 1. முழுகியவன் 2. அந்நேரம் 3. சுவரோ டொளித்து நின்றாள் 4. டேயணைத்து 5. வனை தனிலே 6. விழிக்கு முன்னே நிமைக்குமுன் எழுந்தி ருந்து 7. மனையில் 8. சம்பிச் சடைத்துதானிருந்தா னம்மானை 9. கோமானே.

## Cammantamālai places the tortoise on a bed of flowers

After cooking delicious dishes,
She stood near the wall
Almost half hidden and withdrawn
Till he finished his bath.
And lo, the door opened and
He crawled his way out.
She lifted him with surging passion
Hugged him to her heart
Placed him on the cotton bed
Bestrewn with flowers of various sort.

## She meets her father

63. After placing him on the bed
And feeding him with choice dishes
She beseeched him to lie down
Massaged his legs with great care
And ere he woke up presented herself before her father.

## The King is sad and in low spirits

64. The king who cast his eyes on her
Did not utter any word of joy.
Wearing a tired and weary look,
He was the picture of despondency.

## முகவாட்டத்துக்கான காரணத்தைக் கேட்டல்

பெற்ற தகப்பன் பெருமூச்சு விட்டதெல்லாம்
உற்ற மகளார் உடனறிந்தங் கேதுசொல்வாள்
அரசர் பெருமானே அம்புவியை யாண்டவனே
வரைசேருந் திண்புயனே மருவலர்கள் போரேறே

அட்டதிசை யெல்லாமுன் [1]ஆக்கினையெங் கும்நடக்க
மட்டுப் படுத்தி மணிக்குடைககு ளாண்டவனே
[2]ஒன்ன லரைவென்று உலகாளுஞ் சீமானே
வன்னத் [3]திருமுகமும் வாடி மெலிவானேன்

[4]திடனாக நீராளும் சீமைதனில் வேறொருவர்
படையெடுத்து வந்திறங்கிப் [5]பாதகங்கள் கண்டதுண்டோ
பொன்னும் [6]பரிகலஞ்சேர் பூதலத்தை யாளுகின்ற
மன்னவர் க[7]ளும்முடனே வந்துகப்பம் கேட்டதுண்டோ

என்னைமுகம் பாராமல் ஏங்கிநெடு மூச்செறிந்து
[8]மன்னவனே நீரும் முகம்வாடி யிருப்பதென்ன
இந்தமொழி தந்தையுட னேந்திழையுஞ் [9]சொல்லிடவே.

## மன்னனது மொழியும் மகளது மறுமொழியும்

[10]சிந்தையுற் றவன்மனது தேறிமக ளோடுரைப்பான்

உன்னாலே யெந்தனுக்கு [11]உள்ளம்மெலி வல்லாமல்
என்னாலே வேறுதுயர் இல்லைகா ணென்றுசொல்ல
[12]அன்று தகப்பனுடன் ஆயிழையு மேதுசொல்வாள்
[13]மன்று தனையாளும் மன்னவனே யான்சொலக்கேள்

வைப்பாக [14]யிப்படியே வார்த்தைசொன்னீ ரென்னுடனே
உப்புப் புழுத்தால் உலகில்மருந் [15]துண்டாமோ
மெய்ப்புகழும் மன்னவனே மேதினியி லென்னுடைய
கற்புவழு காதுவையா [16]காவலனே யென்னாளும்

2858. அம்புவி — அழகானபூமி. 2859. வரை — மூங்கில். மருவலர் — பகைவர். ஏறு — காளை. 2860. அட்டதிசை — எண்திசை. ஆக்கினை — கட்டளை. 2862. ஒன்னலர் — பகைவர். 2864. திடனாக — வலிமையாக; திறமையாக. 2865. பாதகம் — தீங்கு. 2866. பரிகலம் — சேனை பரிவாரம்; ஏவலாளர். பூதலம் — பூமி. 2867. கப்பம் — அரசர்க்கிடுந்திறை. 2875. மன்று — பூமி. 2877. உப்பு — உப்புக்கல். 2878. மேதினி — பூமி.

**சுவடிச்சொல்:** 2870. ஏந்திளை 2874. ஆயிளை.

**பாடவேறுபாடு:** 1. ஆச்சினையாக நடக்கும் 2. ஒன்றலரை 3. திருமனது வாடியிருப்பானேன் 4. திடமாக 5. பாளயங்கள் செய்வதுண்டோ 6. பணமும் பூதலத்திலுள்ளவர்கள் 7. உம்மோடே 8. தென்னவரே நீர்தான் திகைத்திருக்க காரணமேன் 9. சொன்னதற்பின் 10. சிந்தையுற்று மன்னன் திரும்பமக ளோடுரைத்தான் 11. உள்மெலிவே யல்லாமல் 12. என்றமொழி கேட்டு ஏந்திழையாளுமறுத்து. 13. அன்று தந்தை யோடே ஆயிழையு மேதுசொல்வாள் 14. இந்தமொழி 15. துண்டோ தான் 16. கதிரோன்தாக் கானாலும்.

## The daughter anxious to know why the king was sad

On seeing the king sighing deeply
What did his dear daughter ask?
King of kings, ruler of the earth,
A charging bull to enemy kings,
Your commands are obeyed in all the eight directions
Which you have brought under your sway.
Destroyer of enemies and great ruler,
Why should your face wear sorrow?
Has anybody ever ventured to invade
The Kingdom ruled by you?
Has any king dared
To demand booty from you?
How is it you are so indifferent
And refuse to look at me.
Tell me why you are so care-worn.

## The King consoled by the daughter

The King, releasing himself from reflection,
And breathing a sigh of relief spoke:
The only sorrow that I have
Concerns you my dear, nothing else disturbs me.
On hearing the words of her father
What did Cammantamālai say?
You have attributed your sorrow to me,
If salt turns rot
There is no alternative remedy.
Oh king with spotless reputation,
I can give you my word that my chastity
Will never suffer any setback.

வழுகாது சூரியனும் வந்துதெற்கே தோன்றிடினும்
நழுகா தொருநாளும் நல்லகற்பு வென்றுரைத்தாள்
[1]தயவில்லா தேநீர்தான் சலித்திருந்த தன்மையெல்லாம்
[2]பயிலறி வேன்காணும் பரமார்த்த [3]மேநானும்
வெம்பிச் [4]சடைத்துமுகம் மெலிந்திருக்க வேண்டாங்காண்

## தந்தையிடம் இன்றும் கூத்துக்கு ஏற்பாடு செய்து காணச் சொல்லுதல்

அம்புவி யோர்தம்மை அழைத்துக் களரிக்கூட்டி
வட்டக் களரியிட்டு மன்னவர்கள் தான்கூடி
கொட்டிமு ழக்கிப்பல [5]கோளங்க ளுஞ்சமைந்து
ஆடுங்கூத் தெல்லாம் அரசர்பெரு மானேநீர்
கூடுங் களரிதனில் கூத்துப்பார்க் கும்போது
வேறொருவ ரங்குவந்த வேற்றாட்க ளானவர்கள்
கூறாக வந்துநின்று கூத்துப்பார்ப் பாராகில்
இங்கிருக்கும் பேரில் எவராகிலு மொருவர்
எங்கிருந்து வந்தீர் நீரிங்கு வாருமெனவே
ஆராகிலு மொருவ ராராய்ந்து [6]கேட்டவரை
[7]வாரா லடித்து வலுகயிற்றா லேபிணைத்து
தும்பைச்சார் விட்டவரை தூக்கியடித் தேவலுவாய்
அம்பத்து நாலுபொன்னு அபராதம் வாங்கிவைப்பேன்
என்றுபறை சாற்றியிதை [8]எல்லோருக் கும்விளம்பி
அன்றுபோ லின்றும் நீரான களரிகூட்டி
ஏற்றபுக ழானதொரு யிலங்கமுடிக் காவலனே
நேற்றுப்போல் கூத்ததுவும் நீர்பார்க்க வேணுமென்று
தகப்பனார் தன்னுடனே சம்மந்த மாலையவள்
வகுப்பாக சொல்லிவிட்டு வந்தாள் மனைதனிலே.

Even if the sun rises in the south
Virtue will never get sullied.
Since I am sworn to truth and decency
You need not be worried any more.

## Beseeches her father to repeat the cultural show

Cammantamālai appealed to her father
To put on another show in the theatre
With a large assemblage
And while all are absorbed in the spectacle,
If a stranger is detected in the crowd.
And any one challenged his identity
Or asked about his whereabouts indiscreetly
Lash him with belt and tie him with rope,
Apply the juice of the plant *Tumpai* to the wounds,
Fine him fifty four mohurs
Let this message be publicized by tom-tom
And my dear king with spotless reputation
You must also visit the theatre
And witness the show
As you did yesterday.

## சம்மந்தமாலை மனைக்கு வந்திருத்தல்

**விருத்தம்**

65. மனைதனில் வந்த போது மன்னவன் [1]துயிலெ ழுந்து
கனதன மின்னாள் காண காவலன் வெளியில் [2]வந்து
[3]தினந்தினந் திரிந்தாப் போல தெருவதில் திருந்து லாவி
மனைதனி லவனும் வந்தான் வான்கதி ரடைந்து தன்றே.

## மன்னன் கூத்து ஏற்பாடு செய்து காணுதல்

**நடை**

66. அன்று கதிரோன் அடைந்துஇருள் [4]வந்தபின்பு
உண்டு [5]களித்தவர்கள் உண்டுர டைக்குமுன்னே
தண்டரள மார்பனந்த [6]சம்மந்த ராசனவன்
பண்டுபோல் கூத்தவர்கள் பார்க்கவே வேணுமென்று

அன்று களரிகூட்டி அனைவோரை யும்வருத்தி
சென்றி ருந்துகூத்து தெரிந்தவர்கள் பார்க்கையிலே

## சம்மந்தமாலை தூங்குவது போல இருத்தல்

ஒருசாம மாகியந்த ஊரடைக்கும் வேளையிலே
திருவையிளங் [8]குயிலாள் செல்விசம் மந்தமாலை

[9]ஏற்றபுக ழாமையிவன் காணவே வேணுமென்று
சாற்று மலரணையில் சன்னையு றக்கமதாய்
[10]வள்ளைக் குழலாளும் வாய்த்தமணி மெத்தையிலே
கள்ளவு றக்கமாக கண்துயின்றாள் காரிகையும்

---

2904. மனை — வீடு. துயில் — உறங்குதல். 2905. கனதன மின் னாள் — பருத்த முலையுடைய பெண். 2907. வான்கதிர் — சூரியன். 2910. தண்டரள — குளிர்ச்சி பொருந்திய முத்து. 2911. பண்டு — பழையது. 2912. களரி கூட்டி — நாடகம் அமைத்து. 2917. சன்னை — குறிப்பு; சாடை.

சுவடிச்சொல்: 2916. ஏத்தபுக.

பாடவேறுபாடு: 1. முழித்திளகி 2. வந்தான் 3. திசைதெரியா தார்போலே தெருவதில் வந்துலாவி 4. வந்ததிற்பின் 5. பொசித்தவனும் 6. சம்மந்த ராசமன்னன் 7. ஊரடைத்த 8. குழலாள் 9. ஏற்ற புக ழாமை தன்னை இவள்காண 10. வன்னக் குழலாளும்.

## Cammantamālai returns to her house

65. When Cammantamālai returned to her house
The tortoise woke up from sleep
To receive the big breasted one,
And like any other day
Hopped out to wander in the street
Returned at sun down.

## A show put up

66. When the sun set,
And darkness enveloped the world
The king with a benign disposition
Put up a show as of old,
Invited every one to witness,
Saw it in the company of others.

## Cammantamālai pretends to sleep

Round about midnight
The young cuckoo Cammantamālai,
With the intent of drawing the notice
Of her husband the tortoise
Lay on the bed bedecked with flowers
And pretended to be fast asleep.

## ஆமையர் கூட்டைக் கழற்றி மறைத்து வைத்தல்

[1]முழியாமற் கள்ள வுறக்கமதாய் மூச்சுவிட்டு
நளிசேரும் பூங்குழலாள் [2]நன்றாயு றங்கையிலே
ஆரணி மார்பனந்த ஆமையின்கூட் டைக்கழற்றி
பாரமணி மெத்தையின்கீழ் [3]பாங்காயொ ளித்துவைத்தான்.

## சம்மந்தமாலை கணவனின் செயலைக் காணாதது போலிருத்தல்

ஒளித்து மறைத்தவனும் உள்ளடக்கஞ் செய்வதெல்லாம்
[4]விழித்த வளுங்கண்டு [5]விழியாத பேர்களைப்போல்
மடக்கொடி யாளந்த மணவாள னார்தமையும்
கடைக்கண்ணாள் பார்த்தவளும் காணாத பேர்களைப்போல்
இப்படியே மின்னா ளிவளுறங்கும் வேளையிலே

## ஆமையர் மனையிலிருந்து வெளிவருதல்

மெய்ப்புடைய் மன்னனந்த மெல்லிநல்லாள் தானுறங்கும்
பஞ்சணை மெத்தையடியில் பையவந்து [6]தான்பதுங்கி
அஞ்சனக் கண்மின்னாள் அவளையிவ னும்பார்த்து
[8]கனிவாய் மொழியனைய காரிகையாள் [9]கண்ணுறக்கம்
இனிமேல் [10]விழித்து யெழுந்திருக்க வேயிவள்க்கு
செல்லும்வெகு நேரம்என்று சிந்தைமகிழ்ந் தேயிவனும
மெல்லப் பதுங்கி [11]வெருகதுபோ லவொதுங்கி
வந்தான் வெளியில் மனையைவிட்டு [12]ஆமையரும்
சந்தோஷமாய் கூத்துத்தான் பார்க்கப் போறதற்குத்

## இறைவனது அருளால் இந்திரமாஞாலம் எடுத்தல்

தொங்கலு டையுடுத்து சொருகுகுழல் தான்முடிந்து
முங்கை மோதாரி முறுக்குவளை [13]மோதிரங்கள்

---

2920. கள்ளவுறக்கம்—பொய்உறக்கம். 2922. ஆரணி—பூமாலை; வாசனை பொருந்திய. 2924. உள்ளடக்கம்—எண்ணங்களை வெளிவிடாமை. 2926. மடக்கொடி—பெண். 2930. பைய—மெதுவாக; மெல்ல. பதுங்கி—ஒளிந்து. 2931. அஞ்சனம்—கண்ணிலிடும் மை. 2935. வெருகு—ஆண்பூனை. 2938. தொங்கலுடை—தொங்கவிட்டுள்ள ஆடை. சொருகுகுழல்—சுருட்டி முடிக்கப்பெற்ற மயிர். 2939. மோதாரி—மோதிரம். முறுக்கு வளை—திருகிய வளை.

சுவடிச்சொல்: 2920. முளியாமற் 2921. பூங்குழலும்.

பாடவேறுபாடு: 1. முழிப்பாய் 2. நன்றாயு றங்கிவிட்டாள் 3. பள்ளியறைக் குள்ளொளீத்தான் 4. முழித்த 5. முழி யாத 6. தானொளித்து 7. அவனை அவ ளும்பார்த்து 8. கனகமொழி யணையாள் 9. தானுறங்கும் 10. முழித்து 11. வெருதுபோ லேவெருண்டு 12. மன்னவனும் 13. கைச்சவடி.

## The tortoise shedding its shell

With eyes closed and sighs deep
While she feigned sleep
The tortoise cast off his shell
And hid it below the decorated bed.

## Cammantamālai continues to act a role

The woman cast a side glance on him
Observed slyly his secret actions
Pretended as if she had not seen
And continued to feign sleep.

## The tortoise leaves the house

On tip-toe the tortoise went to the bed
Where the woman lay asleep
Whose eyes had been darkened with collyrium,
Lisped a few loving words
And finding no response felt
That she would not wake up now;
In high spirits
Lurked like a civet cat
Screened himself and stirred out on the sly
To witness the show in the theatre.

## Using the occult knowledge

Thanks to the blessings of Siva
And the occult knowledge gifted by Him

மாணிக்க மர்னவைர முத்துத் [1]தாழ்வடமும்
ஏணிக்க மில்லா திலங்கும்பணி களணிந்து
ஆதியருளா லிவனும் அழகுதிரு நீறணிந்து
காதிற்பணி யணிந்து [2]கட்டுடனே பொட்டுமிட்டு

செந்தூரப் பொட்டுமிட்டு சிலைபோற் [3]றிருவழகும்
சந்திர காந்தத் [4]தலைப்பாகை யங்கிகளும்
பூவிட்ட குல்லாவும் [5]பொன்னெழுத்து யெத்தாப்பும்
பாவிட்ட நல்ல [6]பரிமளங் குளுமணிந்து

தங்கத் திருமேனி [7]தானேதெரி யாதபடி
பொங்குபுகழ் மன்னவனும் பொற்சரிகை சட்டையிட்டு
மந்திர வாளும் வலுவீர சங்கிலியும்
இந்திரமா ஞாலமதால் இந்தவகை யானதெல்லாம்

சிந்தையுற்று வானிற் சிவனார் திருவருளால்
வந்தது காணிந்த வகைகளெல்லாம் மன்னனுக்கு.

## களரியில் கூத்துப்பார்க்க வந்து நிற்றலும் அனைவோரும் காணுதலும்

மன்னவனு மிந்தவகைப் பணியெல் லாமணிந்து
தென்னவர்கள் கூத்துத் தெளிந்திருந்துப் பார்க்கையிலே

வந்தான் [8]களரியிலே வானிலிளஞ் சந்திரன்போல்
சந்தோஷ மாகவங்கே தானிருக்கும் பேர்களெல்லாம்
தாக்காக வேயிருக்கும் தூக்கதுரை மக்களெல்லாம்
பார்க்கும் பொழுதிலவன் பகவானு தித்த(துபோல்)

## அனைவோரும் அரசனது ஆணையினால் அழைக்காதிருத்தல்

வந்துநிற்கும் மன்னவனை வாருமென்று சொல்லாமல்
அன்றரசன் சொன்ன ஆக்கினைக்குத் தான்பயந்து

---

2940. தாழ்வடம் -- கழுத்தணி. 2941. ஏணிககம் — எல்லை. பணி — ஆபரணம்; பட்டாடை. 2942. திருநீறு — விபூதி. 2943. பணி — ஆபரணம். 2945. சந்திரகாந்தம் — சந்திரனொளி பட்டால் உருகக் கூடிய கல்வகை. தலைப்பாகை — தலையிற் கட்டுந்துணி. அங்கி — நீண்ட சட்டை. 2946. குல்லா — தலைக்குல்லா; தொப்பி. எத்தாப்பு — வஸ்திரம். 2947. பாவிட்ட — பரவிய. பரிமளம் — மிகுமணம். 2950. மந்திரவாள் — மந்திரசக்தி வாய்ந்தவாள். வலுவீரசங்கிலி — வீரத்திற்கு அறிகுறியாகக் கையிலணியும் பலமான பொன்னணி. 2951. இந்திரமாஞாலம் — மாய வித்தை. 2955. தென்னவர் — பாண்டியர். 2956. களரி — நாடகசாலை. 2961. ஆக்கினை — கட்டளை.

பாடவேறுபாடு: 1. தாவடங்கள் 2. கண்ணுதனில் மையுமிட்டு 3. வடிவழகும் 4. தலப்பாவும 5 பொன்னுமுத்துத் தாவடமும் 6. பரிமணங் 7. சதிரமதெரி யாதவண்ணம் 8. களரிதனில் வாலமதிச.

The tortoise wore loose garments
Which were rich and flamboyant
Tied his hair into an elegant knot.
Wore rings, bangles and other ornaments
Including a chain of pearl
Around the neck,
Holy ashes and the dot on the forehead,
Ear studs and turban embellished
Choice perfumes and aromatic scents
The glittering sword and chains potent,
He was so exquisitely apparelled,
That his holy body was not visible,
Making identification difficult.

### The spectators see him

Wearing rich jewellery
He stepped into the portals of the theatre
Verily like a young moon
When the audience of Southerners
Was deeply absorbed in the drama.
He looked an effulgent divine
To those who cast their eyes on him.

### Nobody received him

None welcomed him
In obedience to the king's firm order

வல்லாருந் திண்புயத்தார் மந்திரிமார் கள்முதலாய்
[1]**எல்லாருஞ் சும்மா யிருந்தனர்கா ணம்மானை.**

## ஆமையர் மெய்மறந்து வெகுநேரம் கூத்துப் பார்த்தல்

இப்படியே சங்கீதம் [2]எல்லோரும் பார்க்கையிலே
மெய்ப்புடைய மன்னனிவன் [3]விடிவாற தாகுமட்டும்
கள்ளத் தனமாய்க் களரிக்குள் வாராமல்
[4]தெள்ளுதமிழ் மன்னன் தெளிந்துநின்று தான்பார்த்தான்

நின்று வெகுநேரம் நிலைமேலே நின்றவனும்
அன்றுங் களரிதன்னில் ஆடுங்கூத் தைப்பார்த்து
[5]காலுக்கடுக் குமட்டும் கடக்கநின்று தான்பார்த்து
சீலமுள்ள மன்னன் சிலநேரஞ் [6]சென்றவுடன்

[7]பாருடைய மாலருளால் பாருலகி லுள்ளவர்கள்
ஆரென்றொ ருவர்நமை ஆராய்வா ரில்லையென்று
பாரமுடி மன்னனுட பட்டணத்தார் கள்காண
நேரம்வி டியுமட்டும் நின்றுவிட்டா னத்தலத்தில்

## விடிதலுக்கான சேவலின் குரலோசைக் கேட்டு ஆமையர் ஓடுதல்

**அத்தலத்தில் நின்றுநல்ல ஆமையுரு வானவனும்**
[8]கொற்றவரும் மற்றோரும் கூத்துப்பார்க் கும்நேரம்
வெள்ளி மலைவேலர் [9]விருதுக்கொடி யாய்பிடிக்கும்
கோழியது கூவும் குரலோசை யைக்கேட்டு

ஆச்சுதே நேரம் அறியாமல் நின்றோமே
**ஏச்சுதே கூத்துநமை [10]என்றுசொல்லி ஓடலுற்றான்.**

## ஓடியவனை ஒருசிலபேர் பின்தொடர்தல்

ஓடும்பொ ழுதிலவனை உண்மையுட னேபார்த்து
கூடிவட்ட [12]மிட்டுவங்கே கூண்டிருந்த பேர்களெல்லாம்

---

2962. வல்லார் — வலிமையுடையவர்; திறமையுடையவர். திண்புயம் — வலிமை பொருந்திய தோள். 2963. சும்மா — அமைதியாய். 2965. விடிவாற — விடியும் மட்டும். 2966. கள்ளத்தனம் — திருட்டுத் தனம். 2972. நிலைமேல் — நிலைத்துற்றல். 2969. களரி — கூத்து நடைபெறுமிடம்; நாடகசாலை. 2970. கடுக்க — வலிக்க. கடக்கநின்று — தூரநின்று. 2971. சீலம் — ஒழுக்கம். 2972. மால் — திரு மால். 2977. கொற்றவர் — அரசர். 2978. வெள்ளிமலை — கயிலைமலை. வேலர் — முருகர். விருதுக்கொடி — பிறர்க்கில்லாச் சிறப்பை அறிவித்தற்குரிய கொடி. 2979. கோழி — சேவல். 2980. ஆச்சுதே — ஆகிவிட்டதே. 2981. ஏச்சுதே — ஏமாற்றி விட்டதே.

பாடவேறுபாடு : 1. எல்லோருந் தம்மில் 2. இவரெல்லாம் 3. விடிவேறு செல்லுமட்டும் 4. தெள்ளு புகழ் 5. கயலாக நாம்கடக்க நின்றுபார்ப் போமென்று 6. சென்றபின்பு 7. பார்கொண்ட 8. கொத்தலரும் மன்னன் கூத்துப்பார்க் கும்போது 9. விருதுகுடை யாய்ப்பிடித்து 10. என்றவனும் 11. உடனே தொடர்ந்து சென்று 12. மிட்டவர்கள் கூண் டிருக்கும்.

Even the strong men and the ministers
Remained inert.

### The tortoise watching the play

While all were deeply involved in the music
He did not enter the theatre
But stood far-away
And stealthily watched the show.
Thanks to the blessings of Tirumāl
None ventured to embarrass him.
Though legs pained and got cramp
He stood till the dawn of another morn.

### The tortoise flees

When the king and the others watched the show
With great passion,
The cock crew announcing the morn,
The cock which adorns the flagstaff of Lord Muruka,
On hearing which the tortoise knew
That he had overstayed his time and fled.

### The Chase

On seeing him take to his heels
The crowd commented that

மையடர்ந்த கங்குல் வளமாய் விடிந்ததற்பின்
கைகடந்து போறான்காண் கள்வனிவ னென்றுசொல்லி
ஓடுமவன் பிறகே ஒன்றிரண்டு பேர்களவர்
கூடத் துடர்ந்தவர்கள் கோவிக்கல் வாயில்மட்டும்
கடிதா யவன்நடந்து [1]கருத்தாய் மனைதனிலே

## சம்மந்தமாலை ஆமைக்கூட்டை மறைத்து வைத்தல்

வடிவாளு டையமன்னன் வாறதற்கு[2]முன்பாக
தாமக்குழ லுடைய சம்மந்த மாலையவள்
ஆமையின் கூட்டை அவதான மாயெடுத்து
ஆருமறி யாமலவள் அடக்கமா கவொளித்து
பாரமணி மெத்தையின்மேல் [3]பள்ளிகொள்ளும் பேர்களைப்போல்
[4]கள்ளவுறக் கமாக கண்துயிலும் வேளையிலே

## ஆமையர் மனையிற்புகுந்து கூட்டைத் தேடுதல்

தெள்ளுபுகழ் மன்னவனும் சென்றுமனை யிற்புகுந்து
நன்றாய் ஒளித்துவைத்த நல்லாமைக் [6]கூடதனை
குன்றாத மன்னவனும் கூர்மையுடன் தேடலுற்றான்
தேடியவன் காணாமல் சிந்தைசடைத் துமெலிந்து
நாடியுடல் வேர்த்தவனும் நாவுரைக்க மாட்டாமல்
மாட்சிமை யாய்நாம் மறைத்தசொ ரூபமதை
காட்டிக் கொடுக்கவென்று காரணங்கள் வந்ததென்று
தன்மன திலெண்ணி சடைத்துவெகு மூச்சுவிட்டு
நன்மன தால்வேதன் நம்மைவெளி யாக்கிவைத்தார்

## மனம் சோர்ந்து மனைவியை எழுப்புதல்

ஏதுசொல் லப்போறோம் இனிநாம் என்றுசொல்லி
மாதுநல்லாள் தானுறங்கும் மலரணையைத் தான்முடுகி

---

2984. மையடர்ந்தகங்குல் — இருள் நிறைந்த இரவு. 2985. கைகடந்து — நமை கடந்து. கள்வன் — திருடன். 2987. கோவிக்கல்வாயில் — கோயிலின் வாசல். 2991. அவதானம் — சாதுரியம்; மேன்மை. 2992. அடக்கம் — இரகசியம்; மறைவாக. 2993. பள்ளிகொள்ளும் — உறக்கம் கொள்ளும். 2998. சடைத்து — சோர்ந்து. 2999. நாவு — வாய். 3000. மாட்சிமை — மகிமை; இயல்பு. சொரூபம் — இயற்கைத்தன்மை; வடிவம். 3003. வேதன் — கடவுள்; பிரமன். 3005. மரலணை — மலர் நிரம்பிய சயனமிடம். முடுகி — விரைந்து.

**சுவடிச்சொல்:** 3000. சொரூபமதை

**பாடவேறுபாடு:** 1. கருத்தாக வேமனையில் 2. முன்னாக 3. பண்டதுபோலேயவளும் 4. கள்ளவுறக் கமதாய் கண் தூங்கும் 5. சென்றுமனைக் குள்புகுந்து 6. கூடுதன்னை

A thief was bolting
At the crack of dawn
Who had waited for darkness to dispel,
One or two ran after him till the temple gate,
But he moved very fast and crept into his house.

### Cammantamālai conceals the shell

Before the tortoise returned
Cammantamālai with lovely locks
Deftly took the shell out
Hid it without anybody's knowledge
And continued to feign deep sleep.

### The search for the shell

The tortoise stepped into the house,
Searched for the shell cleverly hidden.
Finding it missing was terribly disturbed,
Perspired copiously, became tongue-tied
Thought that the time had come
To reveal his real self
Attributed the impending exposure
To the whim of the creator.

### Waking his wife

What explanation shall I give
Wondered the perturbed tortoise,
Went near the decorated cot
On which his wife slumbered

வந்துநின்று மன்னன் மங்கைநல்லாள் தந்தனையும்
ஏழுந்தீர் எழுந்தீரென எழுப்பினர்கா ணம்மானை.

எழுப்ப எழுப்பயிவள் ஏந்திழையும் பஞ்சணைமேல்
நெளிப்பாள் முழிப்பாள் நித்திரைவிட் டேயெழுகாள்
மன்னன் எழுப்பும் வகையறிந்து மானிணையாள்
சன்னை யுறக்கமாக தானுறங்கும் வேளையிலே

திண்ணமுடன் மன்னன் சினத்து முடுகியவன்
[1]இண்ணு முழுதும் இவளுறங்கு வாளெனவே
எட்டி [2]முடுகியவன் ஏந்திழையைத் [3]தானெருங்கி
தொட்டிழுத்துத் தட்டியந்த தோகைநல்லா ளையெழுப்ப

## சம்மந்தமாலை சினந்துரைத்தல்

எழுப்பும் பொழுதிலவள் [4]இளகிவிழித் தேகடிதாய்
நளிப்பா யெழுந்திருந்து நல்லரச னைநோக்கி
வேங்கைப்புலி போற்சீறி வெடுவெடெனப் பற்கடித்து
வாங்குஞ் சிலைநுதலாள் மன்னவனைத் தான்பார்த்து

சொல்லுவாள் வார்த்தைகளைத் தூட்சணங் களில்லாமல்
வெல்லும் புகழுடைய வேந்தனேநீ ரெங்கிருந்து
எங்கிருந்து காணும்நீ [5]ரிதற்குமுன்னே கண்டறியேன்
சங்கையல்ல வென்னையும் நீர்தட்டி யடித்தெழுப்ப

ஐயையோ [6]வென்னுடைய ஆமைமக ராசனவர்
[7]மெய்யாக இந்தவகை மேன்மையுடன் கேட்டதுண்டால்
படிக்கடந்து [8]வென்னுடைய பஞ்சணையைத் தொட்டதற்கு
கடிதாய்ப் பிடித்தடித்துக் [9]கட்டியி றுக்கியும்மை

ஆமைமக ராசனும்மை [10]ஆக்கினைசெய் யப்போறார்
வாமையுடன் [11]சொால்லி வந்துவினை சூழுமுன்னே

---

3009. நித்திரை — தூக்கம். 3011. சன்னை — குறிப்பு; சாடையாக. 3012. திண்ணம் — நிச்சயம்; வலிமை. சினத்து முடுகி — கோபித்து விரைந்து. 3014. ஏந்திழை — பெண். 3016. இளகி — அசைதல்; களைதல். 3017. நளிப்பு — செறிவு. 3020. தூட்சணம் — நிந்தைச்சொல். 3023. சங்கை — மரியாதை; கீர்த்தி. 3025. மெய் — உண்மை. 3026. பஞ்சணை — பஞ்சுமெத்தை. 3028. ஆக்கினை — தண்டனை. 3029. வாமை — அழகு.

சுவடிச்சொல்: 3014. ஏந்திளை. 3020. தூஷணங்கள்

பாடவேறுபாடு: 1. இன்று முழுதும் இவளுறங்கக் காரணமேன் 2. முடுகிவந்து 3. தந்தனையும் 4. இளகிமுழித் 5. இது முன்நான் கண்டறியோம் 6. எந்தனுட 7. மெய்ப்பாக எந்தனுட வேந்தரறி வாராகில் 9. கட்டியிறுக் கிச்சேர்த்து 10. ஆக்கினைகள் செய்திடுவார் 11. சொன்னேன்.

Get up dear, get up, he implored
But she winced and fidgeted
Opened her eyes for a while
Let out a feeble cry
And reverted to sleep again,
Much to his anger and disgust.
Who knows she may sleep the whole day
Thought he, pulled her and patted her.

### Cammantamālai put out

When he tried to wake her up
She scantily opened her eyes
Roared at him like an angry tiger
Gnashed her teeth
And addressed him sans abusive epithets.
Oh great soul, how come you
Whom I have never seen before
Dare to stir me and wake me up?
If only my revered husband the tortoise
Comes to know that you touched my cot
He would give you a hard thrashing
Tie you with ropes and punish you severely.
Before calamity overtakes you

போய்ப்பிழையுங் [1]காணுமொரு பூதரறி யாதவண்ணம்
[2]தாப்புடைய மங்கையந்த சம்மந்த மாலையவள்

## ஆமையர் கடிந்துரைத்துக் கொல்லுதற்கு வாளுருவுதல்

சொன்ன[3]மொழி யைக்கேட்டுத் துங்கமுடி மன்னவனும்
மன்னன் நகைபுரிந்து வார்த்தைமறுத் [4]தேதுசொல்வான்
[5]செம்மந்தக் காரிமொழி செப்பாதே யென்னுடனே
[6]பம்மந்தம் பேசி பகட்டினால் விட்டுவிடேன்

ஆமையின் கூட்டை அவதான மாயொளித்து
[7]பாமை கரையேற்றிப் [8]பறையாதே வார்த்தைகளை
ஆனை தனைச்[9]சுளகி னாலேமறை யாதேயடி
மானே என்கூட்டை மறைத்ததுநீ யல்லாமல்

[10]மாயமா யிங்கொருவர் வந்தெடுத்த பேர்களில்லை
[11]வேசம் உருமாற விமலர்தந்த சட்டைதன்னை
நல்லதெடி சமர்த்தி நாட்டிலுனைப் போலுமில்லை
சொல்லடி நீவைத்தயிடம் [12]சொல்லாதி ருந்திடுகில்

கொல்லுவேன் கையால் கொலைப்படுவாய் [13]கண்டாயே
தொல்லைவிளை யாமலிப்போ சூதான மாகவேநீ
[14]ஒளித்தெடுத்து வைத்த உடைமைதா ராதிருந்தால்
கழுத்தறுத்து வுன்னையெந்தன் கத்திகுளிப் பாட்டிவைப்பேன்

என்றுமொழி [15]கூறியந்த ஏந்திழையைக் [16]கொல்லவென்று
வண்டுறுக்கி மன்னவனும் வாளுருவி நிற்கையிலே

## தன்னை வெட்டும்படி சம்மந்தமாலை கூறுதல்

சம்மந்த மாலையவள் தான்துணிந்தங் கேதுசொலவாள்
உம்முடைய கையால் உயிர்மடிவே னாமாகில்

---

3030. பூதர் — மனிதர். 3031. தாப்பு — சௌகரியம்; குறித்த சமயம். 3032. துங்கமுடி — வெற்றி கிரீடம்; பெருமை பொருந்திய கிரீடம். 3035. ப்ம்மந்தம் — வெளிவேஷம். பகட்டு — மயக்குதல்; வஞ்சித்தல். 3036. அவதானம் — சாதுரியம். 3037. பாமை — பாமம்; கோபம். பறையாதே — சொல் லாதே. 3038. ஆனை — யானை. சுளகு — முறவகை. 3041. வேசம் — வேற்று வடிவம். விமலர் — சிவன். சட்டை — அங்கி; இங்கு ஆமையின் மேலோடு. 3042. சமர்த்தி — வல்லவள். 3045. சூதா னம் — சாக்கிரதை; சேமம்; இங்கு பத்திரப்படுத்துதல். 3040. உடைமை — உடமைப்பொருள். 3047. கத்தி — வாள். 3049. வண்டுறுக்கி — உதட்டை மடககிக் கடித்தல்.

சுவடிச்சொல்: 3046. ஒழித்தெடுத்து 3048. ஏந்திளை.

பாடவேறுபாடு: 1. சொ்ன்னேன் ஒரு பூதரறியாமல் 2. கற்புடைய பெண்ணுமந்த 3. சொல்லைக் கேட்டு சொல் பெரிய 4. தேயுரைததார் 5. செவ்வந்தக் காரிமொழி தேத்தாதே என்னோடே 6. பவ்வந்தம் 7. பாவம் 8. பகராதே 9. குததியடிக்குள் 10. பாசமதா 11. வேறுரூப மாகி 12. சொல்லாதிருந்ததுண்டால் 13. நீயுமிப்போ 14. ஒளித்துவைத்த கூடுதனை உடனேதா 15. சொல்லியந்த 16. தான்நோக்கி.

Leave the place without anybody
Coming to know of your serious tres-pass.

## The tortoise draws the sword

On hearing her words
How did the tortoise react?
Smiling cynically he said:
Do not try to cheat me
By uttering hypocritical words.
I shall not spare you
Capitivated by your seductive gestures.
Do not provoke me
After concealing the shell.
Is it possible to screen an elephant
With a winowing fan?
I am sure you have hidden the shell
Since nobody has used charms to come here.
It is a garment gifted by the Lord. Himself
To disguise myself that you have meddled with.
Tell me where you have kept it,
Otherwise I shall strangle you.
If you fail to restore my prized possession,
My sword shall cut your neck.
Biting his lips in great wrath
He stood with the sword in his hand.

## Cammàntamàlai welcomes death

What did Cammantamālai say
In reply to his query?
If only I die at your hands.

நன்மைகிடைக் கு[1]மெந்தன் நாயகனே தப்பாது
தின்மைகிட்டு மானாலென் தீவினையும் மாறிவிடும்
வெட்டிவிடுங் காணுமையா மெய்யாகச் சொல்லுகிறேன்
சுட்டுவிட்டேன் [2]சட்டையினிச் சொன்னாலும் வாராது 3055

## ஆமையர் பரதேசம் போவதாகச் சொல்லுதல்

**என்றுமின்னாள் சொன்னதுகேட்[3]டே ற்றமன்ன னென்சொலுவான்**
நன்றுநன்று வுங்களுட நாட்டில்நடுக் [4]கேட்பவரார்
தங்கமணிப் பெட்டகமும் [5]தமனியப்பொற் சங்கிலியும்
[6]உங்களுட தந்தையர்முன் னுள்ளதெல்லாங் கொள்ளைகொண்டார்

[7]தேவனும் முன்தந்த திருவாமைக் கூடதையும் 3060
நீபறித்துக் கொண்டாயே நிட்டூரி யுன்னிடத்தில்
நானிருப்ப தில்லையெங்கள் நாட்டுக்கு நான்போறேன்
[8]ஊனிருக்குஞ் சட்டை ஒளித்தகள்ளி யுன்னிடத்தில்

பொஞ்சாது [9]வுன்னிடத்தில் போறேன் பரதேசம்
அஞ்சாமல் [10]நீயுமுந்தன் அன்னைபிதா வினிடத்தில் 3065
இருப்பதே யல்லாமல் என்னிடத்தில் நீவேண்டாம்
**பொறுப்பாய் வனந்தனிலே [11]போறேனெ னச்சமைந்தான்.**

## தொடர்ந்து வந்தோர் மறைந்திருந்து செய்தியறிந்து மன்னனுக்குக்குரைத்தல்

**விருத்தம்**

67. என்றிரு பேருந் தம்மி லிசைந்திடு [12]மொழிக ளெல்லாம்
அன்றந் நகரி லுள்ளோ ரறிந்துபின் விரைவில் வந்து
**[13]வென்றில் லரசன் றன்னை விரைந்து கைப்பிடித் தழைத்து** 3070
**சென்றதில் சிலபேர் மன்னன் சினமதை யாற்ற லுற்றான்.**

---

3052. நாயகன் — கணவன். 3053. தின்மை — சாவு. தீவினை — பாவம். 3055. சுட்டு — எரித்து. சட்டை — மேலுறை. 3056. மின்னாள் — பெண். ஏற்றமன்னன் — உயர்ந்த மன்னன். 3057. நடுக்கேள் — நியாயத்தீர்ப்புச் சொல்ல வேண்டுதல்; வழக்கு விசாரித்தல். 3058. பெட்டகம் — பெட்டி. தமனியம் — பொன். பொற்சங்கிலி — பொன்னாலான சங்கிலி. 3059. கொள்ளை — சூறையாடுதல். 3060. தேவன் — கடவுள். 3061. நிட்டூரி — கொடியவள். 3063. ஊன் — உடல்; தசை. ஒளித்த — மறைத்த. கள்ளி — திருடி. 3064. பொஞ்சாது — பொருந்தாது. பரதேசம் — தேசயாத்திரை. 3067. வனம் — காடு. 3070. வென்றி — வெற்றி. 3071. சினம் — கோபம்.

பாடவேறுபாடு: 1. எனக்கு நாயகமே என்றுரைத்தாள் 2. சட்டையது திரும்பிவர மாட்டாது 3. ஏற்றமன்னன் 4. கேளாரோ 5. தானேவரிச் சாவலையும் 6. உந்தனுட 7. தேசிகனார் தந்த 8. உள்ளிருக்கும் கூட்டை 9. எந்தனுக்கு 10. உன்னுடைய 11. போறோமெ னத்துணிந்தார் 12. அவர்த்தாமெல்லாம் 13. கண்டவரெல் லாங்கூட கலியுகமா கப்பார்க்க.

I am sure of redemption,
Death will wash all my sins.
Believe me, I am telling the truth,
You can cut me to pieces
Since I have burnt your shirt, the shell,
And you can never hope to have it.

### The tortoise threatens to leave the country

On hearing her words, the tortoise said
Your country is such
That there is no justice or fairplay.
Your father has robbed me
Of the golden box and the precious chains.
Now you have taken the shell
Which the lord in His mercy gave me.
Wicked woman, I don't wish to stay with you
But am proceeding to my place.
I cannot find compatability with you
Who have purloined my precious shell.
Better for you to stay with your parents
Without fear of any kind,
I am retiring to the forest
Said he quite angrily.

### The citizen's do Eave's-dropping and report to the king

67. The talk between them
Was overhead by some citizens.
Who hastened to the king
And reported it to his relief

கலிவிருத்தம்

68. ஆற்றி மன்னன் அவருடை சிந்தையைத்
தேற்றி மன்னர் சுலோகங்கள் செப்பியே
போற்றி வாழ்த்திப் புகழ்ந்தங் கரசனை
ஏற்ற வாசன மீதினி லேற்றினார்.

நடை

69. இருந்தா னரசன் இலங்கியசிங் காசனத்தில்
திருந்துமுலகி லுள்ளோர் செருமிவளைந் தெங்கும்நிற்க
கூடுங் களரிதனில் கூத்துப்பார்த் துக்கடிதாய்
ஓடிவரும் போதிவனை உடன்தொடர்ந்து வந்தவர்கள்

மறையநின்று கேட்டோர் [1]வளமையெல்லாந் தானறிந்து
திறலரசன் முன்பில்வந்து செய்திசொன்னா ரம்மானை.
கூனாமைக் [2]கூடுவிட்டு கொற்றவனே யுன்மருகன்
தேனார்மொழியாள் [3]தெளிந்துறங்கி றாளெனவே

கஞ்சமலர் முகத்தாள் கன்னி [4]இளவரசாள்
அஞ்சலி லேபார்த்து [5]அவளுறங்கும் வேளையிலே
ஆமையின் கூட்டையவர் அங்கொளித்து இங்குவந்தார்
[6]தாமையுள்ள கூத்தினுட சங்கீதங் கள்பார்த்து

போறதற்கு முன்னேயந்த [7]பொற்கொடியா ளும்விழித்து
ஆறுவைக்குஞ் சென்னி யரனருளுங் கூடுதனை
மறைவா யெடுத்து[8]அந்த மாதுயொளித் தாளெனவே
[9]உறைவா ளுருவிமன்னன் உள்ளறைக்குள் தர்க்கமிட்டு

வெம்மை யுடையபுகழ் வேந்தர் [10]பெருமானே
தம்மிலிரு பேருந் [11]தர்க்கிக்கி றாரெனவே
அடர்ந்த [12]புகழ்பெருகும் அரசர்பெரு மானுடனே
நடந்த புதுமையெல்லாம் நன்றாக வேயுரைத்தார்.

---

3073. சுலோகம் — புகழ்; செய்தி. 3075. ஆசனம் — இருக்கைநிலை. 3076. இலங்கிய — பிரகாசித்த. 3077. செருமி — நிரம்பி. 3078. களரி — கூத்து நடக்குமிடம். 3080. வளமை — பழக்கம்; செய்தி. 3082. கூனாமை — வளைவுடைய ஆமை; உடற்கூனலுள்ள ஆமை. கொற்றவன் — அரசன். மருகன் — மருமகன். 3084. கஞ்சம் — தாமரை. 3085. அஞ்சல் — பயம். 3087. தாமை — தாமம்; இடம். 3089. ஆறுவைக்குஞ் சென்னி அரன் — தலையில் கங்கையை வைத்திருக்கும் சிவபெருமான். கூடு — ஆமைக்கூடு. 3091. தர்க்கம் — வாக்குவாதம். 3092. வெம்மை — கோபம்; பராக்கிரமம்.

சுவடிச்சொல்: 3080. வழமை 3086. அங்கொழித்து 3090. மாதுயொழித்தாள்.

பாடவேறுபாடு: 1. வாண்மைகளெல் லாமறிந்து 2. கூட்டைவிட்டு 3. தெளிந்துறங்கும் வேளையிலே 4. இளவரசி 5. அசைந்துறங்கும் 6. தாமையுடன் கூத்தவரும் 7. பெண்ணாள் இளவரசி 8. மறைத்தார் களென்று சொல்லி 9. உறைவா ளுருவியவர் 10. பெருமாளரசே 11. தர்க்கமிடு 12. புகழான.

68. They uttered soothing words,
Paid encomiums to the King
Catalogued his merits,
And when he occupied the throne....

69. The king sat on the bright throne
Crowded by the gentry.
Those who followed the tortoise from the theatre
And those who Eaves-dropped the conversation
Reported the events faithfully to him.
Your son-in-law, the revered tortoise
Thinking that his sweet-tongued spouse
The lotus-faced beauty, the young princess was fast asleep
Hid his shell and went to the theatre.
After enjoying the songs and the drama
Ere the tortoise returned
The creeper-like girl woke up
And hid the shell,
A rare gift of Lord Siva
Who wears the Ganges in His locks.
Oh king with spotless fame,
Your angry son-in-law drew his sword
And both the husband and the wife
Are in the throes of an argument
Reported they, the news bristling with novelty.

## மன்னன் செய்தி அறிதல்

அன்றவர்கள் சொன்ன அதிசயத்தைத் தான்கேட்டு
மன்றுபயில் மன்னன் மறுவார்த்தை யேதுசொல்வான்
இருபேருந் தானோ இவர்களிட பக்கமதில்
அருள்நிறைந்த வேறு ஆளிலையோ வென்றுரைத்தான்.

வாங்குசிலை மன்னவனே வந்ததுரை மக்களவர்
தீங்குவ ராமலிங்கே செருமிவளைந் துசனங்கள்
வட்டார மாக வளைந்துபதி னாயிரம்பேர்
[1]பட்டணத்தா ரெல்லாம் பதிவாயி ருக்கின்றார்.

## செய்தியுரைத்தோர்க்குப் பரிசு கொடுத்தனுப்புதல்

அந்தமொழி கேட்டரசன் ஆகம் மிகமகிழ்ந்து
சந்தோஷ மாகவந்த சம்மந்த [2]ராசனவன்
வந்து சொன்ன பேர்களுக்கு [3]வரிசையாய்த் தானமது
கொந்துலவு மன்னன் குறையாம லே[4]கொடுத்து

## மன்னன் மந்திரி சேனைகளுடன் மருமகனாரிடத்தில் வருதல்

கூத்தை யமர்த்தியவர் கூடுங்க ளரிவிலக்கி
ஏற்றதுரை மக்களி ருந்தவர்க ளெல்லோரும்
வீறான ராமருட வெள்ளச்சே னையதுபோல்
[5]வாறாரே மன்னவரும் மந்திரிமா ரும்படையும்

அடர்ந்து படைகள்வர [6]ஆனைகு திரைதேரும்
படர்ந்து [7]குடைநிழற்ற பலவாத்தி யம்முழங்க
கவிவாணர் தான்வாழ்த்த கட்டியங்கள் கூறிவர
சிவிகைதனி லேறியங்கே சிலபேர்கள் முன்நடக்க

---

3097. மன்று பயில் — சபையில் இருக்கும். 3098. பக்கம் — அருகில். 3101. செருமி — நிரம்பி. சனம் — மக்கள். 3102. வட்டாரம் — சூழ்ந்து வருதல். 3104. ஆகம் — மனம். 3106. தானம் — செல்வம். 3107. கொந்து — கோபம். 3108. விலக்கி — கூடாதென்று தடுத்தல். 3110. வீறான — வெற்றி; பெருமை. ராமர் — இராமாயணத்தின் கதைத்தலைவன். வெள்ளச்சேனை — மிகுதியான சேனை. 3112. அடர்ந்து — நெருக்கமாக. 3114. கவிவாணர் — புலவர். கட்டியம் — அரசர் முதலியோரைக் குறித்துச் சொல்லும் புகழ்த்தொடர். 3115. சிவிகை — பல்லக்கு.

**சுவடிச்சொல்:** 3105. ராஜனவன் 3109. ஏத்ததுரை.

**பாடவேறுபாடு:** 1. பட்டணத்தி லெல்லோரும் பதிவாயி ருக்கையிலே 2. ராசமன்னன் 3. வரிசைக ளானதுவும் 4. கொடுத்தார் 5. வாறார் வெகுவாய் வந்துசெ ருமியவ்வரை 6. யானை 7. குடை நெருங்க.

### The king is posted with the information

On hearing the strange events
The king in assembly wanted to know
Whether the couple were alone
Or some blessed men were there;
To which the gentry replied
That there were ten thousand strong around them
To prevent mishaps,
In fact almost all the citizens.

### Gifts given liberally

The king was immensely pleased
To hear the news,
To the bringers of the intelligence
He gave liberal gifts.

### The King visits his son-in-law

All the activities in the theatre suspended
The gathered gentry marched ahead
Like the mighty army of Sri Rāma,
Meanwhile the king, ministers and retinue
Along with soldiers, elephants and chariots
To the accompaniment of music from
Instruments of all kinds,
Poets singing flattering panegyrics
And hailing the king,
Riders of palanquins giving the lead

பட்டாளங்கள் நெருங்க பாளையுங்கள் சூழ்ந்துவர
கட்டாரி [1]யீட்டிகுந்தம் கையிலுடை வாள்பரிசை
வல்லையமுங் கேடயங்கள் [2]மல்லாயு தம்முதலாய்
எல்லையில் லாச்சேனை இருபுறமுந் தானெருங்க
சம்மந்த ராசனவர் தான்வருவ தற்குமுன்னே

## தவமாலை முன்பாக வந்து மகிழ்ந்திருத்தல்

முன்னந்த தேவியரும் மூடாவுக் காரிகளும்
உவமானச் செய்தி யுடன்கேட்ட வேளையிலே
தவமாலைத் தாயாரும் சம்மந்த மாலையிடம்
**வந்தவளுங் கண்டு மருமகனார் தன்வடிவைச்**
**சிந்தை மகிழ்ந்துமகளை சேர்ந்துகட்டி முத்தமிட்டுத்**
தெளிவாக வேயவர்கள் சிந்தைமகிழ்ந் தேயிருந்தார்
களிகூர்ந்தங் கெல்லோரும் கருத்தாயி ருக்கையிலே

## மன்னன் மகளின் மாளிகைக்கு வருதல்

[3]அப்போ தரசன் அவனும் படையுடனே
மெய்ப்பாக [4]வந்தார் வெகுசனக்கூட் டத்தோடே
[5]படைமனுவை நீக்கிமன்னன் பாவையவள் தானிருக்கும்
**அடல்பெரிய மாளிகையில் [6]அரசனங்கே வந்தனராம்.**

## மருமகனும் மாமனாரும் முகஸ்துதி கொள்ளுதல்

**விருத்தம்**

70. [7]வந்திடும் மாம னாரை [8]மருமகன் கண்ணாற் கண்டு
[9]விந்தை யாயெழுந் திருந்து விரைந்து தூசொடுக்கிச் சென்று
கந்தமா புயத்து [10]மன்னன் கழலிணைத் தொழுது போற்றி
**வந்தவன் முகர்ந்து[11]முத்தி மருமகன் றன்னைச் சேர்த்தான்.**

---

3116. பட்டாளம்—படை. பாளையம்—சேனை. 3117. கட்டாரி—குத்துவாள். ஈட்டி—எறிகோல். குந்தம்—குத்துக்கோல். உடைவாள்—உடையில் செருகும் வாள். பரிசை—கேடகம். 3118. வல்லையம்—ஈட்டிவகை. மல்லாயுதம்—மற்போருக்குரிய ஆயுதம். 3121. மூடாவுக்காரி—மிக்க அறிவீனக்காரி. 3123. தவமாலை—சம்மந்தமாலையின் தாய். 3127. களி—மகிழ்ச்சி. 3130. பாவை—பெண். 3131. அடல்—வலிமை. 3133. தூசொடுக்கி—கைந்நொடித்தல். 3134. கந்தமாபுயம்—வாசனை பொருந்திய தோள். கழல்—பாதம். 3135. முத்தி—முத்தம்.

**சுவடிச்சொல்:** 3120. ராஜனவர் 3135. முகந்து.

**பாடவேறுபாடு:** 1. சொட்டையணி 2. வல்லாயு தக்காரர் 3. அப்போது மன்னன் அரசர் 4. வந்துவெடிகள்ிடி முழங்க 5. படைமனு தரைநோக்கி மன்னன்பா ரமகளருகே 6. ஆசனத்தில் 7. வந்ததோர் 8. மருமக னாருங் 9. விரைந்துடன் எழுந்துநின்று விரைவுடன் கைகுவித்தார் 10. நல்ல கையினால் 11. போற்றி.

Battalions galore and weapons many
Spear, javelins, swords and shields
The army majestically lining up
On either side
Cammantarācan̲ proceeded to his son-in-law's place
But ere he reached his destination....

## The Queens arrival

Even earlier than the king
Had arrived Queen Tavamālai
To great Cammantamālai
And meet the comely son-in-law.
She hugged and kissed her daughter hotly
And when the ambience was one of mirth and joy.....

## The king enters his daughter's mansion

Then came the king
With his army and the gentry,
Leaving the men, the king entered
His daughter's mansion big and grand

## The king and his son-in-law greet each other

70. On seeing his father-in-law
The son-in-law was overjoyed
Touched his feet in obeisance
While the father-in-law
With shoulders smelling sweet
Kissed and greeted his son-in-law.

## மன்னன் மருமகனைக் கண்டு மகிழ்ந்திருத்தல்

நடை

71. [1]சேரநடந்து கட்டித் திருமார்போ டேயணைத்து
[2]வேதனிவ னொப்பனையும் மேனியழ கும்பார்த்து
பார்த்து மகளாருடைய பாவந்தெ ளிந்ததென்று
சேற்றிலுதித் தே[3]வளரும் செந்தாமரை மலர்போல்

மாகத்தி னுள்ளே மறைந்திருந்த சந்திரன்றான்
மேகத்தை நீக்கி வெளியில்வந்த[4]வாறதுபோல்
தீமைதனை நீக்கி சிவனார் திருவருளால்
ஆமையின் கூட்டை யரனருளி [5]னாலகற்றி

எங்குமுள்ள மன்னவரும் [6]ஏற்றதுரை மக்களுடன்
கண்குளிரக் கண்டு கலிதீர்ந்தோ மென்றுசொல்லி
தெளிவாக மன்னர் தெளிந்திருக்கும் [7]வேளையிலே

## மருமகன் தன் பூர்வ வரலாற்றை மன்னனுக்குரைத்தல்

[8]வழிவா றான்நாக மாமுனிவன் புத்திரனும்
பண்ணுதமிழ் கீர்த்திபெற்ற பாரரசன் தன்னோடே
முன்நடந்த வாறுகளும் முறைமையுள்ள காரணமும்
பிறந்து வளர்ந்ததுவும் பெண்கொண்ட [9]வாறுகளும்
மறைந்தா மைக்கூட்டில் மறைவா யிருந்ததுவும்
எல்லா முரைத்து இயலரசர் வேந்தனுக்கு
[10]வல்லாரும் மார்பன் மறுத்தெடுத்துச் செப்பலுற்றான்.

## மருமகன் வனாந்தரம் போவதாகக் கூறுதல்

[11]ஒருவர றியாதெனக்கு உச்சரித்தக் கூடுதனை
[12]அரிவையிந்த லோகத் தடங்கலுமே பேராக்கி
கள்ளத் தனமாய் கவர்ந்துகொண்டா ளிப்போது
வள்ளைக் குழலனைய மங்கையரோ டேயினிமேல்

---

3136. கட்டி — தழுவி. 3137. ஒப்பனை — அலங்காரம். 3138. பாவம் — தீவனைப்பயன். 3140. மாகம் — ஆகாயம்; மேகம். 3143. அரன் — சிவன். 3145. கலி — துன்பம். 3149. வாறு — விதம். 3153. வல்லார் — வலிமையுடையவர். 3155. அரிவை — பெண். லோகம் — உலகம். தடங்கல் — கெடுக்கவழி தேடுதல். 3157. வள்ளைக்குழல் — கொடி போன்ற மயிர்க்குழற்சி.

**சுவடிச்சொல்:** 3143. னாலகத்தி 3144. ஏத்ததுரை.

**பாடவேறுபாடு:** 1. சேர்ந்துகட்டி மன்னர் திருமார்போ டேசேர்த்தார் 2. வேந்தனிவன் 3. வாழும் செந்தாமரை முகமாய் 4. குதித்ததுபோல் 5. னால்கழற்றி 6. தங்கள்மனு வுஞ்சனமும் 7. அந்நேரம் 8. வழிவாற மன்னனுட நாகமுனி வன்புதல்வன் 9. செய்திகளும் 10. மல்லாரும் மார்பன் மறுவார்த்தை 11. ஒருவர் அறியஇந்த 12. அரசர்பெரு மாளேஉந்தன் அம்மானே யுன்மகளார்.

## The King's happiness in the company of his son-in-law

71. After closely hugging the son-in-law to his chest
And admiring his majestic looks,
The king felt that the sins of his daughter
Had been fully absolved,
Verily it was a case of lotus growing in the mud
Of the moon's glory screened by the cloud,
Thanks to the blessings of Lord Siva
His son-in-law had come out of the tortoise shell.
When the king shared with his citizens
The triumph over misfortunes......

## The son-in-law recounts the past

The son of Nākamāmuṉivaṉ
Recounted in details
His birth, marriage and circumstances
That led to his wearing the tortoise shell,
Made a clean breast of everything
To the king with spotless reputation.

## The son-in-law wants to renounce the world

The shell given in secret
By Almighty Siva
Was snatched by your daughter
Stealthily and cunningly
So no more association with her
Who is gifted with elegant locks.

## இல்லற வாழ்வின் மேன்மையை மன்னன் மருமகனுக்குரைத்தல்

பொஞ்சாது காணுமிந்த பூதலத்தி லெந்தனக்கு
மஞ்சாருஞ் சோலைமலை [1]கடவில் போறேனான்
என்றமொ ழியைக்கேட் டியலரச னேதுசொல்வான்
நன்றுநன்று நம்முடனே நல்லமொழி [2]நீருரைத்தீர்

வல்லறமா [3]யாபேரும் மானிலத்தி லுள்ளவர்கள்
இல்லறத்தில் நல்லறந்தான் [4]எங்குமுண்டு கண்டீரே
எத்திசையும் போற்றிசெய்யும் [5]ஏகப்பொரு ளானவரும்
சத்தியில் [6]லாமலீசன் தனியாயி ருப்பதுண்டோ

உண்டோ வுலகில் [7]உடலெடுத்த சென்மமதில்
[8]கண்டுமறி யீரோநீர் காசினியி லிப்போது
கண்மூக்கு வாய்மூலம் காதுகர முங்காலும்
[9]பெண்ணாணும் இரண்டாய் பிறப்பித்தா ரீசுரனார்

தடமறியா மல்மனைவி தான்வேண்டா மென்றீரே
இடம்வலமென் றிச்சடத்தில் இல்லையோகா ணெப்போதும்
அரிச்சந் திரனுடனே ஆனசந் திரமதியும்
[10]பிரியமுட னேயிருந்து பேறுபெற்றுக் [11]கொள்ளலையோ

அசுத்தமாய் வந்தபுண்ணை அருந்ததிநாக் காலேநக்கி
வசிட்டமுனி யும்பேறு மனைவியினால் பெற்றிலையோ
பாரிலிருந்து யிங்கே பலன்பெறுவ தல்லாமல்
தாரமில்லா மலங்கே தவப்பேறு கிட்டாது

---

3158. பொஞ்சாது — பொருந்தாது. பூதலம் — பூமி. 3159. மஞ்சார் — மண்சார்ந்த. கடவு — வழி; பக்கம். 3162. யாபேரும் — அனைவோரும். 3164. ஏகப்பொருள் — ஒப்பற்ற பொருள்; மொத்தப் பொருள். 3165. சத்தி — உமை. ஈசன் — சிவன். 3166. சென்மம் — பிறப்பு. 3167. காசினி — பூமி. 3170. தடம் — பெருமை. 3171. சடம் — உடல். 3172. அரிச்சந்திரன் — சத்தியத்திற்கு பெயர்போன அரசன். சந்திரமதி — அரிச்சந்திரனின் மனைவி. 3174. அருந்ததி — வசிட்டரின் மனைவி. 3175. வசிட்டர் — சப்தரிஷியில் ஒருவர்; அருந்ததியின் கணவர். 3176. பார் — பூமி. 3177. தாரம் — மனைவி. **குறிப்பு:** 3172-3175. மனைவியினால் சிறப்புப் பெற்றவர்களாக அரிச்சந்திரனும், வசிட்டமுனியும் இங்கு உதாரணமாகச் சுட்டப்பெறுகின்றனர்.

**பாடவேறுபாடு.:** 1. கடலில் பொறேனான் 2. சொன்லதுதான் 3. மன்னன் 4. எங்கே கிடைக்குமது 5. ஏகபுக ழாமையரும் 6. லாமலிவன் தானா யிருப்பதுண்டோ 7. உருவெடுத்த 8. கண்டும் அறியாரோ காசினியி லுள்ளவர்கள் 9. பெண்ஆணு மாக 10. பொருள்பற்றியா யிருபேர் 11. போகலையோ.

## The merits of family life

Since I am a misfit here,
Let me migrate to the muddy hill and dale
Said the tortoise to which
The king replied as follows:
Well said, well said,
But mind you that every one in this world
Has always hailed family life
And eulogised its significant merits.
Siva renowned in all directions
As the single unifying force
Cannot be conceived as a single entity
As he is inseparable from Cakti.
While creating the various parts of the body
Like eyes, ears, hands and legs
The importance of *two* was stressed
And accounts for the creation of the woman
Along with Man.
You are out to discard woman from the scheme,
But are you not aware of right and left
Which are complementary to each other?
Ariccantira attained to bliss
Because of his devoted Spouse Cantiramati.
Aruntati the wife licked the sores of her husband Vasishta
And secured for him deliverance.
Apart from her importance in this world,
Wife alone can obtain liberation in the next.

## மன்னன் நாட்டைத் தருவதாகக் கூறுதல்

தேடிய பொன்னும் திரவியமும் [1]செங்கோலும்
நாடுநகரு மெந்தன் ராச்சியமும் உந்தனுக்கு
தருவோம் [2]உமக்குமிந்த தாரணி [3]யேழுமகிழ
திருவோடே [4]நீர்கூடி சேர்ந்திருங்கோ வென்றுசொல்லி

கருவிடமாய் [5]வேண்டியதோர் காரணமாய்ப் புத்திசொல்லி
ஒருவிடமும் போகாமல் ஊரிலிரு [6]மென்றுரைத்தான்.

## மாதுடன் வாழ்வதாக மருமகன் மன்னனுக்கு ஆணையிட்டுத் தருதல்

மருமகனார் சிந்தைமெய்க்க மாமனார் செப்பியபின்
திருமனது மெய்த்துவெகு சிநதைகுளிர்ந் துமகிழ்ந்து
பைய நகைப்புரிந்து பாரரசனை [7]நோக்கி
வையம்புகழ வந்த மருமகனா ரே[8]துரைப்பார்
ஏதுசொல்லப் போறேன் இறையோன் றிருவருளால்
மாதுடனே கூடியினி வாழுகிறே னென்றுசொல்லி

கன்மந் தொலையவிந்தக் காசினியெல் லாமறிய
அம்மானா [9]ரானவர்க்கு ஆணையிட்டுத் [10]தான்கொடுத்து
ஆணையிட்டு மன்னன் அரசனுக்கு வார்த்தைசொல்லி
நாணய மதாக நடந்துவரும் [11]வேளையிலே

## மகளின் கற்பை அனைவரும் அறிய மன்னன் எண்ணுதல்

சந்தோஷ [12]மாகவந்த சம்மந்த ராசவனர்
[13]அந்த நகரில் அனைவோரும் தன்மகளை
வார்த்தை பிழைகள் வசையாகச் [14]சொன்னதினால்
வேற்றுமை இல்லாமல் மன்னன்மெய் கொடுக்கவேணுமென

---

3180. தாரணி — பூமி. 3181. திரு — செல்வம்; மாங்கல்யம். 3186. பைய — மெல்ல. 3187. வையம் — பூமி. 3189. மாது — பெண். 3190. கன்மம் — வினைப்பயன். காசினி — பூமி. 3191. அம்மானார் — மாமனார். ஆணை — பிரமாணம்; சத்தியம். 3193. நாணயம் — உண்மை. 3196. வசை — பழிப்பு; குற்றம். 3197. மெய் — உண்மை.

**சுவடிச்சொல்:** 3179. ராக்ஷியமும்.

**பாடவேறுபாடு:** 1. உந்தனுக்கு 2. உமக்குநல்ல 3. எல்லாம் மகிழ 4. நீர்வந்து சேர்ந்திருவு மென்றுசொல்லி 5. நல்லவெகு 6. மென்றுசொல்லி 7. தொழுது 8. ரேதுசொல்வார் 9. தந்தமக்கு 10. தான் கொடுத்தார் 11. நாளையிலே 12. மாகநல்ல சம்மந்த ராசமன்னர் 13. அந்தநகர் தன்னில் அனைபேரும் தந்தமக்கு 14. சொன்னதெல்லாம்.

### The King's generous offer

Look, I shall give you enough wealth
The sceptre to wield
Nay my whole kingdom,
May you two live in bliss
Advised the king
Appealing to the son-in-law
To give up his plan of migrating to the forest.

### The tortoise promises to live with his wife

When the father-in-law
Made such a heart-rending appeal,
The tortoise smiled gently
And said that with the blessings of the Lord
He would live with his wife
In eternal companionship
Tolling the death knell to evil and misfortune.
So spoke the tortoise
And gave a pledge to his father-in-law.

### The king anxious to Vindicate his daughter's honour

King Cammantarācaṉ
Who was happy beyond words
Wanted the citizens and others who
Cast aspersions on his daughter
And made derogatory remarks

வல்லபுக ழாயுலகில் மண்டலத்தி லுள்ளவரை
ஏல்லாரை யும்வருத்தி யித்தலத்தி லேயிருத்தி
பெருமையுட னேயுலகில் பேரரச ரெல்லோரும்
**அருமைமகள் கற்பை அறியவே வேணுமென்று**

## அரசர் பல்லோர்க்கும் ஓலை எழுதி அனுப்புதல்

இன்பமுற வேயுலகை இருந்தரசை ஆளுகின்ற
அம்பத்தா றுதேசத் தரசர்பல பேர்களுக்கும்
பொன்னின்முடி மன்னவர்க்கும் பூதலத்தி லுள்ளவர்க்கும்
மன்னுமலைப் பேயனெனும் வாழுமலை மன்னனுக்கும்

சோழவள நாட்டிலுள்ள துய்யதுரை மக்களுக்கும்
ஈழம்மலை யாளம்நல்ல ஏத்தகண்டி யாழ்ப்பாணம்
வாழுல கிலுள்ள மனுடர்பல பேர்களுக்கும்
ஆளோலை நீட்டும் அனுப்பிவிட வேணுமென்று

சம்மந்த ராஜன் தலத்திலனை வோர்களையும்
உம்மந் திரமாக உவந்திருந்த பேர்களையும்
அமைச்சர் துரைமக்களுடன் ஆனபல பேர்களையும்
மகிழ்ச்சியு டனழைத்து வாழுமுடி மன்னவனும்

சூழவளைந் திருத்தி துங்கமுடிமன் னர்மன்னன்
வாழுலகி லுள்ளபல மன்னவர்கள் தங்களுக்கு
நீட்டெழுதி வாசகத்தை நிண்ணயமாய்த் தான்முடித்து
ஓட்டனுட கையதிலே ஓலைகொடுத் தோடவிட்டார்

கொடுத்தனுப்பி விட்டார்கள் கூடியிருந் தெல்லோரும்
அடுத்துவந்த மன்னர் அனைவோருந் தானறிய
அங்கங் கேயுள்ள அரசர்பல பேர்களுக்கும்
[1]எங்கெங் குமோலை எழுதிவிட்டா ரம்மானை.

---

3198. மண்டலம் — பூமி. 3199. வருத்தி — அழைத்து. தலம் — பூமி; நாடு. 3201. கற்பு — பதிவிரதா தருமம். 3203. அம்பந்தாறு — ஐம்பத்தாறு. 3204. பூதலம் — பூமி. 3205. மன்னுமலைப் பேயன் — சச்சகிரிமாலையின் தகப்பன். 3207. ஈழம் — இலங்கை தேசம். மலையாளம் — கேரள தேசம். கண்டியாழ்ப்பாணம் — இலங்கையிலுள்ள நகரங்கள். 3208. மனுடர் — மனிதர். 3209. ஆளோலை — அடிமைப்பத்திரம். நீட்டு — திருமுகவோலை. 3211. உவந்திருந்த — விரும்பியிருந்த. 3214. துங்க முடி — வெற்றிகிரீடம். 3216. நீட்டெழுதி — திருமுகவோலையெழுதி நிண்ணயம் — நிச்சயம். 3217. ஓட்டன் — காலாற் செல்லுந் தூதன். 3221. ஓலை — ஓலைமுடங்கல்.

பாடவேறுபாடு : 1. ஏத்தெங்கும்.

To know her purity and innocence,
Envisaged the presence of every one who counted,
So that he can proudly vindicate her honour
And uphold her chastity.

## The king's invitation

The king sent the glad tidings
Through messengers on the run
To the fifty six leading rulers
To king Pēyaṉ of Īṉakirimalai
To the gentry of the Cōḻa kingdom
To the exalted people of Ceylon
Hailing from various cities like Yāḻppāṇam
To the people of Kerala
To everyone for whom he had a warm corner
The ministers and the nobility
Inviting them to come without fail.

## மன்னன் நகரை அலங்கரித்து வீற்றிருத்தல்

**விருத்தம்**

72. ஓலைதா னெழுதி மன்னன் [2]ஒட்டன் கைக்கொடுத்து விட்டு
[3]சீலமாய் மாட கூடம் சிகரங் கள்சிறப்பு செய்து
பாலெனும் மொழியா ளோடே [4]பாங்குட னரசு செய்து
[5]மாலய னருளா லந்த மன்னவன் வீற்றி ருந்தான்.

## தூதுவன் அரசர் பல்லோர்க்கும் திருமுக ஓலையைக் கொடுத்தல்

**நடை**

73. இருந்தான் அரசன் இயல்பெரிய சீமையிலே
திருந்துபுகழ் மன்னன்விட்ட செப்பரிய [6]தூதாட்கள்
அங்கங் கேயுள்ள அரசர்பல பேர்களுக்கும்
எங்கெங் குஞ்சென்று [7]எழுதியநீட் டுக்கொடுத்து

மலையில ரசனுக்கும் மற்றுமுள்ள பேர்களுக்கும்
உலகிலனை வோர்களுக்கும் [8]ஓலைநீட் டுங்கொடுத்து

## ஓலையின் செய்தியறிந்து மினுமினுத்தான் பட்டண மன்னன் மகிழ்தல்

மின்னுமுடி [9]மன்னனுட மிக்கதிரு முன்பில்வந்து
தன்னைநிக ரொவ்வாத சம்மந்த ராசாவை

[10]தொழுது மொழிந் தவர்கள் சொல்லிநீட் டுக்கொடுத்தார்
[11]எழுதிவந்த சீட்டை இயலரசன் தான்பார்த்து
வாசகத்தைப் பார்த்து மருமகனார் கையெழுத்தை
ஆசையுடன் நீட்டை அகம்மகிழ்ந்து கண்ணிலொற்றி

3222. ஒட்டன் — காலாட்செல்லும்தூதன். 3223. சீலமாய் — தன்மையாய்; சிறப்பாய். 3224. மாலயன் — திருமால் பிரமன். 3229. நீட்டு — திருமுகவோலை. 3236. வாசகம் -- கடிதம். 3237. அகமகிழ்ந்து — உளமகிழ்ந்து.

பாடவேறுபாடு: 2. ஒட்டனை அனுப்பி விட்டு 3. சில்லென 4. பரிமண மாகமன்னன் 5. மாலெனும் ஆசனத்தில் மன்னவன் இனிதிருந்தார் 6. தூதுவர்கள் 7. எழுதியநீட்டுங்கொடுத்தார் 8. ஓலை நீட்டுங்கொடுத்தார் 9. அரசருட 10. தொழுது பணிந்து திருநீட்டுத் தான்பார்த்து 11. எழுதிவிட்ட நீட்டை.

## Decorating the city

72. After despatching the parchment
Through a messenger on the run
The king decorated the mansions and towers
Ably ruled the kingdom
In the company of his wife
Whose speech was sweet like milk.

## The Message reaches many

73 While the renowned king remained in his country
His messengers went to the rulers ot various states
Including the king of the hilly region
And may others of great repute
With the parchment
Containing their master's message.

## The king of Miṉumiṉuttāṉ happy

When the messengers on the run
After paying due obeisance
Presented the parchment to the king of Miṉumiṉuttāṉ
His joy knew no bounds
As it bore the writing of his son-in-law
And contained auspicious tidings.

இறந்த [1]வுயிர்திருப்பி என்மகளைச் செய்தவரும்
மறந்தார்கா ணம்முடைய மருமகனா ரென்றிருந்தேன்
வானக் கடலில் மசவான தீவதிலே
போனகப்பல் வந்துதென்று பொன்னின்முடி ராசாவும்

**தானும்மன மகிழ்ந்து [2]தயவான தேவியற்குத்**
தேன்போல சொல்லுடைய செல்வமக ளானதொரு
நாகமணி மாலையுட நல்லவள மானதுவும்

## மகிழ்ந்து தூதுவனுக்குப் பரிசு கொடுத்தனுப்புதல்

மோகமதாய்க் கேட்டவர்கள் முடுகிவந்த ஒட்டனுக்கு
பாலுடனே சோறுகறி பழுக்கா யடைக்காயும்
[3]சாலவிருந் தளித்து சந்தோஷ மாகவேதான்
வன்னப் பணியுடனே வரிசைபல துங்கொடுத்து
பொன்னுமுடி மன்னவனும் போகவிட்டா னோட்டனையும்.

## தூதுவர் தங்கள் ஊருக்குத் திரும்புதல்

**கலிவிருத்தம்**

74. [4]ஒட்டன் மார்பல வூரினிற் [5]சென்றவர்
நாட்ட மாய்ப்பல [6]நாட்டிலுள் ளோருக்கும்
நீட்டு மோலையும் [7]நின்று கொடுத்தவர்
[8]ஒட்டன் மார்தங்க ளூரினில் வந்தனர்.

## தூதுவர் மன்னனுக்குச் செய்தி உரைத்தலும் மன்னன் நகரை அலங்கரித்தலும்

**விருத்தம்**

75. வந்தவர் அரச னோடே [9]வளமையாய் செய்தி செப்பி
விந்தையாய்த் தொழுது போற்ற வேந்தனும் மனது மெய்த்து
கொந்தலர் புயத்தா னல்ல கோப்புகள் பலதுண் டாக்கி
**கந்தமா [10]நகர மெல்லாம் காவண மிட்டார் மன்னன்.**

3240. வானக்கடல் — ஆகாசக்கடல், மசவான — திசைதெரியாத. 3244. நாகமணிமாலை — மினுமினுத்தான்புட்டண மன்னனின் மகள். வளமானது — சிறப்பானது. 3245. மோகமதாய் — விருப்பம்தாய். முடுகி — வேகமாக. ஒட்டன் — தூதன். 3246. பழுக்காய் — பழுத்தபாக்கு. அடைக்காய் — பாக்கு. 3247. சால — மிகவும். 3248. வன்னப்பணி — அழகிய ஆடை. வரிசை — பரிசுப் பொருள்கள். 3255. மெய்த்து — சந்தோஷமாகி. 3256. கொந்தலர் — வலிமை. கோப்பு — ஏற்பாடு. 3257. கந்தம் — வாசனை. காவணம் — பந்தல்.

**சுவடிச்சொல்:** 3254. வழமையாய்.

பாடவேறுபாடு: 1. உயிர்வருத்தி 2. தன்னுடைய தேவியரும் 3. சகலவிருந் தளித்து 4. ஒட்டமாய் 5. போனவர் காண் 6. நாட்டிலுள்ளோர்காண் 7. சென்று 8. ஒட்டமாய்த் 9. வண்மையாய் 10. நகரில் நல்ல.

The exultant king recollected with gratitude
The revival of his daughter by his son-in-law
Who, he thought, had disappeared for good.
Like a ship coming back
That had gone to an obscure island
In the ocean of the sky
And believed to have been lost its way,
The news brought cheer to the king
Who broke it to his dear wife
And daughter Nākamanimālai
Who was gifted with a honeyed tongue.

### Gifts for the messenger

Those who heard the good news
Feasted the messenger on the run
With milk, rice, delicious dishes
Betel leaf and areca nut
Along with new clothes and gifts
Before he was permitted to go.

### The return of the messengers

74. The messengers on the run visited many places
Distributed earnestly parchments
Containing good tidings
And returned to their place.

### Decorating the city

75. The messengers duly saluted the king
Conveyed news that was happy and exhilirating,
Forthwith the king made elaborate arrangements
Erected a massive shamiana.

நடை

76. மன்னர் பெருமான் மகிழ்ந்துமணக் காவணங்கள்
அன்னேர மிட்டு அலங்கரித்தார் பட்டணத்தை
பட்டணத் திலுள்ள பல[1]சனங்க ளும்மகிழ்ந்து
எட்டுத் [2]தெருவும் இதமா யலங்கரித்தார்

தாராள மானநல்ல சம்மந்த ராசமன்னன்
சீராள மாகச் சிறந்திருந்தா ரம்மானை.

## மன்னன் சேனைப் படைகளுடன் கொலுவீற்றிருத்தல்

விருத்தம்

77. இருந்தன ரரசன் றானும் இயல்புடன் அமைச்ச ரோடே
திருந்திய [3]பரிகள் யானை சேனையும் படையுஞ் சூழ
பெருந்தவ முடைய வேந்தன் [4]பேதக மில்லா வீரன்
[5]அருந்தமிழ் வாணர் போற்ற அரசனும் கொலுவி ருந்தான்.

## அரசர் பல்லோரும் சம்மந்தமாநகர்க்கு வருதல்

நடை

78. அப்படியே மன்னவனும் அங்கிருக்கும் [6]நாளையிலே
மெய்ப்புடைய ராசாக்கள் மேதினியி லுள்ளவர்கள்

எங்கெங் குமுள்ளோர்க்கு எழுதிவிட்ட நீட்டதனால்
அங்கங்கே யுள்ள அரசர் பலபேரும்
செம்பொன் முடிசூடி சிறந்துலகி லேயிருக்கும்
அம்பத் தாறுதேசத் தரசர்களும் சேனைகளும்

வீறான ராமருட வெள்ளச் சேனையதுபோல்
வாறாரே மன்னர் வரிசையுடன் எல்லோரும்
எல்லோருந் தங்கள் இயல்புபகு [7]மானமதாய்
வல்லாயுத மும்நல்ல வாள்பரிசை கேடயமும்

வாளும் பரிசை வளைதடியும் [8]ஈட்டிகளும்
ஆளும் படையும் அழகுமணித் தண்டிகையும்

---

3258. மணக்காவணம் — மணப்பந்தல். 3263. சீராளமாக — சிறப்பாக. 3265. பரி — குதிரை. 3266. பேதகமில்லாத — வஞ்சனையில்லாத. 3267. வாணர் — புலவர். கொலு — வீற்றிரு. 3269. மேதினி — பூமி. 3270. நீட்டு — திருமுகவோலை. 3276. பகுமானம் — இயல்பாக. 3277. பரிசை — கேடயம். வளைதடி — வளைந்ததடி. 3279. தண்டிகை — பல்லக்கு வகை.

**சுவடிச்சொல்:** 3262. ராஜமன்னன்.

**பாடவேறுபாடு:** 1. சனங்களை யும்வருத்தி 2. திசையும் இதமாய் அலங்கரித்து 3. பரிகா லாட்கள் சேனைகள் புடைகள் சூழ 4. பேதமை 5. அருந்தவமு டையவேந்தன் அலங்கரித்திருந் தா்ரன்றே 6. வேளை யிலே 7. வாகவேதான் 8. சக்கரமும்.

76. That covered the whole of the aromatic city.
Yes, he erected a shamiana grand
And decorated it quite lavishly,
The happy public cooperated
In beautifying the eight streets.
Thus lived gloriously and famously
The king called Cammantarācaṉ

## The king in court

77. Thus the meritorious king
Who was brave and valorous
Lived with his loyal ministers
Surrounded by horses, elephants and the army
Basked in the adulation of poets
Who verily sang his praise.

## The Guests arriving at Cammantamānakar

78. In response to the King's invitation,
Many kings with good reputation,
Gentry from all parts of the world,
Rulers who had received the parchment
Stray king's from here and there
The leading fifty six kings and the army
Which resembled the battalion of Sri Rāma
All carrying sword, shield and spear
Javelins and other weapons

[1]பல்லக் கின்மீது பகுத்தாக [2]வாறவரும்
சொல்லத் தொலையாது துரைமக்க [3]ளானவரை

ஆனை குதிரை அடல்பரிகள் காலாட்கள்
சேனைப் படைகள் திசைதிசை தோறுமிருந்து
சந்தோஷ மாகநல்ல சம்மந்த மாநகரில்
வந்தார்க ளெல்லோரும் வாழும்முடி ராஜாக்கள்

## மினுமினுத்தான் பட்டண அரசனும் ஈனகிரி அரசனும் தங்கள் தேவியருடன் சம்மந்த மாநகர்க்கு வருதல்

நாகமணி மாலையுட நல்லதந்தை தாயாரும்
வாகுபெறு பொன்னின்முடி மன்னவனும் வந்தனராம்
சச்சந்த மாலையுட [4]தாயார் சனங்களுடன்
அச்சந்த யீனகிரி அரசனுடன் வந்தனராம்

உல்லாச மாக வுகந்தரசன் முன்பதிலே
எல்லோரும் வந்தார் இயல்புடனே யம்மானை.

## வந்தவர் அனைவோரும் ஒன்று கூடியிருத்தல்

சந்த விருத்தம்

79. வந்து [5]சேர்ந்தனர் கொந்து கொந்துள மன்னர் மன்னவர் சேனையும்
சந்த மாமுடி விந்தை [6]போலவே தக்க மாமுடி மன்னவர்
[7]கொந்து கொந்தள மாக வந்தவர் கோடிச் சேனைகள் கூடியே
நந்து லாவிய தேச மன்னவர் நாடி வந்தவர் கூடினார்.

## வந்த அனைவோருக்கும் விருந்துபசரித்தல்

நடை

80. கூடியொரு கோடிப்படை கூடியொரு சங்கமதாய்
நாடியர சனிடத்தில் நன்றாக வந்தபின்பு

[8]வந்தரசர் தங்களுக்கும் மந்திரிமார் சேனைகட்கும்
சிந்தைமகிழ்ந் தேவிருந்து செய்தார்சந் தோஷமுடன்
வரிசையுடன் தம்மிடத்தில் வந்ததுரை மக்களுக்கு
அரிசிகறி [9]காய்ப்பருப்பு ஆடுகிடாய் [10]பால்தயிரும்

3280. பகுத்தாக — வகையாக. 3281. துரைமக்கள் — உயர்ந்த மக்கள்; பிரபுக்கள். 3282. ஆனை — யானை. அடல் பரி — வலிமை பொருந்திய குதிரை. 3286. நாகமணிமாலை — மினுமினுத்தான் பட்டண அரசனின் மகள். 3288. சச்சந்தமாலை — ஈனமலைப்பேயனின் மகள். 3292. கொந்து கொந்துள — கூட்டம் கூட்டமாக. 3293. சந்தமாமுடி — அழகான கிரீடம். 3295. நந்துலாவிய — சிறப்புற்று விளங்கிய. 3296. சங்கம் — சேர்க்கை; கூட்டம். 3301. கிடாய் — ஆண் ஆடு.
பாடவேறுபாடு: 1. பல்லாக்கு மீதில் 2. வாறவர்கள் 3. ளானவர்கள் 4. தந்தையுடன் தாயாரும் 5. வேந்தர்கள் ஓர்ந்துலாவிய மன்னர்தன் னுடமுன்பிலே 6. யாகவே 7. சேர்ந்து 8. வந்தபல பேர்களுக்கும் மன்னருட மந்திரிமார் 9. பால்தயிரும் 10. பருப்பும்.

Some arriving in palanquins
Innumerable representatives of the nobility
Elephants, horses and infantry
Marked the pageantry of kings
Who came to Cammantamānakar.

### The kings of Miṉumiṉuttāṉ and Iṉakiri arrive at Cammantamānakar with their wives

Along with Nakamaṇimālai,
Came her beloved parents.
Caccantamālai also arrived
With her loving father, mother and retinue,
The mood was one of cheer and joy.

### The guests assemble

79. Yes, they all came in groups,
King's and their men,
Soldiers galore, retinue colourful,
The distinguished guests of the king of Cammantamānakar.

### Entertaining the guests

80 To the grand assemblage
Of soldiers, ministers and the gentry,
The king gave a splendid feast
With great joy and merriment,
Rice, curry, vegetables and dhal,

திருந்தவி ருந்துசெய்து செப்பமுட னெல்லோர்க்கும்
பொருந்தவொருப் [1]போலமுது போசனங் களுங்கொடுத்து
விந்தைபெற வேயடைக்காய் [2]வெள்ளிலை களுங்கொடுத்து
சந்தனம் [3]பன்னீர்புனுகு தான்கொடுத்தா ரெல்லோர்க்கும்

இப்படியே நன்றா யிவர்களனை [4]வோர்களுக்கும்
அப்படிசந் தோஷமுற்று அங்கிருக்கும் வேளையிலே

## சம்மந்தராச மன்னன் முன்நடந்தவற்றை எடுத்துரைத்தல்

பாரமுடி மன்னர் பலசனங் களுமறிய
[5]சாரமுட னோர்வார்த்தை சாற்றினார் ராசமன்னன்

மாயவுரு வாமையதாய் [6]வந்ததிந்த மன்னவர்க்கு
[7]நேயமுடன் பெற்றெடுத்த நேரிழையா ளென்மகளை
பொன்னின்வரிச் சாவலையும் புகழ்வீரச் சங்கிலியும்
சொன்னபடி வாங்கிவரச் [8]சொற்படிக்கு வந்ததினால்

உறுதியா யென்மகளை உடன்தருவே னென்றதனால்
மறுவார்த்தை சொல்லாமல் மாலையிட்ட செய்திகளும்
கண்ணாலிவன் சொரூபம் காணாதி ருக்கையிலே
எண்ணைமு ழுகும்போது யிவன்சொரூபங் கண்டதுவும்

**[9]கூனாமைக் கூட்டைவிட்டுக் கூத்துவந்து பார்த்ததுவும்**
[10]மானா ளெடுத்து மறைத்துவைத்த செய்திகளும்
[11]வளமாயி வருடைய வளமையறி யாதவர்கள்
களவாயி வட்குவந்த கள்ளமண வாளனென்று

3302. செப்பமுடன் — திருப்தியுடன். 3303. பொருந்தவொருப்போல் — ஒரேவிதமாக; ஒப்பற்றத் தன்மையாக. போசனம் — உணவு. 3304. அடைக்காய் — பாக்கு. வெள்ளிலை — வெற்றிலை. 3305. சந்தனம் பன்னீர் புனுகு — வாசனைப் பொருட்கள். 3308. பாரமுடி — சிறப்புப் பொருந்திய கிரீடம். 3309. சாரமுடன் — சிறப்புடன். 3311. நேயமுடன் — அன்புடன். நேரிழை — பெண். 3312. வரிச்சாவல் — பொன்னை ஈயும் சாவல். புகழ்வீரசங்கிலி — உயிர்பிழைக்கவைக்கும் சங்கிலி. 3316. சொரூபம் — வடிவம்; தோற்றம். 3317. எண்ணைமுழுகு — எண்ணெய் தேய்த்து குளித்தல். 3318. கூனாமை — வளைந்த ஓடுடைய ஆமை, கூத்து — நாடகம். 3319. மானாள் — பெண்; இங்கு சம்மந்தமாலை. 3320. வளமாய் — நன்றாய். வளமை — சிறப்பு. 3321. களவாய் — திருட்டுத்தனமாய். கள்ள மணவாளன் — திருட்டுப்புருஷன்.

**சுவடிச்சொல்:** 3309. ராஜமன்னன் 3311. நேரிளை 3320. வழமை.

**பாடவேறுபாடு:** 1. போலே 2. வெற்றிலை 3. கஸ்தூரி 4. பேர்களுந்தான் 5. விசாரமுடன் ஓர் வார்த்தை சம்மந்த ராசமன்னன் 6. வந்தபுகழ் மன்னவனும் 7. பாசமுருகி வளர்த்த பைங்கிளியாள் தன்மகளை 8. சொன்னபடிக்கு 9. கூடுமேல் சட்டைவிட்டு 10. மாறி யெடுத்து மறைத்தொளித்த வாறுகளும் 11. வளமா யிவர்கள் வழக்காடி நின்றதுவும்.

Along with milk, curd and meat,
In keeping with their station,
He then gave them betel nuts and areca nut,
Sandal paste, rose water and civet,
Thus when all were happy and merry.....

## The King recounting the past

The king addressed the guests
"This man who was in the guise of a tortoise
Was promised my daughter
If he succeeded in bringing
The chains of life and death
And the enchanted striped cock.
True to my word,
I gave my daughter's hand to him
Who continued to wear the mask
But was exposed at the time of oil bath.
The king narrated the events sequentially,
The tortoise visiting the theatre on the sly,
His daughter cleverly concealing the shell
The resulting complications,
People mistaking the tortoise for a paramour

உலகம் நகைத்ததுவும் [1]ஒச்சியங்க ளானதுவும்
கலகவிழி யாளுடைய கலிதீருங் காலமதில்
ஒளியாமைக் [2]கூடுவிட்டு உடனுருவி யேயிவனும்
வெளியோடி வந்ததுவும் வேஷமதைக் கண்டதுவும்

எல்லா [3]வளமும் இயல்பெரிய மன்னவர்க்கு
வல்லபுகழ் மன்னன் [4]வகையா யெடுத்துரைத்து

## மகளிடமிருந்து மன்னன் ஆமைக்கூட்டை வாங்கி அனைவோரின் முன்பில் வைத்தல்

இன்பங் குளிர்ந்தவர்கள் எல்லோருந் தானறிய
அம்பத் தாறுதேசத் தரசர்களுந் [5]தான்மகிழ

[6]செங்கண் நெடுமால் திருவருளா லேயிருந்த
[7]சங்கந்தனை வணங்கிச் சாஷ்டாங்க மாய்த்தொழுது
[8]மகளாரெ டுத்தொளித்த வாழாமைக் கூடுதனை
புகழாகவே [9]வாங்கிப் பூதலத்தோர் முன்பில்வைத்தான்

## அனைவோரும் கண்டுபுகழ்தல்

**விருத்தம்**

**81. [10]வைத்தா னாமைக் கூடதையும் மன்னர் கண்டு மனமகிழ**
**கர்த்தா வெனது மருகனுக்கு கயிலை யரனார் கொடுத்ததென்று**
**வர்றாக் கடல்போல் பாக்கியமும் வாழ்வும் கதியும் வரப்பேறும்**
**பெற்றார் பெற்றா ரென்[11]றுலகில் பெரியோர் கண்டு புகழ்ந்தனரே.**

## ஆமையர் அனைவரையும் பணிந்து ஆமைக்கூட்டினுள் புகுதல்

நடை

82. கண்டுமனம் மகிழ்ந்து காசினியி லெல்லோரும்
நன்றுநன்று யிப்புதுமை நாம்கண்டோ மில்லையென்று
தாகமுட னவர்கள் தானிருக்குஞ் சங்கமதில்
நாகமுனி வன்புதல்வன் நன்றாக வன்னேரம்

---

3322. நகைத்த — சிரித்த. ஒச்சியம் — நிந்தைமொழி; அவச்சொல். 3323. கலி — துன்பம். 3324. ஒளியாமை — கூட்டுக்குள் மறைந்திருக்கும் ஆமை. உடனுருவி — உடனே வெளியேறி. 3325. வேஷம் — மாற்றுருவம். 3326. வளம் — செய்தி. 3330. செங்கண் — சிவந்தகண்.

**பாடவேறுபாடு:** 1. ஒச்சாயங்க 2. கூட்டைவிட்டு உருவி வெளியிலிவரும் 3. பேர்களுக்கும் 4. வகைவகை யாக உரைத்து 5. தான்விளம்பி 6. சிங்கமுடி மன்னவ்ர்கள் சிறப்பாய் சிறந்திருக்க 7. சங்கமதை நோக்கிச் 8. மகளா ரெடுத்துவைத்த 9. விளம்பி 10. வைத்தான் அரசன் உலகி லுள்ளோர் வளமையறிந்து 11. றுலகோர் பெரியோர் புகழ்ந்து மகிழ்ந்தாரே.

The scandal and scurrilous talk that ensued
And how at the end of the darkest hour,
Truth emerged and the real form seen.

### The king exhibiting the shell

This knowledge pleased every one,
The fifty six king's were highly elated,
Meanwhile the king saluted all the guests
Gathered in such large numbers
Thanks to the blessings of Tirumāl, the red eyed,
Showed them the obnoxious tortoise shell
Which once his daughter cleverly concealed

### The Elders bless the king

81. The king exhibited the tortoise shell
To the great joy of the assembled kings
Which was a coveted gift from Lord Siva
To his beloved son-in-law,
On seeing which the elders heartily blessed
The king to attain eternal bliss and prosperity.

### The demonstration by the tortoise

82. All the assembled gentry and kings
Were in exceptionally high spirits.
'Never have we witnessed such a phenomenon'
Observed they and were eager to meet the hero
When Nākaṇāmuṉivaṉ's son appeared before them

[1]ஆழிக்குள் ளேயிருந்து ஆதித்தன் வந்தாப்போல்
**மாளிகை விட்டுவெளியில் வந்தான் சுடரொளிபோல்**
கதிரோ னொளியதுபோல் [2]காவலர்கள் தங்கள்முன்னே
[3]சதிராய் வருதல்கண்டு சங்க மிளகியதே

[4]சங்க மிளகாமல் தானவரைக் கையமர்த்தி
[5]சிங்கமெனக் கெச்சிதமாய் சென்றான் சபைநடுவே
சபையிலி ருந்தவெகு சங்கத்தா ரைத்தொழுது
[6]விவரமதா யீசர் வெகுமான மாய்க்கொடுத்த

ஆமையின் கூட்டில் அவதான மாய்ப்புகுந்து
[7]தாமையுட னூர்ந்து தானடந்து வட்டமிட்டு

## ஆமையர் கூட்டிலிருந்து வெளியேறி அரனைத்தொழுது போற்றுதல்

வந்து வெளியில் மகாதேவ ரைத்தொழுது
கொந்துலவு மன்னவரும் கூண்டிருந்தோ[8]ருங்கேட்க
[9]அத்திமுக னைப்பயின்ற அரன்பாதம் போற்றியிரு
**பத்துத் திருப்பாட்டு படித்தனன்கா ணம்மானை.**

## அரனை வியந்து போற்றி மோட்சகதி வேண்டுதல்

**திருவாசகம்**

**83. படித்தான் திருவா சகமதுதான் பரம சிவனைத் தான்பணிந்து**
**[10]மடுத்தான் முகர்ந்த கன்றதுபோல் மனமே யரன்மேல் மிகவுருகி**
**நடுத்தான் இலையோ எனக்களித்த நல்ல திருவா மைப்பொருளை**
**கொடுத்தேய்ப் பாரும் உண்டோவென் கோவே தேவே**
**யெனத்தொழுதான்.**

**84. தொழுது [11]துயரம் அறுப்பதற்கு சோதி யருளே மனதிரங்கி**
**அழுது அவன்தன் அகமிருக்கும் [12]அன்பு மலரை மிகச்சாற்றி**

---

3342. ஆழி — கடல். ஆதித்தன் — சூரியன். 3344. கதிரோன் — சூரியன். காவலர் — அரசா. 3345. சதிராய் — அழகாய்; பெருமையாய். சங்கம் — கூட்டம்; சபை. இளகிய — நெகிழ்ந்த; அசைந்த. 3347. கெச்சிதம் — கம்பீரம். 3348. வெகு சங்கத்தார் — அதிக கூட்டத்தார். 3349. ஈசர் — சிவன். வெகுமானம் — பெருமதிப்பு. 3350. அவதானம் — கவனம்; சாதுரியம். 3352. மகாதேவர் — சிவன். 3353. கொந்துலவு — கூட்டமாய் உலவும். கூண்டிருந்தோர் — கூடியிருந்தோர். 3354. அத்திமுகன் — விநாயகன்.

**பாடவேறுபாடு:** 1. ஆழிக்கு மேலே ஆதித்தன் உதித்தாப்போல் 2. காசினியோர் கண்காண 3. சதிராகவே இருக் கும் சங்கமதில் வந்தனராம் 4. சங்கைமீள காவலவன் தங்களையும் கையமர்த்தி 5. திங்கள் நுதல் மன்னவனும் 6. வெகுவாக 7. தானடந்து 8. தோர்கண்காண 9. வித்தகனைப்பெற்ற விமலனரு ளைப்போற்றி 10. மாடுதான் 11. துயரம் தீர்ந்து 12. அரும்பு மலரை.

Like the sun emerging from the sea
Which sublime sight moved the guests deeply.
He beseeched them to take their seats
Walked like a lion full of bears,
Saluted the assembled guests
And deftly crept into the tortoise shell,
Gifted by Lord Siva
And circled about in gay abandon.

## The tortoise offers a prayer

Soon he came out
Offered a prayer to Lord Siva
The father of the Elephant God
And to the assembled guests
Read out twenty sacred hymns.

## The appeal of the tortoise for salvation

*Tiruvācakam*

83. He read out *Tiruvācakam*
With submissive devotion,
Appealed to the sense of justice
And fairplay of Lord Siva
Who gifted him with the tortoise form
Not to dupe him but to elevate him.
He was moved to tears
Like the cow that had smelt its calf,

84. Offered as oblation
The flowers of love and devotion.
Oh supreme being lording over Mt. Kailas,
The source of everything animate and inanimate,
Whose glory eludes the limits of language,
Won't you bless me?

85. Master of all arts, keeping Umai on left side,
The Quintessence of pure love.
The one who burnt the cities of gold, silver, and iron,
Lift me from this mire
Of wearing a miserable tortoise shell
And make me one with you.

முழுதுங் கயிலைக் கிறையவனே மூல முதலே யெனப்பணிந்து
எழுதுந் தமிழுக் கடங்காத இறைவா [1]யெனையாண் டருளரியோ.

85. தாகம் பெரிய உமைபாகா சகல கலைக்கும் பெரியவனே
மோகப் பொருளே முழுமுதலே மூவர் புரத்தை எரித்தவனே
ஆகங் கலங்கி யடியேனும் ஆமைக் கூட்டி லழுந்தாமல்
தேவப் பொருளே யடியேனை சிவனே சேர்த்துக் கொள்வீரே.

86. காலன் றனையும் பாலனுக்காய் காலா லுதைத்தீர் கண்ணுதலே
மூல முதலே செவ்வேறு முக்கண் ணுடையாய் முழுமுதலே
மாலு மயனும் உனைத்தேட மலையாய் வளர்ந்து நின்றவனே
சீல முடனே எளியேனை சிவனே சேர்த்துக் கொள்வீரே.

87. வில்லா லடித்த விசயனுக்கு விரும்பி பாசு பதங்கொடுத்தீர்
கல்லா லெறிந்த பத்தனுக்கு கதியே கொடுத்தீ ராண்டவனே
பொல்லா தடியன் நானுமுன்பு பூவை முகர்ந்த பிழைபொறுத்து
எல்லா பொருட்கு மிறையவனே இரங்கி மோட்சந் தருவீரே.

88. பட்சி புசித்த வேடனெச்சில் பரனே புகழ்ந்து நீர்புசித்தீர்
நச்சு வாயால் அருந்ததியாள் நக்கப் பொறுத்தீர் ஆண்டவனே
பச்சை வடிவாம் உமைபாகா பாவி யடியேன் பிழைபொறுத்து
இச்சை யுடனே மனதிரங்கி இறைவா மோட்சத் தருவீரே.

89. அல்லா இறசூல் நபியெனவும் அச்சு சர்வேஸ் வரனெனவும்
நல்லோர் புகழும் அஞ்செழுத்தும் நாலா மெழுத்து மெட்டெழுத்தும்
எல்லா வெழுத்துந் தானாகி இறவாப் பொருளாய் நின்றவனே
பொல்லா தடியேன் செய்தபிழை பொறுத்தே யருள்வீர் புண்ணியனே.

90. கந்த மலர்சேர்க் குழலுமையாள் கடுகச் சடைக்குள் வடிவேலர்
வந்தங் கொளித்து மந்திரத்தை வளமாய்க் கேட்டார் அதற்காக
முந்தக் கடலில் மகரமதாய் முன்னே வகுத்துப் பின்னழைத்தீர்
அந்தப் படியே தமியேனை அரனே சேர்த்துக் கொள்வீரே.

---

3362. கயிலை — கைலாசம். 3364. தாகம் — ஆசை. 3365. மோகம் — ஆசை. மூவர்புரம் — திரி புரம்; பொன்வெள்ளி இரும்புகளால் செய்யப்பட்டனவும் சிவபிரானால் எரிக்கப்பட்டனவும் விண்ணிற் சஞ்சரித்தனவுமான மூன்று நகரங்கள். 3366. ஆகம் — மனம். 3368. காலன் — யமன். பாலன் — புத்திரன்; மார்க்கண்டன். காலாலுதைத்தீர் — தனதுபக்தனான மார்க்கண்டேயனுக்காக எமனைக் காலாலுதைத்த சிவபெருமான். கண்ணுதல் — சிவன். 3369. செவ்வே — நேரே. முக்கண் — மூன்று கண்களுடைய சிவன். 3370. மால் — திருமால். அயன் — பிரமன். 3371. சீலம் — சிறப்பு; தன்மை. 3372. வில் — அம்பு. விசயன் — அருச்சுனன். பாசுபதம் — சிவனைத் தேவதையாக்க் கொண்ட அஸ்திரம். 3373. பத்தன் — பக்தன். கதி — மோட்சம். 3374. பொல்லா — தீமையான. பூவை — மலரை. 3375. மோட்சம் — முத்திநிலை.

சுவடிச்சொல்: 3371. எழியேனை 3374. முகந்த 3375. மோக்ஷம்.

பாடவேறுபாடு: 1. யாண்டருள் மென்றார்.

Source of everything,
Primordial force,

86. In the past you kicked the Lord of Death
And protected a youngster devout and good.
Oh three-eyed one,
You assumed the form of a mighty hill
When Tirumāl and Piramaṉ searched for you,
I beg of you to give me deliverance
And make me one with you.

87. In the past you gifted the powerful missile *Pācupatam*
To your devotee Arccuṉa who hit you with a stone.
Your forgave even poor me
For smelling a flower
Earmarked for prayer.
May I now beseach you
To offer me liberation?

88. You are credited with eating a fowl
Half bitten and tasted by a hunter,
You were tolerant enough to put up with
The lampoon of Aruntati,
Oh green-eyed one, forgive my lapses
And beatify me.

89. Called by various names
Such as Allah, Rasool and Īsvara,
Eulogised in the five letters *Namaccivāya,*
In the four letters of *Praṇava*
And in the eight letters of *Ōm Namō Nārāyaṇā*
You are verily all the letters put together;
Oh immortal one,
Forgive my malpractices and sins
And elevate me to bliss.

90. In days of yore
Vaṭivēla swiftly hid himself
In the rich locks of Umai
And overheard the mystic
For which trespass
You made Umai into a fish

91. பாணன் தனக்குப் பலகையிட்டு பறையன் தனைப்போல் விறகெடுத்தீர்
வாணன் தனக்கு உலகளித்து மண்ணுஞ் சுமந்தீர் பிட்டதற்காய்
காணாக் காட்டில் கன்னமிட்ட கள்ளன் தனக்குக் கதிகொடுத்தீர்
வீணா யடியேன் அலையாமல் விரும்பி யருள்தந் தருள்வீரே.

92 கற்றா வாக வுருவெடுத்து கன்றா யெமனைப் பணித்தவனே
உற்றா ரெனக்கு உன்னையல்லா தொருபே ருண்டோ உலகமதில்
பற்றா தடியேன் உன்னுடைய பாதந் தனில்வந் தடைவதற்கு
முற்றா முதல்வா அடியேற்கு மோட்ச கதிதந் தருள்வீரே.

93. பூவைப் புகழ்ந்து முகர்ந்ததினால் பூவை யரைச்செய் திடையுகிறேன்
ஆவி கலங்கி மதிமயங்கி ஆமை யுருவாய் அலையுகின்றேன்
தேவி பரமேஸ் வரிபங்கா சிவனே அடியேன் தனக்கிரங்கி
பாவி தனக்குன் திருவருள்பொற் பாத கதிதந் தாள்வீரே.

94. ஒருவர்க் கொருவர் பேசாமல் உம்மா லவர்க்கு உயிர்விடுத்த
மருவு சீல ருள்ளமதை வகுத்த கயிலை தனிலிருத்தி
உருவாய் அவர்க்குன் பாதகதி உடனே மோட்சங் கொடுத்ததுபோல்
திருவா மூமையாள் வலப்பாகா சிவனே மோட்சந் தருவீரே.

95. அரஹர சிவனே சரணஞ் சரணம் அம்பலத் தாடி சரணம் சரணம்
குருபர நாதா சரணஞ் சரணம் கொலைமழு வேந்தும் பரனே சரணம்
ஒருபொரு ளாகி நிறைந்தாய் சரணம் உமையொரு பாகா சரணஞ் சரணம்
திருவளர் கயிலைக் கிறைவா சரணம் சிவசிவ சிவனே சரணஞ் சரணம்.

96. முன்னே தமியேன் செய்தபிழை மோசத் துயர்க ளானதெல்லாம்
பொன்னே யுனது மனதிரங்கி பொறுத்தே தடுத்தாட் கொண்டருள்வாய்
மின்னே சுடரே மெய்ப்பொருளே மெலிந்திங் கடியேன் வாடாமல்
என்னை யுனது திருப்பதத்தில் இறைவா சேர்த்துக் கொள்வீரே.

---

3388. பாணன் — பாணபத்திரர் எனும் யாழ்ப்பாணர்; இவர் பொருட்டு சிவ பெருமான் விறகாளாய் மாறி யாழ்வாசித்து ஏமநாதனை ஓட்டினார். பறையன் — பறைசாதியன். பலகை — புலவர் வாதிடக் கூடியிருக்கும் சபை. 3389. வாணன். திருவாதவூரார்; மாணிக்கவாசகர். பிட்டு — தினைமா; சிற்றுண்டி வகை; சிவபிரான் 'வந்தி' எனும் வயதான பெண்ணுக்காக கூலியாளாக மண் சுமந்து பாண்டியனிடம் அடிபெற்ற நிகழ்ச்சி. 3390. காணாக்காடு — தெரியாத காடு. கன்னம் — களவு. கள்ளன் — திருடன். கதி — மோட்சம். 3392. கற்றா — கன்றையுடைய பசு. உருவெடுத்து — வடிவமெடுத்து. கன்று — பசுவின் இளங்கன்று. யெமன் — யமன். பணித்தவன் — தாழ்த்தியவன். 3393. உற்றார் — சுற்றத்தார். 3394. பற்றா — பற்று இல்லாத. 3395. முற்றா — முடிவில்லாத. மோட்சகதி — முத்திநிலை. 3396. பூவை — மலரை. பூவையர் — பெண்கள். உடையுகிறேன் — தளர்வடைகிறேன். 3397. ஆவி — மனம். மதி — அறிவு. உரு — வடிவம். 3401. மருவுசீலர் — ஒரு சிவபக்தர். 3403. வலப்பாகன் — உமையாளின் வலப் பாகத்தில் இருப்பவன்; சிவன். 3404. அம்பலம் — தில்லையம்பலம். 3405. மழு — கோடாலி. பரன் — சிவன்.

And later on restored her to her original form,
Similarly rescue this helpless soul
By redeeming him.

91. For the sake of a Pāṇā,
You played the role of a firewood seller,
Became a labourer carrying mud
For the sake of an old woman
Pious and devout,
And received severe lashes at the hands of a Pandya King.
You gave salvation even to a thief
Who polfered and plundred
In an unknown remote forest.
When such is the case
Why don't you pity me
And make me one with you?

92. Assuming the role of a mother cow
You made Yama, the lord of death, feel small.
You have been the saviour of many
Why don't you give me also salvation?
Me who have no other refuge
And am helpless and forlorn.

93. For the sin of smelling a flower
I have suffered enough torment as a tortoise.
With my mind confused and spirit shattered,
I have loafed about a lot,
Oh immortal one who is infinite,
Siva sharing body with Pārvati,
Why don't you pity me and redeem me?

94. Just as you gave liberation to Maruvucīlar,
Without exchanging a single word
My revered sire sharing body with Umai.
Make me one with you.

95. I surrender at your holy feet my lord
Who performed the cosmic dance
Who holds in His hands the sacred axe
Who is one and the many

96. Let me once again offer obeisance at thine feet

97. கடுகைச் சடைக்குள் மிகவணிந்து கையில் மழுமான் தரித்தோனே
கொடுகி யடியேன் ஆமையுட கூட்டி லிருந்தேன் இத்தனைநாள்
நடுவில் மலர்ப்பதங் கெவ்வுயிர்க்கும் நல்ல தருளும் புண்ணியனே
முடிவில் அடியேன் தனக்குனது மோட்ச கதிதந் தாள்வீரே.

## உமையாளைப் போற்றித் தொழுதல்

98. அரனிடப் பாகம் வாழும் ஆனந்த வல்லி போற்றி
கருவிளை மலர்ப்போ லான கன்னியே போற்றி போற்றி
ஒருபொரு ளாகி நின்ற உலகமா தாவே போற்றி
திருவளர்த் தாயே உந்தன் திருப்பதம் போற்றி போற்றி.

## உமையாள் சிவனை வணங்கி உரைத்தல்

99. தாமை யாயா மையாரும் சங்கரன் தன்னைப் போற்றி
பாவமே நீங்குங் காலம் பார்வதித் தாயைப் போற்ற
தீமையொன் றில்லாத் தேவி திருச்செவி தன்னிற் கேட்டு
வாமையாய்க் கயிலைவாழும் வள்ளலை வணக்கஞ் செய்தாள்.

## சிவன் தேவரை வரவழைத்தல்

100. தேவியும் வணக்கஞ் செய்து சிவனுக்கு வுரைகள் செப்ப
ஓவிய மஞ்ச வேண்டாம் உன்னதால் பொறுத்தோ மென்று
ஆமையார் தனக்கு மோட்சம் அரன ருள்புரி வதற்கு
தேவரை வருத்தி யீசன் திருவருள் புரிய லுற்றார்.

## சிவன் தேவரிடம் ஆமையரை அழைத்து வரச் சொல்லுதல்

101. தாகமாய்க் கயிலை மேவும் சங்கர னாரும் நல்ல
பாவத்தை நீக்கி நல்ல பாக்கியம் கொடுப்ப தற்கு
பூவதில் செய்த குற்றம் பொறுத்தவர் மனதி ரங்கி
ஆமைபூ வாச நாதன் றன்னைநீ ரழையு மென்றார்.

102. அரன்றிரு வாச கத்தை அன்பதாய்க் கேட்ட பேர்கள்
நிரந்தரஞ் செல்வ மோங்கி விமலனா ரருளி னாலே
புரந்தரன் பவுசிப் பெற்று பூதலத் துள்ளோ ரெல்லாம்
பரந்தபாற் கடல்போற் செல்வம் பாக்கியம் பெறுவர் தாமே.

---

3412. கடுகை — கடுக்கை; கொன்றைமலர். சடை — மயிர். தரித்தோன் — அணிந்தோன்; தாங்கியோன். 3413. கொடுகி — ஒடுங்கி. 3414. நடுவில் — மத்தியில். 3415. முடிவில் — இறுதியில். 3416. அரன் — சிவன். ஆனந்தவல்லி — உமையாள்; பார்வதி. 3417. கருவிளை — கொடிவகை. 3422. செவி — காது. 3423. வாமை — அழகு. கயிலை வாழும் வள்ளல் — கைலாயத்தில் வாழ்கின்ற சிவபிரான். 3425. ஓவியம் — ஓவியம் போன்றவள்; இங்கு உமையாளைக் குறித்தது. 3426. மோட்சம் — முத்திநிலை. 3428. தாகமாய் — விருப்பமாய். கயிலைமேவும் சங்கரன் — கைலாயத்தில் வாழும் சிவபிரான். 3432. அரன் — சிவன். வாசகம் — மொழி. 3433. விமலன் — சிவன். 3434. புரந்தரன் — இந்திரன். பவுசி — ஐசுவரியம்; சிறப்பு.

Submitting myself totally to your will.
Sir, forgive all the lapses I am guilty of
And assure me of beatification.

97. Revered God wearing flowers in the matted locks.
And holding the divine axe in hand,
I have suffered abominably inisde a tortoise shell
Noble lord doing good to all,
Why don't you rescue me as well?

### Salutations to Umaiyāḷ

98. I offer my salutations
To Āṉantavalli, the Better half of Siva
Residing on the left side of the Lord,
The mother in whom everything is embedded
Prostrations at thy feet!

### Umaiyāḷ intervenes

99. When the helpless tortoise
Appealed to Lord Siva for deliverance
And paid obeisance to Pārvati
In words surcharged with emotion
She gave a sympathetic hearing

100. Worshipped her lord living in Mt. Kailas
And addressed him.

### Siva summons the Gods

Said Siva:
Woman looking like an exquisite painting,
Put aside all apprehensions.
To give liberation to the tortoise
The Gods have been summoned.

### Siva asks the Gods to fetch the tortoise

101. Siva who loves Kailas and lives there
Instructed the Gods to fetch the tortoise
Whose sin of smelling the flower
Had been magnanimously forgiven
And a life of bliss assured.

## உமையாள் சிவனை வணங்கி உரைத்தல்

நடை

103. அத்தன ருளைப்போற்றி அன்புருகி யிவனுமிரு
பத்துத் திருப்பாட்டு படிப்பதுகேட் டீஸ்வரியாள்
ஆதியிடத் தில்வாழும் ஆனந்த நாயகியாள்
சோதிபர மேஸ்வரனைத் தொழுதுசிவ காமியவ்ள்

மின்னுந் திரிபுரையாள் விமலன் றிருப்பதத்தை
பொன்னின் திருவடியைப் பூண்டுதொழு தேதுசொல்வாள்
எண்ணுங் கயிலைக் கிறைவாயென் நாயகமே
[1]கண்ணர் பிரானேயென் கங்காளா கண்ணமுதே

மண்ணுலகில் [2]முன்னேயொரு மார்க்கண்ட னென்பவனும்
**[3]நண்ணியுமைத் தேடியவன் [4]நற்றவங்கள் செய்ததெல்லாம்**
கூற்றனுக் காற்றாமல் கொடுகிமிக வேசடைத்து
மாற்றான் இயமன் வருவானெ னவறிந்து

தன்னுயிர்க் கஞ்சியவன் [5]தவமேபு ரியலுற்றான்
என்னுயிர்க் கோமானே யுமக்கேதுயிவன் செய்ததுவும்
வாகா யென்பங்கில் வளர்வள்ளலே புண்ணியனே
நாகமுனி மைந்தனுக்கு நரவுலகில் வாழ்வதற்கு

**[6]எல்லாப் பசுவும் இலங்குபிர காசமதும்**
[7]நல்லவர முங்கொடுத்தீர் நானிலத்தில் வாழுமென்று
கொடுத்தீர வனிடத்தில் கூற்றனுந்தான் செல்லாமல்
[8]முடுத்தனமாய் நீரவர்க்கு முன்கொடுத்த பாக்கியத்தால்

மண்கொண்ட பூவுலகில் மானிடவர் தங்களைப்போல்
பெண்கொண்ட தல்லாமல் [9]பிரியமுடன் வாழவில்லை
[10]முன்மலரில் நாமும் முகர்ந்துபிழைசெய் தோமென்று
தன்மனதி லெண்ணிமிகச் சடைத்துருகி யேவாடி

---

3436. அத்தன் — சிவன். 3437. திருப்பாட்டு — கடவுளைப் பற்றி பெரியோர் பாடிய பாசுரம். ஈஸ்வரி — உமையாள். 3438. ஆதி — கடவுள்; சிவன். ஆனந்தநாயகி — உமையாள். 3439. சோதி பரமேஸ்வரன் — சிவன். சிவகாமி — உமையாள். 3440. திரிபுரை — உமை; பார்வதி. விமலன் — சிவன். திருப்பதம் — திருப்பாதம்; கால்.

**பாடவேறுபாடு:** 1. கண்ணமுதே என்னுடைய கண்ணழகா 2. முன்னாளில் மார்க்கண்ட னான வனை 3. நண்ணி நமைத் 4. நல்லதவஞ்___5. சாற்றி மலர்குவித்தான். 6-. எலலாம் பகுந்து 7. அல்லாங் கொடுத்தீர் அவன்புவியி லேவாழ 8. அமுதே தனமாய் 9. பொருந்தியின்னம் 10. முன்பூவில்.

102. Those who were fortunate to hear the words
Envisaged a life of prosperity
Like that of the divine Intira
Abundant like the heavenly ocean of milk
To the denizens of the world.

## Pārvati appealing to her lord

103. On hearing him sing

Twenty hymns in praise of Siva,
Pārvati dwelling eternally with Her lord,
After worshipping at his feet
Spoke as follows:
Lord of exalted Kailas,
The one with three eyes,
My darling husband,
In days of yore there was on earth
Mārkkaṇṭēya, your devotee
Whose attachment for you
Was resented much by Yama.
Anticipating the arrival of the lord of death,
And concerned about his life,
Mārkkaṇṭēya practised penance of a rigorous kind
Finding fulfilment.
Now cast your eyes, my generous husband,
The quintessence of nobility,
On the lot of Nākamāmuṉivaṉ
To whom you gave all creature comforts
To make his life on earth sublime
Including immortality
Thanks to the boons you granted.
Like anybody else he married
But did not crave for carnal pleasures.
Because of the carry-over
Of a guilty conscience
Regarding the sin of smelling the flower,
His mind abhorred all earthly pleasure

மண்ணுல கிலாசை மறந்துபெண் களைவெறுத்து
எண்ணுஞ் சிவபதத்தில் ஈடேற லாமெனவே
உருத்தாக நம்பேரில் உருகியவன் [1]கூட்டைவைத்து
கருத்தாக வேறேயொரு கௌவைகளும் பாராமல்

வருந்தித் திருப்பாட்டு வாசகங்க ளோதுகிறான்
அருந்தவமே யிப்படிப்போல் யார்தமையுங் கண்டதிலை
பொங்குகடல் சூழுலகில் பொல்லாத பேர்களுக்கு
எங்கில்லா வாழ்வும் [2]இயல்புகளும் நீர்கொடுத்தால்

தன்கௌவை பார்ப்பான் தவப்பேறு தேடறியான்
நன்கௌவை யாகவவன் [3]நம்மைது திக்கறியான்
பெருத்ததொரு தாழ்வும் பெலக்குறைவும் வந்ததுண்டால்
கருத்தாயி ருந்துழைவான் கர்த்தாவே யென்றுசொல்லி

வாடுவான் நோவான் வயிறுதனக் காற்றாமல்
ஓடுகைக் கொண்டு வுலகிடத்தி லேதிரிவான்
சிவாசிவா வென்று திருநீற ணிந்திடுவான்
[4]பவுமானம் வந்தால் பரிந்துநமை [5]யாசரியான்

கோவிந்தா வென்பதுவும் குருக்கள்தனைத் தேடுவதும்
[6]சீவன் வருந்திடினும் சேர்ந்தபொருள் போயிடினும்
அப்படிப்போற் கள்ளமதாய் அடிவணங்க வில்லையவன்
மெய்ப்புடனீர் முன்கொடுத்த வெகுபாக் கியமிருக்க

மண்ணுலகி லேயிருந்து வாழமனம் வையாமல்
விண்ணுல கிலிங்குவர [7]வேணுமென்று தான்விரும்பி

தன்மமற்ற வாழ்விதுதான் தாரணியி லாசையென்று

---

3461. எண்ணுஞ் சிவபதம் — தியானிக்கும் சிவபதவி. ஈடேற — உய்வடைய. 3462. உருத்தாக — நெகிழ்வாக; இளகி. 3463. கௌவை — பழிச் சொல்; துன்பம். 3464. வருந்தி — கெஞ்சி. வாசகம் — தோத்திரம். 3468. தவப்பேறு — புண்ணியம். 3469. துதி — வழிபாடு. 3470. பெருத்த — அதிகமான. பெலக்குறைவு — வலிமைக்குறைவு. 3471. கர்த்தா — கடவுள். 3472. வயிறு — மனம். 3473. ஓடு — திருவோடு; பரதேசிகளுடைய பிட்சாபாத்திரம். 3475. பவுமானம் — பெருமதிப்பு. பரிந்து — பற்று; வைத்து. ஆசரி — வழிபடுதல். 3477. சீவன் — சீவான்மா. 3478. கள்ளம் — பாசாங்கு. 3479. மெய் — உண்மை. 3480. மண்ணுலகு — பூமி. வையாமல் — பொருந்தாமல். 3481. விண்ணுலகு — சுவர்க்கம்; மேலுலகம். 3482. தன்மம் — தருமம். தாரணி — பூமி.

பாடவேறுபாடு: 1. அன்புவைத்து 2. இயல்வாக நீர்கொடுப்பீர் 3. நம்மைநாளும் வணங்கத் தொழான் 4. பகுமானம் 5. பேசறியான் 6. சிந்தனைகள் வந்து சேர்ந்தபொருள் போனதுண்டால் 7. எப்போ தெனஅவனும்.

And was directed towards you,
His devotion so absorbing and consuming
That he merely endured the earthly life
Wearing ungrudgingly a tortoise shell
His be-all and end-all being
Thoughts about the infinite Sivam.
Rarely do we run into such souls
For, experience has taught us
That in the world surrounded by the sea,
If you confer on crafty people
Exalted life and other camforts,
They would become narrowly selfish,
And would seldom pray
Or harbour thoughts about redemption.
Only in adversity
When they suffer abject humiliation
Or are robbed of their power and wealth
And get miserably enervated
Do they utter the lord's name.
In such a despicable state
They may beg for mercy
Exhibit signs of pain and soreness,
May even carry the ascetic's bowl
Wear sacred ash or their forehead
And do lip sympathy to the lord's name,
But would never seriously worry about their souls
Or redemption and deliverance.
During days of cheer and happiness
They would shun God,
But would mutter loudly 'Govinda'
Seek priests of all kinds
Only when they are down with illness
Or sustain sizeable monetary loss.
This man Nākamāmuṉivaṉ
Is cast in a different mould.
Though you liberally gifted him
With fortune and comforts,
His mind was not attached to worldly goods,
But yearned passionately to reach you,

இன்பமுற்று யிங்கேவர [1]எப்போதுந் தானினைவாய்
உருகித்திரு வாசகங்கள் [2]ஓதுகின்றான் தாரணியில்
அருகில்வருத் துமென தையனே என்றுமையாள்
கன்மவினை தவிர்க்கும் கர்த்தாவைத் தான்பணிந்து
அம்மை யுமையாள் அடிதொழுதா ளம்மானை.

## ஆமையரின் முன்வினையை சிவன் உமையாளுக்குரைத்தல்

**விருத்தம்**

104. தொழுதிடு முமையாள் தன்னை சொற்பர னோக்கி நன்றாய்
பழுதற மகிழ்ந்து [3]நல்ல பார்வதிக் கேது சொல்வார்
நளிதருங் குழலி னாளே நாகமா முனிவன் மைந்தன்
களிப்புகுந் துலகில் வாழ கடனது யிருக்கு [4]தென்றார்

**சந்தவிருத்தம்**

105. பெண்ணே கேளொரு [5]வாசக மங்கவன்
பெண்கள் நால்வரைச் செய்த [6]கொடுவினை
கண்ணி தன்னிற் புகுந்திடும் பட்சிபோல்
கட்ட தாகக் கடக்க விடாதுகாண்.

மண்ணு லகில வருடன் கூடியே
வாழ்ந்து பெண்கள் மனத்துயர் தீர்த்தாக்கால்
விண்ணுல கிலென்பாதத் திற்சேர்ப் பன்யான்
[7]மெய்யீ தென்றுமை யாட்குரை செப்பினார்.

## ஆமையர் தன் மனைவியருடன் இனிது வாழ்ந்தால் தன்பதம் சோப்பதாக சிவன் உமையாளிடம் ஆணை செய்தல்

**நடை**

106. [8]செப்பினா ரந்த திருவுமையாட் குச்சிவனார்
மெய்ப்புடைய மாதே [9]விசளமொன்று நீகேளு

3484. உருகி — மனம் நெகிழ்ந்து. ஓது — படித்தல்; செபம் செய்தல். 3485. வருத்து — அழைப்பி. ஐயன் — தலைவன்; சிவன். 3486. கன்மம் — வினைப் பயன். கர்த்தா — கடவுள்; சிவன். 3487. அம்மை — தாய்; பார்வதி. 3488. பரன் — சிவன். 3489. பழுதற — குற்றமற. பார்வதி — உமையாள்.

பாடவேறுபாடு: 1. எப்போதென உருகி 2. ஓதுகின்ற பத்தனையும் 3. நன்றாய் 4. தென்பார் 5. வசனம் 6. கொடுமை 7. மெய்யென்று பரனாருஞ் செப்பினார் 8. செப்பி யரனார் சேயிழைக் கேதுரைப் பார் 9. விசேசமொன்று

All his thoughts centred round godhead,
Which makes him recite sacred hymns
With fervour and sincerity.
So saying Umaiyāḷ
Paid obeisance to Her lord.

**Siva refers to the evil deeds of Nākamāmuṉivaṉ in an earlier birth**

104. Looking at Umaiyāḷ
Who offered worship
What did Siva say?
Lady with lovely locks,
Nākamāmuṉivaṉ has to live through
What is ordained.

105. My darling woman,
Listen to this
Nākamāmuṉivaṉ has to pay for the evil
That he did to four women in an earlier birth.
Like a bird caught in an intricate net
He cannot escape the effects of his actions.
If on earth he lives with them well
Wiping their tears
He is sure to reach me
Said Siva to Umaiyāl.

**Siva assures salvation to Nākamāmuṉivaṉ**

106. Siva spoke to his spouse:
Spotless one listen to this

[1]வாக்கான மங்கையர்கள் மன்னவனைச் சேராதார்
[2]தீக்காணும் பத்தினிகள் செந்தமிழோர் சொல்நெருப்பு
எல்லாதிலுங் [3]கொடிது ஏந்திழைமார் கற்புநெறி
வல்லாதது காணும் வடவைநெருப் பாய்சுடுங்காண்
மாதருடன் சஞ்சரித்து [4]மயக்கான தையறுத்து
தீதுகுடி கொண்டவன்றன் [5]தீவினையைத் தான்போக்கி
போதரவா யந்தநல்ல பூவையர்கள் [6]நால்வருக்கும்
ஆதரவு சொல்லி யவர்களுடன் சஞ்சரித்து
தேசத்தில் வாழ்வு சிறப்பாக வேநடத்தி
பாசத்துடன் [7]வாக்கு பாக்கியமும் நான்கொடுத்து
[8]கற்றவர்க்கு மீந்துவெகு கர்மங்க ளுந்தொலைந்து
பெற்றுப் பெருகவெகு பேறுகளும் [9]நான்கொடுப்பேன்
மறுத்து வரிசையுடன் [10]வரவழைக்குமட் டுமினிப்போம்
பொறுத்திருநீ பெண்ணேவெகு [11]புண்ணியங்கள் நாம்கொடுக்க
நாட்டமுடன் சோழனந்த நாடாண்ட காவலவன்
கூட்டோடே சொர்க்கமதில் கொண்டுவந்தோங் கண்டாயே
அப்படியே நாமிவனை ஆக்கிவைப்போம் நம்மிடத்தில்
[12]மைப்படியும் பெண்களுடன் வாழ்ந்துசில நாளிருந்தால்
மார்க்கண்டன் போலிவனை வைப்பதற்கு நம்மிடத்தில்
ஆள்கொண்டோ [13]மென்றரனார் ஆணையிட்டார் பார்வதிக்கு.

---

3498. வாக்கான — உண்மையான. 3499. தீ — நெருப்பு. பத்தினி — கற்புடைய பெண். 3500. ஏந்திழை — பெண். 3501. வல்லாதது — நியாயமின்றி; சகிக்கமுடியாதது. வடவை நெருப்பு — பெண்குதிரை முகத்தின் வடிவோடு கடற்குள் தங்கியிருந்து யுகாந்தத்தில் மேலே கிளம்பி உலகத்தை எரித்து விடுவதாகக் கருதப்படும் தீ. 3502. மாதர் — பெண்கள். சஞ்சரித்து — வாழ்ந்து. மயக்கம் — மாயை; செருக்கு. அறுத்து — நீக்கி. 3503. தீதுகுடி — பாவகுலம். தீவினை — கொடுஞ்செயல்; பாவம். 3504. போதரவாய் — உபசாரமாய்; பேணுகை. பூவையர் — பெண்கள். 3505. ஆதரவு — அன்பு. 3506. தேசம் — நாடு. 3507. வாக்கு — சொல்; உண்மை. பாக்கியம் — செல்வம். 3508. ஈந்து — கொடுத்து. கர்மம் — வினைப்பயன். 3509. பெற்றுப்பெருக — பல்வேறு செல்வங்களையும் கொடுத்து. பேறு — செல்வம். 3510. மறுத்து — மறுபடியும்; மேலும். வரிசை — மரியாதை; தகுதி. 3512. நாட்டமுடன் — விருப்பமுடன். 3513. கூட்டோடே — குடும்பத்தோடே. 3514. ஆக்கி — செய்து. 3515. மை — அஞ்சனம். 3516. மார்க்கண்டன் — சிவனால் சாகாவரம் பெற்றவன். 3517. ஆள்கொண்டோம் — கைக்கொண்டோம். அரன் — சிவன். ஆணை — மெய்; சத்தியம்.

பாடவேறுபாடு: 1. பார்ப்பார் பெருமூச்சும் பத்தினியோர் தன்னெரிப்பும் 2. தீக்காணும் பத்தினியோர் செந்தமி ழோர் தன்னெரிப்பும் 3. கடிது ஏந்திழையாள் கற்புநிலை 4. மசக்கான்தையறுத்து 5. தீவினைக்கலி தாநீக்கி 6. நால்பேர்களுக்கும் 7. அவருக்கு பாக்கியமுங் கொடுத்து 8. எத்திசையுமெய்க்கவந்த ஏந்திழைமார் நால்பேரும் 9. தான்கொடுத்து 10. வரவழைக்கும் நேரமதில் 11. புண்ணியங்க ளுங்கொடுத்து 12. எப்படியும் நீ காண் இப்போது ஆக்கிவைப்போம், 13. மென்று.

Tamil maidens noted for their moral correctness,
If spurned by their husbands
Are sure to immolate themselves,
Their sense of uprightness is sharp and acute.
They set much store by pūrity
And any affront will result in a blaze
As ferocious as the one that would
Rise from the depths of the ocean
On the eve of Armageddon.
If Nākamāmuṉivaṉ lives with the four womeṇ
An exemplary life devoid of egoistic illusions,
His release is sure from the decrees of fate.
His kind gestures to the four womeṇ
And life marked by kindness and sympathy
Shall earn for him wealth and other fortunes.
Did we not give deliverance to all the members of a royal family
Belonging to the Cōḻa kingdom
For meritorious actions performed on earth?
So shall this man also attain to liberation
Like Mārkkaṇṭēya of old
Who was allowed to become one with me.

## அனைவோர் முன்னிலையிலும் சிவன் உமையாளுடன் ஆமையர்க்கு அருள்கொடுத்தல்

இல்லறத்தி லேயிருந்து என்பதத்தில் சேர்ப்பதுபோல்
நல்லறமுண் டோவேறே நாயகமே யென்றுசொல்லி
நேசமதா யீஸ்பரியும் நிசமறிய வேணுமென்று
பாசமதாய் நல்லதிருப் பாட்டுரைத்த பத்தனுக்கு

[1]சங்கத்தார் காணவவன் தானிருந்த கூடதற்கு
மங்காத [2]யீசர் வரப்பேறு தான்கொடுத்தார்
பரிந்ததுரை மக்களுடன் பாரரச ருங்காண
சொரிந்திடுங்காண் பூமலர்கள் சொர்க்கலோகத் திலிருந்து

## ஆமைக்கூடு சிவனருளால் மலர்க்கூடாகி அரன்பதம் சேர்தல்

அண்டர்பதி யிலிருந்து அரன்விடுத்த வானவர்கள்
தொண்டர்திருச் சங்கின் [3]தொனிமுழக் கமுமார்ப்ப
ஆமையின் கூடாயிருந்த [4]அசத்தக்கூ டானதையும்
வாமையுட னீசுரனார் மலர்க்கூட தாய்வகுக்க

கீழ்க்குலம்போய் மேற்குலமாய் கதிபெற்ற வாறதுபோல்
பூக்கூடை [5]யாய்க்கூடு புஷ்பமா கநிறைந்து
இருந்ததுகாண் [6]கூடதுவும் எல்லோருந் தான்காண
அருந்தவத்தோர் கள்போற்றும் அரன்கயிலை யைநோக்கி

[7]வல்லாமைக் கூடதுவும் மலர்க்கூடை யாயேக
அல்லோருங் கண்டு அரஹரா [8]போற்றியென்ன
இந்திரமா ஞாலத்தால் [9]ஏகியபொற் கூடதுவும்
[10]அந்தரத்திற் சென்று அரன்பதத்திற் சேர்ந்ததுவே.

3518. இல்லறம் — இல்வாழ்க்கை. பதம் — பாதம். 3519. நல்லறம் — மேன்மையான தருமம். 3520. நேசம் — அன்பு; ஆர்வம். நிசம் — உண்மை. 3521. பத்தன் — அன்புடையான். 3522. சங்கத்தார் — சபையோர்; கூட்டத்தார். கூடு — ஆமைக்கூடு. 3523. மங்காத — வாட்டமில்லாத. வரப்பேறு — அருள்; அனுக்கிரகம். 3524. பரிந்த — அன்புமிக்க. பார் — உலகம். 3525. சொரிந்திடும் — உதிர்தல்; பொழிந்திடும். 3526. அண்டர்பதி — தேவர்பூமி. அரன் — சிவன். வானவர் — தேவர். 3527. தொண்டர் — அடியார். தொனி — ஓசை; ஒலி. ஆர்ப்ப — ஆரவாரித்தல். 3528. அசத்தக்கூடு — மாயக்கூடு; பொய்க்கூடு 3529. வாமை — அழகு. வகுக்க — படைக்க. 3530. கீழ்க்குலம் — இழிகுலம்; கீழ்ச்சாதி. போய் — நீங்கி. மேற்குலம் — உயர்ந்தகுலம்; உயர்ந்தசாதி. கதி — மோட்சம். வாறதுபோல் — அப்படிப்போல். 3531. பூக்கூடை — மலர்க்கூடை. கூடு — ஆமைக்கூடு. புஷ்பம் — மலர். 3533. அரன்கயிலை — சிவனிருக்கும் கைலாயம். 3534. வல்லாமை — வலிமையான ஆமை. ஏக — செல்ல; விரைய. 3536 இந்திரமாஞாலம் — மாயவித்தை. 3537. அந்தரம் — ஆகாசம். அரன்பதம் — சிவன்பாதம்.

**பாடவேறுபாடு:** 1. சங்கரியாள் 2. ஈசரவர் வரப்பேறு தான்கொடுத்து 3. தொனிமுழக்கங் கேட்க 4. ஆமையின் சட்டை கூட்டை 5. யாகநல்ல பொற்பமாய் நின்றதுவே 6. அம்மானை 7. நல்லாமைக் கூடதுவும் நட்சேத்திர பதத்தில் 8. என்றுரைக்க 9. ஏகுவதே வானுலகில் 10. வந்தரனார் [illegible] மலராய்ச் சொரிந்ததுவே.

## Blessing the tortoise

Can anything be more sublime
Than the elevation from family life
To beatification at my feet?
To drive home the truth to his dear wife
Siva rewarded the singer of hymns
In His praise
By showering flowers on the shell
That Nākamāmuṉivaṉ patiently wore

To the wonder and amazement
Of the assembled gentry and kings.

## The tortoise shell turns into a basket of flowers

The Gods under the command of Siva lined up
Against the blowing of conches by the devout
And incessant loud cheering
To celebrate the turning of the tortoise shell
Into a basket of flowers
At the behest of the Lord
More or less like the elevation of the lowly
To a higher rank.
Up went the overflowing basket of flowers
Amidst the chanting of *Aro Hara*
And landed at His holy feet.

## சிவன் மலர்க்கூட்டை தன்னடியில் சேர்த்தல்

விருத்தம்

107. [1]சேர்ந்திடுங் கூடு தன்னை திருவுமை யாளுங் [2]கண்டு
[3]போர்ந்திடும் பூவிற் செய்த பிழையது பொறுத்தா ரென்று
சாந்தணி யுமையாள் தானும் சங்கர னாரைப் போற்ற
[4]வாய்ந்தநல் லாமைக் கூட்டை மலரடி தன்னில் சேர்த்தார்.

## மங்கையின் கற்பு தூயதென அனைவோரும் உரைத்தல்

நடை

108 திருக்கூட ரனிடத்தில் சேர்ந்துகதி பெற்றபின்பு
ஒரும்பாட தாக வுடனிருந்த [5]ராசாக்கள்
திருப்பாற் கடல்போல் சேர்ந்திருந்தா ரம்மானை.
சங்கத் திலுள்ள [6]சகலத்தா ருமறிந்து

மங்கையர் தன்கற்பு வழுகவில்லை யென்றுசொல்லி
இருந்தசபை களெல்லாம் யீசன்செய லீதென்றார்
வருந்திய வரவரே வார்த்தை பலதுரைத்து

## அனைவோரும் மறுமாலை சூட்ட வேண்டுதல்

சம்மந்த [7]ராசனவன் தன்னைநோக் கிப்புகல்வார்
[8]உம்மந்த மாக வுலகாளும் மன்(ன)னேகேள்
மன்னவனே யுன்னுடைய மகளார்க்கு யிப்போது
தென்னவர்கள் தானறிய சேர்த்தீர்முன் மங்கிலியம்

உறவான மங்கிலியம் உற்பனமா கயிருக்க
மறுமாலை [9]தானிவட்கு மன்னவனே சூட்டுமென்றார்.

## மன்னன் பந்தலிட்டு அலங்கரித்தல்

சங்கத்தார் [10]சொற்கேட்டு சம்மந்த ராசாவும்
[11]தங்கத்தால் தூணிறுத்தி தரளவளை கள்பரப்பி

[12]காவணங் களிட்டு கதலிக் குலைநிறுத்தி
[13]பூமணக்கு மாலைகளும் பொற்சரிகை யுந்தூக்கு

---

**பாடவேறுபாடு:** 1. சேர்ந்தனந் திருக்கூடந்த 2. காண 3. போர்ந்தனப் பாவதோசம் பூவில்முன் செய்ததெல்லாம் 4. வந்துவ மாகநல்ல மலரடி மோட்சம் சேர்ந்தார் 5. பேர்களெல்லாம் 6. சகலபே ரும்அறிந்து 7. ராசன்தனைத் தேற்றி எல்லோரும் 8. உம்மந் திரமாக உரைத்தனர்கா ணம்மானை 9. மணம் அவட்கு 10. சொல்ல 11. சிங்கத்தால் தூணிருத்தி செவ்வாழை கள்பரப்பி 12. காவணங் கள் 13. பூமணங்க ளாகவெகு.

### Siva giving refuge to the basket

107. The scene was witnessed by Umai
Who knew that Siva had forgiven
The lapse of smelling a flower
And while she commended His noble gesture
The Lord gave refuge to the flower basket at his feet.

### The purity of the woman upheld

108. After witnessing the scene of deliverance;
The kings who were present
Stood unified like the celestial ocean of milk.
All were convinced beyond doubt
That the woman was not guilty of any lapse,
Attributed all the sad events to fate
And regretted their scurillous talk.

### Another formal wedding suggested

The gentry addressed Cammantarācaṉ
'Look, the great ruler of the world,
We suggest that your daughter should again formally wed
With the auspicious *Tāli* ceremony repeated
In the presence of the Kings of the south.

### Getting up a shamiana

In response to the counsel of the gentry
The king planted pillars of gold,
Spread pearl-embedded carpets

பட்டு விதானங்கள் பலவிதமா கவகுத்து
கட்டா யலங்கரித்து கனகரத் தினமழுத்தி

இட்டமுட னாலத்தி இலங்கவே தானிறுத்தி
கொட்டு வெடிமுரசு கொம்பு [1]குழல்முழங்க

## ஆமையர் பெண் நால்வரையும் மறுமாலை சூட்டி மணம் செய்தல்

[2]தன்மக ளானதொரு சம்மந்த மாலையையும்
பொன்னழகு போலேஒத்த பூரணவல் லிதனையும்

வாகுபெறு பொன்னுமுடி [3]மன்னவனார் பெற்றெடுத்த
நாகமணி மாலையென்ற நன்னுதலாள் தந்தனையும்
[4]உச்சகிரி யான உயர்மலையில் வேந்தன்மகள்
சச்சகிரி [5]மாலையொடு தானிவர்கள் நால்வரையும்

அலங்கரித்து நல்லபணி யாபரண மும்பூட்டி
துலங்குமணிப் பட்டுடுத்தி தோகையர்கள் [6]நால்வருக்கும்
[7]அன்னசுற்ற மானதங்கள் அன்னைபிதா வானவரும்
வன்னமணிப் பந்தலுக்குள் மனமகிழ்ந்தங் கெல்லோரும்

ஒருப்போல வந்தவர்கள் உறன்முறை யாருமிருக்க
[8]திருப்பூட்டு மங்கை செய்ததொரு ஒப்பனைப்போல்
நாகமுனி மைந்தனையும் நன்றா யலங்கரித்து
வாகுபெறும் நல்லமணிக் [9]காவணத் தினுள்ளே

[10]பலகையின் மேல்வைத்து பலசடங்குந் தான்முடித்து
உலகறிய [11]மங்கையரை உற்றமன்னன் கையதனால்
மறுமாலை சூட்டிமணம் புணர்ந்தா ரம்மானை.

---

3559. பட்டு—பட்டாடை. விதானம்—மேற்கட்டி. வகுத்து—படைத்து; உண்டாக்கி. 3560. கட்டாய்—வகையாய். கனகரத்தினம்—பொன்மணி; பொன்ரத்தினம். அழுத்தி—பதித்து. 3561. இட்டம்—விருப்பம். ஆலத்தி—ஆரத்தி; தீபாராதனை. இலங்க—பிரகாசிக்க. 3562. கொட்டு—வாத்தியம். வெடி—வேட்டு. முரசு—பறை. கொம்புகுழல்—ஊதுகுழல். 3564. பூரணவல்லி—பூவாருடையாளின் மகள். 3565. வாகு—சாமார்த்தியம். பொன்னுமுடி மன்னன்—மினுமினுத்தான் பட்டண மன்னன். 3566. நன்னுதல்—பெண். 3567. உச்சகிரி—பேயன் பேச்சி வசிக்கும் மலையிடம். 3568. சச்சகிரிமாலை—பேயன்பேச்சி இவர்களின் மகள். 3569. பணி—ஆடை. ஆபரணம்—அணிகலன். பூட்டி—அணிவித்து. 3570. துலங்கு—பிரகாசி. தோகையா—பெண்.

**பாடவேறுபாடு:** 1. தாரை முழங்க 2. தன்மக ளாரந்த 3. ராசாவும் 4. உச்சந் தமான 5. மாலையுடன் 6. சூழ்ந்துவர 7. அன்னசுற் றத்தாரும் 8. தருவான பெண்கள் தன்னை லய்யுகின்ற மாப்பிள்ளைதான் 9. காவணந்தனிலே 10. பலகையதன் 11. மங்கையர்க்கு.

Got up a shamiana grand
With auspicious plantain trees,
Garlands galore and silken festoons,
Arranged for the lighting of lamps
And Formel worship
Against the backdrop of drums and instruments
Along with a display of colourful fireworks.

## The tortoise marries four women

The king's own daughter Cammantamālai
Pretty Pūraṇavalli,
Nākamaṇimālai, the daughter of the king of Miṉumiṉuttāṉ
And the daughter of the king of the hills Caccakirimālai
Donning the bridal robes,
Jewellery to suit the occasion
And in the august presence of relatives and parents,
Gathered inside the decorated shamiana,
The groom Nākamāmuṉivaṉ
Also in bridal dress
Along with the four brides
Were made to sit on the auspicious wooden plank
The rituals performed with great care
Garlands exchanged,
And the brides formally given in marriage
For the second time!

## ஆமையர்க்கு அனைவரும் பூவாசநாதன் என்று பெயரிடுதல்

உறுதியுடன் கண்டார்கள் உலகில னைவோரும்

மாலையது சூட்டி மணம்புணர்ந்த [1]நேரமதில்
தாலமதி லேயிருந்த சங்கத்தா ரெல்லோரும்
அல்லோருங் கூடியிருந்த ஆமைமக ராசனுக்கு
நல்லதொரு பூவாச நாதனென்று பேர்கொடுத்தார்

[2]இருந்தசங் கத்தார் இளகிய முதருந்தி
[3]வருந்தாம லேயவர்கள் வாழும்நக ரிந்சேர்ந்தார்.

## பூவாசநாதன் மனைவியர் நால்வருடன் மகிழ்ந்து அரசு செய்தல்

எல்லாருந் தங்கள்மனைக் கேகியே போனபின்பு
நல்லதொரு பூவாச நாதனென்ற மன்னவனும்

மாலையிட்ட பெண்களுடன் [4]மகிழ்ந்துசந் தோஷமுற்று
[5]சேலா யிருந்து சிறந்துசி னேகமுற்று
செவ்வை மருவி சேர்ந்துவிளை யாடியவனும்
காமன் ரதிபோல் கலவிநலம் பாராட்டி

தாமும் மனமகிழ்ந்து [6]சகலநிலை யும்வருத்தி
கங்காள [7]நாதருட கருணைய கத்திருத்தி
பெண்கள் [8]நால்வருடனே பேரரசு செய்திருந்தான்
கன்றுபசு நிரையும் கருவூலங்க ளானதுவும்
[9]நன்றாக வுண்டாக்கி நாள்தோறும் வாழ்ந்திருந்தார்.

## நாட்டைச் சிறப்புடன் ஆண்டு வருதல்

சீரான [10]செல்வம் செழித்தோங்கி யேவளர
[11]ஏருழ(ச்) செய்துநல்ல இன்பசுக முண்டாகி

---

3582. தாலம்—பூமி. சங்கத்தார்—சபையோர். 3584. பேர்—நாமம். 3585. இளகி—மகிழ். அமுது—உணவு. 3587. மனை—வீடு; இருப்பிடம். ஏகி—போகுதல். 3590. சேல்—கெண்டை மீன். சினேகம்—நட்பு. 3591. செவ்வை—நேர்மை; மிகுதி. மருவி—தழுவி; கலந்து. 3592. காமன்—மன்மதன். ரதி—மன்மதனின் மனைவி. கலவிநலம்—புணர்ச்சி இன்பம். 3593. சகல—அனைத்தும். வருத்தி—உண்டாக்கி. 3594. கங்காளநாதர்—சிவன்.

**பாடவேறுபாடு:** 1. வேளையிலே 2. வந்தசங்கத் தார்கள் மகிழ்ந்துவிருந் துண்டெழுந்து 3. சிந்தையுடன் தங்கள் திசைதனி லேபோனார் 4. மனக்கலிகள் தான்தீர்ந்து 5. சேலையிட்ட மன்னன் சிறப்பாக வீற் றிருந்தான் 6. சகலவையத்தும் உண்டாக்கி 7. நாதன் கருத்தினா லேயவர்க்கு 8. நாலுபேர்க்கு புத்திரர்க ளுண்டாகி 9. மண்டலத்தி லுள்ளோர்கள் வாழ்வுசிறந் தோங்கிநன்றாய் 10. வாழ்வு சிறந்தோங்கி 11. ஏருழவு செய்துநன்றாய்.

### The tortoise renamed

Everyone witnessed the exchange of garlands
And the formal wedding.
The assemblage unanimously felt
That the tortoise should be renamed Pūvācanātaṉ.
Later all participated in the feast
And went to their respective homes.

### The rule of Pūvācanātaṉ

After all the guests retired to their homes
King Pūvācanātaṉ enjoyed bliss with the girls
With great intimacy and playfulness
Like the prover bial cupid and Rati
Ever remembering with gratitude
The kindness of all-prevading Siva
Ruled the country so diligently
That there was all-round growth and prosperity.

### Ruling diligently

Leading a Virtuous life
Thanks to Siva's abundant grace,
Pūvācanātaṉ took prudent measures
To plough the country to prosperity and welfare.

நாதனரு ளாலுலகில் நல்லவர்க ளாயிருந்து
மாதுநல்லார் தங்களுட [1]மனத்துயர் களுந்தீர்த்து
[2]ஓதுமறை வேதியர்க்கும் உற்றதமிழ் வாணருக்கும்

தானதர்மம் [3]செய்துபல சத்திரங் களும்முடித்து
[4]ஆனதொரு பூசை ஆலயந்தோ றும்நடத்தி
வாசபூ வாச மகராச [5]னாயிருந்து
ஈசனுக்குக் கோயில் [6]இசைவாக வேமுடித்து

ஆசார மாக [7]அரனடிக்கே தொண்டுசெய்து
[8]நேசமுடன் பூசை நிதமும் மிகநடத்தி
இரப்போர் பரப்போர்க்கும் இரந்துண்ணும் பேர்களுக்கும்
நிரப்பாக [9]வாழ்வதற்கு நிதிகள்வெகு வாய்க்கொடுத்து

சிந்தை மகிழ்ந்து சிவன்திருமால் தந்தனக்கு
நந்தாவ னங்கள்வைத்து நல்லமல ருஞ்சாற்றி
ஆறுகுளமும் புரவும் அங்கங்கே [10]தான்வகுத்து
மாறாத [11]வாக்கு மனுநீதி யாய்நடந்து

[12]கன்னிக் குமரளித்துக் கலியாண மும்முடித்து
[13]நன்னெறி நூலாராயும் நல்லோர் பெரியோர்க்கும்
கோதான மீந்து குருபூசைகள் நடத்தி
மாதான மீந்து [14]மகாபூசை கள்நடத்தி

ஆயிரம் [15]பார்ப்பார்க்கு அகரம் முடித்துவைத்து
வாயுர [16]மாகவொரு வாக்குரைக் காதபடிக்கு
மீறியுல குதனில் வேதனைகள் [17]வாராமல்
ஆறிலொ ருகூறும் அசையா மணிநிறுத்தி

---

3600. நாதன் — சிவபெருமான். 3601. மாது — பெண். துயர் — துன்பம். 3602. ஓதுமறை — வேதப்பொருள். வேதியர் — பிராமணர். வாணர் — புலவர். 3603. சத்திரம் — அன்னசாலை. 3604. பூசை — ஆராதனை. ஆலயம் — தேவாலயம்; கோயில். 3606. ஈசன் — சிவன். இசைவு — விருப்பம். 3607. ஆசாரம் — சாஸ்திர முறைப்படி ஒழுகுகை. அரன் — சிவன். 3608. நேசம் — அன்பு. நிதம் — தினமும். 3609. இரப்போர் — யாசிப்போர். பரப்போர் — கேட்போர். இரந்து — யாசித்து; கேட்டு. 3610. நிரப்பாக — நிறைவாக. நிதி — பொன். வெகுவாய் — மிகுதியாக.

**பாடவேறுபாடு :** 1. மனக்கவலை 2. ஓதும்மறை யோர்க்கும் உயர்ந்ததமிழ் 3. செய்துவெகு சுவாலயங்க ளும்முடித்து 4. கோதானமும் பாலுங் குறையாம லேகொடுத்து 5. னாகவேதான் 6. இதமாக வேமுடித்து 7. அரனடியை போற்றி செய்து 8. ஓசாமல் பூசை உடையவற்குத் தான்நடத்தி 9. அவர்களுக்கு 10. தான்கொடுத்து 11. செல்வம் வளமாக வேநடத்தி 12. கன்னி மாருக்குக் 13. பொன்னின் முடிசூடி புவியை யரசாண்டு 14. மகாதே வரைத்தொழுது 15. பேர்க்கு அகரம்முடித் தேகொடுத்து 16. மாய்நல்ல மகாபூசை கள்நடத்தி 17. செய்யாமல்.

Agricluture, the mainstay, was given momentum,
The tears of the women were wiped,
Priests well-versed in lores and
Pundits proficient in Tamil were honoured.
Choultries were built,
Regular worship offered in temples
A separate shrine built for Siva,
Beggars were provided for
To lead comfortable lives,
Parks established
To commemorate Siva and Tirumāl
Flowers offered in worship.
Ponds built here and there,
Refuge given to hundred brahmins
And judiciary acted fair and sound.
For the elderly and scholarly
Preoccupied with literary research
Cows and elephants were given,
*Pujas* were done on a grand scale,
One sixth of the produce alone
Taken by the king justly,
Which prevented shameful talk,
A Bell of justice erected.

சிவமென்ற சொல்லும் திருச்சங்கு [1]நாதமுடன்
தவமென்ற [2]அஞ்செழுத்தும் சாற்றுமறை யோதுவதும்
நடக்குதே பூவாச நாதனுட சீமையிலே
அடக்கமாக வுலகை [3]அடக்கி யரசாண்டு

பொன்னின் முடிசூடி பொல்லாங்கு வாராமல்
நன்னய மாகவுலகை நாடோறு மாண்டுவர

## பூவாசநாதனின் நீதியை சிவன் தேவிக்கும் தேவர்களுக்கும் உரைத்தல்

செங்கோல் [4]செலுத்தி திசைகளெல் லாம்வாழ்த்த
மங்காத கீர்த்தி வளர்ந்துவரும் [5]நாளையிலே

ஆக முருகி [6]அரனடிக்கு அன்புசெய்து
தாகமாய் பூவாசன் சாற்றிமல ரிட்டிறைஞ்சி
நந்தாவனங் கள்வைத்து நல்லதடா கம்வகுத்து
சிந்தை மகிழ்ந்து சிவன்திருமா லானவர்க்கும்

பூவாச நாதன்வெகு புண்ணியங்கள் செய்வதெல்லாம்
தேவுலகிற் செம்பொற் றிருக்கயிலா சந்தனிலே
நாதனருள் பூவாச நாதன்நடத் தும்நீதம்
மாதயவு டனறிந்து மகாதேவ ரன்னேரம்

அறிந்துபர மேஸ்வரிக்கு ஆதிசிவ மேதுரைப்பார்
செறிந்தபுக ழானதொரு [7]தேவர்முனி வர்களுக்கும்
வல்லாமை யுள்ளமகா தேவ [8]ரோடிருக்கும்
எல்லார்க்கும் நன்றாய் [9]இயல்பாயு ரைத்தபின்பு

---

3623. நாதம் — இசைப்பாட்டு. 3624. தவம் — புண்ணியம். அஞ்செழுத்து — நமசிவாய என்ற ஐந்து எழுத்துக்களான மந்திரம். மறை — வேதம். 3625. சீமை — தேசம். 3626. அடக்கம் — அமைதி. அடக்கி — கீழ்ப்படுத்தி. 3627. பொல்லாங்கு — தீது; குற்றம். 3628. நன்னயம் — உபசாரம்; நன்மை. நாடோறும் — நாள்தோறும். 3629. செங்கோல் — அரசாட்சி. 3630. மங்காத கீர்த்தி — குறையாத புகழ். 3631. ஆகம் — மனம். அரன் — சிவன். 3632. தாகம் — விருப்பம். மலரிட்டிறைஞ்சி — மலர் சார்த்தி தாழ்தல். 3633. நந்தாவனம் — பூந்தோட்டம். தடாகம் — குளம். வகுத்து — உண்டாக்கி. 3636. தேவுலகு — தெய்வஉலகு. 3637. நாதன் — சிவன். நீதம் — நீதி. 3638. மா — பெருமை. மகாதேவர் — சிவன். 3639. பரமேஸ்வரி — பார்வதி. ஆதிசிவம் — சிவன். 3640. செறிந்த — நிறைந்த; மிகுந்த. 3641. வல்லாமை — பேராற்றல்.

பாடவேறுபாடு: 1. வாசகமும் 2. புண்ணியமும் சாற்றுமாலை ஏற்றுமாலை 3. ஆண்டிருந்தார் இப்படியே 4. வளர் திசைகள் எங்கும் தான் இலங்க 5. நாளதிலே 6. அரனடியை போற்றிசெய்து 7. சிவதேவர்களான வரும் 8. ரிடத்தில் வாழும் 9. இயல்பாய நிந்தபின்பு.

In the temples and shrines
Along with the holy conch
The recital of the five letters
*Namaccivāya*
Pleasingly reverberated.
Thus ruled Pūvācanāṭaṉ
Without any scandal,
Rectitude being his watch word.

### His just rule commended by Siva

Praise poured in for his just rule
From all directions;
His fame grew day by day.
With great fervour and devotion
He offered worship to Siva
Built gardens and dug ponds
His noble and charitable deeds came to the notice of Siva
Who passed it on to Paramēswari
And to others who dwelt with him.

## பூவாசநாதனை அழைத்து வரச்சொல்லுதல்

ஆமையுரு வானமுன்னாள் அம்புவியிற் போனவன்றன்
பாவமது [1]தீர்ந்ததென்று பரமேஸ் வரனாரும்
திருமா லுடன்[2]பிரம தேவரையுந் தானழைத்து
பெருமான் [3]கருமம் பெருமையுட னேவிளம்பி

தரும புரமான சம்மந்த மாநகரில்
வரமே மிகுந்துவளர் மன்னன்பூ வாசனுக்கு
[4]நூறுந்திகைந் தவர்க்கு நூறாண்டு சென்றதுவே
கூறும் உலகில் [5]குவலயவாழ் வும்முடிந்து

நாகமுனி மைந்தனிடம் நமன்றூதர் செல்லாமல்
தாகமுடன் நீங்களவன் தவமெல்லா மாராய்ந்து
ஏமனுட தூதுவர்கள் இவனிடத்தில் செல்லாமல்
பூமண்ட [6]லாதிபதி பூவாச நாதனைத்தான்

பத்தியெல்லாம் சோதித்துப் பாவையர்கள் நால்வருட
முத்திபெறுங் கற்பறிந்து முழுஞான மங்கிலியம்
[7]வாலமதி போலிலங்கும் மங்கையர்கள் நால்வரையும்
கோலமணம் புணர்ந்த [8]கொற்றவன்றன் கையதனால்

பூட்டிவைத்த மங்கிலியம் [9]பொருப்புநிக ழாதபடி
கூட்டோடே நம்மிடத்தில் கொண்டுவர வேணுமென்றார்.

## தேவர்கள் சம்மந்தமாநகரம் வருதல்

**விருத்தம்**

109. கயிலை யாதி பரனாதன் கடுகக் கொண்டுவா வெனவுரைக்க
அயில்மா புரத்து வமரர்களும் அரனா ரருளு முரைகேட்டு
ஒயிலா கக்கூட் டிவாரோமென உம்பர் முனிவர் தவத்தியரும்
தயவாய் தரும புரமான தலத்தை நோக்கி நடந்தனரே.

3643. ஆமையுரு — ஆமைவடிவம். அம்புவி — அழகான பூமி. 3644. பாவம் — தீவினைப்பயன். பரமேஸ்வரன் — சிவன். 3646. பெருமான் — பெருமையிற் சிறந்தோன்; பூவாசநாதன். கருமம் — செயல். விளம்பி — கூறி. 3648. வரம் — தெய்வம் முதலியவற்றாற் பெரும்பேறு. 3649. நூறு — நூறு என்ற எண். திகைந்த — முடிவுற்ற. நூறாண்டு — நூறு வருடங்கொண்ட காலளவு. 3650. குவலயம் — பூமி. 3651. நமன்றூதர் — யமதூதர். 3652. தாகம் — விருப்பம். தவம் — புண்ணியம். 3653. ஏமன் — யமன். 3654. பூமண்டலம் — பூலோகம்; பூமி. ஆதிபதி — அரசன். 3655. பத்தி — பக்தி. சோதித்து — விசாரித்து. பாவையர் — பெண். 3656. முத்தி — மோட்சம். கற்பு — பதிவிரதா தருமம். முழுஞானம் — முழு அறிவு. மங்கிலியம் — தாலி. 3657. வாலமதி — இளஞ்சந்திரன்.

**பாடவேறுபாடு :** 1. தொலைந்ததென்று 2. அந்த தேவர்களை யுமழைத்து 3. தன்னுடனே பிரியமுடனேவிளம்பி 4. நூறும் திகைந்துநல்ல நூறாண்டு சென்றவற்கு 5. குவலயத்தி லேவாழ்ந்து 6. லாதியென்ற 7. மாலமதி போல்நல்ல 8. குறித்தவன் கையாலே 9. பொருப்பு நிகழாமல்.

### Siva wants Pūvācanātan to be brought

Paramēsvara in his infinite mercy
Told Tirumāl and Piraman
That the sins of Pūvācanātan
Had been totally absolved
And that he had reached
The proverbial hundred years.
Let not the messengers of Death
Go to fetch him.
Make a deep study of his meritorious acts
Which should not get be littled
By the routine visit of Yama's underlings.
Since deliverance is in the offing
For him and his chaste wives,
Let not Yama's emissaries
Sully the sanctity of the *Tāli* tied.
I beseech you to proceed forthwith personally
And fetch Pūvācanātan and his wives
All together
With honour and dignity befitting noble souls.

### The Tēva's go to Cammantamānakar

109. Fetch him fast said the Lord of Kailas
And the Gods, saints and women devotees
Lined up in orderly array
Walked towards the Cōla kingdom
Sanctified by the rule of king Pūvācanātan.

நடை

110 வானுலகில் தேவர்பல வாத்தியங்கள் தான்முழங்க
[1]ஏனவர்கள் கோடி இருஷிபல தேவர்களும்
தானவர்கள் கோடி தவத்தோர் பலகோடி
சேனைபடை போல திரண்டொன்றா கக்கூடி

கிம்புருடர் கந்தருவர் கணநாத ரானவரும்
தம்புருகை வீணையுடன் தாளமத்த ளமொலிக்க
[2]நற்பவுச தாயவனை நாதனிடம் கொண்டுவர
புஷ்பவா னத்தேரும் புரவிபச்சை வாகனமும்

தெய்வரம்பை மாதர்களும் செம்பொன்மணி பொற்றேரும்
மெய்பரவுந் தேவர்களும் வெகுமான மாகவேதான்
அசையா மணிநிறுத்தி [3]ஆண்டநல்ல சோழனைத்தான்
தயவாகக் கொண்டுவந்த தன்மையது போலிவனை

கூட்டிவர யீசன் கொடுத்த விடையதனால்
தாட்டிகமா கத்தேவர் சங்கரனா ரைத்தொழுது
மாவாசனை மிகுத்து மண்ணுலகில் போயிருந்த
பூவாச நாதனைத்தான் போய்க்கூட்ட வேணுமென்று

கருணைக் குறுமுனியும் கலைக்கோட்டு மாமுனியும்
அருணகிரி [4]நாதன்பொன் னம்பல நாதருடனே
மந்திரஞ்சேர் தெய்வரம்பை [5]மார்கவரி வீசிவர
இந்திரலோ கத்தைவிட்டு இணங்கிய பூலோகமதில்

மாறாத யோகமுனி மாருடனே வானவரும்
வாறார் சிவன்விடுத்த வானுலகில் தேவர்களும்

---

3666. ஏனவர் — வானவர்; தேவர். கோடி — நூறு ஆயிரம். இருஷி — முனிவர். 3667. தானவர் — வித்தியாதரர். தவத்தர் — முனிவர். 3668. சேனைபடை — பெருங்கூட்டம். 3669. கிம்புருடர் — பதினெண்கணத்துள் ஒருவராய் மானுட முகமும் குதிரையினுடலும் படைத்த தேவசாதியார். கந்தருவர் — பதினெண்கணத்துள் ஒரு தொகுதியார். கணநாதர் — சிவகணத்தலைவன். 3670. தம்புருகை — பக்க சுருதிக்கு உதவும் ஒரு நரம்புக்கருவி. வீணை — யாழ்வகை. தாளம் — கைத்தாளக் கருவி. 3672. புஷ்பவானத்தேர் — பூக்களால் அலங்கரிக்கப்பட்ட வாகனத்தேர். புரவி — குதிரை. பச்சை — பசப்பு நிறம். வாகனம் — ஊர்தி. 3673. தெய்வரம்பை — தேவலோகத்து நாடக மகளிரில் ஒருத்தி. செம்பொன் — சிறந்தபொன். பொற்றேர் — பொன்னாலான தேர். 3674. மெய்பரவும் — மெய்யாக துதிக்கும். வெகுமானம் — பெருமதிப்பு. 3675. அசையாமணி — ஆராய்ச்சிமணி. ஆண்ட — அரசு செய்த. சோழன் — மனுநீதிச் சோழன். 3677. விடை — அனுமதி. 3678. தாட்டிகம் — தைரியம்; பெருமிதம். சங்கரன் — சிவன். 3679. மாவாசனை — மிகுந்த வாசனை. மிகுத்து — பெருகுதல். 3680. கூட்ட — அழைக்க. 3681. கருணை — கிருபை. குறுமுனி — அகத்தியர். கலைக்கோட்டு முனி — ருசியசிருங்கமுனிவர். 3682. அருணகிரிநாதர் — திருப்புகழ் முதலியவற்றின் ஆசிரியர். 3683. மந்திரம் — கள். கவரி — சாமரை. 3685. வானவர் — தேவர்.

**பாடவேறுபாடு:** 1. என்றவர்கள் கேட்டு இருஷிகிண நாதர்களும் 2. நற்பவுசி பாலகனை நன்றாகக் கொண்டுவந்து 3. ஆண்டிருந்த 4. யாருடனே அல்லோருந் தான்வரவே 5. யர்கவரி வீச.

110. The Heavenly regions reverberated
With sonorous instrumental music
Gods, saints and angels of various ranks
Vityātars, Kimpurutās and Kantarvās
The demon battalion of Lord Siva
Against the boom of drums
The strum of stringed instruments
Chariots of gold and flowers
Green carriages drawn by horses
Danseuses like Rampai
Fanning with the fur of roes,
Sages like Akastiya, the short
Rishyasringa, Arunakirinātar
And a host of other pious men
Went towards the earth
From the land of the Gods
Verily like an army on the march
To fulfil the wish of Lord Siva
Who wanted Pūvācanātan̲ to be brought
With ceremonial pomp and splendour.

## பூவாசநாதனை அழைத்து வருதல்

சந்தோச மாகவேதான் சம்மந்த மாநகரில்
வந்தாரே [1]பூலோகம் வானுலகில் தேவரெல்லாம்
மெய்யாக ஈஸ்வரன்தன் மேவும்பதி யில்புகுந்து

சேவித்துக் கொண்டு சிவமாலை யும்எடுத்து
பாவித்து நன்றாய்ப் பதிபுகுந்த வேளையிலே
தன்னை அறியாமல் தவப்பேறு வந்ததென்று
உன்னி மனதில் உடனறிந்தா ரம்மானை.

மனைவியர்தன் கற்புகளும் மாதவங்க ளுமறிந்து
அனவரதம் கல்யாணம் ஆமெனவே அம்பரத்தோர்
அறிவு மயங்காமல் ஆயுளுமோ குன்றாமல்
பொறிபோ லெடுத்தவர்கள் புஷ்பவானத் தேரதிலே

ஏற்றியே [2]போனார் இமையவர்கள் பூச்சொரிந்தார்
போற்றினார் [3]வானில் பொழிந்ததுவே புஷ்பமழை
நாட்டமதா யீஸ்வரனார் நல்லகயி லாசமதில்
கூட்டோடே [4]கொண்டுவிட்டார் கும்பிட்டான் பூவாசநாதன்.

## சிவன் பூவாசநாதனிடம் மொழிதல்

**விருத்தம்**

111 பொன்னின் கயிலைக் கிரியிடத்தில் [5]புகழ்ந்து சிவனும் பார்வதியும்
முன்னுந் தேவர் [6]தொழுதேற்ற முதல்வ னருள்வோ னவ்வேளை
துன்னும் [7]புகழ்சே ராமையுரு தொலைத்து வந்த மாதவனே
[8]முன்னே வாவா வெனவழைத்து முக்கண் ணனுமே மொழியலுற்றார்.

---

3689. மேவும்பதி — தங்கும் பூமி. 3690. சேவித்து — தரிசித்து; வணங்கி. 3691. பாவித்து — தியானித்து. பதி — பூமி; சமமந்தமாநகரம். 3692. தவப்பேறு — புண்ணிய வாழ்வு; மோட்ச வாழ்வு. 3693. உன்னி — தியானித்து. 3694. மாதவம் — பெருந்தவம். 3695. அனவரதம் — எப்பொழுதும். அம்பர் — வானோர்; தேவர். 3696. ஆயுள் — வாழ்நாள். குன்றாமல் — குறைவில்லாமல். 3697 பொறி — பதுமை. புஷ்பவாகனத்தேர் — பூக்களால் அலங்கரிக்கப்பட்ட வாகனத்தேர். 3698. இமையவர் — தேவர். 3699. புஷ்பம் — மலர். 3700. நாட்டம் — விருப்பம். 3701. கூட்டோடே — அனைவரோடே. கும்பிட்டான் — கைகுவித்து வணங்கிட்டான். 3702. கிரி — மலை. 3704. துன்னும் — மேவும். மாதவன் — பெருந்தவமுடையவன். 3705. முன்னே — முன்பாக. முக்கண்ணன் — மூன்று கண்களை உடையவன்; சிவன்.

பாடவேறுபாடு: 1. உலகில் வானவர்கள் எல்லோரும் 2. கொண்டு போனார் இயல்பாக அம்மானை 3. அன்ன சுற்றம் புவியிடத்தி லம்மானை 4. சொர்க்கலோகர் கொண்டுவந்தா ரம்மானை 5. பொறுப்பாய் 6. புகழ்ந்தேற்ற முதல்வோ னிருக்கும் வேளையிலே 7. புகழ்சே ராமையருந் தொலைத்துப் பாவந்தனைப் போக்கி 8. மன்னும் மொழிசேர் போகர் வாழுங் கயிலை பதஞ்சேர்ந்தார்.

## Bringing Pūvācanātaṉ with pomp and ceremony

All the Gods reached Cammantamānakar
In high spirits
Visited the shrine of Siva
Offered heartfelt prayers
Counting the holy beads
While Pūvācanāntaṉ who was in meditation
Knew intuitively
That deliverance had at last come!
The puprity of his wives
And the austere life they led
Had effected an eternal festivity
Whcih the king gods approved.
Without any signs of ageing and senility
Or damage to longevity
He was gently lifted like a doll
And placed in the ceremonial chariot,
While the Gods showered flowers.
When the whole family touched Mt. Kailas
The abode of Lord Siva
Pūvācanātaṉ saluted the lord in gratitude.

## Siva addresses Pūvācanātaṉ

111. In Mount Kailas
When the Gods were offering obeisance
To Siva and pārvati,
The three-eyed lord spoke to the tortoise
"Come forward blessed one
Who has shed his shell
Thanks to severe penance and austerities."

## சிவன் அருள் புரிதல்

**நடை**

112 முன்னாளில் பூவை முகர்ந்த பிழைபொறுத்தோம்
என்னாளும் நந்தமக்கு ஏற்ற மலரெடுத்து
சாற்றி நமதடியை தாமே மிகப்பணிந்து
போற்றி யிருமென்று புனிதன ருள்புரிந்தார்
பூவாச நாதன் புரிசடையோன் பொற்பாதத்தில்
ஆவாசை யாக அமர்ந்திருந்தா னம்மானை.

## பூவாசநாதன் சிவன்பாதம் சேர்தல்

**விருத்தம்**

113 தேவர்கள் வந்து பூவை செய்மணங் கொண்டான் றன்னை
பாவமொன் றில்லா மோட்ச பரகதி சேர்ந்தாட் கொள்ள
நாகமா முனிவன் மைந்தன் நல்மணஞ் செய்பெண் நாலும்
ஆகமாங் குடும்பத் தோடு அரனடி யின்கீழ் சேர்ந்தார்.

## சிவன் நட்சத்திரப்பதவியில் வைத்தல்

**நடை**

114 சேர்ந்து பரகதியில் தேவர்தன் பேறுபெற்று
புகழ்ந்துகயி லாசமதில் பொன்னுலகில் வாழ்ந்திருந்தார்
நாகமுனி மைந்தனையும் நட்சத்தி ரப்பதவி
வாகுபெறு ஈஸ்வரனார் வைத்தனர்கா ணம்மானை.

## பூவாசநாதன் இறையடி அடைதல்

(எ)ம்மான் திருவருளால் எப்போதும் நன்றாக
(க)ன்மவினை நீங்கி காசினியோர் தான்தழைக்க
வையகந் தழைத்து வளர்பயிர்கள் உண்டாகி
பொய்யா மல்மாரி பொழிந்தோங்கி யேசெழித்து

---

3706. முன்னாள் — முற்காலம். பூவை — மலரை. பிழை — குற்றம். 3707. என்னாளும் — எந்த நாளும். நந்தமக்கு — நீ எனக்கு. ஏற்ற — தக்க; விரும்பி. 3708. சாற்றி — நிறைத்து; புகழ்ந்து. 3709 புனிதன் — சிவன். 3710. புரிசடையோன் — திரண்டு சுருண்ட சடையுடையோன்; சிவன். 3711. ஆவாசை — அதிக ஆனந்தம். 3712. பூவை — பெண். 3713. பாவம் — தீவினை. பரகதி — மோட்சம். 3714. நாலும் — நால்பேரும். 3715. ஆகம் — மனம்; உடல். அரன் — சிவன். 3716. பேறு — வாழ்வு. 3717. பொன்னுலகு — தேவலோகம். 3718. நட்சத்திரப் பதவி — புண்ணியம் புரிந்தோரில் ஒருவகையினர் தம் மரணத்தின்பின் அடையும் நட்சத்திர மண்டலம். 3719. வாகுபெறு — அழகு பொருந்திய; ஒளிபொருந்திய. 3720. எம்மான் — எம்சுவாமி. 3721. கன்மவினை — தீவினைப் பயன். காசினி — பூமி. தழைக்க — செழிக்க. 3722. வையகம் — பூமி. 3723. பொய்யாமல் — நடுநிலைமையாய். மாரி — மழை.

112. After extending welcome to the tortoise
He continued to speak:
Forgiven is your sin
Of smelling a flower
In the dim past
Hereafter choose a proper flower
For worship at my feet
Which you do with humility.
On hearing these words
Pūvācanātaṉ sat at the feet
Of Siva with matted locks,
Great jubilation being his lot.

## Absolution of sins and liberation

113. Absolved of all sins
And liberated totally,
Nākamāmuṉivaṉ and his four wives
Attained to heavenly bliss
At the holy feet of Lord Siva.

## Becomes a star

114. After deliverance
Nākamāmuṉivaṉ attained to Godhood
And lived in the Golden world
Of Mount Kailas.
He was further elevated as a star
By Īsvara, the ever merciful.

## Bliss for the protagonist

Thanks to the abundant grace of Siva
Pūvācanātaṉ was rid
Of his sins, the world prospered
The crops grew fertile
The rain never failed

பூவாச நாதன் புரிசடையோன் பாதமதில்
நாமாலை சாற்றி நமஸ்கரித்துத் தான்தொழுதான்
தொழுது பூவாசன் சொர்க்கலோ கஞ்சேர்ந்தான்

## வாழ்த்து

பழுதறவே ஆமையர் அம்மானை தான்வாழி

கேட்டவர் படித்தவர் கிளைகள் தான்வாழி
நாட்டில் சைவர்வாழி நல்லதுரைமக் கள்வாழி
வாட்டமுறச் சேர்ந்தோர் வையகத்தோர் தான்வாழி
இட்டமுடன் எங்கள்குரு எல்லோர்க்கும் புத்திசொல்லி

(தப்ப)ட்டை யானந்தம் தப்பாம லேவாழி
(ஆறுமு)க நாடார் அண்ணாவி தான்வாழி
....ளியன் அண்ணாவி அவர்மெத்தவே தான்வாழி
ஆதிரபர மேஸ்வரனார் அம்மைஉமை யும்வாழி

ஆதிநா ராயணரும் அன்னலெட்சு மியும்வாழி
வள்ளி தெய்வானை வடிவேலர் தான்வாழி
சந்தமுள்ள ஈஸ்வரியும் சரசுவதி யும்வாழி
எழுதி படித்தோர் எல்லோருந் தான்வாழி

என்தந்தை தாயாரும் எப்போது மேவாழி
என்குரு அண்ணாவி எப்போது மேவாழி
பத்திர காளியம்மை பலநாளு மேவாழி
முப்பத்து முக்கோடி தேவர்முனி வர்வாழி

இதைஎழு தினவர் படித்தவர் கேட்டவர்
எல்லோரும் வாழ்க வாழ்கவே.

ஆமையர் அம்மானை முடிந்தது குருவாழ்க.
குருவேதுணை. சுவாமிதுணை.

---

3724. புரிசடை யோன் — திரண்டு சுருண்ட சடையுடையோன்; சிவன். 3725. நாமாலை — வார்த்தை மாலை; வார்த்தை குணம். நமஸ்கரி — வணங்கு. 3726. சொர்க்கலோகம் — தேவலோகம். 3727. பழுதறவே — குற்றமில்லாமலே. 3728. கிளை — சுற்றம்; இனம். 3729. சைவர் — சைவ சமயத்தார். 3730. வாட்டமுற — வருத்தமுற. 3731. இட்டம் — விருப்பம். குரு — ஆசிரியர். புத்தி — அறிவுரை. 3732. தப்பட்டை — சிறுபறைவகை. ஆனந்தம் — பேரின்பம். தப்பாமல் — குறைவில்லாமல். 3733. அண்ணாவி — ஆசிரியர்; உபாத்தியாயர். 3738. சந்தம் — அழகு. சுவடிச்சொல்: 3737. தெய்வனை.

And Pūvācanātaṉ
Prostrated at the feet of Siva
With matted locks,
Sang a litany
And ascended to heaven.

## Greetings

Long live: The story of the tortoise,
Those who read or hear this tale,
Saivās and the gentry,
Those crushed by sorrow,
Our revered teacher,
Āṟumuka Nāṭār Aṇṇāvi,

Lord Paramēsvara and Umai,
Āti Nārāyaṇa and Aṉṉa Lakṣmi,
Vaḷḷi and Tēvayāṉai,
Īsvari and Caracuvati,
The educated and the elite,
My father and mother
Batra Kāḷi Ammai
The gods in the pantheon
The author and the reader
Every living soul.

## The End

May my teacher prosper!
The teacher is my help.
Let God be with me!

இணைப்பு — 1

# சுவடிகள் மற்றும் அச்சுநூல்களாகக அறியப்படும் அம்மானை இலக்கியங்கள்

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங்கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 1. | அகிலத்திரட்டு அம்மானை | கு. ஆறுமுகப்பெருமாள் நாடார், அகஸ்தீஸ்புரம் | ஆ.ஆ.நி. எண்: 7, 15 | — | — | — |
| 2. | அகிலத்திரட்டு அம்மானை | அய்யா என்னும் வைகுண்டர் (1809-1851) | — | பால. இராமசந்திர நாடார் | சுவாமித்தோப்பு | 1953 |
| 3. | அசுவமேதயாக அம்மானை | — | — | அருணாசலப்பட்டர் | திருமகள் அச்சகம், சென்னை | 1976 |
| 4. | அதிரியரம்மானை | — | த.ச.ம.நூ. 546 (a) | பொ. சாம்டானியல் | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | 1986 |
| 5. | அந்தோணியர் அம்மானை | தோமையாப்பிள்ளை பட்டாங்கட்டியார் | — | — | ஆரியப் பிரகாசினி அச்சுக் கூடம், சென்னை | 1892 |
| 6. | அம்மானை | குலாம்காதர் அல்லி மரைக்காயர் | — | — | கலாரத்னாகர அச்சகம், சென்னை | 1878 |
| 7. | அர்ச் அந்தோணியார் அம்மானை | எம்.சி. அய்யாப்பிள்ளை | — | எஸ். ஜகராவ் முதலியார் | இண்டியன் அச்சகம், சென்னை | 1878 |
| 8. | அர்ச் மேரி கருத்தம்மாள் அம்மானை | அப்துல்லாசாயபு | செ.அ.கீ.சு.நூ. D. 2050 (தாள்) R. 7461 (தாள்) | வை.தே.மா.சின்ன சாமி செட்டியார் | இலட்சுமி விலாச அச்சகம், சென்னை | 1876 |
| 9 | அர்ச் யாகப்பர் அம்மானை | — | — | — | ஈழ வெளியீடு | 17-நூ |
| 10. | அரிச்சந்திரன் அம்மானை | ஏகாம்பர முதலியார், செஞ்சி | த.ப.க. 842 | கோ. பெருமாள் முதலியார் | சன் ஆப் இந்தியா பிரஸ், சென்னை | 1906 |
| 11. | அரிசுயன் சண்டை அம்மானை | ஏகாம்பர முதலியார் | — | பி.சி. கோவிந்தசாமி முதலியார் | சுந்தர விலாச அச்சகம், சென்னை | 1906 |
| 12. | அருணாசல சுவாமிகள் அம்மானை | கந்தசாமிக் கவிராயர் | — | கொ.சி. பச்சையப்ப நாடார் | சச்சிதானந்த அச்சகம், விருதுபட்டி | 1917 |
| 13. | அல்லி அரசாணி அம்மானை | — | த.ச.ம.நூ : 965 த.ப.க. : 838 | — | — | — |
| 14. | அலசலம்மானை | — | — | பொன்னுசாமி முதலியார் | இலக்குமி விலாசம், சென்னை | 1874 |
| 15. | ஆமையம்மானைக் கதை (உரைநடை) | சுப்பிரமணியதேவர் | கே.ப.கீ.சு.நூ. 8423 | — | — | — |
| 16. | ஆமையர் அம்மானை | ஆறுமுகம் | ஆ.ஆ.நி.எண் : 5 எண் : 183 | — | — | — |
| 17. | ஆமையாசான் அம்மானை (அல்லது) ஆமையரசான அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 10397 | — | — | — |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங் கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 18. | ஆரவல்லி அம்மானை | — | செ.அ.கீ.சு.நூ. R. 2232 | — | — | — |
| 19. | ஆறுமுக அம்மானை | — | த.அ.தொ.ஆ. | — | — | — |
| 20. | இராமப்பய்யன் அம்மானை (அல்லது) இராமையன் அம்மானை | — | அ) செ.அ.கீ.சு.நூ. D. 2182 D. 2183 | 1) எஸ். வையாபுரிப் பிள்ளை | சென்னைப் பல்கலை கழகம், சென்னை | 1951 |
| | | | | 2) க.ச. கமலையா | தமிழ்ப் புத்தகாலயம் சென்னை | 1980 |
| | | | ஆ) த.ச.ம.நூ. 405 (a) | 3) சி.எம்.இராமச்சந் திரஞ் செட்டியார் | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | 1950 1978 |
| 21. | (இராமர் அம்மானை (அல்லது) சீராமர் அம்மானை | — | செ.அ.கீ.சு.நூ. தாள்சுவடி கே.ப.கீ.சு.நூ. 3213 த.ச.ம.நூ. 217, 218, 219, 404 (b) | — | — | — |
| 22. | இராமாயண அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 11618 | — | — | — |
| 23. | இஸ்நாயகசஞ்சுவாமி அம்மானை | புவிமன்னசிங்க முதலியார் | — | பி. ஜோஸப் | — ஜாப்னா | 1902 |
| 24. | ஐவர் அம்மானை | — | — | அ. விநாயகமூர்த்தி | பாலமுருகன் பதிப் பகம், மதுரை | 1981 |
| 25. | ஓய்வு நாளம்மானை | மைக்கேல் திருவடிதாசர் | — | எம். சவரிராயப்பிள்ளை | — பாளையங்கோட்டை | 1903 |
| 26. | கஞ்சன் அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 10366 C | | | |
| | | | த.ச.ம.நூ. 396, 387, 398, 399 | — | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | — |
| 27. | கதிர்காமத்து அம்மானை (முருகவேள் பற்றியது) | — | — | — | கொழும்பு சரஸ்வதி புத்தகசாலை | — — |
| 28. | கலசலம்மானை | — | — | மா. பொன்னுசாமி முதலியார் | இலட்சுமி அபிலானி அச்சகம், சென்னை | 1874 |
| 29. | காஞ்சி மன்னன் அம்மானை | — | த.ச.ம.நூ. 407, 694 (a) | ம. சீராளன் | ஸ்ரீவாணி விலாச அச்சகம், ஸ்ரீரங்கம் | 1970 |
| 30. | காட்டுப்பாவாசாகிப் அம்மானை | முத்து முகம்மது புலவர் | — | சையது இபுராஹிம் ராவுத்தர் | மீனலோசனி அச்ச கம், தேவகோட்டை | 1909 |
| | | | | முகம்மது இபுராஹிம் | மனோன்மணி விநோத அச்சுக் கூடம், சென்னை | 1900 |
| 31. | காராளர் அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 11601 D | — | — | — |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங் கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 32. | கித்தேரியம்மாள் அம்மானை | வீரமாமுனிவர் | செ.அ.கீ.சு.நூ. D. 2049 R. 7460 த.ப.க. 831 | வை.தே.மா.சின்னசாமி செட்டியார் — | 1.இலட்சுமி விலாச அச்சகம், சென்னை 2. சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை | 1876 1894 1977 |
| 33. | கிருஷ்ணவதார அம்மானை (அல்லது) கிருஷ்ண அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 8036, 7958, 7981, 7992, 5649, 5659, 8124, 11109 | — | — | — |
| 34. | குமாரசாமி நளன் அம்மானை | குமாரசாமி | த.ப.க.எண்.25 | — | — | — |
| | | | கே.ப.கீ.சு. நூ. 10366 | — | — | — |
| 35. | குருகேஷத்திர அம்மானை | துரைசாமி | கே.ப.கீ.சு.நூ. 6680 B | — | — | — |
| 36. | குருஷேத்திர அம்மானை | — | — | தி. சண்முகம்பிள்ளை | திருமகள் விலாச அச்சக்கூடம், சென்னை | — |
| 37. | கோவலன் கதை அம்மானை | — | க.தே.நூ. 2989 | — | — | — |
| 38. | சாரங்கதாரன் அம்மானை | ஏகாம்பர முதலியார் | — | துளசிங்க முதலியார் | சுந்தர விலாச அச்சகம், சென்னை | 1906 |
| 39. | சித்திரபுத்திரர் அம்மானை | சிதம்பரநாதன், அதி வீரராமன் பட்டிணம் | த.ச.ம.நூ. 400, 401, 402, 403, 404(a), 408 (b) | கி. கோதண்டபாணி | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | 1986 |
| 40. | சிவகங்கைச் சரித்திர அம்மானை | செல்வமுருகு, மாறைவளர் | செ.அ.கீ.சு. நூ. R. 3436 (தாள்) | தி. சந்திரசேகரன் | அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகம், சென்னை | 1955 |
| 41. | சீரங்க மஹாத்மியம் அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 7991, 10352, 10448, 10467 | — | — | — |
| 42. | சிவக அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 8248 | — | — | — |
| 43. | சீவகசிந்தாமணி அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 8825, 10366 | - | — | — |
| | | | த.ச.ம.நூ. 1082 | புலவர்.வீ. சொக்க லிங்கம் | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | 1982 |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங்கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 44. | சுசீலவள்ளல் அம்மானை | குமாரசாமி கவிராசன் | த.அ.தொ.ஆ. | எஸ். சௌந்தர பாண்டியன் | தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை | 1981 |
| 45. | சுந்தரி அம்மானை | — | கே.ப.கீ.சு.நூ. 11604 | — | — | — |
| 46. | சுந்தரி கல்யாண அம்மானை | வால சுப்பிரமணிய பிள்ளை | — | பொன்னுசாமிபிள்ளை<br>" | இராமசந்திர விலாச அச்சகம், மதுரை<br>" சென்னை | 1906<br>1907 |
| 47. | சுந்தரி கல்யாணம் அம்மானை | சுப்பிரமணிய தேவர் | கே.ப.கீ.சு.நூ. 8413 | — | — | — |
| 48. | சூலக்கல் மாரியம்மன் அம்மானை | மாதர்சா ராவுத்தர் | — | முத்துசாமிப்பிள்ளை | கோபால விலாச அச்சகம், பொள்ளாச்சி | 1909 |
| 49. | செலவன் அம்மானை | சுப்புலட்சுமி அம்மாள் | — | இராமசாமிநாயுடு | கமர்சியல் அச்சகம், சென்னை | 1919 |
| 50. | செழுகை அம்மானை | எஸ்.எஸ். இராமசாமி பிள்ளளி | — | இ. சங்கரசுப்புபிள்ளை | சைவப் பிரகாச அச்சகம், தூத்துக்குடி | 1918 |
| 51. | சோழனம்மானை | இலக்குமி நாராயணப் புலவர் | — | அழகுநம்பி கவிராயர் | தமிழ்ச்சங்கமுத்திர சாலை, மதுரை | 1920 |
| 52. | ஞான அம்மானை | குமாரதேவர் 18ஆம் நூ | செ.அ.கீ.சு.நூ. D 1798<br>த.ச.ம.நூ.553(a) | கோ. வடிவேலு செட்டியார் | மதராஸ் ரிப்பன் அச்சு யந்திரசாலை சென்னை | 1904<br>1904 |
| 53. | ஞான சௌந்தரியாள் அம்மானை | சி. மயிலுப்பிள்ளை | செ.அ.கீ.சு.நூ. R. 9743<br>த.அ.தொ.ஆ. | —<br>டாக்டர் தி. நடராஜன் (உரையுடன்) | —, கொழும்பு<br>தமிழ் இலக்கியக் கழகம், திருச்சி | 1890<br>1979 |
| 54. | தங்கவேல் அம்மானை | குருசாமிப் புலவர் | — | குருநாதன் பண்டிதர் | முகமதியர் பிரஸ், சென்னை | 1913 |
| 55. | தமிழ் அம்மானை | — | — | சுந்தரசண்முகனார் | தனித் தமிழ்க் கிளர்ச்சி, புதுவை | 1948 |
| 56. | தமிழறியும் பெருமாள் அம்மானை | — | — | அரங்கசாமி நாயக்கர் | கலாத்சாகர அச்சுக் கூடம், சென்னை | 1906 |
| 57. | தருமர் அசுவமேதயாக அம்மானை | அருணாசலஞ் செட்டியார் | — | க.வே. ஆறுமுக முதலியார் | பரப்பிரம்ம முத்தி ராட்ச சாலை, சென்னை | 1878 |
| 58. | திருவம்மானை | மாணிக்கவாசகர், 9-ஆம் நூ | கே.ப.கீ.சு.நூ. 11469 E | கி. முனியப்ப முதலியார் | மெய்ஞான விளக்க அச்சுக்கூடம், — | 1911 |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங்கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 59. | திருமுருகரம்மானை | பெருமாள்பிள்ளை | — | இரா. பொன்னுசாமிப் பிள்ளை | விஸ்வ குலோத்ரன் அச்சகம், சென்னை | 1916 |
| 60. | திருவிளையாடல் அம்மானை | நாகலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி, 19நூ | — | திருத்தணிகை சரவணப் பெருமாளையர் | — | 1938 |
| 61. | துரௌபதை அம்மானை | — | த.ப.க. 584 | — | — | — |
| 62. | துரௌபதை துகிலுரிதல் அம்மானை | இராமலிங்கம் பிள்ளை | — | எஸ்.முத்தையாப்பிள்ளை | மீனாம்பிகை அச்சகம், மதுரை | 1904 |
| 63. | தேவமாதா அம்மானை | மேரி | த.ச.ம.நூ.546 (a) த.ப.க. 830 | — 1893 | — | |
| 64. | நபி அவதார அம்மானை | சையதுமீரான் புலவர் | — | தி.பரசுராம. முதலியார் | பரப்பிரம்ம முத்தி ராட்ச சாலை, சென்னை | 1878 |
| 65. | நளச்சக்கரவர்த்தி அம்மானை | — | — | சின்னசாமிப்பிள்ளை | வாணிவிலாச அச்சுக்கூடம், சென்னை | 1907 |
| 66. | நாலுமந்திரிக்கதை அம்மானை | பஞ்ஞால நாதர் | த.ச.ம.நூ. 112 | — | — | — |
| 67. | பசுக்கதை அம்மானை | குழந்தைவேலுப் பிள்ளையார், தி.மு. | — | பொன்னுசாமிப்பிள்ளை | மட்டுவார் குழலாம் பாள் அச்சகம், சென்னை | 1909 |
| 68. | பஞ்சரதி அம்மானை | சி.வி. வேல்முருக பண்டிதர் | — | — | காசிம் அச்சகம், சென்னை | 1892 |
| 69. | பட்டக பயரம்மானை | முகம்மது பாவலப்பை | — | — | மட்டுவார். குழலம்மை அச்சகம், திருச்சி | 1915 |
| 70. | பத்திரகிரியார் அம்மானை (உரைநடை) | — | கே.ப.கீ.சு.நூ. 9184 A | — | — | — |
| 71. | பப்பரத்தியார் அம்மானை | முகமது இபுராஹிம் | — | ஸி. நாராயணசாமி முதலியார் | பிரபாகர அச்சுக் கூடம், சிந்தாதரிப் பேட்டை, சென்னை | 1874 |
| | | | | தி. பரசுராமமுதலியார் | பரப்பிரம முத்திராட்ச சாலை, சென்னை | 1878 |
| 72. | பரசமயக் கோளரியார் திருவம்மானை | அங்கப்ப நாவலர், 19நூ | — | தி. கேசவாசாரியார் | ஸ்ரீமட்டுவார் குழலாம் பாள் அச்சுக்கூடம், சென்னை 1899 | |
| 73. | பவளக்கொடி அம்மானை | — | செ.அ.கீ.சு. நூ.R. 2045 R. 2046 | — | — | — |
| 74. | பழமறைப்பொருளம்மானை | — | — | — | தமிழிலக்கிய கழகம், — | 1962 |
| 75. | பழனிவேலரம்மானை | — | த.ச.ம.நூ. சுவடி விவர அட்டவணை நூல் தொகுதி 1ல் ப. 468 | — | — | — |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங் கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 76. | பாகவத அம்மானை | அ. சங்கரமூர்த்திக் கோனார், அசுவங்குத்தி | த.ப.க. 1099 | — | — | — |
| 77. | பார்சுவநாதர் அம்மானை | திருமறுமார்பன் | த.ச.ம.நூ. 1082 | புலவர் வீ. சொக்க லிங்கம் | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | 1980 |
| 78. | பாரத அம்மானை (அ) மகாவிந்தம் எனும் பாரத அம்மானை | கிருஷ்ணன், வல்லம்ப நாட்டில் செஞ்சை நகரத்தினர் 18-19 நூ | அ) செ.அ.கீ.சு. R. 562, R. 2206 (தாள்) R. 4295 ஆ) த.ச.ம.நூ. 59,60, 61, 62, 63, 756, 1375 இ) த.ப.க. 1403 ஈ) கே.ப.கீ.சு. நூ. 6671, 7995, 8056, 8126, 8182, 9584, 10364, 11108, 11416, 11617 உ) ஆ.ஆ.நி. எண்:1 | — | — | — |
| 79. | புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை | ஆனைகாத்த பெருமாள் | உ.த.ஆ.நி. 13, கே.ப. கீ.சு.நூ. 7951 | மொ. மருதமுத்து | உலகத்தமிழ் ஆராயச்சி நிறுவனம், சென்னை | 1995 |
| 80. | புலந்திரன் களவுகன்னி அம்மானை | — | ஆ.ஆ.நி. 246 | — | — | — |
| 81. | புவனேந்திரன் அம்மானை | சின்னச்சரவணப் பெருமாள் கவிராயர், 20நூ | — | — | புவனேஸ்வரி அச்சுக் கூடம், சென்னை | — |
| 82. | பூங்காவனப் பிரளயம் அம்மானை | புலவர் சாமுவேல் வேதநாயகம் தாமஸ் | — | கு. அருணாசலக் கவுண்டர் &தி. பாக்கிய முத்து | கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை, | மு.ப.1887 1978 |
| 83. | பெருமாள் அம்மானை | — | த.ப.க. 850-1, 1401 | — | — | — |
| 84. | பொன்னர் சங்கர் அம்மானை | வாரணாசிக் கவிராயர் | — | கருப்பண்ண பிள்ளை உபாத்தியாயர் | சென்ட்ரல் அச்சுக் கூடம், சென்னை | 1871 |
| | | | | ” | ரெட்ரஸ் அச்சகம், ஈரோடு | 1891 |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங்கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 94. | மீனாட்சி திக்விஜய அம்மானை | மீனாட்சிதாசன் எனும் அய்யலு நாயக்கர் | செ.அ.கீ.சு.நூ. R. 2559 | — | — | — |
| 95. | முடிபுகழ்ந்த அம்மானை | — | — | திருமலைக்கொழுந்து பிள்ளை | பூவாணிப்பதிப்பகம், குமரி மாவட்டம் | 1983 |
| 96. | முத்திவழி அம்மானை | சுவிகரனார், ஆழ்வார் தோப்பு | — | கு. அருணாசலக் கவுண்டர் | கிறிஸ்தவ இலக்கியச் சங்கம், சென்னை | 1983 |
| 97. | மூவரம்மானை | கருணானந்த சுவாமிகள் | செ.அ.கீ.சு.நூ. D. 1811, D. 1812 | அ) சி.நாராயணசாமி முதலியார் | பிரபாகர அச்சுயந்திர சாலை, சென்னை | 1874 |
| | | | உ.வே.சா.நூ. 852 B | ஆ) ஆறுமுக முதலியார் | திருமகள் விலாச அச்சகம், சென்னை | 1876 |
| | | | கே.ப.கீ.சு.நூ. 11527 B | இ) காசிமடம் | திருப்பனந்தாள் காசிமடம், திருப் பனந்தாள் | 1953 |
| 98. | ரூத் அம்மானை | ஏ.என்.சட்டாம்பிள்ளை | — | எஸ். ஈஸ்வரமூர்த்திப் பிள்ளை | சர்ச் மிஷின் பிரஸ், பாளையங்கோட்டை | 1884 |
| 99. | வள்ளியம்மை அம்மானை | — | த.ச.ம.நூ 110, 111, 400 (b), 408 (a) | — | — | — |
| 100. | விக்டோரியா மகாராணி அம்மானை | பெரிய சுப்பாரெட்டி யார், பால்வனம், 19ஆம் நூ | — | எஸ்.பி. இராமலிங்க சாமி | எஸ்.கே. பிரஸ், சென்னை | 1901 |
| 101. | விராடபர்வ அம்மானை | முனிசாமி முதலியார், சிறுமணவூர் | — | சிதம்பர முதலியார் | சிரோன்மணி விலாச அச்சகம், சென்னை | 1893 |
| 102. | வீரய்யன் அம்மானை | — | அ) செ.அ.கீ.சு. நூ. R 2062, R. 2064, R. 494 | | | |
| | | | ஆ) கே.ப.கீ.சு. நூ. 6680 a | | | |
| | | | இ) த.ச.ம.நூ. 997 | டாக்டர் அ.மா. பரிமணம் | தஞ்சை சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் | 1979 |
| | | | ஈ) த.ப.க. 54 | | | |
| 103. | வேதவினாவிடை அம்மானை | வேதவிநாயக சாஸ்திரியார் | — | வேதபாதகம் | Payne & Co. Madras | 1938 |
| 104. | வேதாந்த அம்மானை | — | செ.அ.கீ.சு.நூ. D. 1605, D. 1606 | — | — | — |
| 105. | வேம்பத்தூர் அய்யா அம்மானை | — | உ.வே.சா.நூ. 393 A | — | — | — |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங் கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 85. | பொன்னழகரென்னும் கள்ளழகர் அம்மானை | — | — | 1) பி.என். சிதம்பர முதலியார் | 1) — | 1924 |
| | | | | — | 2) பி. இரத்தின நாயக்கர் & சன்ஸ், சென்னை | 1972 |
| | | | | — | 3) ஸ்ரீமகள் கம்பெனி, சென்னை | 1990 |
| 86. | மகாசாத்தான் அம்மானை | — | த.அ.தொ.ஆ. (எண் தெரிய வில்லை) | — | — | — |
| 87. | மகாபாரத அம்மானை | அண்ணாவியார், அதிவீரராமன் பட்டணம் | த.ப.க. 5, 634, 849, 854, 855, 948, 1104 த.ப.க. 10180 | க. இராமசாமிப்பிள்ளை | வித்யா விநோதினி அச்சகம், சென்னை | 1903 |
| | | | | — | ஸ்ரீவித்யா வினோத அச்சுக்கூடம், சென்னை | 1876 |
| 88. | மதுரை வீரன் அம்மானை | மீனாட்சி நாவலர் | — | எஸ். முத்தையா பிள்ளை | சுந்தரவிலாச அச்ச கம், சென்னை | 1892 |
| 89. | மதுரை வீரன் அம்மானை | — | செ.அ.கீ.சு.நூ. R. 1932, D. 2179 D. 2180, D. 2181, R. 4269, R. 3045 (தாள்) கே.ப.கீ.சு.நூ. 8420, 8669, 11353, 11551. த.ப.க.1136 | அ. விநாயகமூர்த்தி | பாலமுருகன் பதிப் பகம், மதுரை | 1978 |
| 90. | மருமக்கள் துயர அம்மானை | ஏகாம்பர முதலியார் | — | பி.சி. கோவிந்தசாமி முதலியார் | சுந்தரவிலாச அச்ச கம், சென்னை | 1907 |
| 91. | மாகபுராண அம்மானை (மாகஸ்நான புராண | மணவை மூ. வீர பத்திரர் | செ.அ.கீ.சு.நூ. R. 4980, R. 5368 | தெ.பொ. மீனாட்சி சுந்தரன் | அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகம், சென்னை | 1956 |
| 92. | மாணிக்கவாசகர் அம்மானை | சங்கரமூர்த்திப் புலவர், நல்லூர், 19 ஆம் நூ | செ.அ.கீ.சு.நூ. R. 499 (a) R. 499 (b) | அ) நாகலிங்கம் பிள்ளை | நற்றமிழ் யந்திர சாலை, சென்னை | 1903 |
| | | | | ஆ) தி. சந்திரசேகரன் | அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகம், சென்னை | 1951 |
| 93. | மார்க்கண்டன் அம்மானை | மீனாட்சி தாயார் | உ.வே.சா.நூ. 916 | — | — | — |

| வ. எண் | அம்மானை இலக்கியங்கள் | ஆசிரியர் | சுவடி காணப் பெறும் நூலகங் கள், பார்வை எண் | அச்சான நூல்கள் | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | பதிப்பாளர் | பதிப்பகம் | |
| 106. | வைகுண்ட அம்மானை | — | செ.அ.கீ.சு.நூ. R. 2233 உ.வே.சா.நூ. 924, 966 கே.ப.கீ.சு.நூ. 3214, 4079, 5453, 5640, 5763, 6670, 6673, 7955, 7959, 8408, 8638, 8640, 9150 த.ச.ம.நூ.911, 1368 த.ப.க. 857 க.தே.நூ. 3115 | — | பி.இரத்தினநாயக்கர் & சன்ஸ், சென்னை | 1972 |
| 107. | வைகுண்ட அம்மானை | சேதுராயன், பாம்பன் குளம், பசும்பொன் நகர் | ஆ.ஆ.நி. 185 | — | — | — |
| 108. | வைகுந்த அம்மானை | தென்வீரையம்பதியார் | — | ஆறுமுகசுவாமிகள் | பரப்பிரமமுத்திராட்ச சாலை, திருவெண்காடு | 1874 |

## இணைப்பு-2

# பெயரளவில் தெரியவரும் அம்மானை இலக்கியங்கள்

| வ. எண் | நூல் | ஆசிரியர்/பதிப்பாசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | அகிலத்திரட்டு அம்மானை | அரிகோபாலன் | 1939 |
| 2. | அகினேசகன்னி அம்மானை | செயின்ட் அகினேசு | 1893 |
| 3. | அசுவமேத அம்மானை | திருப்பதி சோ. வெங்கடாசலபதி ஆச்சாரியார் | 19-20 ஆம் நூ. |
| 4. | அந்தோணியார் அம்மானை | தோமைப்பிள்ளை பட்டாங் கட்டியார் | 1892 |
| 5. | அம்மானை | அம்பிகாபதி சுப்பையர், பூந்துறை | 20 ஆம் நூ. |
| 6. | அர்ச் அலசலம்மானை விருத்தம் | சாந்த குரூஸ் புலவர் | 1893 |
| 7. | அரவான் அம்மானை | — | — |
| 8. | அருணாசலசுவாமி அம்மானை | அ. கு. ஆதித்தர், காயாமொழி | — |
| 9. | அலசம்மானை | அருணாசலஞ் செட்டியார், (பதி.) | 1874 |
| 10. | அலிநீதிபதி அம்மானை | — | — |
| 11. | அழகர் அம்மானை | இராமானுசன் | — |
| 12. | ஆமையார் அம்மானை | திருப்பதி சோ. வேங்கடாசலபதி ஆச்சாரியார் | 19-20 ஆம் நூ. |
| 13. | ஆலாசிய அம்மானை | — | — |
| 14. | இராமர் வனவாச அம்மானை | இராமலிங்கம்பிள்ளை, மதுரை | 1907 |
| 15. | இராமாயண அம்மானை | பொ. கரு. சுப்பிரமணிய தேசிகர், பூவுற்றகுடி | 20 ஆம் நூ. |
| 16. | ஏகாதசி அம்மானை | திருப்பதி சோ. வேங்கடாசலபதி ஆச்சாரியார் | 19-20 ஆம் நூ. |
| 17. | ஏசல் அம்மானை | ஆதித்தன் | 1974 |
| 18. | ஐரோப்பியயுத்த அம்மானை | எஸ். ஆர். ஆதித்தன் நாதன், சென்னை | 1915 |
| 19. | கண்ணப்பர் அம்மானை | தெய்வசிகாமணி கவுண்டர் (பதி.) | 1940-50 |
| 20. | கதீஜாநாயகி திருமண அம்மானை | — | — |
| 21. | கந்தர் அம்மானை | சி. ஆ. வெ. இராமலிங்க செட்டியார், சுப்பிரமணியபுரம் | 1912 |
| 22. | கந்தர் அம்மானை | குழந்தை கவிராயர் | — |
| 23. | கர்பலா அம்மானை | பீர்முகம்மது புலவர் | 1820 |
| 24. | காந்தருவனம்மானை | திருப்பதி. சோ. வேங்கடாசலபதி ஆச்சாரியார் | 19-20 ஆம் நூ. |

| வ. எண் | நூல் | ஆசிரியர்/பதிப்பாசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 25. | காந்தி அம்மானை | எம். எச். கான்முகம்மதுப்புலவர் | 1935 |
| 26. | காந்தி அம்மானை | அ. கு. ஆதித்தர் | 1948 |
| 27. | காமாட்சியம்மன் தவமகிமை அம்மானை | புகழேந்திப்புலவர் | — |
| 28. | காமாட்சியம்மன் தவமகிமை அம்மானை | காளிதாசப்பிள்ளை | 1899 |
| 29. | குசலவன் அம்மானை | — | — |
| 30. | குருசேத்திர அம்மானை | காஜியாலிம் புலவர் | 1876 |
| 31. | கோமதி அம்மன் தவமகிமை அம்மானை | இராமலிங்கம்பிள்ளை | 1881 |
| 32. | சத் அந்தோணியார் அம்மானை | அந்தோணி, யாழ்ப்பாணம் | 1892 |
| 33. | சத்திய வேத அம்மானை | ஜே. எஸ். ஆழ்வாப்பிள்ளை, யாழ்ப்பாணம் | 1957 |
| 34. | சந்ததி அம்மானை | கோஜி சையது முகமது புலவர் | — |
| 35. | சந்தியோகுமையூர் அம்மானை | அருளப்பநாவலர் எனும் பூலோக சிங்க முதலியார், யாழ்ப்பாணம் | 17 ஆம் நூ. |
| 36. | சந்திரவண்ணன் அம்மானை | திருப்பதி. சோ. வேங்கடாசலபதி ஆச்சாரியார் (பதி.) | 19-20 ஆம் நூ. |
| 37. | சந்நீக்கிலாவின் தவசதித அம்மானை | — | — |
| 38. | சித்திர புத்திரர் அம்மானை | புகழேந்திப்புலவர் | — |
| 39. | சித்து விளையாடல் அம்மானை | இராமகிருட்டிண முத்துநாடார் | — |
| 40. | சித்து விளையாடல் அம்மானை | கந்தசாமி நாடார் | 1912 |
| 41. | சிலுவை வழி அம்மானை | ஜே. ஜி. சுந்தரம் | — |
| 42. | சிறுத்தொண்டன் பக்தன் அம்மானை | புகழேந்திப்புலவர் | — |
| 43. | சீரங்கராசன் அம்மானை | — | — |
| 44. | சீராளன் அம்மானை | புகழேந்திப்புலவர் | 1874 |
| 45. | சீறா அம்மானை | அப்துல் காதர், பேகம்பூர் | 19 ஆம் நூ. |
| 46. | சுடர்மணி சத்தியவேத அம்மானை | அருள் திரு. மாணிக்கம் ஆசிர்வாதம் | — |
| 47. | சுதர்மன் அம்மானை | திருப்பதி. சோ. வேங்கடாசலபதி ஆச்சாரியார் | 19-20 ஆம் நூ. |
| 48. | செழுகை அம்மானை | பி. மாணிக்கசாமி முதலியார் | 1919 |
| 49. | சேசுநாதரம்மானை | செல்வராசச் செட்டியார் | 20 ஆம் நூ. |

| வ. எண் | நூல் | ஆசிரியர்/பதிப்பாசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 50. | சேர்மன் அருணாசல சுவாமி களின் சித்து விளையாடல் அம்மானை | — | — |
| 51. | சோழனம்மானை ஆச்சாரியார் (பதி.) | திருப்பதி சோ. வேங்கடாசலபதி ஆம் நூ. | 19-20 |
| 52. | ஞானசித்தரம்மானை | ,, | ,, |
| 53. | டேவிட் அம்மானை | — | — |
| 54. | தருமர் அசுவமேத அம்மானை | புகழேந்திப் புலவர் | — |
| 55. | தாவீதரசனம்மானை | சற்குணம் உவின் பிரேட் அய்யர் | 19 ஆம் நூ. |
| 56. | திருச்செல்வர் அம்மானை | அருளப்ப நாவலர் எனும் பூலோகசிங்க முதலியார், யாழ்ப்பாணம் | 17 ஆம் நூ. |
| 57. | திருநெல்வேலி யம்மானை | கோ. இராசகோபால பிள்ளை | — |
| 58. | திருப்பெருந்துறை ஆவுடையார் கோயில் விளக்க அம்மானை | — | 1904 |
| 59. | திருமதீனத் தம்மானை | — | — |
| 60. | திருமறைப்பொருள் அம்மானை | திருச்சி, தமிழ்க்கழகம் | — |
| 61. | தேசிங்குராசன் அம்மானை | — | — |
| 62. | தொட்டராய அம்மானை | ந. வீரபத்திரப்பிள்ளை, திப்பம்பட்டி | 20 ஆம் நூ. |
| 63. | நபி அவதார அம்மானை | கவிகளஞ்சியப்புலவர், உமறுபுலவரின் புதல்வர் | 1713 |
| 64. | நபிகள் அம்மானை | — | — |
| 65. | நளச்சக்கரவர்த்தி அம்மானை | ஏகாமபர முதலியார், செஞ்சி | 1966 |
| 66. | நளச்சக்கரவர்த்தி அம்மானை | வெண்ணிமலைப்பிள்ளை, சிவகங்கை, மதுரை | 1904 |
| 67. | நன்மரண அம்மானை | ச. ரா. தூசையாபிள்ளை | 1915 |
| 68. | நாவலர் அம்மானை | — | — |
| 69. | நூற்றெட்டுத் திருப்பதி அம்மானை | தெய்வநாயகப்பெருமாள் நாயுடு, சென்னை | 1910 |
| 70. | பஞ்சவர்கள் அம்மானை | — | — |
| 71. | பாகவத அம்மானை | மு. மாரியப்பக் கவிராயர் | 19 ஆம் நூ. |
| 72. | பாரத அம்மானை | திருப்பதி சோ. வேங்கடாசலபதி ஆச்சாரியார் | 19-20 ஆம் நூ. |
| 73. | பார்ப்பரம்மாள் அம்மானை | தேவசகாயம், பெங்களூர் | 1907 |
| 74. | புரூரவ அம்மானை | சு. வை. மீ. சிவசுப்பிரமணிய செட்டியார் | 20 ஆம் நூ. |
| 75. | பொன்னாட்சியம்மன் அம்மானை | ச. கருப்பச்சாமிக் கவிராயர் | 1927 |

| வ.எண் | நூல் | ஆசிரியர்/பதிப்பாசிரியர் | ஆண்டு |
|---|---|---|---|
| 76. | போஜராஜன் அம்மானை | — | — |
| 77. | மகாபாரத அம்மானை | செ. சையத் முகம்மது அண்ணாவியார், அதிவீரராமன் பட்டணம் | — |
| 78. | மதுரைச் சொக்கநாதர் திருவிளையாடல் அம்மானை | நாகலிங்கம் பிள்ளை, திருநெல்வேலி | 19-20 ஆம் நூ. |
| 79. | மதுரைவீரன் அம்மானை | காளி இராமசாமிப்புலவர், அன்னஞ்சி | — |
| 80. | மதுரைவீரன் அம்மானை | சங்கரமூர்த்திப் புலவர் | — |
| 81. | மதுரைவீரன் அம்மானை | புகழேந்திப்புலவர் | — |
| 82. | மாதர்நீதி அம்மானை | இராமலிங்கம் பிள்ளை | 1895 |
| 83. | முன்னூர் அம்மானை | அம்பிகாபதி சுப்பையர், பூந்துறை | 20 ஆம் நூ. |
| 84. | மூவர் அம்மானை | அல்லி மரைக்காயர் | — |
| 85. | மூவர் அம்மானை | குலாம் காதிறு நாவலர் | 19 ஆம் நூ. |
| 86. | ருக்மாங்கதன் அம்மானை | — | — |
| 87. | லூர்துமாதா அம்மானை | வாகப்ப முதலியார் | 1934 |
| 88. | வழக்குரைத்த அம்மானை | கதிர்வேலு பிள்ளை | 1910 |
| 89. | வள்ளி நாயகி அம்மானை | ஆறுமுகநாடார் | 1923 |
| 90. | விக்கிரமாதித்தன் அம்மானை | — | — |
| 91. | விராடபர்வ அம்மானை | பாண்டிய நாடார், கொடுமுடி | 1896 |
| 92. | விராடபர்வ அம்மானை எனும் அஞ்ஞாதவாச அம்மானை | புகழேந்திப்புலவர் | — |
| 93. | வீரப்பம்மாள் அம்மானை | சங்குபுலவர் | 1927 |
| 94. | வேதப்பொருள் அம்மானை | வேதமாணிக்கநாடார் | 1808 |
| 95. | வேளாளர் அம்மானை | — | — |
| 96. | வைகுண்ட அம்மானை | புகழேந்திப்புலவர் | 1874 |
| 97. | வைகுந்த அம்மானை | பரசுராம கவிராயர், சென்னை, புரசைவாக்கம் | 19 ஆம் நூ. |

## இணைப்பு — 3

# அம்மானை பற்றிய ஆய்வுகள்

### கட்டுரைகள்

1. சண்முகசுந்தரம், சு., 'அம்மானை ஓர் ஆய்வு', நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள், பாரிவேள் பதிப்பகம், திருநெல்வேலி, 1981. பக். 119-140.

2. சாருமுகிதேவி, ஜி. 'கள்ளழகர் அம்மானையில் புறத்திணை மரபுகள்' நாட்டுப்புறவியல் ஆய்வுக்கோவை — 1, இந்தியத் தமிழ் நாட்டுப்புறவியல் கழகம், அண்ணாமலை நகர், 1987, பக். 473-481.

3 சுகந்தி இரா., 'அம்மானை இலக்கியம்' — இலக்கிய நோக்கமும் பயனும்' தமிழ் இலக்கியக் கொள்கை கருத்தரங்கு — 135, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

4. நத்தர்ஷா, ஹ.மு., 'கான் சாகிபு சண்டையும் இராமப்பய்யன் அம்மானையும் ஓர் ஒப்பாய்வு', 15வது ஆய்வுக்கோவை, தொகுதி — 3, அண்ணாமலைநகர், 1983.

5. பகவதி காளிமுத்து, 'நளனம்மானையில் உவமைகள்', 13வது ஆய்வுக் கோவை, தொகுதி — 3, திண்டுக்கல், 1981. பக். 254-258.

6. மருதமுத்து, மொ., சுவடிப் பதிப்பாய்வில் புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை', தமிழ்ப்பொழில், துணர்-65, மலர்-7, கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சாவூர், 1991. பக். 322-330.

7. மீனாட்சிசுந்தரனார், தெ.பொ., 'அம்மானைப் பாடல்கள்', தமிழும் பிற பண்பாடும், நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, 1973.

8. வானமாமலை, நா., 'இராமப்பய்யன் அம்மானை', தாமரை, ஏப்ரல், 1963.

9. ,, 'இராமப்பய்யன் அம்மானையில் பாத்திரங்களின் சமூகத்தன்மை', தாமரை, 1974.

10. வையாபுரிப்பிள்ளை, (தொகு.), எஸ்., 'இராமப்பய்யன் அம்மானை', சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை, வரிசை — 17, சென்னை, 1951.

11. ஜகந்நாதன், கி.வா., 'அம்மானை', கலைக்களஞ்சியம், தொகுதி — 1, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1954.

### எம். ஏ. ஆய்வுகள்

12. இராசாராம். த., 'தமிழில் அம்மானைப் பாடல்கள்', கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1970.

13. பகவதி காளிமுத்து, 'நளனம்மானை — நூற் பதிப்பும் ஆராய்ச்சியும்', கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1978.

14. றீற்றா றோசலின்ட், வி., 'காராளர் அம்மானை — நூற் பதிப்பு', கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1985.

### எம்ஃபில் ஆய்வு

15. விநாயகமூர்த்தி, அ., மதுரைவீரன் அம்மானை — பாடபேத பதிப்புக் கலை ஆய்வு', மதுரைப் பல்கலைக்கழகம், மதுரை, 1977.

### பி.எச்.டி. ஆய்வு

16. விநாயகமூர்த்தி, அ., 'ஐவர் அம்மானை', கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1981.

### பி.ஜி. டிப்ளமோ ஆய்வு

17. மருதமுத்து, மொ., 'புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை', உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

## இணைப்பு — 4

## கு. ஆறுமுகப்பெருமாள் நாடார்★ பதிப்பித்த நூல்கள்

| வ. எண் | நூல்கள் | பதிப்பகம் | ஆண்டு |
|---|---|---|---|
| 1. | இசக்கியம்மன் கதை | பிலோமின் பிரஸ், கொட்டாரம் | — |
| 2. | கண்ணகியம்மன் குறிஞ்சிப்பாட்டு | — | — |
| 3. | சுடலைமாட சுவாமி கதை | ஜெயசோதி அச்சகம், நாகர்கோவில், | 1973 |
| 4. | தோட்டுக்காரி அம்மன் கதை. | தங்கம் பிரஸ், நாகர்கோவில், | 1967 |
| 5. | பழகைநல்லூர் நீலியம்மன் கதை | ————, ————, | 1978 |
| 6. | பிச்சைக்காளன் கதை | ————, ————, | ———— |
| 7. | பூலங்கொண்டாளம்மன் கதை | கு. ஆறுமுகப்பெருமாள்நாடார் வெளியீடு | 1977 |
| 8. | மாகாளி அம்மன் கதை | ————, ————, | 1968 |
| 9. | மார்க்கண்டன் தவசு | ————, ————, | 1977 |
| 10. | மாரியம்மன் வில்லுப்பாட்டு, மாரியம்மன் தாலாட்டு | ஹோமஸ் பிரஸ், நாகர்கோவில், | —— |
| 11. | முத்துப்பட்டன் கதை | கு. ஆறுமுகப்பெருமாள் நாடார் வெளியீடு, அகத்தீஸ்வரம் | — |

★ இவர். 'குமரி மண்டல வரலாறு' என்ற நூலினை, 1966-ல் எழுதியுள்ளார்.

# துணை நூல்கள்


## அ. சுவடிகள் (முதன்மை நூல்கள்)

1. ஆமையர் அம்மானை — எண். 5. ஆசியவியல் ஆய்வு நிறுவனம், செம்மஞ்சேரி, சென்னை-119.
2. பூவாசநாதன் கதை (பாடவேறுபாட்டிற்குரிய சுவடி) — எண். 183. ஆசியவியல் ஆய்வு நிறுவனம், செம்மஞ்சேரி, சென்னை-119.

## ஆ. தமிழ் நூல்கள்

1. அருணாசலம், மு., — கதைப்பாடல், காந்தி வித்யாலயம், திருச்சிற்றம்பலம், 1976.
2. அன்னகாமு, செ., — ஏட்டில் எழுதாக்கவிதைகள், சர்வோதயம் பிரசுராலயம், தஞ்சை, 1960
3. இராசாராம், த., — தமிழில் அம்மானைப் பாடல்கள், கேரளப் பல்கலைக் கழக வெளியீடு, திருவனந்தபுரம், .....
4. இளங்கோவடிகள், — சிலப்பதிகாரம் மூலமும் அரும்பத உரையும் அடியார்க்கு நல்லாருரையும், உ.வே.சா. பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பத்தாம் பதிப்பு, 1985.
5. உலகநாதப்பிள்ளை, (பதி.) — தஞ்சை சரபோஜி சரசுவதிமகால் நூல்நிலையத் தமிழ்ச் சுவடிகளின் விளக்க அட்டவணை, தொகுதி—I, தஞ்சை சரசுவதிமகால் நூலகம், தஞ்சாவூர், 1964.
6. — தஞ்சை சரபோஜி சரசுவதிமகால் நூல்நிலையத் தமிழ்ச் சுவடிகளின் விளக்க அட்டவணை, தொகுதி—II, தஞ்சை சரசுவதிமகால் நூலகம், தஞ்சாவூர், 1964.
7. உ.வே.சா. நூலக ஆசிரியர் குழு (பதி.) — டாக்டர். உ.வே.சா. நூல்நிலையச் சுவடிகளின் விளக்க அட்டவணை, தொகுதி—I, உ.வே.சா. நூலகம், சென்னை., 1956.
8. — டாக்டர் உ.வே.சா. நூல்நிலையச் சுவடிகளின் விளக்க அட்டவணை, தொகுதி—II, உ.வே.சா. நூலகம், சென்னை, 1961.
9. கந்தையாபிள்ளை, ந.சி., — தமிழ் இலக்கிய அகராதி, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1952.

10. ,, தமிழ்ப் புலவர் அகராதி, ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1960.

11. காந்தி, க., தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

12. கோவிந்தசாமி, பொன்., தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வுக் கட்டுரைகள், டாக்டர். ஆ. தசரதன், சென்னை, 1984.

13. சண்முகம்பிள்ளை, மு., & சுந்தரமூர்த்தி. இ., கல்கத்தா தேசிய நூலகத் தமிழ்ச் சுவடிக்ள், சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1979.

14. சண்முகம்பிள்ளை, மு., சிற்றிலக்கிய வகைகள், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, 1982.

15. சந்திரசேகரன், டி., (பதி.), சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிகளின் மூவருட விளக்க அட்டவணை, தொகுதி—II, பகுதி—2, செ.கீ.சு.நூ, சென்னை, 1963.

16. ,, சென்னைக் கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிகளின் விளக்க அட்டவணை, தொகுதி—6, செ.கீ.சு.நூ., சென்னை, 1948.

17. சுப்பிரமணியம், பூ., சுவடிஇயல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1991.

18. சுப்பிரமணியம், ச.வே., தமிழ் இலக்கிய வகையும் வடிவும், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1984.

19. செயராமன், ந.வீ., சிற்றிலக்கியப் புலவர் அகராதி, பாரி நிலையம், சென்னை, 1983.

20. தண்டபாணி சுவாமிகள், வண்ணச்சரபம் அறுவகை இலக்கணம், தவத்திரு சாந்தலிங்க அடிகளார்த் தமிழ்க் கல்லூரி, பேரூர், 1978.

21. திருவள்ளுவர் திருக்குறள் மூலமும் பரிமேலழகர் உரையும், கழக வெளியீடு, சென்னை, இருபதாம் பதிப்பு, 1991.

22. திலகம், ச., (பதி.), தஞ்சை சரபோஜி சரசுவதிமகால் நூல் நிலையத் தமிழ்ச் சுவடிகளின் விளக்க அட்டவணை, தொகுதி—VII, தஞ்சை சரசுவதிமகால் நூலகம், தஞ்சாவூர், 1984.

23. தேசிகவிநாயகம்பிள்ளை, சி., நாஞ்சில்நாட்டு மருமக்கள் வழிமான்மியம், புதுமைப் பதிப்பகம், காரைக்குடி, 1942.

24. நிர்மலாதேவி, இரா. (பதி.), தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1983.

25. பரமசிவம், த.கோ., (பதி.), தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை, தொகுதி—I, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

26. ,, தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை, தொகுதி—II, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

27. ,, தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை, தொகுதி—III, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

28. ,, தமிழ்ச் சுவடி விளக்க அட்டவணை, தொகுதி—IV. தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

29. பாஸ்கரன், டி., (பதி.) தமிழ்ச் சுவடிப்பெயர்கள், கீழ்த்திசை ஆய்வு நிறுவனம் மற்றும் சுவடி நூலகம், கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம், 1984.

30. பெருமாள், அ.நா., தமிழில் கதைப்பாடல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987.

31. பொன்னு, இரா., வைகுண்ட சுவாமிகள் வாழ்வும் வழிகாட்டலும், கார்த்திக் வெளியீடு, புதுடெல்லி, 1983.

32. மருதமுத்து, மொ., (பதி.), புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1995.

33. முத்தையா, பி.எல்., (தொகு.) மதனகாமராசன் கதைகள், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 1988.

34. .......... அபிமன்னன் சுந்தரிமாலை, டி. சாரதா புத்தக சாலை, புவனேஸ்வரி அச்சுக்கூடம், சென்னை, 1926.

35. விநாயகமூர்த்தி, அ., மூலபாட ஆய்வியல், பாலமுருகன் பதிப்பகம், மதுரை, 1978.

**இ. இலக்கண நூல்கள்**

36. அமிதசாகரர், 'யாப்பருங்கலக்காரிகை மூலம்', கழக வெளியீடு, சென்னை, பன்னிரெண்டாம் பதிப்பு—1972.

37. தண்டியாசிரியர், 'தண்டியலங்காரம் மூலமும் பழைய உரையும்' கழக வெளியீடு, சென்னை, 1971.

38. பவணந்தியார் நன்னூல் மூலம், கழக வெளியீடு, சென்னை, ஒன்பதாம் பதிப்பு, 1983.

**ஈ. அகராதி நூல்கள்**

39. கலைக்களஞ்சியம், தொகுதி—2, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955.

40. தமிழ்ப் பேரகராதி, தொகுதி — 1, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
41. தமிழ் மொழியகராதி, கதிர்வேற்பிள்ளை, நா., ஏசியன் எஜுகேஷனல் சர்வீஸஸ், புதுடெல்லி, ஆறாம் பதிப்பு, 1987.
42. தமிழ் லெக்சிகன், தொகுதி — I, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
43. தமிழ் லெக்சிகன் தொகுதி — II, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
44. தமிழ் லெக்சிகன் தொகுதி — III, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
45. தமிழ் லெக்சிகன், தொகுதி — IV, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
46. தமிழ் லெக்சிகன், தொகுதி — V, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.
47. தமிழ் லெக்சிகன், தொகுதி — VI, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை, 1982.

உ. கட்டுரைகள்

48. சுகந்தி, இரா., ‘அம்மானை இலக்கியம் — இலக்கிய நோக்கமும் பயனும்’, தமிழ் இலக்கியக் கொள்கை கருத்தரங்கு — 135, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 4.12.1985.

49. சுப்பிரமணியம், பூ., ‘கதைப் பாடல்கள் — சில அணுகுமுறைகள்’ உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 26.2.1988.

# சொல்லடைவு

(எண் — அடி எண்)

## ஆ

## இ

## கு



## கூ



## கெ



## கே



## கொ



## கோ

## சே



## சொ



## சோ



## ஞா



## ட



## த

## பா

## வே



## வை

## Our Publications pertaining to Palm-leaf Manuscripts

1. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume I, Part I, General Editors: Dr. Shu Hikosaka, Dr.G. John Samuel, 1990, Rs. 177.50 US $ 25
2. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume I, Part II, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1990, Rs. 177.50 US $ 25
3. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume II, Part I, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1991, Rs. 177.50 US $ 25
4. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume II, Part II, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1992, Rs. 225/-US $ 50
5. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume III, Part I, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1993, Rs. 250/-US $ 50
6. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume III, Part II, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1993, Rs. 250/- US $ 50
7. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume IV, Part I, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996, Rs. 250/- US $ 50
8. A Descriptive Catalogue of Palm-leaf Manuscripts in Tamil, Volume IV, Part II, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996, Rs. 250/- US $ 50
9. The Wandering Voice: (Three Ballads from Palm-leaf Manuscripts), General Editors: Dr. Shu Hikosaka, Dr.G. John Samuel, 1987, Rs. 120/- US $ 32
10. The Art of Drumming : Mattaḷaviyal, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1988, Rs. 90/- US $ 20
11. The Dateless Muse: Veṅkalarājaṉ katai, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1988, Paperback Rs. 80/- US $ 20, Deluxe Rs. 120/- US $ 30
12. The Unsung Melodies: Palavēcañ Cērvaikkāraṉ katai, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1989, Paperback Rs. 75/- US $ 18, Deluxe Rs. 100/- US $ 25
13. The Divine Pilgrimage: Perumāḷcāmi katai, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1992, Rs.200/- US $ 40
14. A Tale of Romance: Cakuntalai Nāṭakam, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1993, Rs. 300/- US $ 50
15. Varma Cūttiram, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1994,Rs.400/- US $ 50
16. Nīli Yaṭcakāṉam, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1994, Rs. 150- US $ 20
17. A Tale of Nemesis: Nīli Yaṭcakāṉam, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996, Rs. 250/- US $ 20
18. Peṇṇaraciyar katai , General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1995, Rs. 100/- US $ 20
19. A Tale of Betrayal: Cāraṅkataraṉ Yaṭcakāṉam. General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996, Rs.400/-US $ 65
20. The Valorous Virgins: Peṇṇeraciyar katai, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996, Rs.220/- US $ 35
21. The Epic Eternal: Irāmar katai, Part-I, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996,Rs.450/- US $ 65
22. Palm-leaf and Other Manuscripts in Indian Languages, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel,1996, Rs.300/- US $ 50
23. Destiny and Divinity: Varāṅkaṉ katai, General Editors: Dr. Shu Hikosaka , Dr. G. John Samuel, 1996, Rs. 200/- US $ 30
24. The Epic Eternal: Irāmar katai, Part-II, General Editors: Dr. Shu Hikosaka, Dr. G. John Samuel, 1996,Rs.450/- US $ 65
25. Poetic Petals in the interior landscape: Uttaṇṭaṉ kōvai - in print
26. Mēri karuttammāḷ Ammāṉai - in print